# திருவரங்கம் பெரியகோயில் திருவிழாக்களும் ஒழுகலாறுகளும்

# (SRIRANGAM TEMPLE-HISTORICAL BACKGROUND, FESTIVALS AND DIVINE GLORIES)




ஆசிரியர்:

*முனைவர் க. சண்முகசுந்தரம்* M A., M.Phil , Ph D

*தலைவர், தமிழ் ஆய்வுத்துறை,*

*உருமு தனலட்சுமி கல்லூரி, திருச்சி- 19.*



வெளியீடு :

**திருமங்கையாழ்வார் அவதாரத் திருநாளான**

**சித்திரபானு ஆண்டு கார்த்திகை மாதம் 4ஆம் நாள்**

***(20.11.2002)***

**கந்தமேஸ்திரியார் பதிப்பகம்**

***123, கீரைக்கார தெரு, ஸ்ரீரங்கம், திருச்சி - 620 006.***

***போன் : (0431) 2435796***

# SRIRANGAM TEMPLE - HISTORICAL BACKGROUND, FESTIVALS AND DIVINE GLORIES

by

**Dr. K. SHANMUGASUNDARAM** M.A., M.Phil., Ph.D.

**First Edition : November 2002**



**Copies : 1000**

This book is published with the
Financial Assistance of
**Tirumala Tirupati Devasthanams**
under their Scheme
"Aid to Publish Religious Books"

Price : Rs. 150/- (Rupees One Hundred and Fifty only)

Copies available at:

1) **KANDHA MAISTHIRIYAR PUBLICATIONS**
123, Keeraikara St., Srirangam,
Trichy - 620 006. Ph. (0431) 2435796

2) **SRI RANGANACHIYAR ACHAGAM,**
214, East Uthara St., Srirangam, Trichy - 620 006.
Ph. (0431) 2434398 E-Mail : **akchari@vsnl.com**

Laser typeset & Printed at :

**SRI RANGANACHIYAR ACHAGAM,**
214, East Uthara St., Srirangam, Trichy - 620 006.
Ph. 2434398, E-Mail : **akchari@vsnl.com**

# உள்ளுறை

| வ.எண் | தலைப்பு | ப.எண் |
|---|---|---|

# அணிந்துரை

**முனைவர் வி. நாகராசன்** M A B.O L., B.Ed , Vidwan, Ph D ,
*தமிழ்த்துறைத் தலைவர் (ஓய்வு) தேசியக் கல்லூரி,*
*திருச்சிராப்பள்ளி – 620 001.*

பொன்னி ஆறு அலைகளாகிய கைகளால் தன்னுடைய திருவடியை வருட அரவணையில் துயிலமரும் திருமால் மகிழ்ந்து உறையும் திருத்தலங்களில் பெரியகோயில் எனப் போற்றப் பெறுவது திருவரங்கமாகும். ஆழ்வாராதியரால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற இத்தலத்து உறையும் பரந்தாமனின் அருளைநாடி எல்லாத் திசைகளி லிருந்தும், எல்லா நாட்களிலும் அடியார் பலர் வந்தவண்ணம் உள்ளனர். ஆரா அமுதாம் அரங்கனின் அர்ச்சாவதார அழகில் மெய்ம் மறந்து "எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும், உன்தன்னோடு உற்றோமே யாவோம், உமக்கே யாம் ஆட்செய்வோம்" என்று உரிமை பூண்டவர் யாவரும் அரங்கப்பெருமானின் கைங்கர்யத்தில் தம்மையும் இணைத்துக்கொள்ள விரும்புவர். தலம், தீர்த்தம், மூர்த்தி என்ற மூன்றானும் தனிச்சிறப்புப் பெற்ற, பூலோக வைகுண்டமாம் திருவரங்கப் பெருங்கோயிலில் நடைபெறும் பூசைகளும், விழாக் களும் உடையவரால் திருத்தி அமைக்கப் பெற்றவை. இத்தலத்தின் மேன்மையைக் கண்டு கைங்கரியம் செய்தோர் யாவர் என வரலாற்று நோக்கில் கண்டறிந்து அவற்றை விளக்கும் முயற்சியாகத் திருச்சிராப்பள்ளி, உருமு தனலட்சுமி கல்லூரி, தமிழ்த்துறைத் தலைவர், பேராசிரியர். க. சண்முகசுந்தரத்தின் டாக்டர் பட்ட ஆய்வேடு அமைந்தது. யாவற்றானும் பெருமை சான்ற, எழுமதில் சூழ் பெரிய கோயிலின் பெரிய பெருமாளுக்கு ஆண்டு முழுவதும் நடைபெறும் திருவிழாக்களும் பெரியனவே.

திருவரங்கப்பதியில் வாழும் பேறுபெற்ற பழமையும் பெருமையும் வாய்ந்த குடியில் தோன்றிய க. சண்முகசுந்தரம் பெரிய கோயிலொடு பல்லாற்றானும் கொண்ட தொடர்பு காரணமாக வெளிப்பட்ட அவருடைய ஆய்வு முயற்சி, அவர்க்குப் பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் டாக்டர் பட்டம் பெற்றுத்தந்தமையோடு இன்று யாவரும் அறிந்து பயன்பெறத்தக்க வகையில், அரங்கன் அருளாலும், திருவேங்கடமுடையான் கருணையாலும் நூல்வடிவில் வெளிவரு கின்றது.

இத்திருக்கோயிலின் வரலாற்றினைக் கல்வெட்டு ஆதாரங்களுடன் கண்டறிந்து இந்நூல் விளக்குகின்றது. பெரிய கோயிலின் திருச்சுற்றுக்களில் உள்ள பல திருக் கோயில்களையும் அவற்றின் தனிச் சிறப்புக்களையும் ஒவ்வொன்றாக இந்நூல் எடுத்துக் காட்டுகின்றது. தமிழ் வேதமாம் திவ்யப்பிரபந்தங்கள், இக்கோயிலில் திருவிழா நாட்களில் ஓதப்படும் முறைகளும், அவற்றிலும் குறிப்பாக 'அரையர் சேவை' இசைக்கப்படும் இயல்புகளும் இந்நூலாசிரியரால் நேரில் கண்டறிந்து விளக்கப்பெற்றுள்ளன. திருவரங்கநாதனுக்குத் திருவரங்கமேயன்றி, அதனைச் சார்ந்துள்ள பல ஊர்களிலும் விழாக்கள் இந்நாள்வரை நடைபெற்று வரும் தொடர்பு இந்நூலில் விரிவாகக் காட்டப் பட்டுள்ளது. பிரம்மோற்சவம், அத்யயன உற்சவம், பவித்திர உற்சவம், வசந்த உற்சவம் போன்ற பல பெருவிழாக்களும், பிற நித்திய நைமித்திக விழாக்களும் இந்நூலில் அவ்வவற்றிற்குரிய நடைமுறைகளோடு விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

திருவரங்கத் திருத்தலத்தை அறிய விரும்பும் வரலாற்று ஆய்வாளர்களுக்கும், சுற்றுலாப் பெருமக்களுக்கும், அரங்கனின் அருந்தொண்டில் ஆழங்கால் பட விரும்பும் மெய்யன்பர்களுக்கும் ஓரளவு இந்நூல் வழிகாட்டியாய் அமையும். வைணவ சமயத்தின் அடிநிலைக் கோட்பாடாக விளங்கும் விசிட்டாத்துவைதப் பயிர் வளர்க்கும் நாற்றங்காலாக இத்திருக்கோயில் பயன்பட்டுவரும் பாங்கும், வைணவ சமய பக்தி, பிரபத்தி மார்க்கங்கள் தழைக்கத் துணைநிற்கும் சம்பிரதாயங்களும் இந்நூலில் காட்டப்பட்டுள்ள திறம் பாராட்டிற்குரியதாகும்.

'திருமாலுக்கு அடிமை செய்' என்ற சரணாகதிக் கொள்கையில் நாட்டம் கொண்டோர்க்கும், கொள்ள விரும்புவோர்க்கும், இந்தியப் பாரம்பரியப் பண்பாட்டு நுட்பங்களை அறிந்து போற்றுவோர்க்கும் பண்பாட்டு நுட்பங்களை அறிந்து போற்றுவோர்க்கும் இந்நூல், ஓர் உந்துதலாய் இருக்கும் என உறுதியாகக் கூறலாம். நூலாசிரியரின் அரிய இப்பணி, இந்நூல் வெளிப்பாட்டோடு அமையாமல் சமய உலகில் மேலும் பலவாறு விரிந்து பயன்தர வேண்டி ஸ்ரீமந் நாராயணன் திருவடிகளைப் பிரார்த்திப்போமாக.

**திருச்சிராப்பள்ளி** **வி. நாகராசன்**
**26.09.2002**

# வாழ்த்துரை

முனைவர் பிரேமா நந்தகுமார்
பன்மொழி ஆய்வறிஞர்,
திருவரங்கம்

முதல் திருமாளிகை
91, (புது எண். 152),
தெற்குச்சித்திரை வீதி,
ஸ்ரீரங்கம் - 620 006.

நமது வீடுகளில் தானியங்கள் அளந்தால் முதல் இரண்டு படிகளை திருவரங்கம் பெரிய கோயில் என்று கூறிப்பின் மூன்று, நான்கு என்று முன்னேறுவாம். அப்பெயர்களில் அப்படியொரு தெய்விகம், நம்பிக்கை, நிறைவு. பெரிய கோயில், பெரிய பெருமாள் என்பதைப்போல, இக்கோயிலைப் பற்றி முனைவர் க. சண்முக சுந்தரம் எழுதியுள்ள ஆய்வுநூலும் அளவில் பெரியதே. தமிழறிஞர், பேராசிரியர் மா. இராமலிங்கம் அவர்கள் மேற்பார்வையில் கோயிலைப் பற்றிய ஒரு செய்தியையும் விடாமல் சேகரித்து, நூல்களை ஆழ்ந்து படித்து, தக்கவர்களிடம் விளக்கங்களைக் கேட்டு விரிவாக, தெளிவாக முனைவர் ஆய்வேட்டினைத் தயாரித் திருக்கிறார்.

கோயில் பற்றிய வரலாற்றையும், புராணத்தையும் சுருக்கமாக அமைத்துவிட்டு, ஏழு வீதிகளையும் வலம் வரும்போது அங்கெல்லாம் காணக்கூடிய காட்சிகளைப் பட்டியலிட்டுப் பின் கோயிலைச் சேர்ந்த புஷ்கரிணிகள், கோபுரங்கள், ஆழ்வார்கள் அரங்கனைப் போற்றிய பாசுரங்கள் முதலியவற்றை எடுத்துக்கூறுகிறார்.

இனி தமிழிலக்கியத்தில் அரங்கனைக் காணும்போது ஒரே இன்பமாரிதான். அரங்கனுக்கோ நித்திய கலியாணம். ஆக, சம்மிதைகள், கோயில் ஒழுகு முதலியன குறிப்பிட்டுள்ள திருநாட்கள், தற்சமயம் நடக்கும் விழாக்கள், தமிழ் மொழி கொலுவிருக்கும் அத்தியயனத்திருநாள், இச்செய்திகளுக்கெல்லாம் பின்னணியான கல்வெட்டுக்கள், இக்கோயிலில் நடக்கும் பிரத்யேகமான காட்சிகள் என்று பல்வேறு செய்திகளை இந்நூலில் காணக்கிடக்கின்றன. 'திருவரங்கம் பெரியகோயில் திருவிழாக்களும் ஒழுகலாறுகளும்' எனும் இந்நூலினை சுருக்கமாக திருவரங்கச் சதாங்கம் என்றே கூறலாம்.

மேலும், ஆய்வுநோக்குடன் எழுதியிருப்பதால் இன்று இவ்விழாக்கள் நடக்கும் நிலைமை, கோயிலின் அன்றாட நடப்பு முதலியவற்றில் உள்ள பலபல குறைகளையும் திரு. சண்முககசுந்தரம் சுட்டிக்காட்டத் தவறவில்லை. பதறாமல், உண்மையைத் தேடும் நிலையில் சார்ந்து இந்த விமரிசனம் செய்யப்பட்டிருப்பதால் கோயில் செயற்பாடுகளை சீரமைக்க இவ்வாய்வேடு உதவும்.

நூலெங்கும் ஆய்வாளரின் ஆழ்ந்த பக்தி ஆதார சுருதியாக ஒலிக்கிறது. 'ஆழ்வாரும் ஆசாரியர்களும் படுகாடு கிடந்ததும் இந்த அர்ச்சாவதாரம் தன்னிலேயாம்' என்னும்போது திருப்பாணாழ்வாரின்

பரியனாகி வந்தவுணனுடல் கீண்ட அமரர்க்
கரியவாதிப்பிரான் அரங்கத்து அமலன் முகத்து
கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப்
பெரியவாய கண்களென்னைப் பேதமை செய்தனவே

பாசுரம் நெஞ்சில் மலர்கிறது. உயர்வு, தாழ்வு, சாதிச்செருக்கு எல்லாம் கோயிலுள் கூடாது என்ற திட்டங்கள் வகுத்த உடையவர் நம்முன் தோன்றுகிறார். மதம் தாண்டிய ஆன்மீக ஒருமைப்பாட்டினை ராஜமகேந்திரன் திருச்சுற்றிலே அமைந்துள்ள துலுக்கநாச்சியார் சன்னிதி நம்முன் வைக்கிறது. தெய்விகக் காதலுக்கு இலக்கணமாக விளங்கும் ஆண்டாளின் புன்னகை கோயிலெங்கும் மின்னுகிறது. காலம் காலமாக இக்கோயிலுக்கு நம்பிக்கையுடன் வந்து வழிபடும் பக்தர்களின் பிரதிநிதியாக பெரியாழ்வாரும் பாசுரமிடுகிறார்.

துப்புடையாரை அடைவதெல்லாஞ் சோர்விடத்துத் துணையவரென்றே
ஒப்பிலேனாகிலு நின்னடைந்தேனானைக்குநீயருள்செய்தமையால்
எய்ப்பென்னை வந்து நலியும்போதங்கே நானுன்னை நினைக்கமாட்டேன்
அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தேனரங்கத் தரவணைப்பள்ளியானே!

தமிழுக்கும், கோயில் வளர்ச்சிக்கும், பக்திக்கும், அரங்கமா நகருக்கும் ஒப்பற்ற பண்பாட்டுப்பெட்டகத்தை அமைத்துத் தந்துள்ள முனைவர் க. சண்முகசுந்தரம் அவர்களை வணங்கி வாழ்த்துகிறேன்.

திருவரங்கம்
23.09.2002

பிரேமா நந்தகுமார்

# தகவுரை

**ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ அ.கிருஷ்ணமாசார்யர்**
*ஆசிரியர்- பாஞ்சஜன்யம், பொறுப்பாசிரியர் - ஸ்ரீராமாநுஜன்*
*214, கீழ உத்தர வீதி, ஸ்ரீரங்கம்,*
*திருச்சிராப்பள்ளி - 620 006.*

திரு. க. சண்முகசுந்தரம் அவர்கள் பாரதிதாசன் பல்கலைக் கழகத்தில் பி.எச்டி. பட்டம் பெறுவதற்கான ஆய்வேடு 'திருவரங்கம் பெரியகோயில் திருவிழாக்களும் ஒழுகலாறுகளும்' தற்போது புத்தகமாக வெளியிடப்படுகிறது.

வைணவக் கோயில்கள் பற்றிய வரலாற்றுச் செய்திகள் கல்வெட்டுகளின் அடிப்படையில் முறையாகத் தொகுக்கப்பட வில்லை. அக்குறை தீர கல்வெட்டுகள், கோயில் மரபுகள், ஒழுகலாறுகள் அவற்றின் அடிப்படையில் இந்த ஆய்வு நூல் அமைந்துள்ளது. திரு. க. சண்முகசுந்தரம் அவர்கள் திருவரங்கத்தில் தம்முடைய இளம் வயதிலிருந்து வாழ்ந்து வருபவர். பல அறிஞர் பெருமக்களோடு தொடர்பு கொண்டு மிகச் சிறப்பான செய்திகளை தொகுத்துத் தந்துள்ளார்.

திருவரங்கம் கோயிலை பெரியகோயில் என்று வைணவர்கள் கொண்டாடுவர். பெயருக்கேற்றார் போல் இந்தக் கோயில்கள் பற்றிய செய்திகளும், பல சுவைமிக்க நிகழ்ச்சிகளின் அடிப்படையில் பெரிய அளவில் தொகுக்கப்பட்டுள்ளன.

ஸ்ரீரங்கம் கோயில் பற்றிய ஆய்வினை மேற்கொண்ட திரு. ஹரிராவ் அவர்கள் தம்முடைய நூல்களில் குறிப்பிட்ட செய்தி களுக்கு மேல் விழாக்களைப் பற்றிய பரந்த ஆய்வினை இந் நூலாசிரியர் மேற்கொண்டுள்ளார். குறிப்பாகத் திருவரங்கம் கோயிலில் இராமானுசர் நடைமுறைப்படுத்திய சீர்திருத்தங்கள், காலத்தின் ஓட்டத்தில் நின்றுபோன விழாக்கள், விட்டவன் விழுக்காடு பற்றிய ஆராய்ச்சி, போன்ற பல நுண்ணிய செய்திகளை மிகத் தெளிவாகத் தந்துள்ளார். திருவரங்கம் பெரியகோயில் பற்றிய உண்மையான

வரலாற்றினை தெரிந்துகொள்ள விழையும் அன்பர்களுக்கு இந்த நூல் மிகவும் பயன்படும்.

திருவரங்கம் பெரியகோயிலில் அருளப்பாடு இன்றி எந்தக் கைங்கர்யமும் நடைபெறாது. அனைத்து திவ்யதேசங்களிலும் நடைபெறும் விழாக்கள் திருவரங்கத்தில் நடைபெறும் விழாக்களை பின்பற்றியே அமைந்திருக்கும். அழகிய மணவாளன் புறப்பாடு கண்டருளுவதற்கு முன்பு அவரவர்கள் தமக்கு இட்ட பணியைச் செய்வதற்குக் காத்திருப்பர். இந்தத் திருக்கோயிலின் உபயதாரர் மற்றும் பெரும்புள்ளிகள் வருகைதருவதற்காக நம்பெருமாள் காத்திருப்பதில்லை. ராஜாதிராஜனான நம்பெருமாளுக்கு நடைபெறும் விழாக்களையும் அதனுள் அடங்கிய தத்துவங்களையும் ஒருவர் அறிந்துகொள்ள வேண்டுமானால் சித்திரை தொடங்கி பங்குனி ஈறாக ஓர் ஆண்டு எல்லா விழாக்களையும் கண்குளிரக் கண்டு அனுபவிக்க வேண்டும். அவ்வாறு ஒரு வேட்கையினை இந்த ஆய்வுநூலைப் படிப்பவர்கள் நிச்சயம் பெறுவர்.

இந்த ஆய்வேட்டிற்கு பின்னிணைப்பாக அமைந்துள்ள 'பிரம்மரத மரியாதை' (நம்பெருமாள் கைங்கர்யத்தில் ஈடுபட்டவர்களுக்கு தகுந்த பரிசாக இந்த நிகழ்ச்சி ஏற்பட்டுள்ளது), ஸ்தானீகம் பார்த்தசாரதி அய்யங்கார் தொகுத்த 'கோயில் தமிழ்', விழாக் காலங்களிலும், நாள்வழிபாட்டிலும் பயன்படுத்தப்படும் இசைக் கருவிகள் போன்ற செய்தித் தொகுப்புகள் இந்த ஆய்வு நூலுக்கு மேலும் பெருமை சேர்க்கின்றது.

திருமலை திருவேங்கடவன் திருக்கோயில், திருப்பதி கோவிந்தராஜபெருமாள், காஞ்சீபுரம் தேவப்பெருமாள் ஆகியோரைப் பற்றிய ஆய்வுநூல்கள் முன்னரே வெளிவந்துள்ளன. அந்த வரிசையில் திரு. க. சண்முகசுந்தரத்தின் 'திருவரங்கம் பெரியகோயில் திருவிழாக்களும் ஒழுகலாறுகளும்' என்ற நூலும் தற்போது இடம்பெற்றுள்ளது.

திருவரங்கம்
15.10.2002

ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ அ. கிருஷ்ணமாசார்யர்

# சிறப்புரை

**உத்தமசிலி R. ஸ்ரீநிவாஸன்**
*ஓய்வுபெற்ற தலைமையாசிரியர், திருவரங்கம்.*

அனேக ஆண்டுகால கடின உழைப்பின் விளைவாக வெளிவரும் இந்நூல் அடியார் குழாங்களுக்கு ஓர் அரிய பொக்கிஷம். ஒன்பதாம் நூற்றாண்டு முதல் பதினேழாம் நூற்றாண்டு வரையிலுள்ள ஸ்ரீரங்கம் கோயில் கல்வெட்டுக்கள், கோயிலொழுகு, தொல் காப்பியம் தொடங்கி சங்க கால, நாட்டுப் பாடல்கள் வரை, நாலாயிர திவ்ய பிரபந்த வியாக்யானங்களிலுள்ள ஐதிஹ்யங்கள், ஸங்கீத மும்மூர்த்திகளில் முதல்வரான தியாக ப்ரஹ்மத்தின் கீர்த்தனைகள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு திருவரங்கனது திருவிழாக் கள் விவரிக்கப்பட்டுள்ளன.

உலகம் போற்றும் திருவரங்கம் நூற்றெட்டு திவ்யதேசங்களில் முதலிடம் வகிப்பதற்கு முக்கியமான பத்து காரணங்கள் ரத்தினச் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளன. ஸப்த பிராகாரங்களிலுள்ள சுற்றுக்கோயில்கள், மண்டபங்கள், ஸ்தலத்தார் திருமாளிகைகள் முதலியவற்றைத் தெளிவாக வரைபடம் மூலம் தெரிவித்து நகர வழித்துணை நூலாகவும் விளங்குகிறது. அமரர் ஸ்தானீகம் பார்த்த ஸாரதி அய்யங்காரால் தொகுக்கப்பட்ட கோயில் தமிழ் (அகராதி) முழுமையாக இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

இத்தகைய பெருமைகள்மிக்க இந்நூல் ஒவ்வொரு ஸ்ரீவைஷ்ணவ இல்லத்திலும் இருக்க வேண்டியது மிக அவசியம். அரையர் ஸேவைகளில் ஜாதி, மத பேதமின்றி அனைவரும் பங்குகொண்டு இயல், இசை, நாடகமாகிய முத்தமிழ் அனுபவிக்கப்படும் செய்திகளும் இந்நூலில் காணப்படுகின்றன.

எம்பெருமானார் செய்தருளிய சீர்திருத்தங்களும் விரிவாக உள்ளன. இதுபோன்ற ஆய்வு நூல்களை மேலும் படைப்பதற்கான ஆயுராரோக்யத்தை இந்நூலாசிரியருக்கு அருளும்படி நம்பெருமாளைப் பிரார்த்திப்போமாக.

தாஸன்,
உத்தமசிலி R. ஸ்ரீநிவாஸன்

திருவரங்கம்
*29.09.2002*

# அறிமுக உரை

முனைவர் **இரா. தியாகராஜன்** M.Sc., M.Phil., Ph,D.,
தலைவர், இயற்பியல் ஆய்வுத்துறை
உருமு தனலட்சுமி கல்லூரி, திருச்சிராப்பள்ளி - 19.

> "எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
> மங்காத தமிழ் என்று சங்கே முழங்கு"

என்ற பாவேந்தர் பாரதிதாசனார் பாட்டின் வழிநின்று சமய இலக்கியங்களிலும் வழிபாடுகளிலும் தமிழ்ச்சங்கை உலகம் உணர முழங்கிக் கொண்டிருக்கும் முனைவர் க. **சண்முகசுந்தரம்** அவர் களை உளமுவந்து வாழ்த்துகிறேன்.

'திருவரங்கம் பெரிய கோயில் திருவிழாக்களும் ஒழுகலாறு களும்' என்ற அவரது ஆய்வேடு இன்று நூல் வடிவம் பெறுகின்றது. அது கண்டு மகிழ்கின்றேன். திருச்சிமாநகரத் திருவரங்கப் பெருநகரில் கந்தமேஸ்திரியார் - சின்னம்மாளுக்கு இளையமகனாக 1947ஆம் ஆண்டு மாசி திங்கள் பிறந்தவர் அவர். திருவரங்கம் ஆண்கள் உயர்நிலைப்பள்ளியில் பள்ளிக் கல்வி பயின்று பின் திருச்சி தேசியக் கல்லூரியில் முதுகலை வரைப் பயின்றார்.

பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் எம்.ஃபில்.. பி,எச்டி. பட்டங்களைப் பெற்றார். இவர் தனது கல்விப் பணியைத் தொடர்ந்து உருமு தனலெட்சுமி கல்லூரியில் கடந்த 25 ஆண்டுகளாக விரிவுரை யாளராகப் பணியாற்றி வருகின்றார்.

கடந்த 7 ஆண்டுகளாக தமிழ்த்துறை தலைவராகப் பொறுப்பேற்று அப்பணியைச் செம்மையுடனும் சிறப்புடனும் செய்து வருகின்றார்.

இவரது ஆழ்ந்த அறிவும், திறமையும் தமிழ் நூல்கள் வாயிலாக வெளிப்படும் ஆற்றலைக் கண்டு 'உடையார் முன் இல்லார் போல்

ஏக்கற்றும் கற்றார்போல்' இவரை மாணவர்கள் என்றும் சூழ்ந்த வண்ணம் இருக்கிறார்கள். இதுவரை இருபத்தைந்து எம்.ஃபில் மாணவர்கள் இவரிடம் பட்டம் பெற்றுள்ளனர். மேலும் ஐந்து பிஎச்.டி. மாணவர்கள் இவரது ஆய்வுநெறி கொண்டு ஆராய்ச்சிப் பட்டம் (முனைவர்) பெற்றுள்ளனர். இன்னும் ஒன்பது மாணவர்கள் முனைவர் பட்டம் பெற பதிவு செய்துகொண்டு இவரது துணை கொண்டு ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ளனர்.

இவர் அருள்மிகு சமயபுரம் மாரியம்மன் திருக்கோயில் பற்றிய எம்.ஃபில் ஆய்வேட்டினை 1989ஆம் ஆண்டு நூல் வடிவில் வெளியிட்டு உள்ளார். திருவரங்கம் கோயில், திருவானைக் கோயில், திருச்சி மலைக்கோட்டை கோயில், திருப்பைஞ்சிலி, திருவெள்ளறை போன்ற திருக்கோயில்கள் பற்றிய பல கட்டுரைகளை நாள் ஏடு, மாத இதழ் வாயிலாக எழுதிக் கொண்டுவருகிறார்.

"தாம்இன் புறுவது உலகுஇன் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்"

என்னும் குறள் நெறியின்படி, தான் அறிந்து இன்புற்றதை உலகிற்குத் தெளிவாய் விளக்கி வருகின்றார்.

'கற்க கசடறக் கற்றதைக் கற்பிக்க என்ப இவ்விரண்டும் கண் என்ப நூல் ஆசிரியருக்கே' என்னும் இலக்கணத்திற்கு இலக்கியமாய்த் திகழும் பேராசிரியர் முனைவர் க. சண்முகசுந்தரம் பற்றி முழுமை யாக ஒரு நூலே எழுதலாம். ஆனால் இது ஒரு அறிமுக உரை. எனவே இத்துடன் நிறைவு செய்கிறேன்.

அவரது ஆராய்ச்சி பணி மற்றும் கல்விப் பணி தமிழ் உள்ளவரை வாழட்டும் வளரட்டும்.

அவரது புகழ் வாழ்க!

திருச்சிராப்பள்ளி
3.10.2002

இரா. தியாகராஜன்

# என்னுரை

திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழகத்தில் 1986-88ஆம் ஆண்டுகளில் முனைவர் பட்டத்திற்கு முழுநேர ஆய்வாளராக பல்கலைக்கழக நல்கை குழு துறை மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ் (U.G.C. - FIP) திருச்சி உருமு தனலட்சுமி கல்லூரியில் இருந்து அனுப்பப்பட்டேன். இவ்வாய்ப்பை எனக்கு அளித்த உருமு தனலட்சுமி கல்லூரி முதல்வர் அவர்களுக்கும் நிர்வாகக் குழுவினருக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன். என் ஆய்வேடு செம்மையுற்று விளங்க எனக்கு முழுதும் அறிவுறுத்திய உருமு தனலட்சுமி கல்லூரி நிர்வாக குழுவின் முன்னாள் தலைவர் அமரர் திரு G.C. பட்டாபிராம் அவர்கள் நினைவை எண்ணி வணங்குகிறேன். பாரதிதாசன் பல்கலை கழக தமிழ் ஆய்வுத்துறையின் முன்னாள் தலைவரும் என் ஆய்வு நெறி யாளருமான முனைவர் மா. இராமலிங்கம் அவர்களின் வழிகாட்டுத லோடு என் ஆய்வினை சிறப்புற முடித்து முனைவர் பட்டம் பெற்றேன்.

'திருவரங்கம் பெரியகோயில் திருவிழாக்களும் ஒழுகலாறு களும்' என்னும் தலைப்பின் கீழ் கள ஆய்வினை மேற் கொண்டு பல வைணவ பெருமக்கள், திருவரங்க கோயில் தலத்தார்கள், அர்ச்சகர்கள், ஆசாரியர்கள், பொறுப்பாளர்கள், பணியாளர்கள் போன்றோர்தம் துணையுடன் இவ்வாய்வேடு சிறப்புற தொகுக்கப்பட்டுள்ளது. இக்கால இலக்கியங்களில் அன்பும் ஆர்வமும் கொண்ட என்னை திருக்கோயில்கள் பற்றி கள ஆய்வில் ஈடு படுத்தியவர் என் ஆய்வு நெறியாளர் முனைவர் மா. இராமலிங்கம் அவர்களே ஆவார்.

அவர் இடத்து நான் M.Phil., பட்டம் பயிலுங்கால் சமயபுரம் மாரியம்மன் திருக்கோயில் பற்றிய ஆய்வினை மேற்கொண்டேன். பின்னர் முனைவர் பட்டப்படிப்பு தொடரும்போது திருக்கோயில் பற்றிய சிந்தனையில் திருவரங்கம் பெரியகோயில் பற்றிய ஆய்வினை மேற்கொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது. இதுகாறும் நான் எழுதிய திருக்கோயில்கள் பற்றி பதினைந்துக்கும் மேற்பட்ட ஆய்வு கட்டுரை கள் பல ஏடுகளிலும், நூல்களிலும் இடம் பெற்றுள்ளன. என்னிடம் (M Phil.,) பயிலும் மாணவர்களுக்கும் Ph.D., பயிலும் மாணவர் களுக்கும் மட்டுமன்றி வரலாற்றுத் துறை, கல்வெட்டுத் துறைகளைச் சார்ந்த M.Phil., Ph.D., மாணவர்களுக்கும் திருக்கோயில்கள் பற்றிய கள ஆய்வு (Temple Study) பற்றிய செய்திகளை அளித்துவருகின்றேன். திருவரங்கத்தைச் சார்ந்தவன் என்பதாலும் திருவரங்கம் கோயிலோடு பலவகையிலும் தொடர்புடைய குடும்பத்தைச் சார்ந்தவன் என்பதாலும்

இவ்வாய்வேட்டினை சிறப்புற முடிக்கும் வாய்ப்பு கிடைத்தது. திருமலை திருப்பதி திருக்கோயிலார் நூல்வெளியீடு ஊக்குவிப்புத் திட்டத்தின் கீழ் நிதி உதவிபெற்று என் ஆய்வேடு நூல் வடிவு பெருகிறது. அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி. என் ஆய்வு நெறியாளர் முனைவர் மா. இராமலிங்கம் அவர்களுக்கு என் நன்றியினைத் தெரிவிக்கக் கடப்பாடு உடையேன். இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிய திருச்சி தேசியக் கல்லூரித் தமிழ் ஆய்வுத் துறை தலைவரும் (ஓய்வு) என்னுடைய பேராசிரியருமான முனைவர் V. நாகராஜன் அவர்களுக்கு நன்றி கூறுகின்றேன்.

இந் நூலுக்கு வாழ்த்துரை வழங்கி என்னையும், நூலையும் வாழ்த்திய முனைவர் பிரேமா நந்தகுமார் அவர்களுக்கு என் நன்றியை உரியதாக்குகிறேன். இந்நூலுக்கு சிறந்ததோர் தகவுரை நல்கிய 'வைணவச் செம்மல்' திரு. அ. கிருஷ்ணமாசார்யர் அவர்களுக்கு என் அன்புகனிந்த வணக்கம். சிறந்ததொரு சிறப்புரை வழங்கிய என் ஞானாசிரியர் திரு. உத்தமசீலி சுவாமி அவர்களுக்கு என்னுடைய வணக்கத்தைத் தெரிவிக்க விழைகின்றேன். அறிமுக உரை நல்கி என்னைப் பெருமைப்படுத்திய உருமு தனலட்சுமி கல்லூரி இயற்பியல் ஆய்வுத் துறை தலைவரும் இனிய நண்பருமான முனைவர் இரா. தியாகராசனுக்கு அன்பார்ந்த நன்றி. ஆய்வேட்டை நூல் வடிவில் வெளியிட அனுமதிதந்த பாரதிதாசன் பல்கலைகழகத் தாருக்கு நன்றி கூற விழைகின்றேன்.

திருவரங்ககோயில் தொடர்பான நூல்கள் பலவற்றைக் கொடுத்து உதவி இவ்வாய்வேட்டிற்கு ஓவியங்கள் வரைந்து கொடுத்துச் சிறப்பித்த இக்கோயில் சுழல் முறை அறங்காவலரும், தலத்தாருமான திரு. உத்தமநம்பி சிங்கபெருமாள் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

சிறப்பான முறையில் இந் நூலை அச்சிட்டுத் தந்த திருவரங்கம் ஸ்ரீரங்கநாச்சியார் அச்சகத்தாருக்கு என்றென்றும் கடமை உடையவன் ஆவேன். இந்நூல் அழகுற விளங்க முழுமையான காரணம் திருவரங்கம் ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ அ. கிருஷ்ணமா சாரியார் அவர்களையே சாரும். அவருக்கு என்றும் என் இதயம்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ் கூறும் நல்லுலகம் இந்நூலினை ஏற்று வாழ்த்தி அருளுமாறு இருகரம் கூப்பி வேண்டுகிறேன்.

முனைவர் க. சண்முகசுந்தரம்
தலைவர், தமிழ் ஆய்வுத்துறை, உருமு தனலட்சுமி கல்லூரி, திருச்சி- 19.

# முன்னுரை

'ஆலயம் தொழுவது சாலவும் நன்று' என்றார் ஔவையார். 'கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டா' என்கிறது பழமொழி. இதற்கிணங்க ஊர்கள்தோறும் கோயில்கள் பண்டுதொட்டு இருந்து வருவதை 'ஊரானோர் தேவகுலம்' என்ற சேனாவரையர் எடுத்துக் காட்டால் அறியலாம்.

கோயில் இருந்தால் போதுமா? நித்திய, நைமித்திக பூசைகள் நடக்க வேண்டாவா? அவை தொடர்ந்து நடக்க வேண்டாவா? இவற்றை உணர்ந்த அரசர்களும் பொதுமக்களும் பூசைகள் செம்மையாக நடைபெற கொடுத்த நிவந்தங்களை விளக்குகின்றவையே கோயிலில் உள்ள பெரும்பான்மையான கல்வெட்டுகள்.

கோயில்களில், அக்கோயிலில் எழுந்தருளியுள்ள 'இறை' பற்றிப் புராணங்களும், வழங்கும் கதைகளும் கூறும் செய்திகளுக்கு ஏற்பவும் சமய நிலைக்கு ஏற்பவும் பூசைகளும் விழாக்களும் நடைபெற்று வருகின்றன. தலவரலாற்றுக்கேற்ப சிறப்பு விழாக்களும் கோயில்களில் நடைபெறுகின்றன. இறையன்பில் திளைத்த சமயச் சான்றோர்களால் ஒழுங்குபடுத்தப்பட்ட நெறி முறையில் கோயில் விழாக்கள் நடைபெற்று வருகின்றன.

இவ்விழாக்கள் ஆண்டிற்கு ஓரிரு நாள்கள் நடைபெறும் கோயில்களும் உண்டு. ஐம்பது, அறுபது நாள்கள் நடைபெறும் கோயில்களும் உண்டு. ஆண்டின் எல்லா நாள்களிலும் விழாக்கோலம் பூணும் கோயில் ஒன்று உண்டென்றால் அது திருவரங்கம் பெரிய கோயில்தான் என்றால் மிகையாகாது. மேலும் திருவரங்கம் கோயில் காலம் கணிக்க முடியாத அளவிற்குப் பழமை படைத்ததுமாகும்.

காலப்பழமையும், விழாச்சிறப்பும் அமைந்த இக்கோயில் இந்துக்கள் அனைவராலும் (அவர்கள் உலகிலுள்ள நாடுகளில் எந்தப் பகுதியில் வாழ்பவராயினும்) அறியப்பட்ட கோயிலாகவும் இங்கு

நடைபெறும் வைகுண்ட ஏகாதசித் திருவிழா எல்லோராலும் அறியப்பெற்ற ஒன்றாகவும் விளங்கக் காண்கின்றோம்.

இத்திருக்கோயிலுக்குச் சென்று, நடைபெறும் விழாக்களில் கலந்து, ஆருயிர்க்கு உறுதி தேடும் கருத்தோடு அரங்கனை வழிபட்டு, களித்து இரண்டறக் கலந்துவிடும் பக்தர்களுக்குக் கூட ஆண்டு முழுமையும் நடைபெறும் விழாக்களும், அவற்றின் கூறுபாடுகளும் அவற்றை நிகழ்த்துவோரும், அவை நிகழ்த்தப்பெறும் முறைகளும், அவற்றிற்குரிய நிவேதனங்களும், புறப்பாடும், புறப்பாட்டின் எல்லையும், அவை தழீய காரணங்களும் போன்ற செயல்கள் முழுதும் அறியாதனவாகும்.

திருவரங்கம் அரங்கனை வழிபடுவோர் யாவராயினும் அவர் அத்தெய்வ இயல்பையும், கோயிற்சிறப்பையும், விழாச் சிறப்பையும் தத்துவ மேம்பாட்டையும் போற்றிப் புகழ்வர். அவர் கோயிலின் பெருமையுடன் அதனோடு கலந்து நிகழும் விழாக் கூறுபாடுகள் சமுதாய அமைப்புகள் ஒழுகலாறுகள் போன்ற எண்ணிறந்த செய்திகளையும் அறிந்து வழிபடுவாராயின், வழிபடுபயன் பெரிதாவ தோடு ஆண்டாண்டுள்ள கோயில்களைப் புறக்கணிக்காது போற்றும் பண்பும் அவற்றைப் பேணும் மனமும் பெறுவர். அவர் பெறும் அறப்பயனும் முழுமைபெறும்.

### ஆராய்ச்சியில் ஆய்வுமுறை

முதற்கண் அமைந்துள்ள 1) திருவரங்கம் பெரியகோயின் தோற்றமும் வளர்ச்சியும், 2) நுல்கள் வாயிலாகத் திருவிழாக்கள், 3) கல்வெட்டுகள் தெரிவிக்கும் திருவிழாக்கள் 4) இராமானுசரின் திருக்கோயில் நடைமுறைச் சீர்திருத்தம் ஆகிய நான்கு இயல்களிலும் ஆராய்ச்சிக் கட்டுரையை ஒட்டிய செய்திகள் எழுதப்பட்டுள்ளன. ஐந்தாம் இயலில் இக்கோயிலில் நடைபெற்றுவரும் ஆண்டு விழாவான பிரம்மோற்சவமும், ஆறாம் இயலில் தெப்பத்திருநாளும், ஏழாம் இயலில் பரிகாரத் திருநாளான திருப்பவித்திரத் திருநாளும், எட்டாம்

இயலில் வைணவத் திருத்தலங்களில் சிறப்பாக நடைபெற்று வரும் அத்தியயனத் திருநாளும் கூறப்பட்டுள்ளன. ஒன்பதாம் இயலில் மற்ற திருநாள்களும் கூறப்பட்டுள்ளன.

**ஆராய்ச்சியின் நெறிமுறை**

ஆராய்ச்சியின் முதல் மூலங்களாக, நூல் வடிவிலுள்ள புராணங்கள், ஆகமங்கள், ஓலைச்சுவடிகள், தமிழ் இலக்கியங்கள், தமிழ் நூல்கள், கல்வெட்டுகள், வடமொழி நூல்கள், கோயிலின் தலவரலாற்று நூலான 'கோயில் ஒழுகு' முதலானவற்றையும், இரண்டாவது மூலங்களாக, இக்கோயிலோடு தொடர்புடைய கோயில் மரியாதைக்காரர்கள், வைணவ அறிஞர்கள் மூலம் நேரில் தெரிந்துகொண்ட தரவுகளையும், இவ்வாராய்ச்சிக்குத் தொடர் புடைய கருத்துகளையும் கொண்டு தொகுக்கப்பட்டுள்ளன.

இரண்டாம் மூன்றாம் இயல்களில், இக்கோயிலில் நடைபெறும் விழாக்கள் அன்றும் இன்றும் எவ்வாறு ஒத்தும் உறழ்ந்தும் உள்ளன என்ற செய்திகள் முதல் ஆய்வு மூலத்தில் சொல்லப்பட்ட நூல்களின் துணை கொண்டு ஆராயப்பட்டுள்ளன.

ஐந்தாம் இயலிலிருந்து பொது அமைப்பாக விழாக்களின் நடைமுறைச் செய்திகளை ஆகமங்கள் வழிநின்று எடுத்துரைத்து, இன்றைய நடைமுறையில் அவ்விழாக்கள் நடைபெறும் முறைப் பற்றி நேரில் கண்டவாறு விவரிக்கப்பட்டுள்ளன.

வடமொழி, ஆங்கில மொழி நூல்களிலிருந்து மேற்கோளாகக் கையாண்ட சொற்களின் தமிழாக்கம் முன்னோர் நெறிமுறையைப் பின்பற்றியதாகும்.

பொருட்பெயர்களைப் பொறுத்தவரை கோயில் வழக்காற்றில் உள்ளபடியே சொற்கள் கையாளப்பட்டுள்ளன.

**க. சண்முகசுந்தரம்**
தலைவர், தமிழ் ஆய்வுத்துறை,
உருமு தனலட்சுமி கல்லூரி, திருச்சி- 19.

# பன்னிரு ஆழ்வார்கள்



பொய்கையாழ்வார்



பூதத்தாழ்வார்



பேயாழ்வார்



திருமழிசையாழ்வார்



குலசேகராழ்வார்



பெரியாழ்வார்



நம்மாழ்வார்



மதுரகவியாழ்வார்



ஆண்டாள்



திருமங்கையாழ்வார்



திருப்பாணாழ்வார்



தொண்டரடிப்பொடியாழ்வார்

# திருவரங்கம் பெரியகோயிலின் தோற்றமும் வளர்ச்சியும்

தமிழ்நாடு திருக்கோயில்கள் நிறைந்த நாடு. சில கோயில்கள் பழம்பெருமை வாய்ந்தவை; பலரும் போற்றி வழிபட்டு வரும் சிறப்புடையவை. இத்திருக்கோயில்களில் எழுந்தருளியுள்ள மூர்த்திகள் ஆழ்வார்களாலும், நாயன்மார்களாலும் போற்றப் பட்டுள்ளன அவர்களால் பாடப்பெற்ற பாசுரங்கள் தமிழ் இலக்கியத் தில் பக்தி இலக்கிய வகையாகத் திகழ்கின்றன.

## 1 திருவரங்கம் பெரியகோயில்

தமிழ்நாட்டின் மையப்பகுதியாம் திருச்சிராப்பள்ளியின் அருகில் காவிரி, கொள்ளிடம் என்னும் இரண்டு ஆறுகளுக்கு இடைப்பட்ட பகுதியில் திருவரங்கம் கோயில் $10^{0}$ 52` வடக்கிலும் $78^{0}$ 42'கிழக்கிலுமாக அமைந்துள்ளது.

ஆழ்வார்களும், நாதமுனி, யாமுனாசாரியர் (ஆளவந்தார்), இராமானுசர், பராசரபட்டர், வேதாந்ததேசிகர், மணவாளமாமுனிகள் போன்ற வைணவப் பெருமக்களும், ஏனைய சான்றோர்களும், திருவரங்கத்தைப் புனிதமாகக் கருதியதால் வைணவத் திருத் தலங்களில் `திருவரங்கத் திருப்பதி' சிறப்பிடத்தைப் பெற்று வரு கிறது திருவரங்கம் கோயிலைப் பொறுத்தவரையில் இராமானுசரால் வழிபாடும், விழாக்களும் முறைப்படி வகுக்கப்பட்டு இன்றளவும் அவை நடைபெற்று வருகின்றன. அங்ஙனமே, சைவத்தில் தேவாரம் பாடிய மூவரும், திருவாசகம் பாடிய மாணிக்கவாசகரும், பட்டினத்தடி கள், தாயுமானவர், கருவூர்த் தேவர் போன்ற அடியவர்களும் தில்லை முதலிய சைவக்கோயில்களில் விளங்கும் திருமேனியைப் பாடி யுள்ளனர். எல்லாத் திருக்கோயில்களிலும், வேத ஆகம விதிப்படி இன்றும் வழிபாடுகளும் விழாக்களும் நடைபெறுகின்றன.

கோயில் என்ற சொல் கோ + இல் = கோயில் என்றாயிற்று. பொது விதிப்படி கோவில் என வகர உடம்படு மெய் பெறாது 'யகரம்' பெற்று வழங்குவது இலக்கணப் போலி. பெருமாளின் இருப்பிடம் என ஆறாம் வேற்றுமைத் தொகையாகவோ, தலைமையான இடம் எனப் பண்புத் தொகையாகவோ விரியும். கோ - தலைவன், தலைமை; இல் - இடம், வீடு ; இது தெய்வாலயங்களுக்கெல்லாம் பொதுப் பெயராயினும், நூற்றெட்டுத் திருப்பதிகளுள் திருவரங்கம் தலைமை பெற்றதாதலால் இதனைக் கோயில் எனச் சிறப்பாக வழங்குவது வைணவ மரபாகும். இது காரணஇடுகுறியின் பாற்படும்.

பெரியகோயில் என வைணவர்கள் திருவரங்கம் அரங்க நாதர் திருக்கோயிலையும் சைவர்கள் சிதம்பரம் நடராசர் திருக் கோயிலையும் குறிப்பது மரபாம்.

திரு அரங்கம் : 'திரு' என்பது கண்டோரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்.[1] 'திரு' என்பது அழகு எனப்படும். வடமொழியில் 'ஸ்ரீ' என்பது போலத் தமிழில் தேவர்கள், அடியார்கள், ஞானநூல், மந்திரங்கள், புண்ணியத்தலங்கள், புண்ணியத் தீர்த்தங்கள் முதலிய மேன்மையுடைய பல பொருள்களுக்குச் சிறப்புப் பதமாகி, மகிமைப் பொருளைக் காட்டி அவற்றிற்கு முன் நிற்கும். ஸ்ரீமகாவிஷ்ணு, ஸ்ரீபக்தி ஸாரர், ஸ்ரீராமாயணம், ஸ்ரீஅஷ்டாட்சரம், ஸ்ரீரங்கம், ஸ்ரீபாதம் என்பன திருமால், திருமழிசைப்பிரான், திருவாய்மொழி, திருவெட்டெழுத்து, திருவரங்கம், திருவல்லிக்கேணி, திருவடி என வழங்குவதும் நோக்கத்தக்கது.

திருவைகுந்தம், திருப்பாற்கடல், சூரியமண்டலம், துறவி களின் உள்ளக் கமலம் என்னும் இவையனைத்திலும் இனியதென்று திருமால் திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்குமிடம். ஆகையால் இத்தலம், 'திருவரங்கம்' என்று பெயர் பெற்றது. திருமால் இங்கு ஆசைப் பெருக்கத்தை அடைகிறார் என்பர் சான்றோர்.

'ரங்கம்' என்பதும் வடமொழி. அகரம் மொழி முதலாகி முன்வரப்பெற்று அரங்கம் என நின்றது.[2] இங்கு அரங்கம் என்பது விமானத்தின் பெயர். அது திருப்பதியைக் குறித்தலால் தானியாகு

பெயர். இனி திருமகனார் திருநடனம் செய்யுமிடமாகவும், வைணவர் களின் மேன்மைக்கு என இறைவன் கூத்துப் பயிலுமிடமாகவும். ஆற்றிடைக்குறை ஆகவும் இருத்தல் பற்றி திருவரங்கம் எனப் பெயர் வந்தது. ஆற்றிடைக் குறையைத் 'துருத்தி' என்றும், 'அரங்கம்' என்றும் குறிப்பர்.

வடமொழியில் 'அ' என்பது எதிர்மறைப் பொருளைத் தருமாதலால் அவர்கள் அகரத்தை ஒழித்து, அரங்கத்தை 'ரங்கம்' என்றே தம் மொழிக்கேற்றவாறு கொண்டனர்.

'திரு' என்பதற்கு - மேன்மையான என்று பெயர் கொண்ட டால், திருவரங்கம் என்னும் தொடர் பண்புத் தொகையும், மேன்மை யுடைய என்று பெயர் கொண்டால், இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகையும் ஆகும்.

பெருமாள் என்ற சொல் பெருமையை உடையவர் என்றும் பொருளைத் தரும். இதில் பெருமை என்ற பகுதி ஈற்று ஐகாரம் மாத்திரம் கெட்டு, 'பெரும்' என நின்றது. 'ஆள்' என்ற பெண்பால் விகுதியே சிறுபான்மை ஆண்பாலுக்கு வந்ததென்றாலும் ஒன்று, அன்றிப் பெருமையை ஆள்பவனெனக் கொண்டால் 'ஆள்' என்ற வினைப் பகுதி கருத்தாகப் பொருள் விகுதி கெட்டதெனல் வேண்டும்.

திருமாலே பரம்பொருள் என்பதை விளக்கும் சொல்லே பெருமாள் என்பதாகும். பரம்பொருளை வடமொழியில் 'பிரம்மம்' என்பர். பிரு என்ற அடிச் சொல்லுக்குப் 'பெரிய' என்பது பொரு ளாகும். சிவபரம் பொருளைச் சிவபெருமான் என்று சைவர்கள் அழைப்பது போல திருமாலைப் பெருமாள் என்கின்றனர். தமிழ் இலக்கியத்தில் இறைவனைக் குறிக்கப் பெரியவன் என்ற சொல் வழங்கக் காண்கிறோம்.

'திருவரங்கம் பெரிய கோயில்' என்று வைணவ பெரு மக்களால் இக்கோயில் இன்றும் அழைக்கப்படுகிறது. இங்கு கோயில் கொண்டிருக்கும் பெருமாளுக்குப் பெரிய பெருமாள் என்றும், தாயாருக்குப் பெரிய பிராட்டியார் என்றும் பெயர். தெய்வங்

களுக்கு மட்டும் 'பெரிய' என்னும் சிறப்புத் தந்ததோடு அல்லாமல், பெருமாள் உறைந்துள்ள ஊருக்குப் பேரரங்கம்; அமுது செய்யும் தளிகைக்குப் பெரிய அவசரம்; மேளத்திற்குப் பெரிய மேளம்; பலகாரத்திற்குப் பெரிய திருப்பணியாரம்; படையலுக்குப் பெரிய பாவாடை; மணிக்குப் பெரிய மணி என்றவாறு பெருமாளைச் சார்ந்தவை யாவும் பெருமைப்படுத்தி அழைக்கப்படுகின்றன.

இப்பகுதியைச் சூழ்ந்துள்ள உழவர் பெருமக்கள், நெல் அளக்கும்போது திருவரங்கம் ஒன்று, பெரிய கோயில் இரண்டு; பின் மூன்று என்றவாறு அளக்கும் முறை இன்றும் வழக்கில் உண்டு.

## 1:2 கோயில் வரலாறு

திருவரங்கம் கோயில் வரலாற்றினைப் புராணப் பின்னணி, வரலாற்றுப் பின்னணி என்று பகுத்து நோக்கலாம்.

### 1:2:1 புராணப் பின்னணி

1. காருட புராணத்தில் 108 அத்தியாயமாயுள்ள **'சதாத்யாயீ' ஸ்ரீரங்க மகாத்மியம்**
2. பிருமாண்ட புராணத்தில் 11 அத்தியாயமாயுள்ள **'தசாத்யாயீ' ஸ்ரீரங்க மகாத்மியம்.**
3. **ஸ்ரீரங்க விமானப் பிரதட்சண மகாத்மியம்**
4. **ஸ்ரீரங்க ப்ரம்ம வித்தை** (நாரதர் பிரகலாதனுக்கு உபதேசம் செய்வதாக அமைந்துள்ளது)
5. **ஸ்ரீரங்கப்பட்டண மகாத்மியம்** (மைசூர் ஸ்ரீரங்கம் பட்டணத் தைப் பற்றி ஐந்து அத்தியாயமாயுள்ள இந்த மகாத்மியத்தில் ஸ்ரீரங்கம் பற்றிய செய்தியும் இருப்பதால் அதன் சுருக்கம்)
6. **பாரமேசுவர சம்ஹிதையில் ஸ்ரீரங்க மகாத்மியம்** (10ஆம் அத்தியாயத்தில் ஸ்ரீரங்க மகாத்மியம் சொல்லப் படுகிறது)
7. **வால்மீகி இராமாயணம் உத்திரகாண்டம் போன்ற** நூல்களிலிருந்தும் எடுக்கப்பட்டிருப்பதால் இதைப் புராணப் பின்னணி என்று குறிப்பிடுவோம்.

திருவரங்கம் கோயில் விமானம், பிரமதேவன் தவ நலத்தால், ஐப்பசித் திங்கள் வளர்பிறை சுக்லபட்சம் (கிருஷ்ணபட்சம்) ரோகிணி நாள் அன்று திருப்பாற் கடலினின்றும் சத்திய உலகம் சென்றடைந்தது.[3] அங்குப் பிரம்மதேவர் பாஞ்சராத்திர மறிந்து தீட்சை பெற்ற ஐந்து அந்தணர்களைக் கொண்டும், தனது மைந்தர்களைக் கொண்டும் தேவருலகில் நெடுங்காலம் வழிபட்டு வந்தார்.[4] விஷ்ணுவின் திருநாளாகிய திருவோணத்தன்று உற்சவமும், அவபிரதமும் செய்தார். நாள் வழிபாடு நடத்தும்படிச் சூரியனை நியமித்தார். சூரியன், தன் மகன் மனுவுக்குத் திருவரங்க விமானத் தின் சிறப்பினைக்கூற, அது கேட்ட மனுவும் தன் தவ வலிமையால் தேவருலகம் சென்று, விமானத்தையும் பெருமாளையும், வழிபட்டு மகிழ்ந்தார். அதன்பின் மனு, தன் மகனாகிய இட்சுவாகுவிற்கு விமானத்தின் பெருமையினை இயம்பினார்.[5]

இட்சுவாகு அவ்விமானத்தை இம்மண்ணுலகினர் அனைவரும் வழிபட்டுப் பேரானந்தமடைய வேண்டுமென்றெண்ணி அவ்விமானம் அயோத்திக்கு வரவேண்டி, தன் குல குருவான வசிட்டரின் அறிவுரைப் படி எட்டெழுத்து மந்திரத்தை ஓதி, தன் மனைவியுடன் தவம் மேற்கொண்டார். [6]

இட்சுவாகுவின் தவத்தின் சிறப்பினை அறிந்த பிரமன், தனது பெருநிதியான அரங்க விமானத்தை இட்சுவாகு அடையப்போவதை உணர்ந்து, அரங்கப் பெருமானிடம் சென்று வருந்தினார். அரங்கப் பெருமாள் அவனைத் தேற்றித் தான் நெடுநாள் முன்னதாகவே அயோத்திக்குச் செல்ல எண்ணியிருப்பதாகவும், அங்கும் ரகு குலத்தார் நான்கு சதுர்யுகம் தன்னை ஆராதிப்பார்கள் என்றும் அதன் பின்னர்ச் சோழமன்னர்கள் அரசு புரியும் காவிரிப் பொழிலில் ஏழு மனுவந்திரம் வரை தங்கியிருந்து பிறகு தேவருலகம் வருவதாகவும் கூறினார். இட்சுவாகுவிடம் அரங்க விமானத்தைக் கொடுத்துவிடு மாறு கூற, பிரமனும், அவ்வாறே செய்தார்.[7]

இட்சுவாகு அரங்க விமானத்தைப் பெற்றுக்கொண்டு அயோத்தி வந்தடைந்தார். அந்நகரின் வடக்கில் சற்று தூரத்தில் சரயூ நதிக்கும் தமஸாநதிக்கும் இடையில் தெற்கு முகமாய்ப் பிரதிட்டை செய்தார்.

அங்கு கோயில்கள், மண்டபங்கள் முதலியவைகள் அமைத்துக் காலங்கள் தவறாமல் வழிபாடுகளும் விழாக்களும் நடத்தினார். பங்குனித் திங்கள் உத்திரநாளன்று, உற்சவமும், அவபிரதத்தையும் செய்வித்தார்.[8]

இட்சுவாகு வழியினர் 'அரங்கனை' நான்கு சதுர்யுகம்வரை ஆராதித்து வருங்காலை, ஐந்தாம் சதுர்யுகத்தில் அதாவது திரேதா யுகத்தில் தசரதமன்னர் மகப்பேறு வேண்டி அசுவமேதயாகம் செய்தார். அதன் பொருட்டு வந்த பலநாட்டு மன்னர்களும், தெற்கே தமிழ்நாட்டைச் சார்ந்த சோழ மன்னனும் (தர்மவர்மா) விமானத்தைக் கண்டு வழிபட்டு மகிழ்வெய்தினர்.

சோழமன்னன் தர்மவர்மன் தன் நாடு திரும்பியதும் அரங்க விமானம் காவிரிக்கரைக்கு வரவேண்டி, சந்திரபுட்கரணி அருகில் தவமேற்கொண்டான். காவிரிக் கரையிலுள்ள முனிவர்கள், தர்மவர்மாவிடம் சென்று அரங்க விமானம் காவிரிக் கரைக்கு வரும் காலம் வந்துவிட்டது என்றும், அவன் தவத்தை நிறுத்துமாறும் கூறினர். தர்மவர்மாவும் தன் தவத்தை நிறுத்தி அரங்கவிமானம் காவிரிக் கரைக்கு வரும் காலத்தை எதிர் நோக்கியிருந்தான்.[9]

தசரத மன்னனுக்குத் திருமாலே இராம அவதாரம் மேற்கொண்டு மகனாகப் பிறந்து இராவணனை அழித்து அயோத்தியில் முடிசூட்டிக்கொண்டார். அப்பொழுது வீடணனுக்கு இவ்விமானத் தினை இராமன் அன்புடன் அளித்தார். அவ்விமானத்தை வீடணன் தன் தலை மீது மிகுந்த பக்தியுடன் ஏற்று, இராமபிரானைத் துதித்தவாறு இலங்கைக்கு எடுத்துச் சென்றான். செல்லும் வழியில் காவிரிக் கரையில் இவ்விமானத்தை வைத்து நீராடச் சென்றான். பங்குனித் திங்கள், இளவேனில் தொடக்கத்தில் உரோகிணி நட்சத்திரமும், பஞ்சமி திதியும் கூடிய சனிக்கிழமை உச்சி நேரத்தில் வீடணனால் காவிரிக்கரைக்கு அரங்க விமானம் வந்தடைந்தது. அரங்க விமானம் காவிரிக் கரைக்கு வந்ததை அறிந்த தர்மவர்மாவும் முனிவர்களும் வந்து அரங்கனை வழிபட்டனர்.[10]

அயோத்தியில் இட்சுவாகு வழியினர் நடத்திய பங்குனித் திருநாளை இக்காவிரிக் கரையில் தர்மவர்மாவின் வேண்டுகோளை

ஏற்றுப் பதினைந்து நாள்கள் விடணன் உடன் இருந்து நடத்தினான். ஒன்பது நாள் விழா, பங்குனித் திங்கள் முழு நிலவன்று அவபிரதமும், பதினாறாம்நாள் காலை தர்மவர்மாவிடமும் மற்றவர்களிடமும் விடைபெற்றுக்கொண்டு விமானத்தை எடுக்கும்போது அது அவ்விடத்தினின்று எடுக்க முடியாமல் போயிற்று. விடணன் கலங்கிக் கண்ணீர்மல்கிக் கதறியழுதான். அப்பொழுது பெருமாள் அவனிடம் "தாம் காவிரிக் கரையிலே தங்கி இருப்பதாகத் தனது விருப்பினைக் கூறி, தென்திசை இலங்கை நோக்கித் தான் பள்ளிகொண்டு அவனைக் காண்பதாகவும்" கூறினார். மேலும் காவிரியின் புகழினைக் கருதி தான் இங்கு இருப்பதற்கான விருப்பத்தையும் கூறி, அதற்கான காவிரியின் கதை ஒன்றினையும் கூறினார். [11]

அன்று முதல் அரங்கவிமானம் காவிரிக் கரைமேல் மண்ணுலகர் அனைவருக்கும் காட்சிக் கொடுத்துக் கொண்டிருக்கிறது.

பின்னர்த் தர்மவர்மா அவ்விமானத்தைச் சுற்றி, முதல் சுற்றினை எடுத்தான். வழிபாடுகளும் விழாக்களும் நடப்பித்தான். அவன் கட்டிய கோயில் காலவெள்ளத்தால் மண்ணில் புதையுண்டது. [12] அவன் மரபில் வந்த கிளிச்சோழன் என்பான், ஒருநாள் காட்டில் வேட்டையாடச் சென்றான். அங்கு ஒரு மரநிழலில் தங்கி ஓய்வெடுத்துக் கொண்டிருந்தபோது அம்மரக்கிளையினின்றும் ஒரு கிளியானது வைகுண்டத்திலுள்ள மகாவிஷ்ணு கோயில் இருந்த இடம் இதுதான் என்ற பொருள்தரும் புராணச் செய்யுளைத் திரும்பத் திரும்பக் கூறியது. அதுகேட்ட அச்சோழன் மரத்தின் மேற்றிசையில் வேறொரு இடத்தில் கோயிலுக்கு அடிப்படையிட்டான். தரைக்கு மேல் சுவர் எழுப்பிய பிறகு திருமால் அவ்வரசன் கனவில் தோன்றிப் பழைய் கோயில் மறைந்திருக்கும் சரியான இடத்தைக் காட்டியருளினார். மன்னன் மட்டிலா மகிழ்வெய்தி, அவ்விடத்தில் சூழ்ந்திருந்த காடுகளை நீக்கி, மணல்மேடுகளை அகற்றிக் கோயிலைக் கண்டான். பின் கருவறையைச் சுற்றிக் கோயிலைக் கட்டினான். திருவீதிகள் அமைத்தான். மதில்களையும் நந்தவனங்களையும் தோற்றுவித்தான். வழிபாடுகளைச் சிறக்கச் செய்தான். [13]

இதனால், இக்கோயில் திருப்பாற்கடலில் இருந்து தோன்றியது; தேவருலகத்தில் மலரயனால் (பிரும்மா) முதல்முதலில் வழிபடப் பட்டது ; சிறப்பாக இராமாயணக் காவியநாயகன் இராமனுக்கு உரியது ; விடணனோடு தொடர்புடையது என்று அறிகின்றோம்.

ஆழ்வார்களும். இப்பெருமாள் திருப்பாற்கடலையும் திருவைகுண்டத்தையும் மறந்து சிறந்தவிடம் இக்கோயில் என்று குடிபுகுந்தார் என்பதனைப் 'பனிக்கடலில் பள்ளிகோளைப் பழகவிட் டோடி வந்த வடதடமும் வைகுந்தமும் மதிற் துவாரபுரியும் இடவகை கணிகழ்ந்திட்டு' என்று பெரியாழ்வாரும்.[14] 'பள்ளியாவது பாற்கடல் அரங்கம்' என்று திருமங்கையாழ்வாரும்[15] பாற்கடலுள் பையத் துயின்ற பரமன் என்று ஆண்டாளும் [16] அனுபவிக்கின்றனர்.

திருப்பாற்கடலையும், திருவைகுந்தம் முதலிய திருத்தலங் களையும் விட்டுத் தம் திருவுள்ளத்திலே புகுந்ததாகப் பெரியாழ்வார் கூற, பராசரபட்டர் தனது ஸ்ரீரங்க ராஜஸ்தவத்தில் திருப்பாற் கடலையும் திருவைகுந்தத்தையும் மறந்தொழிந்து, அவற்றினைக் காட்டிலும் யோக்கியதை விஞ்சினவிடம் எது? என்று கோயிலே வந்து உறங்குவான்போல யோகு செய்த பெருமானாய் விளங்கும் பெரிய பெருமாள் நம்மையும் திருவுள்ளம்பற்றி அருள்கவென்கிறார்.[17]

'பிரமன் முதலானோர்க்கு சாரத்தகுந்தவனாய் இருப்பவன், கண் வளர்ந்திருக்கும் திருப்பாற்கடல் படுக்கை, அவ்வளவும் சென்று கிட்டாதற்கு இரங்கும் இடம் கோயில் (திருவரங்கம்)' என்றார் நாச்சியார்.[18]

ஆற்றுவெள்ளம், மணல்மேடுகள், காடுகள் ஆகியவற்றால் இக்கோயில் மறைந்திருந்ததென்பது வரலாற்றுண்மைக்குப் பொருத்த முடையதே. எனினும் கோயிலின் இப்போதைய நிலையானது பண்டைக்காலத்தில் ஒரு கருவறை இருந்ததென்ற கொள்கைக்கு அரண் செய்யக்கூடிய தொல்பொருளியற் சான்றுகள் எதனையும் அளித்திலது' என்பார் அவ்பாயர் என்னும் ஆராய்ச்சியாளர்.[19]

இக்கரையில் சோழ மன்னர்கள் நிகழ்த்தியனவாகக் கூறப்பட்டவை வரலாற்று நெறிக்கு இணங்காத, கால முரண் என்னும்

வழுவுடையதாகும். மேலும், தர்மவர்மா, கிளிச்சோழன் என்பவர் களைப் பற்றிய வரலாறு, நூல்களில் ஏதும் தெரிந்திலது' என்று ஆராய்ச்சியாளர் கூறியுள்ளார்.[20]

## 1:2:1:1 புராணப் பின்னணி ஓர் ஆய்வு

தர்மவர்மா பற்றிய குறிப்பு தசாத்யாயியில் இருக்கிறதே யொழிய சதாத்யாயியில் இல்லை. இம்மன்னன் பெயர்கூட அதில் இடம் பெறவில்லை. திருவரங்கத்தருகில் உள்ள திருவானைக் கோயில், அதன் புராணம் 'திருவானைக் கோயில் புராணம்'. இதிலும் விடணன் இராமனிடத்தில் அரங்க விமானத்தைப் பெற்றுத் தன் நாட்டிற்குப் போகும் காலை, மாலை நேரத்தில், காவிரி மணலில் வைத்தான். அவன் அதை எடுக்க முடியாமல் கலங்கும்போது தன்னிடம் அவனுக்குள்ள பக்தியையும் தான் திருவரங்கத்தில் இருக்கப் போவதையும் அரங்கன் விடணனின் கனவில் சொல்லுவார் என்றிருக்கிறதேயன்றி, தர்மவர்மா பற்றிய குறிப்பு ஏதுமில்லை. தசாத்யாயி, ஸ்ரீரங்கப்பிரம்மவித்தை போன்றவைகளில் இவனைப் பற்றிய குறிப்பிருக்கிறதேயொழிய, பாகவதங்களில் இவனைப் பற்றிய குறிப்பேதும் கிடைக்கவில்லை. வால்மீகி இராமாயணத்தில் இவனைப் பற்றிய குறிப்பிருக்க, இராம காதையைத் தமிழில் பாடிய கம்பநாட் டாழ்வார் இவனைப் பற்றிக் குறிப்பிடவில்லை. அபிதான சிந்தாமணி யில் தர்மவர்மாவைப் பற்றிக் குறிக்கும்போது, 'இவன் திருவரங்கத் தில் பெருமாள் அருள் பெற்ற சோழன்' என்று இருக்கிறதே ஒழிய அரங்கன் இங்கு நிலைபெறும் காலை பொழுது அரசோச்சியவன் என்று குறிப்பில்லை.

விநாயகர் பற்றிய வரலாறு கூறும் உச்சிப்பிள்ளையார் கதை யிலும் தர்மவர்மா பெயர் இடம் பெறவில்லை.

இதனின்று நாம் அறிவது, திருவரங்கத்தில் கோயில் கொண்டுள்ள அரங்கநாதரைப் பற்றிய செய்திகள் பலவாறு பேசப் பெற்றுள்ளன. இட்சுவாகு குலதனம் என்னும் நாலும் தர்மவர்மா என்ற அரசன் அரங்கனுக்கு முதலில் கோயில் எடுத்து வழிபட்டதாகக்

கூறுகின்றது. இந்த தர்மவர்மா எந்தத் தேசத்தவன், எப்பொழுது இருந்தான் என்று உறுதியாகத் தெளிவாக்கப்படவில்லை. பாகவதம் பிரியவிரதனைப் பற்றிப் பேசுகின்றது. ஆனால் அவனோ திருவரங்க நாதனுக்குக் கோயில் எடுத்து வழிபட்டதாகத் தெரியவில்லை.

திருவரங்கத்தில் அமைந்துள்ள, கிடந்த கோலப்பெருமாள் வடிவம் இராமாயணப் போர் எல்லாம் முடிந்த பின்னர் இராமன் முடிபுனைந்த நாளில் நன்றிக் கடன் கழித்தார் பொருட்டு பலருக்குப் பல கொடுத்த காலத்து விடணன் இட்சுவாகு குலதனமாகிய அரங்கனைக் கொண்டு வந்ததாகவும், அவர் காவிரி தீர்த்தத்தில் நீராட வைத்துச் சென்றதாகவும் அது அவரால் பெயர்த்தெடுக்க வொண்ணாதவாறு வேரூன்றிவிட்டதாகவும் புராண வரலாறு கூறுகின்றது.

வால்மீகி இராமாயணத்தில் உத்தரகாண்டத்தில், வீடணன், இராமன் குல பூசையைப் பெற்று வந்தான் என்ற செய்தி கூறப்பட்டுள்ளது. குலபூசை என்பதால் குலத்தவரால் பூசிக்கப்பெற்ற திருமால் வடிவம் என்று எண்ண இடம் தருகிறது.

கம்பராமாயணத்தில் வீடணனுக்கு இராமன் பரிசுப் பொருளாக ஸ்ரீரங்கநாதனைத் தந்ததாகவோ, அன்றி வீடணன் வேண்டிப் பெற்றதாகவோ குறிப்பில்லை. ஆனால் குலமுறை கிளத்துப் படலத்தில் விசுவாமித்திர முனிவர் சனகனுக்கு இராமனை அறிமுகம் செய்யும்போது இராமனுடைய குலவரலாறு கூறுகின்றார். அப்படிச் சொல்லும்போது,

> *"பிணி அரங்கவினை அகலப்பெருங்காலம் தவம் பேணி*
> *மணி அரங்கு நெடுமுடியாய் ! மலர் அயனே வழிபட்ட*
> *பணி அரங்கப் பெரும்பாயற் பரஞ்சுடரை யாம் காண*
> *அணி அரங்கம் தந்தானை அறியாதார் அறியாதார்"* 21

என்று கூறுகின்றார். அணியரங்கத்துத் திருமால் இடம் பெறக் காரணமாக இருந்தவன் இராமன் குலத்து ஒருவனே அன்றி வீடணன் என்ற குறிப்பில்லை. மலர் அயன் வழிபட்டிருந்த அத்திருமால் உருவச் சிலை அயோத்தியிலிருந்து திருவரங்கம் வருவதற்குக் காரண

மானவன் யாவன் என்று அப்பாடல் கொண்டு ஊகிக்க முடிய வில்லை. அங்கே, 'அணியரங்கம் தந்தானை அறியாதார், அறியா தாரே' என்று கூறுவது கொண்டு வீடணனுக்கு வேறாக இராமன் குலத்தவருள் ஒருவன் கொணர்ந்திருக்க வேண்டும் என்றுத் தோன்று கிறது. வால்மீகி ராமாயணத்தை அடிப்படையாகக் கொண்டு பார்க்கும்போது வீடணன் குலப்பூசையைக் கொண்டு சென்றான் என்றால் அவன் இலங்கைக்குக் கொண்டு சென்றிருக்க வேண்டுமே யன்றி அது ஆற்றிடைக்குறையாகிய அரங்கத்தில் இடம்பெற வாய்ப் பில்லை. வீடணன் இராமனிடம் கேட்டுப் பெற்றான் என்றாலும் அது பொருத்தமாகப்படவில்லை. காரணம் வீடணன் இராமனிடம் அடைக் கலம் புகுந்த காலத்து அவனுக்கு இராமன் 'இலங்கைச் செல்வம் நின்னதே தந்தேன்' என்று கூறியபொழுது அவன் 'இளையவர்க் களித்தமௌலி என்னையும் கவித்தி' என்று திருவடிப் பேற்றைப் பரம்பொருள் பேறு என்றுணர்ந்து கேட்டவன், குலத்தவர் வழிபட் டிருந்த சிலையைத் தனக்குத் தருமாறு வேண்டியோ, அன்றி அவன் (இராமன்) தரத் தான் பெற்றமையோ எனின் அது பொருள்பட வில்லை. இராமன் தானே கொடுத்தது என்றால் குலதனத்தைக் கொடுப்பதற்கு அவனுக்கு உரிமை இல்லை. அது மலரயன் வழிபட இருந்தது. பின் இட்சுவாகுவால் வேண்டப்பெற்று அயோத்திக்கு வந்தது. அது வீடணனால் கேட்கப்பெற்றோ, அன்றி இராமனால் கொடுக்கப்பெற்றோ அயோத்தியினின்றும் போந்ததேல் அதனை அன்று பெற்றுச் சென்றவனுக்கு உரியதாகி அவன் வாழுமிடம் சென்றிருக்க வேண்டும். அதற்கு மாறாகக் காவிரி நடுவுள் அது இடம் பெறக் காரணமில்லை.

அடுத்து இராமன் வீடணனுக்குத் தான் விரும்பிய வண்ணம் தம் குலத்தவர் வழிபட்ட சிலையைத் தந்ததாக வைத்துக்கொண்டு அவன் எடுத்துச்செல்லுங்கால் காவிரி நடுவு வைத்து, நீராடி வந்து காணும்போது அதனைச் சத்தியவிரதன் என்னும் திராவிட தேசாபதியான ராஜரிஷியும் (உறையூரைத் தலைநகராகக் கொண்டு ஆண்டவன்) மற்றொரு ரிஷியும் காவிரியில் தவம் செய்து கொண்டிருக்குங்காலை வீடணனால் கொணரப்பெற்று வந்த அரங்க விமானத்தில் பெருமை தெய்வமணத்தால் மனம் பற்றி அவர்கள் அச்சிலையிருக்கும் இடத்திற்குக் காந்தம் இரும்பை வலிப்பது

போலச் சென்று கண்டு, அரங்க விமானம் ஆற்றின் நடுவில் தனித்துப் பேணுவாரற்று இருப்பது கண்டு, கண்ணீரும் கம்பலையுமாய் வழிபட்டு நிற்ப, ஆண்டு வீடணன் போந்து, அவர் தம் பக்திப் பெருக்கையும் விட்டகலாப் பண்பையும் நோக்கி, தான் அவ்வா றில்லாமல் அகன்ற சிறுமையையும் நினைந்து கணமும் பிரியாது அன்பொழுக வழிபடும் அவர்க்கே அவ்விமானம் உரித்தென்று விட்டுச் சென்றான் என்றும் அச்சத்தியவிரதனும், அவனுடன் துணை நின்ற மற்றொரு ரிஷியும் இணைந்து திருமாலுக்கு இருந்த இடத்திலேயே கோயில் எடுத்து வழிபட்டனர் என்றும் தெரிகிறது.

இவ்வரலாற்றில் ஒரு நுட்பம் விளங்குகிறது. திருமால் வடிவத்தைப் பிரமன் வழிபட்டிருந்தான். இட்சுவாகு அதன் பெருமையை உணர்ந்து அதனைத் தன் குல முதலாக்கினான். இராமனும் வீடணனுக்கு அன்புடன் அதனை வழிபடக் கொடுத்தான். வீடணன் அதனைக் கொண்டு இலங்கை சென்றிருந்தால் அது மீண்டும் பிரம குலதனமாகுமேயன்றி இட்சுவாகு குலதனமாகாது. பிரமன் வழிபட்டதைப் பிரம குலத்தவரே பெற்றுக்கொண்டதாகி விடும். இது கொடுத்த பிரமனுக்குக் கொடைச் சிறப்பாகாது. அதனால் வீடணன் வழி இலங்கை புகாது, காவிரி நடுவில் தங்கியதால் ஒரு பொருளுண்டு. சூரிய குலமரபில் வந்த ஒருவனே இட்சுவாகு. அவனுக்கு அவன் கொடுத்தது கொடைப்பொருளாய் இருக்க வேண்டுமேயன்றி, கொடைப்பொருள் மீண்டும் பெறும் பொருள் ஆதல் கூடாது. அதனால் திருமாலே திருவுள்ளம் கொண்டு அயன் குலத்துக்கு வரும் சிறுமை போக்கவும், இட்சுவாகு குலத்திற்கு, ஒரு பெருமை சேர்க்கவும், ஆதித்தன் குலத்தவருள் ஒருவரான சத்தியவிரதன் என்னும் தென்னாட்டு அரசன் பிரதிட்டை செய்து வழிபடுதற்கு வாய்ப்பாகி இருந்த சிறப்பு நோக்கத்தக்கது. இவற்றால், திருவரங்கத்தில் இடம் கொண்ட அரங்கனுக்கு முதன் முதலில் கோயில் எடுத்து வழிபட்டவன் சத்தியவிரதன் என்பதும், முதல் சுற்றைத் தர்மவர்மா பின்னர் அமைத்தான் என்று கொள்வதும் ஏற்புடையதாகும்.

இட்சுவாகுவின் வம்சத்தினர் சோழர்கள் என்பதை உறுதிப் படுத்தும் வண்ணம் வசிட்டர் இட்சுவாகுவை நோக்கிக் கூறும்

தசாத்யாயியினும் "வீடணனால் கொண்டு செல்லும் விமானம் காவிரி தீரத்திலுள்ள சந்திரபுட்கரணியை அடையும். அங்கு உம்முடைய வம்சத்தினராகிய சோழ அரசர்களால் ஆராதிக்கப்படும்"[22] என்று கூறப்பட்டுள்ளது.

சத்தியவிரதன் என்னும் திராவிட தேச மன்னனைப் பற்றி அபிதான சிந்தாமணி குறிக்கும்போது இவன் விஷ்ணுவின் பக்தியால் ஒரு பிரளயத்தில் தவறி மறு பிரளயத்தில் மனு ஆனவன். இவன் திராவிட தேசாதிபதி என்று குறிக்கிறது.[23] கருணாமிர்த சாகரம் என்ற நூலில் திராவிட தேசாதிபதியான சத்தியவிரதனைப் பற்றிக் குறிப்பிட்டு இவன் திருமாலிடத்தில் அன்பு கொண்டவன் என்றும், பெரு வெள்ளப்பெருக்கிலிருந்து தப்பும் படியாகக் கப்பல் ஏறிச் சென்றான் என்றும், இவன் பொதிகைமலையில் தவம் மேற் கொண்டான் என்றும் கூறுகிறது.[24]

தேசிகர் அருளிச் செய்துள்ள **'ஸ்ரீஹம்ஸஸந்தேசம்'** என்னும் நூல் ஸ்ரீரங்கம் என்னும் பெயர் அரங்கநாதன் இங்கு வந்த பிறகு ஏற்பட்ட பெயர் என்றும் அவர் இவ்விடம் வருமுன் சேஷபீடம் என்ற பெயர் இவ்வூருக்கு இருந்தது என்றும் சந்திரபுட்கரணிக்கு அருகில் அச்சேஷபீடம் இருந்து அரங்க விமானம் அங்கு வந்ததற்குப் பின் ஸ்ரீரங்கன் என்ற பெயர் வந்தது என்றும் தெரிவிக்கும்.

சேஷபீடத்தைப் பற்றி அந்நூலில் "அழகிய தோழனே, அந்தச் சந்திரபுட்கரணியின் கரையில் சேஷபீடம் என்ற ஓர் அடித்தளம் உள்ளது. அதை அங்குள்ள மனிதர்கள் சேவித்துக் கொண்டிருப் பார்கள். நீயும் மிக்க சிரத்தையுடன் உன் உடலை நன்கு குனிய வைத்துக்கொண்டு அந்தப் பீடத்தை வணங்க வேண்டும். அந்தப் பீடத்தை வணங்கக் காரணம் உள்ளது. இட்சுவாகு குலத்தில் பிறந்த எங்களின் பரம்பரைச் சொத்தாக உள்ள ஸ்ரீரங்க விமானம் நெடுங் காலமாக அயோத்தியில் எழுந்தருளியுள்ளது. அந்த விமானம் பிற் காலத்தில் அந்த சேஷபீடத்தின்மேல் அமரப்போவதாக மஹரிஷிகள் கூறியுள்ளார்கள்" என்று இலங்கையில் இருக்கும் சீதையிடம் அன்னத்தைத் தூது விடுமிடத்தில் அன்னத்திடம் இராமன் கூறுவதாக தேசிகர் கூறுகிறார்.[25]

பராசரபட்டரின் **ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்** "நான்முகக் கடவுளுக்கு வணங்கும் தெய்வமாயிருந்து, மனு வம்சத்து மன்னர்களுக்கும் வழிபடும் தெய்வமாயிருந்து, அவ் விருப்புகளை விட்டு விபீடணாழ்வான் மூலமாக காவிரி ஆற்றின் நடுவில் அடியவர்களுக்குச் சேவை சாதித்துக்கொண்டு இன்பம் பயக்குமிது என்னே" என்று கூறக்காண்கிறோம்.[26]

இப்புராண வரலாறு பற்றிய குறிப்புகள் இக்கோயிலில் கிடைத்துள்ள கல்வெட்டுகளில் குறிக்கப்பெறவில்லை. எனினும் இங்குள்ள தூண்களில் வீடணன் அரங்க விமானத்தை ஏந்தி வருவது போன்ற புராணக் கதையினை ஒட்டிய சிற்பங்கள் உள்ளன. இவை விசய நகர காலச் சிற்பங்கள்.

## 1:2:2 வரலாற்றுப் பின்னணி

இக்கோயிலின் வரலாறு *இலக்கியங்கள், கல்வெட்டுகள், வரலாற்று நூல்கள்*, கோயிலின் தல வரலாறாகிய *கோயில் ஒழுகு* ஆகியவற்றின் வழி தொகுக்கப் பெறுகிறது.

இந்திய சமய வரலாற்றில் திருவரங்கம் கோயில் ஒரு தனிச்சிறப்பைப் பெறுவதாகும். கி.பி.7ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 13ஆம் நூற்றாண்டு வரை தென்னிந்தியாவில் மிகவும் சிறப்புற்று விளங்கிய வைணவ சமயத்தின் மிகப்பெரிய தலைமைச் செயலக மாகத் திருவரங்கம் திகழ்ந்திருந்தது. வைணவத்தின் வளர்ப்புப் பண்ணையாகவும், தலைமைப் பீடமாகவும் இக்கோயில் விளங்கி வந்திருக்கிறது.

இக்கோயிலின் முதல் முதலில் ஏற்பட்ட கட்டிட வடிவம் சோழ மன்னர்களால் அமைக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. அக்கூற்றுக்கு வரலாற்றுச் சான்றுகள் ஏதும் கிடைத்திலது. கி.பி. 10ஆம் நூற்றாண்டு வரையில் இக்கோயில் இருந்தமைக்கு இலக்கிய ஆதாரங்கள் மட்டுமே சான்று பகர்கின்றன. அவையும் வரலாற்று முறையில் அமைய வில்லை.

சங்க இலக்கியமாகிய *அகநானூற்றிலும், சிலப்பதிகாரத்திலும் நாலாயிர திவ்யப்பிரபந்தத்திலும்* இக்கோயில் பற்றிய விளக்கங்கள் காணப்படுகின்றன. இத்திருவுருவம் பற்றிய கருத்து மிகப் பழமையான 'இருக்கு' வேதத்திலும் புகழ்ந்துரைக்கப்படுகிறது. நாலாயிரத்தில் இக்கோயிலும், திருச்சுற்றுகளும் சிறப்பித்துக் கூறப்படுகின்றன *கோயில் ஒழுகு* இக்கோயிலின் மூன்றாம் திருச்சுற்றைத் திருமங்கை மன்னன் (கி.பி. 7ஆம் நூற்றாண்டு) கட்டியதாகக் கூறுகிறது.[27] அதே நூல் இரண்டாம் திருச்சுற்றை இராசமகேந்திரன என்னும் சோழ மன்னன் (1060-1063) கட்டியதாகக் கூறுவது காலத்திற்கு முரணாக உள்ளது.[28] இதனை உறுதிப் படுத்தக் கூடிய சான்றுகள் காணபபட வில்லை.

ஆதித்தசோழன் காலத்திலிருந்து ஏறத்தாழ 644 கல்வெட்டுகள் இங்குக் காணப்படுகின்றன.[29] சோழ மன்னர்கள், பாண்டியர்கள், விசய நகரத்தரசர்கள், நாயக்கர்கள் போன்றோர் இக்கோயிலுக்குச் செய்த, கட்டிடங்களைப் பெருக்குதல் போன்ற திருப்பணிகளையும் பொன், நிலம் போன்றன கொடுத்த செய்திகளையும் அவை நமக்குப் பகர்கின்றன.

நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தைப் பெரும்பாடுபட்டுத் தொகுத்து வகுத்துப் பரப்பியருளிய நாதமுனிகள் (கி.பி. 823) என்னும் ஆச்சாரியரால் வகுக்கப்பட்ட வைணவப் பண்பாட்டு நெறி. திருவரங்கன்கோயில் விழாக்களும், வழிபாடுகளும், ஆளவந்தாரால் தொடரப்பட்டு, இராமானுசரால் நெறிப்படுத்தப்பட்டன. இராமானுசர் இக்கோயிலின் நடைமுறைகளை ஒழுங்கு செய்து நல்லமுறையில் வகுத்துத் திருவரங்கன் செல்வம் முற்றும் திருத்தி வைத்தருளினார் இவர் வகுத்த நிர்வாகம் முகமதியர் படை எடுப்பு வரை பெரிதும் போற்றிப் பாதுகாக்கப்பட்டது.

இராமானுசர் இந்தியா முழுவதும், பயணம் செய்தார். ஸ்ரீவைணவக் கொள்கைகளைப் பரப்பினார். இராசமகேந்திர சோழனின் மருமகனும், சாளுக்கிய - சோழ பரம்பரையைப் புதிதாகத் தோற்றுவித்தவனுமான முதலாம் குலோத்துங்க சோழன் (கி.பி. 1070-1120) இராமானுசருக்கு அவர்தம் இறுதிக் காலத்தில் பல கொடுமைகள்

இழைக்க அதன் காரணமாகத் திருவரங்கத்தை விட்டு மேல் கோட்டை (மைசூர்) சென்றார்.[30]

மூன்றாம் குலோத்துங்கன் (கி.பி. 1178-1218) இருபதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு ஒன்று, திருவரங்கம் கோயில் நிர்வாகம் அவனது ஆட்சியின் கீழேயே இருந்ததைத் தெரிவிக்கும்.[31]

கி.பி. 1223-1225 வரையில் திருவரங்கம் கோயில் கங்கர்களால் கவர்ந்து கொள்ளப்பட்டது. அவர்கள் காலத்தில் இக்கோயிலின் நிர்வாகம் சிதைந்து பாழ்பட்டது.

சுந்தரபாண்டிய மன்னன் (கி.பி. 1216-1238) கருநாடகத்தைக் கைப்பற்றினான். அவனது ஒன்பதாம் ஆட்சியாண்டில் அவனது படைகள் திருவரங்கத்தைக் கங்கர்களிடமிருந்து விடுதலைப்பெறச் செய்தது. ஆயினும் போசளர்கள் (ஒய்சளர்கள்) இக்கோயிலில் பெரிதும் ஆர்வம் காட்டினர். அவர்களது கல்வெட்டுகள், சோமேசு வரன், வீரராமநாதன் போன்ற மன்னர்கள் இக்கோயிலுக்குப் பல வகை தானங்கள் வழங்கியதைக் குறிக்கின்றனர்.[32] இக்கோயிலி லுள்ள மிக அழகு வாய்ந்த வேணுகோபாலர் சன்னிதி போசளர் (ஒய்சளர்) காலத்தில் ஏற்பட்டது.

இதே காலத்தில் மதுரையை ஆண்டுவந்த முதலாம் சடாவர்மன் சுந்தரபாண்டியன் (கி.பி. 1251-1268) இக்கோயிலில் பல கட்டிடங்களை எழுப்பிப் பல நன்கொடைகள் வழங்கிப் பெரும் புகழ் பெற்றான். அவனுடைய கல்வெட்டுகள், இக்கோயிலைப் பொன்மய மாக்கினான் என்று கூறுகின்றன.[33]

கருநாடக அரசரைப் போரில் வென்று அவரது கருவூலத்தி லிருந்து கைப்பற்றிய பொருள்களைக் கொண்டு சடாவர்மன், திருவரங்கநாதருக்கு மரகதமாலை, பொற்கிரீடம், முத்தாரம், முத்துவிதானம் போன்ற அணிகளை வழங்கினான். அவனுடைய திருநாளான சித்திரைத் திருநாளில் திருக்காவிரியில் பெரிதாக ஊருணி கட்டுவித்து, அதில் காவிரி நீர் பாய்ச்சி, திருப்பள்ளி ஓடம் முதலான திருப்பணிகளை செய்வித்தான்.[34]

இதனையடுத்து 25 ஆண்டுகளுக்குப் பிறகு மாறவர்மன் குலசேகரபாண்டியன் (கி.பி. 1268-1308) ஆட்சிக் காலத்தில் போர்ச்சுகீசியப் பயணியான மார்க்கோபோலோ இங்கு வந்தார். அவர் இப் பகுதியில் சிறப்பையும், செல்வச் செழிப்பையும் கண்டு பெரிதும் வியப்படைந்தார்.

கி.பி. 1311ஆம் ஆண்டில் மாலிக்காபூர் என்னும் இஸ்லாமியத் தலைவன் மதுரையைக் கைப்பற்றிக் கொண்டான். பாண்டியர் மரபு வீழ்ச்சியடைந்தது. இதனால் ஏற்பட்ட குழப்பம் காரணமாகத் திருவரங்கம் கோயில் இஸ்லாமியர் கைக்குள் சிக்கியது. அவனது மின்னல் வேகத் தாக்குதலால் இக்கோயில் சூறையாடப்பெற்றது. மாலிக்காபூர் இங்கிருந்த கடவுட் சிலைகளையும் மற்றும் பல அழகிய கலைப்பொருள்களையும் தில்லிக்குக் கவர்ந்து சென்றான். கவர்ந்து செல்லப்பட்ட சிலைகளுக்குப் பதிலாகப் புதிய சிலைகள் வார்க்கப் பெற்றுப் பிரதிட்டை செய்யப்பட்டு, வழிபாடு மீண்டும் தொடங்கியது என்று கோயில் ஒழுகு கூறுகிறது.[35]

கி.பி. 1323ஆம் ஆண்டு முகமது பின் துக்ளக் (1325-1351) என்பவன் திருவரங்கம் கோயிலில் இஸ்லாமியர்களைக் குடியேற்றி, அதனைத் தங்கள் படைவீடாக மாற்றிக்கொண்டான். இக்கோயிலில் இருந்துவந்த பக்தர்கள், இப்படையெடுப்பிற்குச் சற்று முன்னர் தக்க தருணத்தில் விலையுயர்ந்த அணிகலன்களையும், வழிபாட்டுக்குத் தேவையான பொருள்களையும் கவனமாகத் திருமலை திருப்பதிக்குப் பாதுகாப்பாக அனுப்பிவைத்தனர். கி.பி. 1371 வரை அவை திருமலை திருப்பதியிலேயே இருந்து வந்தன.[36]

கி.பி. 1371ஆம் ஆண்டு விசயநகரப் பேரரசின் படை இப் பகுதியை வென்று மீட்டதுடன், திருவரங்கம் கோயிலுக்கும் விடுதலை கிடைத்தது. திருமலை திருப்பதியில் குடிகொண்டிருந்த கடவுட் சிலைகள் மீண்டும் திருவரங்கத்துக்கு கொண்டுவரப்பட்டு பிரதிட்டை செய்யப்பட்டன.[37]

கி.பி. 15, 16ஆம் நூற்றாண்டுகளில் இக்கோயில் தன் பழைய நிலையை மீண்டும் அடைந்தது. இதன் விமானம் மீளவும் பழுது

பார்க்கப்பட்டு பொன் வேயப்பட்டது. விசயநகர அரசர்களின் படைத் தலைவர்கள், ஆட்சியாளர்கள் கையில் படிப்படியாக இக்கோயிலின் நிர்வாகம் சென்றது. அவர்கள் தங்கள் அரண்மனையின் ஒரு பகுதியாக இக்கோயிலைப் பாவித்துத் தம் விருப்பம்போல நடந்து கொண்டனர். தங்களுக்கு இசைவானர்களையே பணியாளர்களாக அமைத்தனர். அவர்களால் இராமானுசர் வகுத்துச் சென்ற ஒழுங்கு முறைகள் சிதைக்கப்பட்டன. இச்சிதைவை மக்களின் ஒருசாரார் எதிர்த்தனர். கோயில் நிர்வாகத்தில் பல ஊழல்கள் நிலவின. விசய நகரப் பேரரசின் அலுவலர்கள் கோயில் நிலங்களுக்கு வரி வசூலித்துத் தாமே கவர்ந்து கொண்டனர். அதனால் கி.பி.1463ஆம் ஆண்டில் "கோயிலுக்கு வசூலிக்கப்படும் வரிப்பணம் முழுவதும் அரசர்க்கே செலுத்தப்பட வேண்டும்" என்று அரசர் ஆணை பிறப்பித் தார். இவைகளைப் பற்றிய செய்திகள், *கோயில் ஒழுகில்* காணப்படுகின்றன. கோயில் நிர்வாகத்தில் நிகழ்ந்த ஊழல்களை எதிர்த்த அடியார்கள் பலர் வெள்ளைக் கோபுரத்தின் உச்சியின் மீதேறிக் கீழே விழுந்து தற்கொலை செய்துகொண்டனர்.[38]

விஜயநகர அரசின் வீழ்ச்சிக்குப் பிறகு மதுரையிலும், தஞ்சாவூரிலும் தோன்றிய நாயக்க மரபினர், இப்பகுதியைத் தொடர்ந்து அரசு புரிந்து வந்தனர். கி.பி. 1583 முதல் 1732 வரை வைணவ சமயத்தின் ஆர்வலர்களாக அவர்கள் விளங்கினர். பெரிய கட்டிடங்கள் பலவற்றை எழுப்பினர். பழுதுபட்டவற்றைத் திருத்திச் செப்பனிட்டனர். புதிய அறக்கட்டளைகளை நிறுவினர்.

கி.பி. 1600ஆம் ஆண்டில் தஞ்சை அரசராகிய அச்சுதப்ப நாயக்கர், தமது புதல்வரிடம், அரசுப் பொறுப்பினை ஒப்படைத்து விட்டு திருவரங்கத்திலே தங்கி வாழத் தலைப்பட்டார். அவர் கோயிலில் இருந்த அர்ச்சகர்கள், ஆசாரியர்கள் முதலானவர்களுடன் கலந்து அளவளாவி மகிழ்வெய்துவதிலேயே தம் காலத்தைக் கழித்தார்.

கி.பி. 1616ஆம் ஆண்டில் மதுரை நாயக்க மன்னர்கள், தங்கள் தலைமையகத்தைத் திருச்சிராப்பள்ளிக்கு மாற்றிக் கொண்டனர். திருவரங்கத்திலிருந்த சிறந்த அறிஞர் பெருமக்களைத் தங்களுக்குச் சமயத் துறைத் தலைவர்களாக ஆக்கிக் கொண்டனர்.

சொக்கநாத நாயக்கருக்குப் பின் வந்தவர்களுள் ஒருவராகிய விசயரங்க சொக்கநாதநாயக்கர் (கி.பி. 1706-1732) ஓராண்டு இவ்வூரில் தங்கியிருந்து, பெருமாளைத் தனது குடும்பத்தினரோடு வழிபட்டார். இரண்டாம் திருச்சுற்றின் மேற்குப் பகுதியில் அவர்கள் திருவுருவங்கள் இன்றும் காணப்படுகின்றன.

நாயக்க மன்னர் ஆட்சிக்குப் பிறகு, ஆங்கிலேயர்களின் உதவியினால் இக்கோயில் ஆற்காடு நவாப்புகளிடம் சென்றது. ஆங்கிலேயர்களுக்கும் பிரெஞ்சுக்காரருக்கும் இடையே தத்தம் துணைப் படையுடன் நடைபெற்ற போரினால் திருவரங்கம் கோயிலுக்குப் புதியதொரு அச்சுறுத்தல் இருந்து வந்தது. கி.பி. 1707ஆம் ஆண்டு ஏற்பட்ட முதலாம் தாக்குதல், மிகுந்த கட்டம் செலுத்தி ஓரளவு தடுக்கப்பட்டது என்று கோயிலொழுகு கூறுகின்றது. கி.பி. 1720-1740 இடையில் நிகழ்ந்த மாராட்டியப் படைஎடுப்பிலும், கி.பி. 1743இல் ஐதராபாத் நைசாம் மராட்டியர்களை வெருட்டித் துரத்திய போதும், இக்கோயிலின் சொத்துகளுக்கு எவ்விதத் தீங்கும் ஏற்படவில்லை. ஆனால் சில ஆண்டுகளுக்குப் பிறகு கி.பி. 1751இல் ஆற்காட்டு நவாபையும், ஆங்கிலேயரையும் எதிர்த்துப் போர் புரிந்தபோது சந்தாசாகிப் பிரெஞ்சுப்படைகளுடன் திருச்சிராப்பள்ளி கோட்டையிலும் திருவரங்கத் தீவுக்குள் குறிப்பாக அரங்கநாதர் கோயிலின் வெளிப் பிரகாரங்களிலும் புகுந்து ஒளிந்து தம்மைப் பாதுகாத்துக் கொண்டான். 1752 ஜூன் மாதம் 9ஆம் தேதியன்று பிரெஞ்சுப் படைகளும் சந்தாசாகிப்பும் தோல்வியுற்றமையால், அவர்கள் ஆற்காட்டு நவாபிடம் அடைக்கலம் புகநேர்ந்தது. எனினும் 1758 வரையில் மைசூர் படையின் உதவியுடன் அவர்கள் இக்கோயிலைக் குடியிருப்பாகக் கொண் டிருந்தனர். கி.பி.1759இல் கடைசி முறையாக கிரில்லன் என்பவர் இதனைத் தாக்கினார். இத்தகைய பல நிகழ்ச்சிகள் நடைபெற்ற போதிலும் இக்கோயிலின் புகழ் சற்றும் குறையவில்லை.

கி.பி. 1781இல் ஐதர் அலியால் இக்கோயில் தாக்கப்பெற்றது. கி.பி. 1790இல் இவரது புதல்வராகிய திப்புசுல்தான் இக்கோயிலின் மீது படையெடுத்தார். ஆனால் ஆங்கிலேயப்படை முன்னேறி

அச்சுறுத்தியதால், ஒரு சில நாள்களில் இங்கிருந்து அவர் வெளியேறி னார். ஆயினும் இப்பகுதி முழுவதும் இஸ்லாமியர் ஆதிக்கத்தின் கீழ் இருந்து வந்தது. அவர்கள் தங்கள் அதிகாரத்தைச் செலுத்துவதற்குரிய உரிமையினை வலியுறுத்தி வந்தனர். அஃது இக்கோயிலுக்குப் பல தொல்லைகளை விளைவித்தது.

கி.பி. 1801ஆம் ஆண்டு கருநாடகப் பகுதி கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சிக்கு மாறியது. திருவரங்கம் கோயில், வேலஸ் என்னும் மாவட்டத் தலைவரின் ஆட்சி வரம்பின் கீழ் வந்தது. 1803ஆம் ஆண்டில், அவர் திருவரங்கம் நகரில் இருந்த தல வரலாறுகள் அனைத்தையும் ஒருங்கிணைத்தார். பின்னர் அந்நூலின் பிரதி ஒன்றைக் கோயில் ஆட்சியாளர்கள் (ஸ்தானத்தார்) ஸ்தலத்தார் ஐவரின் முத்திரையுடன் கோயில் தென் பகுதியிலுள்ள ஒரு கருங்கல் சுரங்க அறையில் (தெற்குக் கல்லறை) பாதுகாப்பாக வைக்கச் செய்தார்.

கி.பி. 1842இல் அறங்காவலர்களை நியமித்து, கோயில் நடைமுறைகளையும் விழாக்களையும் முறைப்படி நடத்த ஏற்பாடு செய்யப்பட்டது.

இதன் பிறகு இக்கோயிலின் நிர்வாகத்திற்கு ஒரு நிலையான தன்மை ஏற்பட்டது. கோயில் ஆங்கிலேயரது ஆணையின் கீழ் இருக்க நேர்ந்தபோதிலும் அவ்வாணையானது தக்கபடியே செயற்படுத்தப் பட்டது என்று துணிந்து கூறலாம்.

1947ஆம் ஆண்டு நாடு உரிமை பெற்ற பிறகு, கோயில்களும், சமய நிறுவனங்களும் புதிய சட்ட அமைப்பின்படி இந்து சமய அறநிலையத் துறையின் கீழ் வந்தன. இப்போது இவ்வற நிலையத் துறையே திருவரங்கம் கோயில் உட்பட அனைத்தையும் ஆட்சி செய்து வருகிறது.

## 1:3 கோயிலின் இக்கால அமைப்பு

திருக்கோயில்களின் அமைப்பு உடம்பை விவரித்துக் குறிப்பது என்றும் இதய கமலத்தை விவரிப்பது என்றும் இருவகைப்படும். இதை

முறையே ஏழு திருச்சுற்று என்றும் ஐந்து திருச்சுற்றும் என்றும் குறிப்பர். இக்கோயில் ஏழு திருச்சுற்றுகளோடு அமைக்கப்பட்டிருக் கிறது. இது ஏழு தாதுக்களாகிய மனித உடம்பினைக் குறிப்பதாகும்.[39]

திருச்சிராப்பள்ளிக்கு வடக்கில் 5 கிலோமீட்டர் தொலைவில், தெற்கு வடக்காக 865 மீட்டர் நீளமும், கிழக்கு மேற்காக 743 மீட்டர் அகலமும் கொண்ட 6,62,695 சதுர மீட்டர் பரப்பில் காவிரி, கொள்ளிடம் என்னும் இரண்டு பேராறுகளுக்கு இடையில் திருவரங்க நாதர் கோயில் அமைந்துள்ளது. "*கங்கையிற் புனிதமான காவிரி நடுவு பாட்டுப் பொங்கு நீர் பரந்து பாயும் பூம்பொழில் அரங்கம்*" என்ற ஆழ்வார் பாடலும் "*ஆறிரண்டும் காவிரி அதன் நடுவே ஸ்ரீரங்கம்*" என்ற நாட்டுப்புறப்பாடலும் இதனை விளக்குகின்றன. இவற்றுள் கொள்ளிடம் என்பது ஆண்டுதோறும் பெருகும் வெள்ளத்தினின்று செயற்கை முறையில் படைக்கப்பெற்றிருத்தல் கூடும். மேலும் காவிரியினின்று பெருகி வருகின்ற நீரில் பாசனத்திற்கு போக மீதியாக வரும் நீரைக் கடலிடைச் செலுத்தப் பயன் படுத்திய ஆறாகும். இலங்கையின் மீது படையெடுத்த முதலாம் இராசேந்திர சோழன் (கி.பி. 1025ஆம் ஆண்டு) இலங்கையினின்று சிறைபிடித்துக்கொணர்ந்த சிங்கள வீரர்களைக் கொண்டு இக்கோயிலின் திருச்சுற்றுப் பணியைச் செய்து முடித்தான் என்று செவிவழிச் செய்தி கூறுகிறது. இக்கோயிலின் ஏழு திருச்சுற்றின் வாயிற் சுவர்களின் நடுவில் கோபுரங்கள் அமைக்கப் பெற்றிருக்கின்ற முதன்மையான வாயில் தெற்கு நோக்கியுள்ளது. வைணவப் பெருந் தெய்வமாகிய திருவரங்கநாதனுக்கும், சைவப் பெருந்தெய்வமுமாகிய தில்லைநடராசனுக்கும், நான்கு திசைதொறும் கோயில் வாயில்கள் இருப்பினும், தென்திசை நோக்கிக் கிடப்பதும், இருப்பதும் ஒரு சிறப்புச் செய்தியாகும். 'தென்னாட்டுடைய சிவனாதலாலும்', 'பாண்டியநாடே பழம்பதியாதலாலும்', 'மன்னுமாலை மகேந்திரத் திருந்து அருளியவனாதனாலும்', 'நடராசர்' தென்திசை நோக்கி நிற்கின்றார். திருவரங்கநாதனும் விபீடணனுக்கு அருள்பாலித்துக் கொண்டு தென்திசை இலங்கை நோக்கியவாறு பள்ளிகொண்டுள்ளார் என்பது வழக்காறு. 'தென்திசை இலங்கை நோக்கி' என்பார் ஆழ்வாரும்.[40]

கோயில் பெரும் பரப்பளவு உடையது. 6,31,000 சதுரமீட்டர் அதாவது 156 ஏக்கர். இதன் சுற்றெல்லைப் பரப்பு 1,116 கிலோ மீட்டர்.

இந்தியத் துணைக் கண்டத்தில் அமைந்துள்ள திருக்கோயில் களில் இக்கோயில் ஒன்றுதான் ஏழு திருச்சுற்றுகளைக் கொண் டுள்ளது. இது பெரிய எண்ணிக்கை என்று வைணவப் பெருமக்கள் கருதுகிறார்கள். வைணவர்களின் கருத்துப்படி யோக நெறியின் ஏழு ஆதாரங்களையும் மனித உடம்பிற்கான ஏழு தத்துவங்களையும் குறிக்கின்றன. உடம்பினுள் உயிர் இருப்பதுபோல, இக்கோயிலின் நடுவே உலகத்தின் உயிராகிய பரம்பொருள் எழுந்தருளியுள்ளார். [41] திருச்சுற்றுகளின் நடுவில் கருவறை விமானத்துடன் காணப் படுகின்றது.

இவ்விமானம் நான்கு பொற் கலசங்கள் கொண்ட பொன் மயமான வட்ட வடிவில் அமைந்துள்ளது. நான்கு கலசங்களும் நான்கு வேதங்களாகச் சொல்லப்படும்.

திருவரங்கம் கோயில் வழிபாட்டைக் கூறும் பாஞ்சராத்திர ஆகமத்திலுள்ள பாரமேசுவர சம்ஹிதையின் பத்தாம் அத்தியாயத் தில் ஸ்ரீரங்க மகாத்மியம் சொல்லப்படுகிறது. அதில் 387½ சுலோகங் கள் உள்ளன. விமான அமைப்பினை 106 சுலோகங்கள் முதற்கண் விவரிக்கின்றன. அதில் விமானத்தின் ஒவ்வொரு பாகமும் விவரிக்கப்பட்டு அதிலுள்ள தேவதை முதலியவைகள் விரிவாகக் கூறுப்பட்டுள்ளன.

'அருமறை ஓதிய ஓர் எட்டெழுத்தும் ....... எங்கோன் விழிதுயில் கொண்டருள, திருமதில் ஏழும் விமானமும் ஆகிச் சிறக்கின்றவே' என்று பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் திருவரங்கமாலையில் வருணிக்கிறார். [42]

பராசரபட்டர் தமது 'ஸ்ரீரங்கராஜஸ்தவம்' பூர்வ சதகத்தில் விமானத்தைக் குறிக்கும்போது 'நிலமகள், திருவரங்க விமானத்தை வழிபடுவதற்காகத் தனது பரிவாரங்களோடு இங்கு வந்து சேர்ந்திருக்கிறாள்' என்று கூறுகிறார்.

சுந்தரபாண்டியன் இவ்விமானத்திற்குப் பொன்மேய்ந்து, 'கோயில் பொன்மேய்ந்த பெருமாள்' என்ற சிறப்புப் பெயரினைப் பூண்டதாகக் கோயில் ஒழுகும், வரலாறும் தெரிவிக்கின்றன.[43]

## 1:3:1 *முதல் திருச்சுற்று தர்மவர்மா திருவீதி*

கோயிலின் இதயப் பகுதியாகிய முதன்மையான இடம் வட்ட வடிவமான மூலத்தானம். இது மேற்கு, வடக்கு, கிழக்கு, தெற்கு ஆகிய திசைகளால் சூழப்பெற்று, சதுரமான உள்நாழியைக் (திருவுண்ணாழி) கொண்டுள்ளது. அது கருவறையை முறைப்படி வலம் வரும்படி அமைந்துள்ளது. பாதுகாப்பினைக் கருதி தற்பொழுது வழிபடுவோர் இங்கு அனுமதிக்கப்படுவதில்லை. ஒரு காலத்தில் பெருமாள் பிரும்மோற்சவத் திருநாள்களின் பத்தாம் நாள் 'சப்தாவரணம்' அன்று (இத்திருச்சுற்றையும்) சுற்றி வந்து உள்ளே எழுந்தருளுவார். இப்பொழுது அந்நாளில் பெருமாள் இத்திரு வுண்ணாழியைச் சுற்றி வருவதில்லை. இத்திருவுண்ணாழித் திருச் சுற்றைத் தர்மவர்மா கட்டியதாகக் கூறுவர். இச்சுற்று தர்மவர்மா திருவீதி என்றும் பெயரிட்டு வழங்கப்பெறுகிறது. முதல் திருச்சுற்றாக இது எண்ணப்படுகிறது.

## கருவறை

கருவறைப் பகுதியில் தெய்வ நலம் சான்ற மூலவர், பெரிய பெருமாள், ஆதிசேடனாகிய அரவணைமீது வலப்பக்கமாகச் சாய்ந்தவாறு எழுந்தருளியுள்ளார். இத்திருவுருவம் சுதையால் ஆனது. பதினைந்தடி நீளத்தில் அமைந்தது. புனுகுச் சட்டம் என்னும் ஒரு தனிச்சிறப்பான தைலம் பூசப்பட்டு, ஒளியும் மெருகும் ஊட்டப்பெற்று விளங்குகிறது. அஃது இத்திருவுருவத்தைப் போற்றிப் பாதுகாக்கும் இயல்புடையதென்று கோயிலார் கூறுகின்றனர். இத்தைலக்காப்பு ஆண்டுக்கு இருமுறை நடைபெறும். ஆனித்திங்கள் கேட்டையன்று நடைபெறும். ஆயிரக் குடம் பெரிய திருமஞ்சனத்தின் போது ஒருமுறையும், ஆவணித்திங்கள் நடைபெறும் திருப்பவித்திரத் திருநாளின் போது மறுமுறையும் பெரிய பெருமாளின் திருமேனி முழுதும் தைலக்காப்புப் பூசப்பெறும். மற்றும் ஒவ்வொரு வெள்ளிக் கிழமை தோறும் பெரிய பெருமாளது இரு கன்னங்களிலும் இதனைப்

பூசுவர். பெரிய திருமஞ்சனத்தி லிருந்து 42 நாள்களுக்கும், திருப்பவித்திரத் திருநாளிலிருந்து 42 நாள்களுக்கும் பெரிய பெருமாள் திருவடி சேவை சாதிக்கமாட்டார். அறிவியலாரும், இத்தைலக்காப்பு இவ்வுருவத்தைப் பாதுகாக்கும் என்று கூறுவர்.

இக்கருவறையில் மூலவர் அழகியமணவாளரைத் தவிர, உற்சவர் நம்பெருமாளும், யாகபேரர் என்னும் திருவரங்க மாளிகையாரும், தீர்த்தப்பேரர் என்னும் சின்னப்பெருமாளும், ஸ்நபனபேரராகிய நித்திய உற்சவரும், பலிபேரராகிய செல்வரும், சயனபேரராகிய செல்வரும் ஆக அறுவர் எழுந்தருளியுள்ளனர். மூலவரைச் சேர்த்து எழுவர் உள்ளனர்.

இக்கருவறையின் உள்ளேயும் பொன்னிறமான விமானம் உள்ளது. அதன் கவிகை மாடம் ஓடுகளால் வேயப்பெற்றுள்ளது. வட்டவடிவமான திருவுண்ணாழிச் சுற்றின் மேற்குப் பகுதியில் விநாயகரும், கிழக்குப் பகுதியில் விஷ்ணு துர்க்கையும் உள்ளனர். விநாயகரைத் 'தும்பிக்கை யாழ்வார்' என்றழைக்கின்றனர்.

ஆகமங்கள் அர்த்த மண்டபத்தின் (கிழக்குப்புறம் மையமாக இருந்து) தென்பகுதியில் விநாயகரையும், வடபகுதியில் துர்க்கையும் அமைக்க வேண்டும் என்று கூறுகின்றன. பிற்காலத்தில் கட்டப்பட்ட விஷ்ணு கோயில்களில் இந்நிலை மாறிவிட்டது. விசயநகர காலத்திற்குப் பின் கட்டப்பட்ட விஷ்ணு கோயில்களில் இந்நிலை காணப்படவில்லை. இதனின்று இக்கருவறையின் பழமையை உணரலாம்.

மூலத்தானத்தின் நுழைவில் உள்ள படிக்குக் 'குலசேகரன்படி' என்று பெயர். 'படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனோ'[44] என்றார் ஆழ்வார். எல்லா வைணவக் கோயில்களிலும் கருவறை நுழைவாசல் படிக்குக் குலசேகரன்படி என்றே பெயர் வழங்கப் படுகிறது. இப்பெயர் காரணப்பெயராய்ப் பின்னர் வழக்காறாயிருக்க லாம். இந்த வாசலில் இருபுறமுள்ள தூண்கள் இரண்டிற்கும் திருமணத்தூண் என்று பெயர். குலசேகர ஆழ்வார் 'அரங்கத்துப் பள்ளிகொள்ளும் மாயோனை மணத்தூணே பற்றி நின்று என்

வாயார என்று கொலோ வாழ்த்தும் நாளே'[45] என்று அருளிச் செய்துள்ளார்.

கருவறையை அடுத்து முகமண்டபம் உள்ளது. இதைக் காயத்திரி மண்டபம் என்பர். காயத்திரியின் இருபத்து நான்கு எழுத்துக்களை குறிப்பதுபோல் இவ்விடத்தில் இருபத்து நான்கு தூண்கள் அமைந்துள்ளன. இவ்விடத்தில் வரிசையாக நின்று வலம் வந்து கருவறை சென்று பெருமாளை வழிபடுவர். வட்ட வடிவமான கருவறையைச் சதுரமான சுற்று சூழ்ந்துள்ளது. இத்திருவுண்ணாழிச் சுற்றைத் 'தர்மவர்மா திருச்சுற்று' என்று கோயில் ஒழுகும் குறிப்பிடுகிறது.

## அழகிய மணவாளன் மண்டபம்

முகமண்டபத்திற்கு வெளியே மகாமண்டபம் உள்ளது. இம் மண்டபத்தை கோயிலார் அழகியமணவாளன் திருமண்டபம் என்றழைக்கின்றனர். சந்தன மண்டபம் என்ற பெயரும் இந்த மண்டபத்திற்கு வழங்கி வருகிறது. ஸ்ரீ மணவாள மாமுனிகள் வடக்கு முகமாக ஆசிரியக் கோலத்தில் எழுந்தளியிருந்து, பெருமாள் இரு நாச்சிமாருடன் மணவாள மாமுனிகள் எதிரில் கிழக்குப் புறமாக நோக்கிப் பரம சிஷ்யராக எழுந்தருளியிருந்து, அவரது உரையைக் கேட்டதாகக் கூறுவர். இவ்விடத்தில் இதன் காரணமாக 'ஸ்ரீசைலேச தயாபாத்திரம்' என்னும் தனியன் நம்பெருமாள் மூலமாக அவதரித்தது எனவும் கூறுவர்.

இம்மகாமண்டபத்தின் கிழக்கு, மேற்குப் பகுதிகளில் படிக்கட்டுகள் அமைந்துள்ளன. மேற்குப்புறப் படியின் வழியாகப் பெருமாள் புறப்பாடு காண்பார். கிழக்குப்படியின் வழியாகப் பொதுமக்கள் பெருமாளை வழிபடச் செல்வர். கருவறை மூலவருக்கு எதிரில் கருடன் சன்னிதியும், அதன் அருகே விழாக்காலங்களில் பெருமாள் எழுந்தருளும் கண்ணாடி அறையும் உள்ளன. இவ்வமைப்பு விசயநகர காலத்து அமைப்பாகும். விசயரங்க சொக்கநாத நாயக்கர் இக்கண்ணாடி அறையை அமைத்தார் என்று கோயில் ஒழுகு கூறுகிறது.[46]

## 1:3:2 இரண்டாம் திருச்சுற்று இராசமகேந்திரன் திருவீதி

எல்லாச் சுற்றுக்களும் தெற்கிலிருந்து தொடங்கி தெற்கில் முடிவனவாகும். ஏனெனில் பெருமாள் தென்திசை நோக்கித் திருமுக மண்டலம் வைத்துச் சேவை சாதிக்கிறார்.

காவிரியின் வெள்ளப்பெருக்கின் காரணமாக இராச மகேந்திரன் இச்சுற்றை உயரமாகக் கட்டினார் என்று கோயில் ஒழுகு கூறுகிறது. இத்திருவீதியின் தெற்கிலும் மேற்கிலும் சுவரை ஒட்டி மேடைகள் கட்டி, சரக்கு அறைகளாக ஆக்கப்பட்டுள்ளன. முதலில் இருப்பது தெற்குக் கல்லறை இதில் பெருமாள், தாயாரது திருவாபர ணங்களை வைத்துப் பாதுகாப்பர். அடுத்துக் கோயில் கருவூலம் இங்கு பெருமாளது விலையுயர்ந்த ஆடைகளை வைத்துள்ளனர். அடுத்து எடுபிடி பொருள்கள் இருக்குமிடம். தொடர்ந்து தோளுக்கினியான் அறை மற்றும் கோயிலுக்கு வரும் காணிக்கைப் பொருள்கள் வைக்குமிடம். சந்தனம் அரைக்குமிடம், பெருமாளின் பரியட்டங்கள் உலர்த்துமிடம் போன்றவைகள் உள்ளன. நாள்தோறும் விழாக்களில் பயன்படுத்த வேண்டிய பொருள்கள் மூலத்தானத்தின் அருகேயே இருக்கும்.

### திருவந்திக்காப்பு மண்டபம்

இத்திருச்சுற்றின் நடையில் பெருமாள் உலாவரும் பகுதியில் தென்மேற்கில் ஒன்றும், வடமேற்கில் ஒன்றுமாக இரண்டு நான்கு கால் மண்டபங்கள் கருஞ்சலவைக்கல் கொண்டு கட்டப்பட்டுள்ளன. இவைகளைத் திருவந்திக் காப்பு மண்டபம் என்பர். விழாக் காலங்களில் பெருமாள் இந்நான்கு கால் மண்டபத்தில் நின்று திருவந்திக்காப்பு கோஷ்டி முதலியன கண்டருள்வார்.

### விசயரங்க சொக்கநாதர்

மேற்குப்புற மேடையில் ஒரு கண்ணாடிப் பெட்டிக்குள் விசயரங்க சொக்கநாதர் (கி.பி. 1706 - 1732) அவருடைய மனைவி, மகன், மருமகள் ஆகியோரின் உருவங்கள் உள்ளன. அவை தந்தத் தால் இயல்பான அளவில் செய்யப்பட்டு வண்ணம் தீட்டப்பட்டுள்ளன. கற்பூரப்படியேற்றம் என்னும் சிறப்பு நிகழ்ச்சி கார்த்திகைத் திங்கள்

ஏகாதசித் திருநாளை ஒட்டி இக்கோயிலில் நடைபெறும். அந்நிகழ்ச்சி யைக் காண நாயக்க மன்னரும், அவர் தம் குடும்பத்தாரும் சிறிது காலதாமதமாக வந்தனர். அதனால் அந்நிகழ்ச்சியை அவர்கள் காண முடியாமல் போயிற்று. அந்நிகழ்ச்சியைக் காணவேண்டுமென்று அவர்கள் விரும்பினர். ஆனால், கோயிலார் மீண்டும் அடுத்த ஆண்டு இதே நாளில்தான் இக்கற்பூரப்படியேற்றம் நடைபெறும் என்று கூறிவிட்டனர். அதனால் மன்னர் குடும்பத்தினர் ஓராண்டு அங்கேயே தங்கியிருந்து எல்லா விழாக்களையும் கண்டு மகிழ்ந்து, கைசிக ஏகாதசியன்று கற்பூரப் படியேற்றத்தையும் கண்டு மகிழ்ந்தனர். பெருமாளுடைய அன்பிற்குப் பாத்திரமான அம்மன்னர் குடும்பத்தினர், இவ்விடத்தில் சிலை வடிவாகக் காட்சித் தருகின்றனர்.[47] இதனின்று இக்கோயிலில் உரிய நேரத்தில் விழாக்கள், நிகழ்ச்சிகள் நடைபெறும் என்றும், மன்னனேயாயினும் முறைமாறாது என்றும் அறிகின்றோம்.

## யாகசாலை

வடமேற்கு மூலையில் யாகசாலை உள்ளது. பெருவிழா நாள்களில் முதல் நாள் பெருமாளுக்கு இங்கு திருமஞ்சனம் நடைபெறும். பிரும்மோற்சவ திருநாளிலும் மற்றத் திருநாள்களிலும் யாகக் காப்பாளர் எனப்படும் திருவரங்கமாளிகையார் இங்கு வீற்றிருந்து விழா முடியும் நாள் வரை எழுந்தருளுவார். திருமுளை விழாக்களான பிரும்மோற்சவம், தெப்பத் திருநாள், திருப்பவித்திரம் திருநாள்களில் மண் எடுத்து இங்குதான் அங்குரார்ப்பணம், திருமுளை, யாகம் முதலியன நடைபெறும்.

## தொண்டைமான் குறடு

இதன் எதிர்ப்புறத்தில் தொண்டைமான் மன்னனால் கட்டப்பட்ட தொண்டைமான் குறடு என்னும் இடத்தைக் காணலாம். ஆயின் கோயிலொழுகு இவ்விடத்தை முதலாம் சுந்தரபாண்டியன் (கி.பி. 1251 - 1268) அமைத்ததாகக் கூறும்.[48] ஜேஷ்டாபிடேகத் திருநாளன்று பெருமாளது உள் அங்கி மற்றும் அணி வகைகள் இவ்விடத்தில்

அதிகாரிகள், அறங்காவலர்கள் முன் கோயில் தட்டாரால் எடை போடப்படும். பழுதானவைகள் செப்பனிடப்படும்.

## ஸ்ரீ மணவாளமாமுனிகள் சீபாடியத்தின் பொருளை விரித்தல்

யாகசாலையின் எதிர்ப்புறச் சுவரின் மேற்புறத்தில் ஸ்ரீ மணவாள மாமுனிகள் வடக்கு முகமாக ஆசிரியக் கோலத்தில் எழுந்தளியிருந்து. கோயில் அண்ணன், எறும்பியப்பா ஆகியோருக்கு சீபாடியத்தின் (ஸ்ரீபாஷ்யத்தின்) விரிவுரையை நிகழ்த்தினர் என்பது வரலாறு.[49]

## சேனை முதலியார்

வடகிழக்கு மூலையில் திறந்த வெளியில் ஒரு கோயில் உள்ளது. நம்பெருமாளின் படைத் தளபதியான சேனை முதலியார் என்னும் விஷவக்சேனர் கோயிலாகும் இது. இக்கோயிலுள் அனுமனும் வீடணனும் உற்சவத்திருமேனிகளாக விளங்குகின்றனர்.

இச்சேனை முதலியார், விழாக்காலங்களில் நகர சோதனைக்குத் திருவீதிகளில் எழுந்தருளுவார். தாயார் கோயில் சென்று மண் எடுத்தல், திருமுளைச் சடங்கிலும் இவர் எழுந்தருளுவார்.

## அர்ச்சுன மண்டபம்

சேனை முதலியார் சன்னிதிக்கு நாலடிப் பக்கத்தில் கிழக்குப் புறத்தில் அர்ச்சுன மண்டபம் உயர்ந்த பகுதியாகவும், கிளி மண்டபம் சற்றுத் தாழ்ந்த பகுதியாகவும் தென்வடலாக அமைந்துள்ளன. விசயநகர மன்னனான மல்லிகார்ஜுன் (1447-65) இம்மண்டபத் தைக் கட்டினார் என்று கோயில் ஒழுகு கூறுகிறது. [50]

மார்கழித் திங்களில் நடைபெறும் இக்கோயிலின் பெருவிழா வான வைகுண்ட ஏகாதசித் திருநாளின், முற்பகுதியான திருமொழித் திருநாளின்போது (பகல் பத்து) இம்மண்டபத்தில் பத்து நாள்கள்

பெருமாள் எழுந்தருளுவார். ஸ்ரீராமநவமி அன்றும், கார்த்திகைத் திங்களில் நடைபெறும் கைசிக ஏகாதசி அன்றும், இம்மண்டபத்தில் தான் பெருமாள் எழுந்தருளி விழாக் காண்பார். கல்வெட்டுகள் இம்மண்டபத்தைச் சித்திர மண்டபம் என்று குறிப்பிடுகின்றன.[51]

## சேரகுலவல்லி நாச்சியார்

இம்மண்டபத்தின் வடமேற்கே சேரகுலவல்லி நாச்சியார் சன்னிதி உள்ளது. இவர் சேரமன்னனின் மகளாவார், பெருமாளிடம் மனம் பற்றி அவரோடு ஐக்கியமாகி விட்டார் என்று கூறுவர் அரங்கனின் எட்டு தேவியருள் இவர் ஒருவர். இச்சன்னிதி கிழக்கு நோக்கியுள்ளது. ஸ்ரீராமநவமி அன்று நம் பெருமாளுடன் இத்தேவி எழுந்தருளி விழாக் காண்பார்.

## துலுக்க நாச்சியார்

வடகிழக்கு மூலையில் ஒரு தனி அறையில் சாந்து நாச்சியார் (துலுக்க நாச்சியார்) சுவரில் சித்திரமாக எழுதப்பட்டுள்ளார். இவர் தில்லி பாதுஷாவின் திருமகளாவார்.[52] பெருமாளிடத்தில் பக்தி பூண்டு உயிர் துறந்தவர். மார்கழித் திருமொழித் திருநாளின் போதும் கைசிகத் திருநாளின்போதும் பெருமாள் இவர் பொருட்டு இவ்விடத்தில் படியேற்ற சேவை காண்பார்.

## ரேவதி மண்டபம்

அர்ச்சுன மண்டபத்திற்கு எதிர் நோக்கியுள்ள மண்டபம் ஒன்றுண்டு. இதை ரேவதி மண்டபம் என்பர். திங்கள்தோறும் ரேவதி நட்சத்திரத்தன்று பெருமாள் மண்டபத்தில் திருமஞ்சனம் காண்பார். அரங்கநாதரின் திருநட்சத்திரம் ரேவதி ஆகும்.

## கிளி மண்டபம்

தாழ்ந்த பகுதியான கிளி மண்டபத்தில் உள்ள கூண்டுகளில் கிளிகள் உள்ளன. ஆண்டாள் நாச்சியார் "கூண்டிலிருந்து கிளி எப்போதும் 'கோவிந்தா கோவிந்தா' என்றழைக்கும்" என்று கூறியது

போல, இக்கிளிகளும், "ரங்கா, ரங்கா" என்று அழைத்துக் கொண்டிருக்கும். இது, ஒரு கிளியினாலேயே இக்கோயில் கண்டு பிடிக்கப்பட்டது என்னும் புராணக் கதையினை நினைவுபடுத்துகிறது. இப்பொழுது கூண்டுகள் உள்ளன, கிளிகள் இல்லை. இம் மண்டபத்தைப் புதுப்பித்தவர் திருமங்கை மன்னர் என்று கோயில் ஒழுகு கூறுகிறது.[53] மண்டபத்தின் கடைசியில் தென்கிழக்கு மூலையில் கிருஷ்ணன் சன்னிதி உள்ளது. அங்கு கிருஷ்ணனுடன் தேவகி, வாசுதேவர், ரோகிணி போன்றோர் வீற்றிருக்கின்றனர். கிருஷ்ணனுக் குக் கொடுப்பதற்காக வாசுதேவர் ஒரு கரத்தில் பாற்குடத்தையும், மற்றொரு கரத்தில் பாலாடையையும்வைத் திருப்பது அழகிய காட்சியாகும். கிருஷ்ணஜெயந்தித் திருநாளன்று இங்குள்ள கிருஷ்ணர் புறப்பட்டு விழாக்காண்பர்.

## திருவேங்கடமுடையான்

கிளி மண்டபத்திலிருந்து இறங்கி வந்தால் கண்ணாடி பதித்த இடம் தோன்றும், பெருமாள் புறப்பாட்டின் போது இக்கண்ணாடியில் அவர் உருவத்தைக் கண்டு பொதுமக்கள் மகிழ்வர். அதையடுத்து சுவரில் சித்திரமாகத் திருவேங்கடமுடையான் தீட்டப்பட்டுள்ளார். இப்படம் இங்கு இடம் பெற்றதன் வரலாறு ஒன்றுண்டு. பிள்ளைப் பெருமாள் அய்யங்கார், அரங்கனைத் தவிர வேறு எவரையும் பாடமாட்டேன் என நிச்சயித்து "அரங்கனைப் பாடும் வாயால் குரங்கினைப் பாடுவேனோ?" என்று கர்வத்துடன் சொன்னதாகவும் அதனால் கோபமுற்ற திருவேங்கடவன் அவருக்குக் 'கண்ட நோயைக்' (கழுத்து நோய்) கொடுத்ததாகவும், அந்நோய் தீர, அப்பெருமான் மீது திருவேங்கடமாலை பாடியதாகவும் கூறுவர்.[54] பிள்ளைப்பெருமாள் அய்யங்காருக்குத் திருவேங்கடமுடையான் இவ்விடத்தில் காட்சியளித்ததாகவும், அதைக் குறித்து வண்ணச் சித்திரமாக இங்குத் தீட்டப்பட்டுள்ளதாகவும் கருதப்படுகிறது.

இவ்விரண்டாம் சுற்றில்தான் வைகுண்ட ஏகாதசியின் திருவாய் மொழித் திருநாளின் (இராப்பத்து) போது வீணை ஏகாந்தத்தில் ஒலிக்க பெருமாள் கோயிலுள் எழுந்தருளுவார்.

## 1:3:3 மூன்றாம் திருச்சுற்று குலசேகரன் திருச்சுற்று

குலசேகரமன்னனின் பெயரில் இத்திருச்சுற்று விளங்குகிறது. கோயிலின் மிகப்பெரிய கொடிமரம், பலிபீடம் ஆகியவை தங்கத் தகடுகளால் வேயப்பட்டுள்ளன. கொடிக் கம்பத்தின் உச்சியில் கருடாழ்வாரின் திருவுருவம் உள்ளது. அக்கம்பம் கூரையை உருவிக்கொண்டு விமானத்திற்கு எதிரில் ஓங்கி உயர்ந்து நிற்கிறது இக்கொடிக்கம்பம் சுந்தரபாண்டிய மன்னன் காலத்தில் (1251-1268) நிறுவப்பெற்று, பின்னர் இஸ்லாமியர் படையெடுப்பால் அழிக்கப்பட்டு கி.பி. 1461ஆம் ஆண்டு மல்லிகார்சுனர் அவர்களால் செம்பினால் செய்யப்பெற்றுத் தங்கத் தகடுகள் வேய்ந்த கொடிக் கம்பமாக அமைக்கப்பட்டதாகத் தெரிகிறது.[55] பின்னர் இருபதாம் நூற்றாண்டில் மீண்டும் தங்கத் தகுடுகளால் வேயப்பெற்றதாகக் கூறுவர் இவ்விடத்திற்கு அணியரங்கன் திருமுற்றம் என்ற பெயர் வழங்கப்படுகிறது. குலசேகராழ்வார் "கண்ண நீர் கொண்டு அரங்கன் கோயில் திருமுற்றம், சேறுசெய் தொண்டர் சேவடிச் செழுஞ்சேறென் சென்னிக் கணிவேனே"[56] என்று கூறுகின்றார்.

### பவித்திர மண்டபம்

இவ்விடத்தினின்று வலமாக வருவோமாயின் பவித்திர மண்டபத்தை அடையலாம். இம்மண்டபம் அழகுற அமையவில்லை யாயினும் மிகப் பெரியதாகவும் உயரமாகவும் உள்ளது. ஆவணித் திங்களில் நடைபெறும் திருப்பவித்திரத் திருநாளின்போது பெருமாள் இம்மண்டபத்திற்கு எழுந்தருளுவார். இங்கு கலைமகளையும், ஹயக்கிரீவப் பெருமாளையும் வழிபடலாம். இம்மண்டபத்தைக் குலசேகர மன்னன் அமைத்தான் என்று கூறுவர். சேரனை வென்றான் மண்டபம் என்றும் இதனைக் கூறுவர். அதன் பொருள் சடாவர்மன் சுந்தரபாண்டியன் குலசேகரனை வென்றதனைக் குறிக்கும் இம் மண்டபத்தினின்று கீழே இறங்கினால் பிரும்மோற்சவத் திருநாள்களில் திக்பந்தங்களுக்குப் பலி சாதிக்கும் தசமூர்த்தியைக் காணலாம். பிரும்மோற்சவத் திருநாள்களில் பெருமாள் புறப்பாட்டிற்கு முன்னர் அவர் எழுந்தருளும் திருவீதிகளில் தசமூர்த்தி புறப்பாடு காண்பர்.

## துரை மண்டபம்

வாகன அறையின் வடமேற்கில் துரை மண்டபம் உள்ளது. பெருமாள் உட்கோடைத் திருநாளின்போது இம்மண்டபத்தில் எழுந்தருளுவார். இதன் அருகே கருஞ்சலவைக் கல்லால் அமைந்த நான்குகால் மண்டபம் உள்ளது. திருவாய்மொழித் திருநாள் பத்து நாள்களும் பெருமாள் முன்னர் இம்மண்டபத்தில் வேத விண்ணப்பம் நடைபெறும். வைகுண்டத் திருவாசல் திறப்பதற்கு முன் இம் மண்டபத்தில் பெருமாள் வேதவிண்ணப்பம் கேட்பார். அதன் பிறகே பரமபதவாசலை அடைவதாக மரபு. வைகுண்டத்திலுள்ள 'விரஜை நதி' இம்மண்டபத்தின் கீழ் ஓடுவதாகவும் கருதுவர். இங்குள்ள தூண்களில் திருமாலின் பத்து அவதாரங்களையும் சிற்ப வடிவிற் காணலாம். இங்குள்ள ஒரு தூணில் வீடணன் அரங்க விமானத்தைப் பெற்று வருவதான சிற்பம் அமைந்துள்ளது. பரமபதவாசல் மண்டபத்தின் அருகே திரும்பினால் வைகுந்தத் திருவாசல் (பரமபத வாசல்) வழியைக் காணலாம். மார்கழித் திங்கள் வைகுண்ட ஏகாதசியன்று பெருமாளோடு பக்தர்கள் இவ்வாசல் வழியாகச் செல்லுதல் பரமபதத்திற்குச் செல்லுவதாகக் கருதப்படுகிறது.

## மடைப்பள்ளி

கிழக்குச் சுற்றில் கோயிலில் அன்றாடம் அரங்கனுக்கு வேண்டிய அமுதினை ஆக்கும் மடைப்பள்ளி உள்ளது. இதற்கு அரவிந்த நாயகியார் திருமடைப்பள்ளி என்று பெயர். இதன் வாசலில் அன்னமூர்த்தி திருவுருவம் காணப்படும்.

## ஊஞ்சல் மண்டபம்

மடைப்பள்ளியை அடுத்து உள்ள உயரமான மண்டபம் ஊஞ்சல் மண்டபமாகும். ஐப்பசித் திங்களில் நடைபெறும் ஊஞ்சல் திருநாள் இங்கு நிகழ்வுறும். இம்மண்டபத்தை இராமராயர் கட்டியதாகக் கூறுவர். கந்தாடைராமானுசர் கட்டியதாகக் கோயில் ஒழுகு கூறும்.[57] இம்மண்டபத்தில் இரண்டு பெரிய கிணறுகள் உள்ளன. இவை

நெய்க்கிணறுகள் என வழங்கப்படுகின்றன. ஒரு காலத்தில் இதில் நெய் நிரப்பப்பட்டிருக்கலாம். ஆயின் இன்று இவை வெறுமையாக உள்ளன.

### அனுமார்

இம்மண்டபத்தின் அருகில் உயரமான அனுமன் திருவுருவம், அமர்ந்து கைகூப்பிய நிலையில் உள்ளது. அதன் அருகே ஒரு சிறு மண்டபம் உள்ளது. அதன் பெயர் கொடியேற்ற மண்டபமாகும். பிரும்மோற்சவத் திருவிழாவின்போது பெருமாள் இங்கு எழுந்தருளிக் கொடியேற்ற நிகழ்ச்சியைக் கண்ணுறுவார்.

### 1:3:4 நான்காம் திருச்சுற்று– ஆலிநாடன் திருவீதி

திருமங்கை மன்னன் பெயரில் இச்சுற்று வழங்கப்படுகிறது. ஆலிநாடனென்னும் பெயர் திருமங்கையாழ்வாரைக் குறிக்கும். இச்சுற்று ஆரியபட்டாள் வாசலிலிருந்து தொடங்குகிறது. வடநாட்டு அந்தணர்கள் இத்திருவாசலைக் காவல்புரிந்து வந்தனர் என்பர். இது குறித்து இவ்வாசலுக்கு 'ஆரியபட்டாள் வாசல்' என்ற பெயர் அமைந்தது என்பர். இவ்வாசல் 14ஆம் நூற்றாண்டில் இஸ்லாமியர் படையெடுப்பால் எரித்து அழிக்கப்பட்டது என்றும் 15ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் சோழர்காலப் பாணியில் மீண்டும் கட்டப்பட்டது என்றும் கோயில் ஒழுகு கூறும்.[58]

### கருடன் சன்னிதி

இத்திருவீதியில், கோயில் வாசலின் எதிரில் மிகப் பெரிய கருடன் தனிச் சன்னிதியில் அமர்ந்து காட்சியளிக்கின்றார். அதன் எதிரில் கருட மண்டபம் உள்ளது. கருடன், பெருமாளை நோக்கி வணங்கியவாறு உள்ளார். இக்கருட மண்டபத்தைத் 'தேவராசன் குறடு' என்றும் அழைப்பர். கருட மண்டபத்தில் நான்கு தூண்கள் கொண்ட கருஞ்சலவைக்கல் மண்டபம் உள்ளது. இதற்கு 'பரமன் மண்டபம்' என்று பெயர். இப்பரமன் மண்டபத்தில் திருமொழித் திருநாள்

(பகல்பத்து) பத்தாம் திருநாள் 'மோகினி அலங்காரத்தன்று' பெருமாள், கோஷ்டி காண்கிறார்.

## கொட்டாரம்

அங்கிருந்து மேற்புறமாகச் சென்றால் 'கொட்டாரம்' எனப்படும் அரங்கநாதரின் பண்டகசாலை வருகிறது. இங்கு பெருமாளுக்கு அவரது நன்செய் வயல்களிலிருந்து வரும் நெல்லைப் பெரிய குதிர்களில் சேமித்து வைப்பார்கள். ஐங்கோண வடிவமுள்ள ஐந்து செங்கல் குதிர்கள் தற்பொழுது பழுதுபட்ட நிலையில் உள்ளன. இக்கொட்டாரத்தில் பிரும்மோற்சவம் மற்றும் திருமுளைத் திருநாள்களில் ஏழாம் திருநாள் அன்று 'நெல் அளவு' என்னும் நிகழ்ச்சி பெருமாள் உபயநாச்சியார் ஆகியோர் திருமுன் நிகழும். இக்கொட்டாரத்தைத் திருமங்கை மன்னன் கட்டியதாகக் கூறுவர்.

## முதலாழ்வார் சன்னிதி

மேற்குச் சுற்றின் முடிவில் மேலப்பட்டாபிராமன் சன்னிதியும், அதைத் தொடர்ந்து வடமேற்கு மூலையில் முதலாழ்வார்கள் சன்னிதியும் உள்ளன. பொய்கையார், பூதத்தார், பேயார் என்ற மூவரும் ஒரே பீடத்தில் சேவை சாதிக்கின்றனர். சோழர் கால அமைப்பில் இச் சன்னிதியின் அமைப்புள்ளது. அடுத்துத் தீர்த்தக் கரை வாசுதேவர் சன்னிதி உள்ளது. சோழர் காலக் கட்டிட அமைப்பில் இச்சன்னிதி உள்ளது. இவரைச் சந்திரபுட்கரணிக்கு உரிமையுடையவ ராகச் சொல்வர்.

## தன்வந்திரி சன்னிதி

அடுத்து உயர்ந்த இடத்தில் கிழக்கு நோக்கித் தன்வந்திரி சன்னிதி உள்ளது. இவர் பெருமாளுக்கு மருத்துவராகக் கருதப்படுவார். தன்வந்திரிக்கு தனிச்சன்னிதி வைணவத் திருத் தலங்களில் திருவரங்கத்தில் மட்டுமே உள்ளது. இச்சன்னிதி அமைப்பு விசய நகர காலத்தை உணர்த்துகிறது. அதைத் தொடர்ந்து தாயார் கோயில்

செல்லும் பாதை வரும் வழியில் ஐந்துகுழி மூன்று வாசல் உள்ளது. தரையில் ஒரு கருங்கல்லில் ஐந்து குழிகள் விரல் நுழையும் அளவில் தோண்டப்பெற்றிருக்கும். இதைச் சூழ்ந்து மூன்று வாசல் இருப்பதால் இவ்விடத்தை ஐந்து குழி மூன்று வாசல் என்கின்றோம். 'ஐந்தும் மூன்றும் ஒன்றுமாக நின்ற ஆதி தேவனே'[59] என்ற ஆழ்வாரின் பாசுரத்தின்படி ஐந்து பொறிகளை அடக்கி மூன்று குணங்களையும் போக்கி அல்லது மும் மலங்களையும் வென்று, மனதை அடக்கினால் இறை நெறியை உணரலாம் என்பதை இவ்வாசல் உணர்த்துகிறது.

## சந்திரபுட்கரணி

தன்வந்திரி சன்னிதியின் முன் சந்திரபுட்கரணி உள்ளது இது வட்டவடிவமான பெரிய குளமாகும். சந்திரன் மண்ணுலகம் வந்து தவம் ஏற்றுப் பலன் பெற்றதால் சந்திரபுட்கரணி என்றழைக்கப்படும். ஸ்ரீரங்க விமானம் இங்கு வருவதற்கு முன்னே இக்குளம் இங்கிருந்தது என்பர். திருவரங்கநாதர், விரும்பி உறையும் இடமாக இக்குளக் கரையைத் தேர்ந்தெடுத்தார். இக்குளக்கரையில் இத்தலத்தின் மர மாகிய புன்னைமரத்தைக் காணலாம். இப்புன்னை மரத்தின் கீழ்ப் பெருமாளும், தாயாரும் விளையாடுவர் என்றும் அதுசமயம் புன்னை மரக்கிளையை வளைத்துத் தாயாரிடம் பெருமாள் தருவார் என்றும் பராசரபட்டரின் 'ஸ்ரீரங்கராஜஸ்தவம்' கூறும்.[60] மேலும் இப்புன்னை மரத்தடியில் ஆசாரியப் பெருமக்கள் சூழ்ந்து இறைவன் பொருள் சேர்ப்புகழைப் பேசிக் கொண்டிருந்தனர் என்றும் அறிகின்றோம்.

## கோதண்டராமர் சன்னிதி

சந்திரபுட்கரணியின் சுற்று வளாகத்தில் சந்தான கோபால கிருஷ்ணன், இராதையைத் தழுவிய கிருஷ்ணன் திருவுருவங்கள் காட்சியளிக்கின்றன. மேலும் தொடர்ந்து வலம் வந்தால் வராகப் பெருமாள், வரதராசப்பெருமாள் இருவரும் எழுந்தருளியிருக்கும் சன்னிதி உண்டு. இக்குளத்தின் கீழ்புறத்தில் கோதண்டம் தாங்கியவாறு நின்ற திருக்கோல இராமன் சன்னிதியைக் காணலாம். இராமன் அருகில் சீதைப்பிராட்டியும் இளைய பெருமாளும் நின்ற வண்ணமும்,

அனுமன் வணங்கிய வண்ணமும் காட்சி தருகின்றனர். இராமர் தங்கக் கவசம் சாத்தப்பட்டு, பெரிய சாளக்கிராம மாலை அணிந்துள்ளார்.

## பரமபதநாதன் சன்னிதி

அடுத்துப் பரமபதநாதன் சன்னிதியுள்ளது. இச்சன்னிதியில் வைகுண்டவாசியான ஸ்ரீமந் நாராயணனையும், திருமகள், நிலமகள் ஆகியோர் படிமங்களையும் மேலும் ஆழ்வார்களின் படிமங்களையும் காணலாம்.

## வேத பாடசாலை

கோயிலின் வேத பாடசாலை, பரமபதநாதன் சன்னிதி அருகில் இருந்தது. இளஞ்சிறார்கள் இப்பள்ளியில் பயின்று வந்தனர். 'அந்தமிழின்பப் பாவினை, அவ் வடமொழியைப் பற்றற்றாளர்கள் பயிலரங்கம்'[61] என்ற ஆழ்வாரின் பாசுரம் இப்பாடசாலையைக் காணும்பொழுது நினைவிற்கு வருகிறது. சென்னை பச்சையப்பன் அறக்கட்டளையால் இவ்வேத பாடசாலை நடத்தப்பட்டுவந்தது. தற்போது இங்கு வேத பாடசாலை நடைபெறவில்லை. இக்கோயில் கல்வெட்டும் இது பற்றிக் குறிக்கிறது.

## பூச்சாத்து மண்டபம்

ஆலிநாடன் திருவீதியின் கிழக்குப் பகுதியில், பூச்சாத்து மண்டபம் நான்கு தூண்களுடன் உள்ளது. சித்திரைத் திங்கள் பூச்சாத்துத்திருநாளின் (வெளிக்கோடை) போது பெருமாள் இம்மண்டபத்தில் திருப்பாதம் தாங்குவோரின் திருத்தோள்களில் நின்றவண்ணமே பூத்துப்பட்டா, பூவாடை, சூட்டிக்கொண்டு சேவை சாதிப்பர். இத்திருநாளை வெளிக்கோடைத்திருநாள் என்றும் குறிப்பர். இதன் அருகே நடைபாதையில் நீண்ட மணல்வெளி உள்ளது. இம்மணல்வெளியில் மார்கழித் திங்கள் திருவாய்மொழி திருநாள் 8ஆம் நாள் வேடுபறித் திருநாளும், அதையொட்டிக் கோண வையாளி முதலிய நிகழ்ச்சிகளும் நடந்தேறும்.

இத்திருச்சுற்றில் கிழக்குப் பகுதியில் கீழ்ப்பட்டாபிராமன், ஸ்ரீனிவாசபெருமாள், போசராமன், ருக்மிணி சத்யபாமாவுடன் கூடிய வேணுகோபாலன் ஆகியோரது சன்னிதிகள் உள்ளன. விசயநகர கட்டிடக்கலை அமைப்பில் இம்மண்டபங்கள் உள்ளன.

## திருமழிசை ஆழ்வார்

தென்கிழக்கு மூலையில் திருமழிசை ஆழ்வார் சன்னிதி உள்ளது. தெற்குப் பகுதியின் தொடக்கத்தில் பெருமாளுக்குப் படைத்த திருவமுது வகைகள் விற்குமிடமான 'ஸ்ரீ பண்டாரம்' உள்ளது. இப்பண்டாரத்தில் உள்ள மண்டபத்தின் நடுவில் ஸ்ரீ கிருஷ்ணஜெயந்தி அன்று நம்பெருமாள் எழுந்தருளுவார்.

ஸ்ரீபண்டாரத்தைத் தொடர்ந்து கோயிலில் புதிதாக அமைக்கப் பட்ட வாகன அறை உள்ளது. இதில் பெருமாள் விழாக் காலங்களில் திருவீதி எழுந்தருளும் தங்கம் மற்றும் வெள்ளியிலான வாகனங்கள் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளன.

## 1:3:5 ஐந்தாம் திருச்சுற்று அகளங்கன் திருவீதி

கார்த்திகைக் கோபுரத்தை வெளியில் சூழ்ந்த திருவீதி ஐந்தாம் திருச்சுற்றாகிய அகளங்கன் திருவீதியாகும்.

## திருவந்திக்காப்பு மண்டபம்

இத்திருச்சுற்றை வலமாக வருவோமேயானால் முதலில் நாலுகால் மண்டபம் தோன்றும். நான்முகக் கோபுரம் கோயிலின் வெளிக் கோபுரமாகும். அதிலிருந்து நேராக விளங்குவது திருவந்திக் காப்பு மண்டபம் ஆகும். இது நாயக்கர் கால அமைப்பில் உள்ளது. நாயக்க மன்னர் ஒருவர் குறுவாளை இடையில் வைத்தவாறு பெருமாளைத் தொழுதவண்ணம் உள்ளார். பெருமாள் கோயிலின் வெளியே சென்று, உலாப்போந்து கோயிலுள் எழும்போது இம் மண்டபத்தில் கண்ணேறு கழித்தல் வழக்கமாகும். கண்ணேறு

கழிப்பதாவது சிறிய வெள்ளிக் குடத்தின் மீது ஒரு சிறு சின்னத்தை வைத்து அதில் கனமான திரியில் தீயிட்டு ஏற்றிப் பெருமாளுக்கு எதிரே ஏற்றி, இறக்கிக் காட்டுவதுபோல அர்ச்சகர் சுற்றுவர். பெருமாள் வாகனத்தில் வீற்றிருக்கும்போது இந்நிகழ்ச்சி நடைபெறும். இதற்குத் திருவந்திக்காப்பு என்று பெயர். இந்நிகழ்ச்சி இராசமகேந்திரன் திருவீதியில் உள்ள இத்திருவந்திக்காப்பு மண்டபத்திலும் சில விழா நாட்களிலும் நடைபெறும். இந்நிகழ்ச்சி முடிந்தவுடனே பெருமாள் வாகன மண்டபம் எழுந்து, வாகனம் நீங்கிப் புறப்படுவார்.

## நாதமுனிகள் சன்னிதி

திருவந்திக்காப்பு மண்டபத்தின் அருகே நாதமுனிகள் சன்னிதி உள்ளது. இவர் ஸ்ரீவைஷ்ணவ ஆசாரியர்களுள் முதலாமவராவர். நாதமுனிகளின் பேரரான ஆளவந்தார் ஆகியோர் எழுந்துள்ளனர். இச்சன்னிதி சோழர் கால அமைப்பில் உள்ளது.

## யானை வாகன மண்டபம்

அடுத்து யானை வாகன மண்டபம். யானை வாகனத்திற்கு மட்டும் தனி மண்டபம் உள்ளது. பிரும்மோற்சவத் திருநாள்களில் ஆறாம் திருநாளன்று யானை ஏற்றத் திருநாள் நடைபெறும். அன்று இம்மண்டபத்திலிருந்து பெருமாள் யானை வாகனத்தில் புறப்பாடு காண்பார். இம்மண்டபத்தில் முகமதியர் சின்னங்கள் இருப்பதைக் காணலாம்.

## உள் ஆண்டாள் சன்னிதி

அடுத்து உள் ஆண்டாள் சன்னிதி உள்ளது. ஆண்டாள் நாச்சியார் உற்சவராகவும், மூலவராகவும் எழுந்தருளியுள்ளார். இதன் கட்டிட அமைப்பு விசயநகர காலத்தை நினைவூட்டுகிறது. பிரும்மோற்சவத்தில் யானை வாகனத்தன்றும், மற்றும் சில நாள்களிலும் இவ்விடத்தில் ஆண்டாளிடம் பெருமாள் மாலை மாற்றிக் கொண்டு கோயிலுள் செல்வார்.

## வேணுகோபாலர் சன்னிதி

இச்சன்னிதியில் உள்ள சிற்பங்கள் யாவும் சிற்பக் கலைக்கே பெருமை கூட்டுவனவாகவும் பழம்பெரும் சிறப்பியல் கொண்டும் அமைந்துள்ளன. வெளிநாட்டுப் பயணியரை இச்சிற்பங்கள் மிகவும் கவர்ந்திழுக்கின்றன. கண்ணாடியில் தன் முக அழகைப் பார்க்கும் அழகி, வீணை வாசிக்கும் பெண் போன்ற சிற்பங்கள் 'எல்லோரா' சிற்பங்களையும், 'அஜந்தா' சிற்பங்களையும் நினைவூட்டும். இதன் காலம் பலவாறாகச் சொல்லப்பட்டாலும் ஒய்சளர் காலத்தது. அதாவது கி.பி. 1240 - 1330 ஆக இருக்கலாம் என்பார் கூற்றுக்கு இச்சிற்ப அமைப்புகள் அரண் செய்கின்றன.

வெளிப்புறச் சுவர்களில் தீட்டப்பட்டுள்ள சிற்பங்கள் இலக்கியப் பொருள்கள் பற்றியன. இந்தியாவின் ஏனைய பகுதிகளிலும், குறிப்பாக ஒரிசாவிலும் எடுத்துக்காட்டாக கோனார்க்கிலும், இவை போன்ற சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. வீணை வாசிக்கும் இளம்பெண், அழகிய கிளியை ஏந்தி நிற்கும் மகளிர், முகம் பார்க்கும் கண்ணாடியை ஒரு கரத்தில் ஏந்தி தன் நெற்றியில் குங்குமம் அணிந்துகொள்ளும் நேரிழையார் ஆகியோரின் சிற்பங்கள் உயிரோட்டமாய் எழிலுறச் செதுக்கப்பட்டுள்ளன. கலைநோக்கில் ஏனைய சன்னிதிகளினும் கவர்ச்சியும், அழகும் வாய்ந்தது இச்சன்னிதி என்பதில் ஐயமில்லை.

## வாகன மண்டபம்

பெருமாள் பிரும்மோத்சவத் திருநாள்களில் தங்கம், வெள்ளியிலான பல்வேறு வாகனங்களில் எழுந்தருளிப் புறப்பாடு காண்பது இம்மண்டபத்திலிருந்தேயாம். மீண்டும் இம்மண்டபம் வந்து வாகனம் நீத்துப் பெருமாள் கருவறை சென்றடைவார்.

## அரங்கவிலாச மண்டபம்

இம்மண்டபத்தில் கருங்கல்லினால் ஆன கொடிக்கம்பமும், பலி பீடமும் உள்ளன. இக்கோயிலில் இரண்டு கொடிக்கம்பமும், பலி

பீடமும் அமைந்துள்ளன. மூன்றாம் திருச்சுற்றில் அமைந்துள்ள கொடிக்கம்பத்தையும் பலி பீடத்தையும் முன்னர்க் குறித்தோம். இச்சிறப்பு நோக்கத் தக்கது. இதன் முன்னர் கருங்கல்லில் நான்கு கால் மண்டபம் உள்ளது. இதில் பெருமாள் பிரும்மோத்சவத் திருநாள்களிலும் மற்ற விழாக்காலங்களிலும் சிறப்புச் சேவைக்காகக் கோயிலின் வெளியில் செல்வது எக்காரணம்பற்றியோ தவிர்க்கப் படுமாயின் அவ்வுபயத்தை இம்மண்டபத்தில் பெறுவார். இம் மண்டபத்தின் இரு புறமும் அழகுப் பொருள் விற்கும் கடைகள் உள்ளன.

## சக்கரத்தாழ்வார் சன்னிதி

சக்கரத்தாழ்வார் சன்னிதியில் உள்ள பெருமாள் சுதர்சன ஆழ்வார் என்றழைக்கப்படுவார். இவர் எட்டுக் கைகளுடன், சங்கு சக்கரம், அங்குசங்களுடன் காட்சி தருகிறார். இவருக்குப் பின் புறத்தில் சக்கரக் குறி இருப்பதனையும் காணலாம். சைவத் திருக்கோயில் களில் 'சனீச்வரன்' விளங்குவது போல வைணவக் கோயில்களில் இவர் விளங்குகிறார். இவரை வழிபடுவதால் பல நன்மைகள் வந்தடைவ தாகப் பக்தர்கள் நம்புகிறார்கள். சனிக்கிழமை தோறும் பெருமளவில் மக்கள் வந்து நெய் விளக்கு இட்டுச் செல்வர். அதற்கெனப் பெரிய விளக்கு முகம் ஒன்று இச்சன்னிதியில் உள்ளது. சக்கரத்தாழ்வார் பற்றிக் கல்வெட்டுகளிலும் குறிக்கின்றன.

நாள்தோறும் இங்கு 'சுதர்சன சதகம்' 'பஞ்சாயுத ஸ்தோத்திரம்' 'துவாதசநாம பஞ்சரம்' முதலிய தோத்திரங்கள் வைணவப் பெருமக்களால் ஆங்காங்கு அமர்ந்தவாறு ஓதப்படுகின்றன. இங்கு மூலவர் பதினாறு கரங்களுடன் உள்ளார். இவருடைய கையிலுள்ள ஆயுதங்கள் அன்பர்களின் இடர்களைக் களையும் என்று நம்புகின்றனர். இவை யோக இயந்திரங்களாகும். மூலவராகிய சக்கரத்தாழ்வார் பின்புறம் யோகநரசிம்மரின் திருவுருவத்தைக் காணலாம். பெருமாளுக்கு நடைபெறும் பெரிய திருப்பாவாடைத் திருநாள் இவருக்கும் நடைபெறும்.

## திருவரங்கத்தமுதனார்

இராமாநுச நூற்றந்தாதியைப் பாடிய திருவரங்கத்தமுதனார், சக்கரத்தாழ்வார் சன்னிதித் திருச்சுற்றில் தென்மேற்கு மூலையில் இடம் பெற்றுள்ளார். இங்குள்ள தூண்கள் பல்லவ காலச் சிற்ப வடிவமைப் பைப் போன்று சிங்க வடிவத்தில் உள்ளன. கட்டிட அமைப்பு சிறப்பாக அமைந்துள்ளது.

## வசந்த மண்டபம்

வலமாகச் சென்றால் அகளங்கன் திருவீதியில் மேற்குப் புறத்தில் பசுமையான தோட்டம் அமைந்து, வழிநடையும் உள்ளது. இத்தோட்டத்தின் உள்ளே வசந்த மண்டபம் உள்ளது. பெருமாளுக்கு வைகாசித் திங்களில் நடக்கும் வசந்தத்திருநாள் இம்மண்டபத்தில் நிகழ்வுறும்.

சந்திரபுட்கரணியிலிருந்துக் கொண்டு வரப்பட்ட நீரால் அகழி போல் தெப்பக்குளத்தின் நடுவில் மண்டபமிருப்பது போல சூழப்பட்டு வசந்த மண்டபம் அமைந்துள்ளது. இவ்விழாவைக் 'கேடாக்குழித் திருநாள்' என்றும் அழைப்பர்.

இவ்வசந்தத் திருநாள் ஒரு காலத்தில் ஆண்டுதோறும் திருக் காவிரியில் நடந்து வந்ததென்றும், ஓராண்டு வைகாசித் திங்களில் திருக்காவிரியில் வெள்ளம் பெருக்கெடுத்ததால் திருநாள் நடவாமல் போயிற்று என்றும் கோயில் ஒழுகு மூலம் அறிய முடிகிறது. எண்பதா வது உத்தமநம்பிகளால் இவ்விடத்தில் குளம் வெட்டி மண்டபம் கட்டப்பட்டது. அது முதல் வசந்தத் திருநாள் இவ்விடத்தி லேயே நடந்தேறி வருவதாகக் கோயில் ஒழுகு குறிக்கும்.[62]

## தாயார் அரங்க நாச்சியார் கோயில்

தாயார் கோயில், மேற்குப் பகுதியில் வடமேற்கு மூலையில் அமைந்துள்ளது. இக்கோயிலில் தாயாருக்குத் தனியாகத் திருவிழாக் கள் நடைபெறும். கோடைத்திருநாள் மண்டபம், பங்குனி உத்திர

மண்டபம், ஊஞ்சல் மண்டபம், நவராத்திரி மண்டபம் போன்ற மண்டபங் களை இங்குக் காணலாம். இச்சுற்றின் விதானங்களில் இராமாயணக் கதை ஓவியமாக எழுதப்பட்டிருக்கிறது. இவ்வோவியங்கள் விசயரங்க சொக்கநாதர் காலத்தவையாகத் தெரிகின்றன. எழுத்துகள் தெலுங்கு மொழியில் எழுதப்பட்டுள்ளன. மற்றொரு பகுதியில் பாகவதம் ஓவிய மாக எழுதப்பட்டிருக்கிறது. தற்போது இந்த வண்ண ஓவியங்கள் பொலி விழந்து காணப்படுகின்றன.

## பங்குனி உத்திர மண்டபம்

தாயாரும், பெருமாளும் ஆண்டிற்கு ஒருநாள் மட்டும் சேர்ந்து எழுந்தருளும் மண்டபம் பங்குனி உத்திர மண்டபம். இம் மண்டபத்தின் வழித் தூண்களில் இராமன், இலக்குவன், வீடணன், சுக்ரீவன், சாம்பவான் முதலியவர்களின் திருவுருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. ஆழ்வார் ஆசாரியரது திருவுருவங்களும் தூண்களில் காட்சி தருகின்றன.

இப்பங்குனி உத்திர மண்டபத்திலேயே தாயாருக்கு நடைபெறும் திருவாய்மொழி திருநாள்கள் பகல்பத்து, ஐந்து நாள்களும், இராப் பத்தாக ஐந்து நாள்களும் நடைபெறும். ஆழ்வார்கள் இத்திருநாள்களில் புறப்பாடு காணுவதில்லை. அதன் பொருட்டே ஆழ்வார்களைத் தூண் களில் நிலையாக இம் மண்டபத்தில் எழுந்தருளச் செய்துள்ளார்கள்.

தாயார் கோயிலின் வடக்குத் திருநடையில் வில்வ மரம் உள்ளது. கோயிலில் தலமரமாக இவ்வில்வ மரத்தைச் சொல்வர். அம்மரத்தைச் சுற்றி மேடை அமைக்கப்பட்டு அம்மேடையில் நாகர்கள் சிலைகள் பிரதிட்டை செய்யப்பட்டுள்ளன. வில்வ மரத்தின் கீழ் ஆமை உருவம் பொறிக்கப்பட்ட கல் ஒன்றும், அதன் எதிரில் மண் நிரம்பிய இடமும் உள்ளன. பிரும்மோற்சவங்களிலும் மற்றத் திருமுளைத் திருநாள் களிலும் திருமுளைக்கு 'மண் எடுத்தல்' என்னும் சடங்கு இவ்விடத்தில் நிகழ்வுறும். இம்மரத்தின் கீழ், இசுலாமியர் படையெடுப்பின்போது உற்சவத் தாயாரைப் புதைத்து வைத் திருந்தனர் என்று கோயில் ஒழுகு கூறும்.[63]

கருவறையுள், மூன்று தாயார் விக்ரகங்களைக் காணலாம். திருமேனியினாலான அரங்கநாயகித் தாயார் மற்றும் சுதை வடிவிலுள்ள திருமகள் இருவர். முதலில் இருப்பது உற்சவர் தாயாராகும். இக் கோயிலில் மூலவர் என்ற வகையில் தைலக்காப்பிட்ட திருமகளின் இருவிக்ரகங்களை இவ்வுருவின் பின்பகுதியில் காணலாம்.

இவ்விருவரில் ஒருவர் இசுலாமியர் படையெடுப்பு நிகழ்ந்த போது அவர்களிடம் அகப்படாவண்ணம் வில்வ மரத்தடியின் மண்ணில் சிலரால் புதைக்கப்பட்டார். படையெடுப்பு முடிந்த பின்னர்ப் புதைத்த இடத்தில் தேடிப்பார்த்தபோது அவ்வுருவம் அவர்களுக்குப் புலப்படாது போகவே வேறொரு தாயாரைக் கோயிலில் பிரதிட்டை செய்தனர். இவ்வாறு செய்த பின்னர். இசுலாமியர் படையெடுப்பின் போது பிள்ளைலோகாசார்யர் முதலியவர்களால் எடுத்துச் செல்லப்பட்ட நம்பெருமாள் (உற்சவர்) மீண்டும் கோயிலுக்கு வந்தபின்னர், இவ்வில்வ மரத்தினின்று முதல் தாயார் வெளிப்பட, அதனால் அவரையும் பழையபடி அவரது இடத்திலேயே பிரதிட்டை செய்தார்கள் என்று கோயில் ஒழுகு கூறும்.[64]

தாயார் தனது கோயிலிலிருந்து வெளியே வருவது கிடையாது. தாயாருக்கு நடக்கும் எல்லா விழாக்களும் அவரது கோயிலின் உள்ளேயே நடந்தேறும். இத் தாயாரை மக்கள் 'படி தாண்டாப் பத்தினி' என்று புகழ்கிறார்கள்.

நம்பெருமாள் ஆண்டுக்கு ஐந்து முறை தாயார் அரங்க நாச்சியார் கோயிலுக்கு எழுந்தருளுகிறார். தை மாதம் பூபதித் திருநாளின் ஏழாம் நாள் அன்று நவராத்திரி மண்டபத்தில் பெருமாள் உபய நாச்சிமார்களுடனும் திருமஞ்சனம் காண்கிறார். அவ் விழாவின் ஒன்பதாம் நாள் தேர்த் திருநாள் அன்று தேர் உலாக் கண்டபின், தேரினின்று இறங்கி இரு தேவியருடன் தாயார் கோயிலில் கதிரலங்கார உற்சவத்தின் போது காட்சி தருகிறார். பங்குனி மாதம் ஆதி பிரும்மாத் திருநாளின் ஏழாம் திருநாளின் போது பெருமாள் உபயநாச்சிமாருடன் எழுந்தருளி நவராத்திரி மண்டபத்தில் திருமஞ்சனம் கண்டருளுகின்றார்.

ஆண்டிற்கு ஒருமுறை அப் பங்குனித் திருநாள் 9ஆம் நாளன்று - உத்திரத்தன்று - தாயாரும் பெருமாளும் சேர்ந்து காட்சி தருகின்றனர். அன்றைய நாளில் இராமானுசரின் சரணாகதி கத்யம் சேவிக்கப் படுகிறது. அன்று நடு இரவில் அம்மண்டபத்தில் பெருமாளுக்கும் தாயாருக்கும் திருமஞ்சனம் நடைபெறுகிறது. சித்திரை மாதம் விருப்பன் திருநாள் ஏழாம் நாளன்று நவராத்திரி மண்டபத்தில் உபய நாச்சிமாருடன் வந்து திருமஞ்சனம் ஏற்றுக் கொள்கிறார்.

## கம்பர் மண்டபம்

தாயார் கோயிலின் எதிரில் கம்பர் மண்டபம் உள்ளது. நான்கு கால் கருங்கல் மண்டமாகும் இது. கம்பர் தனது இராமகாதையை இம்மண்டபத்தில்தான் அரங்கேற்றினார் என்பர். அரங்கேற்றிய ஆண்டு சாலிவாகன சகம் 807 என்று (கி.பி. 885) கூறுவர்.

இவ்வூரில் சிலர் கம்பரின் இராமாயணத்தைத் 'தெய்வக் காப்பியமன்று' என்று ஏற்க மறுத்ததாகவும், கம்பராமாயணத்தில் இரண்யன்வதைப் படலத்தை அரங்கேற்றும்போது, இம்மண்டபத்தின் அருகே இருக்கும் மேட்டழகிய சிங்கர் சிரக்கம்பம், கரக்கம்பம் செய்து தலையசைத்துப் புன்னகைத்தார் என்றும் அக்காட்சியைக் கண்ணுற்ற பின்னரே இவ்வூர் அறிஞர் பெருமக்கள் கம்பனின் காப்பியத்தை ஏற்றுக் கொண்டதாகவும் செவிவழிவந்த செய்தி ஒன்று கூறுகிறது.

## மேட்டழகிய சிங்கர்

அம்மேட்டழகிய சிங்கரின் மாடக்கோயில் 27 அடி உயரத்தில் அமைந்துள்ளது. மேட்டழகிய சிங்கர் உக்கிர நரசிம்மராக வீற்றிருக் கிறார். இவர் இரண்யனைத் தன் மடி மீது இருத்தித் தனது கரிய நகத்தால் அவன் உடலைக் கிழித்து, குடலை மாலையாகச் சார்த்திய வாறு காட்சித் தருகிறார். இக்கோயிலில் கம்ப ராமாயணத்தின் 'சிரித்தது செங்கட்சீயம்' என்ற பாடல் சலவைக் கல்லில் பொறிக்கப் பட்டுள்ளது. இக்கோயிலைச் சடாவர்மன் சுந்தரபாண்டியன் (1251 - 68)

கட்டினான் என்று தெரிகின்றது. திருமங்கை ஆழ்வார் கட்டியதாகக் கோயில் ஒழுகு கூறுகிறது. இம்மேட்டழகிய சிங்கரைப் பராசரபட்டர் தமது ஸ்ரீரங்க ராஜஸ்தவத்தில் பாடுகிறார்.[65]

## வேதாந்த தேசிகர் சன்னிதி

வடக்குப் புறத்தில் வேதாந்த தேசிகர் (கி.பி. 1268 - 1369) சன்னிதி மேற்கு நோக்கியவாறு அமைந்துள்ளது. இச்சன்னிதியில் ஹயக்கீரிவர் திருவுருவம் இருக்கிறது. ஹயக்கீரிவரை வழிபட்டு வேதாந்த தேசிகர் எல்லா சித்திகளையும் பெற்றார். அதனால் ஹயக்கிரீவர் திருவுருவம் இச்சன்னிதியில் உள்ளது.

மேட்டழகிய சிங்கர் சன்னிதிக்குத் தென்கிழக்கில் வாசுதேவப் பெருமாள் சன்னிதி உள்ளது. வாசுதேவர், நாச்சிமார் இவருடன் வடக்கு நோக்கியுள்ளார்.

## பெரியவாச்சான்பிள்ளை சன்னிதி

இவர் நாலாயிரத்திற்கு வியாக்கியானம் செய்துள்ளார். பாசுரப்படி ராமாயணம் இயற்றியுள்ளார். கிழக்கில் ஆயிரக்கால் மண்டபம் செல்லும் வழியில் பெரியவாச்சான்பிள்ளை சன்னிதி உள்ளது. இவர் சன்னிதியில் சிலர் அமர்ந்து கம்பராமாயணம் சுந்தரகாண்டத்தைப் பாராயணம் செய்வர். அவ்வாறு செய்யின் சொல்வன்மை வளரும் என்பது நம்பிக்கை

அடுத்து இத்திருச்சுற்றின் கிழக்குப் பகுதியில் தென்வடலாக ஆயிரக்கால் மண்டபம், சேஷராய மண்டபம், இராமானுசர் சன்னிதி ஆகியவை அமைந்துள்ளன.

## ஆயிரக்கால் மண்டபம்

ஆயிரக்கால் மண்டபம் 953 பெரிய தூண்களைக் கொண்டு அழகுற விளங்குகிறது. இப்பெரிய மண்டபத்தின் வடக்குப் பகுதியின்

நடுவில் ஒரு சிறிய மண்டபம் உள்ளது. இதைச் சங்கராந்தி மண்டபம் என்பர். தைத்திங்கள் முதல் நாள் பொங்கலன்று பெருமாள் உபயநாச்சிமாரோடு இம்மண்டபத்தில் எழுந்தருளித் திருப்பாவை சாற்றுமுறை கேட்பார். அது சமயம் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் உடன் எழுந்தருளுவார்கள். பட்டரின் ஸ்ரீரங்கராஜஸ்தவம் இம் மண்டபத்தைப் பற்றிக் குறிக்கிறது. இம்மண்டபத்தில் வைகுண்ட ஏகாதசித் திருவாய்மொழித் திருநாள் இராப்பத்தின் பத்து நாள்களும் பெருமாள் எழுந்தருளுவார். பெருமாளுடன் ஆழ்வாராசாரியர்களும் எழுந்தருளுவர். பெருமாள் திருமுன் அரையர்கள் பாசுரம் சேவித்து அபிநயம் செய்வர். பெருமாள் இம் மண்டபத்தில் ஒய்யார நடை கண்டு மகிழ்வார். ஆயிரக்கால் மண்டபத்தின் தெற்குப் பகுதியில் கனு மண்டபம் உள்ளது. இம்மண்டபத்தை முத்தரசன் குறடு என்றும் கூறுவர். தைப் பொங்கலின் மறுநாள் கனுவன்று பெருமாள் இங்கு எழுந்தருளுவார். இம்மண்டபத்திலிருந்து குதிரை மீதேறிப் பாரி வேட்டைக்குச் செல்வர். பரிவேட்டையை இவ்வூரார் பாரி வேட்டை என்று சொல்வர்.

அடுத்து மணல்வெளி, இதில் திருவாய்மொழித் திருநாளின் போது 47 தென்னை மரத்தூண்கள் நடப்பட்டு, பெரிய கொட்டகை போடப்படும். இம் மணல்வெளியிலும் பெருமாள் ஒய்யார நடை காண்பார்.

கோயில் ஒழுகின்படி ஆயிரக்கால் மண்டபம் பெருமாள் தேவன் கம்பய்ய தண்ட நாயக்கரால் (1263 - 95) கட்டப்பட்டது.[66] கல்வெட்டு கி.பி. 1396ஆம் ஆண்டில் அண்ணப்பர் சவுண்டப்பர் இம்மண்டபத்தைப் பழுது பார்த்தார் என்று குறிக்கிறது. இம்மண்டப அளவு 503 அடிக்கு 138 அடி. தூண்களின் உயரம் 19 அடி.

அடுத்து வெள்ளைக் கோபுரம். இதன் வழியாகக் கீழவாசலை அடையலாம். சேஷராய மண்டபம் விசயநகரக் கலைக்கு எடுத்துக் காட்டாக விளங்கும் மண்டபமாகும். இம்மண்டபத்தின் முகப்பில் எட்டுத் தூண்களிலும், முன்காலைத் தூக்கிப் பாய்ந்தெழும் குதிரை

களும் அவற்றின் மீது வேல், வாள் முதலிய ஆயுதங்களுடன் போர் வீரர்கள் அமர்ந்திருக்கும் நிலையில் செதுக்கப்பட்ட சிற்பங்கள் சிறந்த கலைநயத்தை விளக்குகின்றன. அக்குதிரைகளின் கால்களின் அடியில் காட்டு மனிதர்கள் அங்கிருந்த கொடிய விலங்குகளை எதிர்த்துப் போர்புரிகிறார்கள். இவைகளெல்லாம் இந்து மதம் தழைத்தோங்கப் பாடுபட்ட விசயநகரப் பேரரசனின் எழுச்சி நிலையைக் காட்டுகின்றன என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.[67]

அம்மண்டபத்தின் தென்கிழக்குப் பகுதியில் மற்றொரு கோதண்டராமர் சன்னிதி உள்ளது. தொடர்ந்து பிள்ளை லோகாசார்யர், பார்த்தசாரதி சன்னிதிகளும் கிழக்குப் புறத்தில் அமைந்துள்ளன.

## இராமானுசர் சன்னிதி

தென்கிழக்கு மூலையில் சீபாடியத்திற்கு உரை செய்தவரும், ஸ்ரீவைணவச் சித்தாந்தத்தை நிலை நிறுத்தியவரும் இக்கோயிலின் வழிபாட்டு விழா முறைகளைச் சீர்திருத்தியவரும், அனைவரும் அருள்பெற வேண்டித் தான் கேட்ட மறையைத் திருக்கோட்டியூர்க் கோபுரத்தின் உச்சியில் நின்று சொன்னவரும், திருவரங்கன் செல்வம் முற்றும் திருத்திப் பணி கொண்டவருமான, எம்பெருமானார் எனப்பெறும் இராமானுசர் எழுந்தருளியுள்ளார். இவர் ஓரிடத்தில் அவதரித்து, ஓரிடத்தில் தங்கியிருந்து, பிறகு மற்றோரிடத்தில் இறைவன் திருவடி எய்தினார். இதனைத் தானான திருமேனி, தானுகந்த திருமேனி, தமருகந்த திருமேனி என்பர்.

இராமானுசர் சன்னிதி உடையவர் சன்னிதி என்று வழங்கப் பெறும். இவ்விடம் ஒரு காலத்தில் இக்கோயிலின் வசந்த மண்டப மாக இருந்தது. திருநாடு அடைந்த இராமானுசரை இவ்விடத்தில் திருப்பள்ளிப் படுத்துமாறு பெருமாள் ஆணை பிறப்பிக்க, பக்தர்கள் அப்படியே செய்தார்கள் என்பர். திருப்பள்ளிப் படுத்தப்பட்ட இடத்தின் மேலே இராமானுசர் அமர்ந்த நிலையில் மூலவராகக் காட்சித் தருகிறார். எல்லா வைணவத் தலங்களிலும் உடையவருக்கு கோயில் உண்டு. ஆயின் திருவரங்கத் திருப்பதியில் 'தானான திருமேனியாக'

இருப்பதால் இதன் பெருமை தானே விளங்கும். பிரும்ம உற்சவ காலங்களில் சப்தாவரணத்தன்று பெருமாள், இராமானுசர் சன்னிதி வருவார். நம்பெருமாள் முன் உடையவர் கைத்தல சேவை காட்டிப் நம்பெருமாளுக்கு இளநீர் அமுது பண்ணுவார். அன்று திருவீதிகளில் நம்பெருமாள் எழுந்தருளும்போது இராமானுசநூற்றந்தாதியைத் திருச்செவி கேட்கும்வண்ணம் எவ்வித மேளதாள இசைகளுமின்றி ஓதப்படும்.

## கோயில் அலுவலகம்

அடுத்துக் கோயில் அலுவலகமும், அருங்காட்சியகமும் உள்ளன. அருங்காட்சியகத்தில் செப்பேடுகள், செப்புத் திருமேனிகள், வாள், வேல் போன்ற தொன்மைப் பொருள்கள் பொதுமக்கள் பார்வைக்காக வைக்கப்பட்டுள்ளன. இக்கட்டிடங்கள் தற்பொழுது கட்டப்பட்டவை.

## திருப்பாணாழ்வார் சன்னிதி

அதைத் தொடர்ந்து திருப்பாணாழ்வார் சன்னிதி உள்ளது. இச்சன்னிதியில் மூலவராக வீர அனுமார் உள்ளார். கோயில் ஒழுகின் கூற்றின்படி தென்னாயக்கர் என்பவரால் கி.பி. 1452இல் இவ்வனுமார் பிரதிட்டை செய்யப்பட்டு, பின் சிறிதுகாலம் கழித்துத் திருப்பா ணாழ்வார் உற்சவத் திருமேனி பிரதிட்டை செய்யப்பட்டது என்று தெரிகிறது. திருப்பாணாழ்வாரைச் சாத்தாத நரசிங்கதாசன் (கந்தாடை யாரின் சிஷ்யன்) நிறுவினான் என்று கோயில் ஒழுகு கூறுகிறது.[68]

## விட்டல்கிருஷ்ணன் சன்னிதி, தொண்டரடிப் பொடி ஆழ்வார் சன்னிதி

அடுத்து விட்டல்கிருஷ்ணன் சன்னிதி உள்ளது. கூரநாராயண ஜீயர் இக்கோயிலை நிறுவியதாகத் தெரிகிறது.[69] கோயில் ஒழுகும் இவர் பல சன்னிதிகளை இங்கு நிறுவினார் என்று கூறும்.[70] அதைத் தொடர்ந்து தொண்டரடிப் பொடியாழ்வார் சன்னிதி உள்ளது. அடுத்து கூரத்தாழ்வான், பட்டர், நஞ்சீயர் ஆகியோரது சன்னிதி அமைந்துள்ளது.

### கூரத்தாழ்வான் சன்னிதி

கூரத்தாழ்வான், இராமானுசரின் உற்ற தோழராக விளங்கியவர். இவரது வழிவந்தவர்களே பராசரபட்டர், வேதவியாசபட்டர் ஆவர். கூரத்தாழ்வான் சன்னிதியினின்று வெளியே வருவோமேயாயின் நான்முகன் கோபுரம், கோயிலின் தெற்குவாசல் வழி வெளியே வந்துவிடுகின்றோம். அதாவது ஆறாவது திருச்சுற்றான விக்கிரம சோழன் திருவீதியை வந்தடைகின்றோம்.

## 1:3:6 ஆறாம் திருச்சுற்று விக்கிரம சோழன் திருவீதி

இது உத்திரவீதி என்ற பெயரில் தற்பொழுது அழைக்கப் படுகிறது. இப்பகுதியிலிருந்து மக்கள் குடியிருப்புப் பகுதி தொடங்கும். கோயில்பகுதி முடிவடைந்து மக்கள்வாழும் பகுதிக்கு நாம் வருகின்றோம். இவ்வீதியை 'உள் திருவீதி' என்றழைத்திருப்பர். அது நாளடைவில் 'உத்திரவீதியாக' மாறியிருக்கலாம். இவ்வீதியில் தைத் திருநாளான பூபதித்திருநாளின்போது காலை, மாலை இருவேளை களிலும் பெருமாள் வாகனங்களின் மீதேறி எழுந்தருளுவார். விழாவின் 9ஆம் நாளன்று இவ்வீதியில் தைத்தேர் ஓடும்.

மற்றும் மாசித் திங்கள் தெப்பத் திருநாளின்போதும் பெருமாள் வாகனத்தில் இவ்வீதியில் உலா வருவார். கோயில் அர்ச்சகர்களும், தலத்தார்களும், கோயில் பணியாளர்கள் பலரும் பெருமளவில இவ்வீதியில் வாழ்கின்றனர். இராமானுசரின் மடம், மணவாளமா முனிகள் சன்னிதி, கந்தாடை ராமானுசமுனி மடம் போன்றவைகள இவ்வீதியில் உள்ளன.

## 1:3:7 ஏழாம் திருச்சுற்று கலியுகராமன் திருவீதி

கலியுகராமன் திருவீதி என்ற பெயரில், இன்று சித்திரை வீதி என்றழைக்கப்படும் ஏழாம் திருச்சுற்று உள்ளது. இவ்வீதிகளின் இரு புறத்திலும், குடியிருப்புகள் அமைந்து, மாட மாளிகை சூழ் திருவீதி யாகக் காட்சி தருகிறது. இதனை ராஜவீதி என்றும் அழைப்பர். நான்கு

புறமும் நான்கு கோபுரங்கள் அமைந்துள்ளன. இவ்வீதியிலும் அர்ச்சகர்களும், ஆசார்யர்களும் ஆங்காங்கு வாழ்கின்றனர்.

பங்குனி, சித்திரைத் திங்களில் நடைபெறும் பிரம்மோற்சவ விழாவின்போது இவ்வீதியில் பெருமாள் காலையும், மாலையும் வாகனத்தில் புறப்பாடு காண்பார். பங்குனி கோரதத் திருநாளும், சித்திரைத் தேர்த்திருநாளும் இவ்வீதியில் நடைபெறும். வேத ஆகம பாடசாலைகளும், நாலாயிர திவ்யப் பிரபந்தம் கற்பிக்கும் பள்ளிகளும் இவ்வீதியில் உள்ளன.

இவ்வீதியில் மாத்வரின் மடம் ஒன்றுள்ளது. இதற்கு முலுபாகல் மடம் என்று பெயர். இம்மடத்தில் வாழ்ந்த மாத்வர், பெருமாளை வணங்கி வழிபட்டுப் பாடல் இயற்றினார் என்று அறிகின்றோம்.

இவ்வேழு சுற்றுக்களையும் சூழ்ந்து அடையவளைஞ்சான் மதிற்சுவர் அமைக்கப்பட்டுள்ளது. இம்மதிற்சுவரைச் சோழன் மூன்றாம் குலோத்துங்கன் பழுது பார்த்தான் என்று தெரிகிறது. இச்சுவரைப் பற்றி ஈடு 36,000 படியில் வடக்குத் திருவீதிப்பிள்ளை குறிப்பிட்டுள்ளார்.[71] கோயில் ஒழுகு இம்மதிலை அண்ணப்பா உடையார் கட்டியதாகக் குறிப்பிடுகிறது.[72] இங்குள்ள இராயர் கோபுரம் பிற்கால நாயக்கர் கால அமைப்பை ஒட்டிய கோபுரமாக உள்ளது. முடிவடையா நிலையிலிருந்த இக்கோபுரம் இன்று அஹோபில மடத்து ஜீயர் 'அழகியசிங்கர் ஜீயரால்' ஆசியாவிலேயே மிக உயரமான கோபுரமாகக் கட்டப்பட்டுள்ளது. 235 அடி உயரமுடையதாக இக்கோபுரம் எழுப்பப்பட்டுள்ளது.

இவ்வடையவளஞ்சான் திருச்சுற்றில் தென்மேற்கு மூலையில் பாண்டியன் வல்லபதேவனால் கட்டப்பட்ட ஆண்டாள் கோயில் உள்ளது. இது வெளிஆண்டாள் கோயில் என அழைக்கப்படுகிறது. பெருமாள் பங்குனித் திருநாள் மூன்றாம் நாள் ஜீயபுரம் சென்று திரும்பும்போதும், ஆறாம் திருநாள் உறையூர் சென்று திரும்பும் போதும் வெளியாண்டாள் சன்னிதியில் ஆண்டாளோடு மாலை மாற்றிக் கொள்வார்.

திருவரங்கம் பெரியகோயிலின் இப்போதைய அமைப்பு இதுகாறும்கூறப்பட்டது. விழாக்கள் பற்றியும் அது தொடர்பான பழக்கவழக்கங்கள் பற்றியும் இவ்வாராய்ச்சியில் விரிவாகப் பார்க்க இருப்பதால், அவ்விழாக்கள் நடைபெறும் கோயில் மண்டபங்கள், சுற்றுப்புறங்கள் ஆகியவற்றின் அமைப்பினைச் சற்று விரிவாக அறிந்து கொள்ளுதல் இன்றியமையாததாகும்.

## 1:4 *திருச்சுற்றுகள் . . . ஓர் ஆய்வு*

பெரிய கோயிலின் ஏழு திருச்சுற்றுகட்கும் அமைந்த பெயர்களையும் அவற்றைக் கட்டியோர் யாவர் என்ற விளக்கங் களையும் கோயில் ஒழுகும், அதைத் தொடர்ந்த நூல்களும் கூறுகின்றன. வரலாற்று அடிப்படைகொண்டு நோக்கின் அவை ஒன்றுக்கொன்று முரண்பாடாக உள்ளன.

முதல் திருச்சுற்றினை தர்மவர்மா என்னும் சோழ மன்னன் அமைத்தான் என்றும் கூறப்படுகிறது. இவனைப் புராணச்சோழன் என்று குறிக்கின்றனர். ஆனால் தர்மவர்மா என்ற பெயர் வரலாற்றில் காணப்படாததாகும்.

இரண்டாம் திருச்சுற்றுக்கு இராசமகேந்திரன் திருச்சுற்று என்று பெயர். இப்பெயர் வரலாற்றுக்குட்பட்ட மன்னனின் பெயராகும். இவன் இரண்டாம் இராசேந்திரனால், இளவரசுப்பட்டம் கட்டப்பட்ட அவனது முதல் மைந்தன் என்றறிகிறோம். இவ்விராசமகேந்திரன், ஆகமமல்லனை முடக்காற்றில் புறமுதுகிட்டு ஓடும்படி செய்த பெருவீரன் என்று, அவன் கல்வெட்டுகள் உணர்த்தினும் அவனைப் பற்றிய வேறு செய்திகள் தெரியவில்லை.[73] ஆயினும் "பனுவலுக்கு முதலாய வேத நான்கிற் பண்டுரைத்த நெறிபுதுக்கிப் பழையர் தங்கள், மனுவினுக்கு மும்மடி நான் மடியாஞ்சோழன் மதிக்குடைக் கீழ் அறந்தளிர்ப்ப வளர்ந்தவாறும்" என்று கலிங்கத்துப் பரணியில் குறிக்கப்பட்ட மும்முடிச்சோழனே இராசமகேந்திரன் என்று கருத இடமிருக்கிறது.[74] அன்றியும் 'பாடரவத் தென்னரங்கமே யாற்குப் பன்மணியால் ஆடவரப்பாயல் அமைத்தோனும்' என்னும் விக்கிரம

சோழன் உலா[75] அடிகளால் இவன் திருவரங்கநாதரிடம் அன்பு பூண்டு, அப்பெருமானுக்குப் பொன்னாலும் மணியாலும் அரவணை ஒன்று அமைத்தான் என்பது அறியப்படுகின்றது. இவன் பெயரில் திருவீதி ஒன்று எடுப்பித்தான் என்றும் தெரிகிறது. இவனது காலம் 11ஆம் நூற்றாண்டாகும். இவன் இரண்டாம் திருச்சுற்று எடுப்பித்தான் எனின், மூன்றாம் திருச்சுற்று குலசேகரன் திருச்சுற்று எனப் பெயரிட்டு அவன் எடுப்பித்தான் என்றால் அவனது காலம் 8ஆம் நூற்றாண்டாகும். எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த இராசமகேந்திரன் இரண்டாம் திருச்சுற்றையும் கட்டினான் எனின் அது காலமுரண் ஆகிறது.

மீண்டும் நான்காம் திருச்சுற்றைத் திருமங்கை மன்னர் கட்டினார் எனின் அவரும் 8ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவராகக் கருதப்படுவதால் அங்கும் கால முரண் ஆகிறது.

ஐந்தாம் திருச்சுற்று 'அகளங்கன்' பெயரில் அழைக்கப் படுவதையும், ஆறாம் திருச்சுற்று 'விக்கிரமசோழன்' திருச்சுற்று என்று அழைக்கப்படுவதையும் வரலாற்றுக்கண் கொண்டு பார்க்கும் போது அங்கும் முரண்பாடுள்ளது.

அகளங்கன் என்னும் பெயர் முதலாம் குலோத்துங்கனுக்கு உரியது அன்று. அவனது மைந்தன் விக்கிரம சோழனுக்குத்தான் அப்பெயர் பொருந்தும். விக்கிரமசோழனுக்கு வழங்கிய சிறப்புப் பெயர்கள் இரண்டு. இவனுக்கே உரியவனவாய் வழங்கிய இரண்டு சிறப்புப் பெயர்கள் கல்வெட்டுக்களிலும் விக்கிரம சோழன் உலாவிலும் காணப்படுகின்றன. அவை, 'தியாக சமுத்திரம்', 'அகளங்கன்' என்பனவாகும். இம்மன்னன் தன் ஏழாம் ஆட்சியாண்டில் திருவிடை மருதூர் சென்றிருந்த போது, அந்நகரைச் சார்ந்த வண்ணக்குடி என்ற ஊரைத் தியாக சமுத்திர சதுர்வேதி மங்கலம் என்று பெயர் மாற்றித் திருவிடைமருதூர் கோயிலுக்கு இறையிலி நிலமாக அளித்தான் என்று அவ்வூர்க் கல்வெட்டொன்று கூறுகிறது.[76]

அகளங்கன் என்னும் சிறப்புப்பெயர் சயங்கொண்டாரது கலிங்கத்துப்பரணியில் காணப்படினும் அது குலோத்துங்கனுக்கு

வழங்கியதன்று. அது விக்கிரம சோழனுக்கே வழங்கிய சிறப்புப பெயரென்று கல்வெட்டுக்களால் நன்கு தெளிவாகிறது. கல்வெட்டுக் களில் குலோத்துங்கனுக்கு அப்பெயர் காணப்படவில்லை [77] ஒட்டக்கூத்தர் தனது 'விக்கிரமசோழன் உலாவில்' ஏழிடங்களில விக்கிரமனை அகளங்கன் என்று கூறியிருப்பது கொண்டு, அப்பெயர் இவனுக்கே சிறப்புப் பெயராக வழங்கியது என்பதை அறியலாம்

'எங்கோன் அகளங்கன் ஏழுலகும் காக்கின்ற செஙகோல கொடுங்கோல் சிலர்க்கென்றால்' என்று அவர் குறிப்பிடுவதால விக்கிரம சோழனே அகளங்கன் ஆவான்.[78] இவனது சிறப்புப் பெயரில் ஒரு திருச்சுற்றும், இயற்பெயரில் ஒரு திருச்சுற்றும் இவனே நிறுவினான் என்றும் கொள்வதே பொருத்தமுடையது. இவனது காலம் 12.ஆம் நூற்றாண்டாகும்.

ஏழாம் திருச்சுற்று கலியுகராமன் திருவீதி என்ற பெயரில் மாறவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1420) நிறுவியதாகக் கூறப்படுகிறது

இவ்வேழு திருவீதியின் பெயர்கள் ஒன்றுக்கொன்று முரண்பாடானதிலிருந்து, இப்பெயர்கள் பின்னர் வந்தவர்களால் இத் திருவீதிக்கு சூட்டப்பட்டிருக்க வேண்டும். அன்றி அவ்வீதிகளில் அவரவரர் காலங்களில் நிறுவிய மண்டபங்கள், சிறுகோயில்கள், சன்னிதி அமைந்த நிலை, அன்றி அவர்கள் மேற்கொண்ட திருப பணிகள் போன்ற செயல்களால், அவர்கள பெயர்கள் இத திருவீதிகளில் நிலைத்திருக்க வேண்டும்.

இராசமகேந்திரன் இரண்டாம் திருச்சுற்றில் திருபபணிகள் பல மேற்கொண்டான் என்று கோயில் ஒழுகு கூறுகிறது [79] இக்கோயிலின நடையில் தளம் அமைத்தான் என்றும் கூறுகிறது அது குறித்து இவன பெயர் இத்திருவீதிக்கு வழங்கப் பெற்றிருக்கலாம் இவன் திருச்சுற்று மதிலைக் கட்டினான் என்பதைவிடப் பழுதுபார்த்தான் என்று கொள்வதே பொருத்த முடையதாகும்.

11ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இவன், தம் காலத்திற்கு முந்திய 8ஆம் நூற்றாண்டைச் சார்ந்த குலசேகர மன்னன், திருமங்கை

மன்னர்களுக்கு முன் இம்மதிலைக் கட்டினான் என்று கூற வரலாறு இடம் தரவில்லை.

இராசமகேந்திரன் காலத்திற்கு முன்னர் வாழ்ந்த குலசேகர மன்னன் மூன்றாம் திருச்சுற்றையும் அதே நூற்றாண்டைச் சார்ந்த திருமங்கை மன்னன் நான்காம் திருச்சுற்றையும் திருத்திப் பணிமேற் கொண்டிருக்கலாம்.

ஐந்தாம், ஆறாம் திருச்சுற்றுகளை விக்கிரம சோழன் திருத்திப் பணி மேற்கொண்டதால் அவன் சிறப்புப் பெயரில் ஐந்தாம் சுற்றும் இயற்பெயரில் ஆறாம் சுற்றும் திருச்சுற்றுகளாக அமைந்திருக்கலாம். அன்றி கோயில் ஒழுகு குறிப்பிடுவது போல ஐந்தாம் திருச்சுற்று விக்கிரமசோழ அகளங்கன் வீதி என்றும், ஆறாம் திருச்சுற்று திருவிக்கிரமன் வீதி என்றும் பெயரிருப்பது பொருத்தமாக இல்லை. திருவிக்கிரம சோழன் என்பவன் சோழர் வரலாற்றில் கூட இல்லாதவ னாகின்றான்.

பின்னர் பதினைந்தாம் நூற்றாண்டைச் சார்ந்த மாறவர்மன் வீரபாண்டியன் தனது சிறப்புப் பெயரில் கலியுகராமன் திருவீதியைக் கட்டினான் என்பது கூடப் பொருத்தமாக இல்லை. வரலாற்றில் பின் காலத்தவனாகிய அவன் ஏழாம் திருச்சுற்றுக்கு உரியவனாக ஆகலாமே தவிர, அவன்தான் இம்மதிலைக் கட்டினான் என்று உறுதியாகக் கூற இயலவில்லை.

அன்றி, இக்கோயிலின் ஏழு மதில்களும் வைணவர்கள் கூற்றுப் படி தொன்மையாக அமைந்திருக்க வேண்டும். வைணவத் தலங்கள் 108இல் தானே தோன்றி அமைந்தவை திருவரங்கம், ஸ்ரீமுஷ்ணம், திருமலை, சாளக்கிராமம், நைமிசாரண்யம், வானமாமலை என்னும் தோத்தாத்ரி, புஷ்கரம், பத்ரிநாத் என்பன.[80]

## 1:5 தீர்த்தங்கள்

தலம், தீர்த்தம், மூர்த்தி என முச்சிறப்புக்களையும் உடையது திருவரங்கமாகும். புண்ணியத்துறைகளில் நீராடுதல் வழிபாட்டில் தனி

இடம் பெறுவதாகும். தீர்த்தங்கள் பெருமையைச் சிலப்பதிகாரம் புகழ்ந்து கூறுகிறது. இக்காப்பியம் ஐவகை மன்றங்கள் பற்றிக கூறும்போது அதிலுள்ள ஒரு தீர்த்தத்தில் மூழ்கி எழுந்தால் உடல குறை நீங்கிநலம் பெறுவர் என்கிறது.[81]

காவிரிப்புராணமும், துலாக்காவிரி மகாதமியமும், ஸ்ரீரங்கம கோயில் மகாத்மியமும்[82] திருவரங்கம் திருக்கோயிலைச சாாநது ஒன்பது தீர்த்தங்கள் உள்ளன எனக் கூறுகினறன அத்தீர்த்தங்களின் விவரங்களை அறிஞர்கள் கீழ்க்கண்டவாறு கூறுகின்றனா

1. சந்திரபுட்கரணி - திருவரங்கம் கோயிலுள் நானகாம திருச்சுற்றில் உளளது.
2. வகுள தீர்த்தம் - இராணி மங்கம்மாள் மண்டபம, சென்னை - திருச்சி நெடுஞ்சாலை திருவானைக்காவல் வெளிப்பிரகார மதிலுக்கு வடக்கில் உளளது
3. சம்பு தீர்த்தம் - திருவானைக்கோயிலுள் உள்ளது
4. அசுவ தீர்த்தம் - திருவரங்கம் பெருந்துகள் செல்லும் வழியில் அமைந்துள்ளது.
5. பலாச தீர்த்தம் - ஜீயபுரம் ஆஸ்தான மணடபம
6. புன்னாக தீர்த்தம் - மேலூர் விருட்சி மண்டபம்
7. பில்வ தீர்த்தம் - திருவாசி, திருச்சி, சேலம் நெடுஞ சாலை. இதுவே குணசீலமாக மாறி யிருக்கலாம்.
8. கதம்ப தீர்த்தம் - பிச்சாண்டார் கோயில், உத்தமர் கோயில் கிழக்கில்
9. ஆம்பர தீர்த்தம் - திருச்சி - இலால்குடி பேருந்துப் பாதையில் தாளக்குடி ஆஸ்தான மண்டபம்

சந்திர புட்கரணியைச் சுற்றி எட்டுத் தீர்த்தங்கள் விளங்குகின்றன அதுவன்றி

10. தென்திருக்காவிரி - அம்மாமண்டபம் படித்துறை
11. வடதிருக்காவிரி - கொள்ளிடம் திருமங்கை மன்னன் படித்துறை. ஆகியவையும் இங்கு தீர்த்தங்களாகக் கருதப்படும்.

## சந்திரபுட்கரணி

இதன் வரலாற்றை ஸ்ரீரங்க மஹாத்மியம் விளக்கும். இத் தீர்த்தம் திருவரங்கம் கோயிலின் நான்காம் திருச்சுற்றில் வடக்குப் பகுதியில் அமைந்துள்ளது. இத்தீர்த்தம் வட்ட வடிவமான குளமாகும். 25 மீட்டர் சதுரப்பரப்பளவில் அமைந்துள்ளது. இதன் நீர்மட்ட ஆழம் 8 மீட்டர். இதுனுள் வற்றாத நீரூற்றுக் கேணிகள் உள்ளன.

பங்குனித் திருநாளின் கடைசி நாளில் வடதிருக்காவிரியில் 'செல்வர்' அவபிரதத் தீர்த்தவாரி (நீராட்டம்) கண்டருளுவர். இச்சந்திர புட்கரணியில் சித்திரைவிருப்பன் திருநாள், ஐப்பசி ஊஞ்சல் திருநாள் ஆகிய திருநாள்களின் கடைசி நாளில் 'செல்வர்' தீர்த்தவாரி காண்பார். வசந்தத் திருநாளில் பெருமாளின் ஸ்ரீசடாரியே இங்கு தீர்த்தவாரி காணும்.

## வகுள தீர்த்தம்

இத்தீர்த்தம் உள்பட மற்ற தீர்த்தங்களின் திருவரங்கனின் திவ்யப் பாதுகையான ஸ்ரீசடாரியே தீர்த்தவாரி காணும். பங்குனித் திருநாள் 8ஆம் நாளில் பெருமாள் இங்கு தீர்த்தவாரி கண்டருளி வந்தார். தற்போது இவ்வாறு நடைபெறுவதில்லை.

## சம்பு தீர்த்தம்

ஒவ்வொரு வெள்ளிக்கிழமையிலும், பங்குனித் திருநாளின் எட்டாம் திருநாளில் பெருமாள் இங்கு எழுந்தருளித் தீர்த்தவாரி காண்பார்.

ஆனால் தற்பொழுது நடைமுறையில் இல்லை. சைவ, வைணவ வேறுபாடு காரணமாகப் பல ஆண்டுகளாகப் பெருமாள் இத்தீர்த்தத் திற்கு எழுந்தருளவில்லை.

### அசுவ தீர்த்தம்

பங்குனித் திருநாளின் எட்டாம் நாளில் பெருமாள் தீர்த்தவாரி கண்டருளுதல்.

### பலாசதீர்த்தம்

பங்குனித் திருநாள் மூன்றாம் நாள் ஜீயபுரம் ஆஸ்தான மண்டபத்துக்கு எழுந்தருளும்போது தீர்த்தவாரி நடைபெறும்

### புன்னாக தீர்த்தம்

பங்குனித் திருநாள் மூன்றாம் நாள் ஜீயபுரம் எழுந்தருளும் போது இத்தீர்த்தத்தில் தீர்த்தவாரி நடைபெறும். இலட்சுமி காவியத்தில், பங்குனி இரண்டாம் திருநாளன்று இத்தீர்த்தத்தில் பெருமாள் தீர்த்தவாரி காண்பார் என்றிருக்கிறது.

### பில்வ தீர்த்தம்

ஜீயபுரம் செல்லும் திருநாளில் கொள்ளிடத்தைத் தாண்டிய பின் இவ்விடத்தில் தீர்த்தவாரி நடைபெறும். ஆயின் இப்பொழுது நடைமுறையிலில்லை.

### கதம்ப தீர்த்தம்

மாசி மாதம் தெப்பத் திருநாள் 5ஆம் நாளில் தாளக்குடி செல்லும் வழியில் இங்குத் தீர்த்தவாரி காண்பார். இங்கும் நம்பெரு மாள் எழுந்தருள்வது தற்பொழுது நடைமுறையிலில்லை.

## ஆம்பர தீர்த்தம்

மாசி மாதம் தெப்பத் திருநாளில் தாளக்குடி ஆஸ்தான மண்டபத்தில் எழுந்தருளும்போது இங்கு தீர்த்தவாரி காண்பார்.

இந்த எட்டு தீர்த்தங்கள் தவிர சூரியபுட்கரணி என்னும் குளம் கோயிலுள் உள்ளது. நான்காம் திருச்சுற்றுள் கருடாழ்வார் கோயிலுக்குக் கிழக்கில் இது அமைந்துள்ளது. தற்போது நீர்வற்றிப் பேணுவாரற்ற நிலையில் உள்ளது. இங்கு நம்பெருமாள் எழுந்தருள்வது நடைமுறையிலில்லை.

## தென்திருக்காவிரி — அம்மாமண்டபம் படித்துறை

'காவிரி வந்து அடி தொழும் சீரங்கமே[83] என்று பெரியாழ்வாராலும் 'தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும் கருமணி'[84] என்று குலசேகராழ்வாராலும், 'கங்கையிற் புனிதமாய காவிரி'[85] என்று தொண்டரடிப்பொடியாழ்வாராலும் போற்றப்படும் காவிரி, திருவரங்கப் பெருமாளின் தேவியர்களில் ஒருவராகக் கருதப்படுகிறார். ஆடிப்பெருக்குத் திருநாளின்போது நம்பெருமாள் இங்கு எழுந்தருளிக் காவிரியில் குங்குமம், தாலி, பொட்டு, புடவை, மலர்மாலை முதலியவற்றை திருமணப் பொருளாகச் செலுத்துகிறார்.

இங்கு ஆடிப்பெருக்கு, சித்திரை முழுநிலவு ஆகிய திருநாள்களில் நம்பெருமாள் எழுந்தருளுவார். அப்பொழுது நம்பெருமாளின் சடாரிக்குத் தீர்த்தவாரி நடைபெறும்.

## வடதிருக்காவிரி—கொள்ளிடம் திருமங்கை மன்னன் படித்துறை

பங்குனித் திருநாள் கடைசி நாளில் கொள்ளிடத்திற்குச் சென்று நீராட்டம் பெறுவார். இங்கு ஆண்டுதோறும் சமயபுரம் மாரியம்மன் அரங்கநாதன் உடன் பிறந்த தங்கை என்ற முறையில் வருகை புரிவார். அப்போது தம் கோயிலிலிருந்து சீர்வரிசைகள் இம் மாரியம்மனுக்கு

அனுப்புவார். ஆண்டுதோறும் தைத்திங்கள் முழு நிலவன்று மாரி யம்மன் இக்கரையில் எழுந்தருளுவார்.

## தெப்பக்குளம்

இக்கோயிலின் மேற்குப் பகுதியில் ஏழு திருச்சுற்றிற்கும் அப்பால் இத்தெப்பக்குளம் 625 மீட்டர் சதுரப்பரப்பில் அமைந்துள்ளது. மாசி மாதம் நடைபெறும் தெப்பத்திருநாள் இத்தெப்பக்குளத்தில் நடைபெறும். கூரநாராயணஜீயர் இத்தெப்பக் குளத்தை அமைத்தார் என்று கோயில் ஒழுகு கூறும்.

## திருக்குறளப்பன் (வாமனர்) சன்னிதி

கோயிலின் தெற்குவாயிலில் இராயகோபுரம் அடையவளைந்தான் திருச்சுற்றின் அருகில் திருக்குறளப்பர் சன்னிதியைக் காணலாம். இக்கோயில் இங்குள்ள சுற்றுப்புறக்கோயில்களுள் மிகப் பழமை யானது. இது ஒருகாலத்தில் சந்தியாமடம் என்னும் பெயரில் விளங்கிவந்ததாகவும், பெருமாளின் ஆணையின்பேரில் நம்மாழ்வார் ஆழ்வார் திருநகரியிலிருந்து திருஅத்தியயனத் திருநாளுக்கு எழுந் தருளிய போது இம்மடத்தில் தங்கினார் என்றும் மரபுவழிச் செய்தி கூறுகிறது. நம்மாழ்வார் திருவுருவச் சிலையும், அவரை ஆழ்வார் திருநகரியினின்று அழைத்து வந்த மதுரகவியாழ்வார் திருவுருவச் சிலையும் இங்கு நன்னிலையில் உள்ளன

## சிங்கப்பெருமாள் சன்னிதி (காட்டழகியசிங்கர்)

கோயிலின் கீழ்வாசலின் கீழ்ப்புறத்தில் சிங்கப்பெருமாள் சன்னிதி அமைந்துள்ளது. இச்சன்னிதியின் வெளிப்பிரகாரத்தில் உள்ள தோட்டத்தில் உள்ள வன்னிமரத்தடியில் விசயதசமியன்று நம்பெருமாள் அம்பு போட்டுத் திரும்புவார்.

## 1:6 கோபுரங்கள்

'கோ, புரம்' என்னும் இரு சொற்கள் கோபுரம் என்னும் ஒரு சொல்லாக அமைந்தது. மக்கள் உள்பட எல்லா உயிரினங்களும்

பசுக்கள் எனக் குறிக்கப்படும். பதி எனக்குறிக்கப்பெறும் இறைவனை அக்'கோ'க்கள் அடைவதற்குரிய வாயில் (வழி) கோபுரவாசல் என்ற ஒரு கருத்துண்டு. கோபுரத்தின் பல்வேறு சிறப்புகளைக் குறித்து 'கோபுர தரிசனம் கோடி புண்ணியம்' என்னும் சான்றோர் வாக்கு ஓர் அறிவுரையாக அமைந்துள்ளது. திருவரங்கம் கோயிலில் இருபத்தோரு கோபுரங்கள் உள்ளன.

இரண்டாம் திருச்சுற்றில் தெற்கு நோக்கி ஒரு கோபுரவாசல் அமைந்துள்ளது. மூன்றாம் திருச்சுற்றில் தெற்குப் பகுதியிலும் வடக்குப் பகுதியிலுமாக இரண்டு கோபுரங்களும், நான்காம் திருச் சுற்றில் தெற்குப் பகுதியிலும் வடக்குப் பகுதியிலுமாக இரண்டு கோபுரங்களும், ஐந்தாம் திருச்சுற்றில் தெற்கு, வடக்கு மற்றும் கிழக்குப் பகுதியில் மூன்று கோபுரங்களும் உள்ளன. ஆறாம் திருச்சுற்றிலும், ஏழாம் திருச்சுற்றிலும் நான்கு திசைகளிலும் கோபுரங்கள் உள்ளன. வெளிச்சுற்றில் தெற்குப்புறத்தில் இராயகோபுரமும் மற்ற மூன்று புறத்திலும் நிறைவு பெறாத கோபுரங்களும் அமைந்துள்ளன.

இரண்டாம் திருச்சுற்று தெற்கு நோக்கியுள்ள கோபுரவாசல் 'நாழி(கை)கேட்டான் வாசல்;' மூன்றாம் திருச்சுற்று தெற்கு கோபுரம் 'ஆரியப்பட்டாள்' வாசல்; இதன் வடக்குப்புறம் பரமபத வாசல்; நான்காம் திருச்சுற்று தெற்குக் கோபுரம் ஆலிநாடன் திருவீதிக் கோபுரம் (கார்த்திகை கோபுரம்); வடக்குப் பகுதி ஐந்துகுழி மூன்று வாசல் கோபுரம்; கிழக்குப்புறம் தவுட்டரவாசல் கோபுரம்; ஐந்தாம் திருச்சுற்று நான்முகன் கோபுரம்; தெற்குப் புறத்திலும், தாயார்சன்னிதி வடக்குவாசல் கோபுரம் வடபுறத்திலும், கிழக்குப் புறத்தில் அகளங்கன் வெள்ளைக் கோபுரமும், ஆறாம் திருச்சுற்றில் தெற்கில் கட்டை கோபுரமும், வடக்கில் ஒரு கட்டை கோபுரமும், ஏழாம் திருச்சுற்றில் தெற்கில் சித்திரை வீதிக் கோபுரமும், மேற்கில் தலையாரிக் கோபுரமும், வடக்கில் ஒரு கட்டைக் கோபுரமும், கிழக்கில் கலியுகராமன் கோபுரமும் உள்ளன.

ஏழு திருச்சுற்றுகளையும் வளைத்து மதில் சூழ்ந்துள்ளது. இதில் நான்கு வாசல்களிலும் முடிக்கப்படாத மொட்டைக் கோபுரங்கள் இருந்தன. இதன் தெற்குப் புறத்தில் ஆசியாக் கண்டத்தில் மிக உயர்ந்த

கோபுரமான இராய கோபுரம் தற்பொழுது நிறுவப்பட்டுள்ளது. அச்சுதராயரால் (கி.பி. 1530 - 1542) கட்டப்பட்டு, ஆட்சி மாறியமையால் முழுமை அடையாதிருந்த இக்கோபுரம் அகோபில மடம் அழகிய சிங்க ஜீயரால் இன்று முழுமை பெற்றது.

## 1:7 ஆழ்வார்கள் கண்ட அரங்கம்

முதலாழ்வார்கள் என்று போற்றப்படும் பொய்கையார், பூதத்தார், பேயார் ஆகியோர் மூவரும் 'கருவரங்கம், திருவரங்கம், நீளரங்கம், தலையரங்கம், தென்னரங்கம், தேனார் திருவரங்கம்' என்று தமது முதல், இரண்டு, மூன்றாம் திருவந்தாதிகளில் இப்பெரிய கோயிலைக் குறிப்பிட்டுள்ளனர்.[86]

கருவரங்கம் என்று குறிப்பிட்டது இறைவன் கோயில் கொண்டுள்ள கருவறையையும், அங்கு எழுந்தருளியுள்ள இறைவனின் நீல நிறத் தோற்றத்தையும் எனக் கொள்ளலாம். நீளரங்கம் என்பது நீண்ட பெரிய பரப்பையுடைய அரங்கம் என்பதாம். தலையரங்கம, இவ்வூர் மற்றத் திருப்பதிகளுக்கு எல்லாம் தலைமை பெற்றமையினை உணர்த்துவதாகும். தென்னரங்கம் என்பது தென் திசை நோக்கிப் பள்ளிக் கொண்டு வீற்றிருப்பதனைத் தெரிவிப்பதாகும். இவ்வாறு திருவரங்கத்தின் தொன்மையினையும், தலைமையினையும், பரப்பினையும், திசையினையும் தம் பாசுரங்களில் சுட்டிக் காட்டியுள்ளனர்.

திருமழிசை ஆழ்வார், 'பண்டரங்கம், அரங்கத்து அரங்கம், ஸ்ரீரங்கம், ரங்கம்' என்ற சொற்களைத் தமது திருச்சந்தவிருத்தத்தில் கூறுகின்றார்.[87] பண்டரங்கம் என்பது இத்தலத்தின் தொன்மை பற்றிச் சுட்டியதாகும். அரங்கத்து அரங்கம் என்பது இத்தலத்தின் தொன்மை பற்றிச் சுட்டியதாகும். அரங்கத்து அரங்கம் என்பதில் முதல் அரங்கம இவ்வூரைப் பற்றியும் இரண்டாவது அரங்கம் இங்கு குடி கொண்டுள்ள பெருமாளையும் குறிக்கும். ஸ்ரீரங்கம் என்பது பெருமை பெற்ற அரங்கமாயிற்று. எட்டாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், தமிழ்ப் பெயரும், வடமொழிப் பெயரும் விரவிவந்த காலம். அது குறித்தே

ஸ்ரீரங்கம், ரங்கம் என்ற சொற்கள் இப்பாசுரங்களில் இடம் பெற்றிருக்கலாம்.

தொண்டரடிப் பொடியாழ்வார் 'அரங்கமா நகருளானே' என்று குறிப்பிடுவதற்கு அரங்கம் என்ற ஊரில் எழுந்தருளியுள்ள பெருமானே என்று பொருள் கொள்ளலாம். 'தென்னரங்கம்' என்று இவ்வாழ்வாரும் மற்றும் திருமங்கையாழ்வார், திருப்பாணாழ்வார் ஆகியோரும் குறிப்பர்.[88]

திருமங்கையாழ்வார் 'பாற்கடலரங்கம்'[89] என்று குறிப்பது காவிரியாற்றைப் பாற்கடலாக உவமிப்பதாம்.

நான்முகன் திருவந்தாதி, 'நாகத்தணை அரங்கம்' என்றும், 'பாற்கடல் கிடக்கும் ஆதிநெடுமால்' என்றும் குறிப்பிடுகிறது.[90] நாச்சியார் திருமொழி 'நல்லவர்கள் வாழும் நளிரரங்க நாகணையான்' என்று குறிக்க,[91] குலசேகரர் 'அரவரசப்பெருஞ் சோதி, திருவரங்கப் பெரு நகருள்'[92] என்று குறிக்கின்றார். 'திருவரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும் அணியரங்கன், அரவின் அணைமிசை'[93] என்றும் கூறக் காண்போம். 'தென் திருவரங்கம்'[94] என்று திருமங்கையாழ்வாரும் நம்மாழ்வாரும் குறிப்பர்.

இவ்வாறு அரங்கனையும், அரங்கத்தையும் பல்வேறு பெயர் கொண்டு ஆழ்வார்கள் அருளிச் செய்துள்ளனர். இவ்வரங்கனைச் சூழ்ந்து அழகான மாலை போல் ஓடும் காவிரியின் அழகினை ஆழ்வார்கள் 'சங்கினோடு மணியும் கொழிக்கும் புனல் காவிரி',[95] 'பொன்னிசூழ் அரங்கமே'[96] 'பொன்னிசூழ் திருவரங்கம்'[97] 'செங்கயல்கள் விளையாடும் காவிரி நீர் சூழ்ந்த அரங்கம்'[98] 'கங்கையிற் புனிதமாய காவிரி'[99]

என்று பலவாறு சிறப்பித்துப் புகழ்கின்றனர்

இந்நகரின் புனல் தன்மையினையும், சோலையின் சிறப்பினையும், வயலின் சிறப்பினையும் சொல்லநினைத்த ஆழ்வார்கள், 'அந்திபோலும் நிறத்தார் வயல்சூழ் தென்னரங்கமே'[100] 'அணியார் பொழில் சூழ்

அரங்க நகரப்பா'[101] 'சேலுகளும் வயல்புடை சூழ் திருவரங்கத் தம்மானை' 'மெய்ம்மையை விரிந்த சோலை வியன் திருவரங்கம்மேய' 'சேலார்ந்த நெடுங்கழனி சோலை சூழ்ந்த திருவரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும் செழுந்தடம் புனல் சூழ் திருவரங்கத்தாய்'[102] 'பொன்னலர்ந்த நறுஞ் செருந்திப் பொழிலினூடே புனலரங்க மூர் என்று'[103] 'பொருகயற்கண் நீரரும்பப் புலவி தந்து புனலரங்கமூர என்று' செங்கயல் பாய் நீர்த் திருவரங்கத்தாய்'. 'தண் புனல் சூழ் திருவரங்கத்தாய்'. 'நல்தேனும், பாலும் கலந்தன்னவர் சேர் தென்னரங்கமே'[104] 'சோலை சூழ்ந்த அரங்கம்' என்றும் வாழ்த்திப் பாடுகின்றனர். 'வண்டு வாழ் பொழில் சூழ் அரங்கநகர் மேய அப்பனை' 'மதுரமா வண்டு பாட மாமயில் ஆடரங்கத்து எம்மான்' என்பார் திருப்பாணாழ்வார்.[105]

இவ்வூரின் மதில் அழகினைப் பாடப் புகுங்கால் 'மசசணிமாட மதிளரங்கர்', 'திண்ணார் மதில் சூழ் திருவரங்கச் செல்வனார' என்றும் புகழ்கின்றனர்.[106]

'என்னரங்கத்தின்னமுதர்', 'பெண்ணாளன் பேணும் ஊர பேரரங்கமே,[107] 'செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார'[108] 'ஆராமம் சூழ்ந்த அரங்கம்'[109] என்றும் அரங்கத்தையும் அரங்கனையும் பொருளால் வைத்துப் பாடினர்.

## 1:7:1 பெருமானின் தோற்றம்

திருவரங்கப் பெருமானார் தென்திசை நோக்கிப் பள்ளி கொண்டிருப்பதை 'தென்திசை இலங்கை நோக்கி'[110] அவர் விடணனுக்கு அருள் செய்தவாறு இருப்பதாகக் கூறினர்

அவருடைய திருவரங்கத் தோற்றத்தை கூறும்போழ்து, 'குணதிசை முடியைவைத்துக் குடதிசை பாதம் நீட்டி, வடதிசை முதுகு காட்டி, தென்திசை இலங்கை நோக்கி'[111] அவர் அரிதுயில் கொண்ட காட்சியை இன்று காண்பது போன்று அன்றே விவரித்தனர்.

இவருடைய கண், காது, வயிறு போன்றவையின் அழகினை நாச்சியார் திருமொழி விளக்கக் காண்கிறோம். 'என்னரங்கத் தின்னமுதர் குழலகர், வாயழகர், கண்ணழகர், கொப்பூழில் எழுகமலப் பூவழகர்' என்பார். [112]

'மின்னிலங்கு திருவுருவும் பெரிய தோளும், கரிமுனிந்த கைத்தலமும், கண்ணும் வாயும் தன்னலர்ந்த நறுந்துழாய் மலரின் கீழே தாழ்ந்திலங்கு மகரம் சேர் குழையும் காட்டி' [113] திருவரங்கநாதரின் திருக்கோலத்தைத் திருநெடுந்தாண்டகத்தில் திருமங்கையாழ்வார் விளக்குகிறார். 'ஒரு கையில் சங்கு, ஒரு கை மற்றாழி ஏந்தி, உலகுண்ட பெருவாயரிங்கே வந்து'[114] என்று அவர் கையில் ஏந்தியுள்ள ஆயுதத்தைக் கூறுகின்றார்.

திருப்பாணாழ்வார் 'கையினார் சுரி சங்கனலாழியர், நீள் வரை போல், மெய்யனார், துளப விரையார், கமழ் நீள் முடியெம் ஐயனார்' [115] என்று திருவரங்கப்பெருமாளின் நீண்ட முடியையும், பீதாம்பரத்தை யும் வருணிக்கின்றார்.

பெருமாளின் சங்கு, சக்கரத்தைத் திருவாய்மொழியில் 'சங்கு சக்கரங்களென்றே கைகூப்பும்' என்பார் நம்மாழ்வார், இவரே 'காலச்சக்கரத்தை' ஏந்தியவரென்றும், 'வெய்யவாள், தண்டு, சக்கரம், வில் ஏந்தும் விண்ணோர் முதல்' என்றும் [116] கூறக் காண்கிறோம்.

திருமகளைப் பெருமாள் மார்பில் வைத்திருத்தலையும், மற்றும் நிலமகளையும், ஆய்மகளையும் உடன்பெற்று இருத்தலையும், நம்மாழ்வார் 'என்திருமகள் சேர் மார்பனே' என்றும் 'நிலமகள் கேள்வனே', 'ஆய்மகள் அன்பனே' என்றும் கூறுவர். [117]

பெருமாளது அழகிய வடிவினைக் குலசேகரர் 'கோலார்ந்த நெடுஞ்சார்ங்கம் கூனற் சங்கம், கொலையாழி கொடுந்தண்டு, கொற்ற ஒள்வாள், காலார்ந்த கதிக்கருடன் என்னும் வென்றிக் கடும்பறவை இவையனைத்தும் புறஞ்சூழ்காப்ப'[118] என்று கூறுகின்றார். இவர் நிறம் கருமை என்பதனைக் 'கடல் விளங்கு கருமேனியம்மான்' [119] என்பார்.

அரங்கநகரில் 'தொண்டரடிப்பொடி ஆட நாம்பெறில்' [120] என்று அடியவர்கள் இந்நகரில் ஆடிப்பாடித் தொண்டு மேற்கொண்டமையைக் குலசேகரர், 'அரங்கன் கோயில் திருமுற்றம் சேறுசெய் தொண்டர் சேவடிச் செழுஞ்சேறென் சென்னிக் கணிவனே' [121] என்ற பாசுரத்தில் பெருமாளது அணியரங்கத் திருமுற்றம் அடியவர்கள் சூழ்ந்தமையால் சேறாயிற்று என்றும், அச்சேற்றினை என் சென்னியில் அணிவேன் என்றும் குலசேகராழ்வார் கூறக்காண்கின்றோம்.

திருவரங்கப் பெருமானைத் 'அந்தமிழினபப் பா' [122] என்று தமிழாகக் கண்டவர்கள் ஆழ்வார்கள்.

## 1:8 திருவரங்கத்தின் தனிச் சிறப்பு

வைணவத் தலங்கள் 108 என்பர். அவற்றுள் தலைமை பூண்டு பெரியகோயில் என்று விளங்கும் சிறப்பு திருவரங்கத்திற்குண்டு

## 108 திருப்பதிகளைப் பற்றிக் கிடைத்த நூல்கள்

1. 108 திருப்பதிக்கோவை - திருக்குருகைப் பெருமாள் கவிராயர்
2. 108 திருப்பதிப் பெருமாள் கோவை - ஆசிரியர் பெயர் தெரியவில்லை
3. நாலாயிரப் பாசுரப்படி 108 திருப்பதிக்கோவை - வங்கிப்புரத்தாச்சி
4. 108 திருப்பதி அந்தாதி - பிள்ளைப்பெருமாள் அய்யங்கார்
5. 108 திருப்பதித் திருப்புகழ் - குரவை இராமானுசதாசர்
6. 108 திருப்பதிக் கலித்துறை அந்தாதி - ஆசிரியர்பெயர்தெரியவில்லை
7. விஷ்ணுஸ்தல மஞ்சரி - கோ. பட்டாபிராம முதலியார்
8. 108 திவ்யதேச யாத்ரா ப்ரபாவ சந்திரிகா - ஆசிரியர் பெயர் தெரியவில்லை

இவற்றுள் முதல் மூன்று நூல்களும் பழமையானவை. இவை சிறிய நூல்கள். மூன்றாவது நூலான பாசுரப்படி 108 திருப்பதிக்

கோவை என்னும் நூலின் இறுதியில் "சோழ மண்டலம் நாற்பத்தி ரண்டுடன் துய்ய பாண்டி பதினெட்டுஞ் சொல்லியே வாழு மா மலையாளம் ஈரேழுமுடன் மன்னு வேங்கடம் வாழ் தொண்டை நாட்டுடன் ஏழு மூன்றும் இரண்டும் சொல்லியே இதன் வடக்குப் பதினொன்றும் ஓதியே ஆழியான் பதிநூற்றெட்டும் ஓதுவார் அன்று செய்வினை அன்றே அகலுமே" என்னும் பாடல் உள்ளது.

## 108—*திருப்பதி அந்தாதியில்*

ஈரிருபதாம் சோழம், ஈரொன்பதாம் பாண்டி
ஓர்பதின் மூன்றாம் மலை நாடோரிரண்டாம் - சீர் நடுநா
டாறோடீ ரெட்டு தொண்டை அவ்வட நாடாறிரண்டும்
கூறு திரு நாடொன்றாகக் கொள்

எனவும்

## 108 *திருப்பதிக் கலித்துறை அந்தாதியில்*

'வருஞ் சோழ மண்டலத் தெண்ணைந்து, பாண்டிய மண்டலத்தில் ஒருபதினெட்டு; இரண்டேழ் மலை நாட்டினில்; சார் நடு நாட்டு இருபது ஓரிரண்டாம்; தொண்டை நாட்டில் இருபத்திரண்டு அரும்பதியாறிரண்டு (உ)த்திரம் நூற்றெட்டு மாந்தொகையே' எனவும் உள்ளது.

**நாலாயிரப் பாசுரப்படி 108 திருப்பதிக் கோவையில் சோழ** மண்டலம் 42, பாண்டிய மண்டலம் 18, மலையாளம் 14, தொண்டை நாடு 23, வடநாடு 11 ஆக 108 திருப்பதிகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

**108 திருப்பதி அந்தாதியில்** சோழ நாடு 40, பாண்டிய நாடு 18, மலைநாடு 13, நடுநாடு 2, தொண்டைநாடு 22, வடநாடு 12, திருநாடு 1 ஆக 108 திருப்பதிகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

**108 திருப்பதி கலித்துறை அந்தாதியில் சோழநாடு 40, பாண்டியநாடு 18, மலைநாடு 14, நடுநாடு 2, தொண்டை நாடு 22,** வடநாடு 12 ஆக 108 திருப்பதிகள் குறிக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு முதல் நூலில் 108 திருப்பதிகள் விளங்கும் நாடுகளை ஐந்தாகவும், இரண்டாம் நூலில் ஏழாகவும், மூன்றாம் நூலில் ஆறாகவும் வகைப்படுத்தியுள்ளனர். ஆயின் திருப்பதிகள் 108 என்னும் எண்ணிக்கைப் பொதுவாக எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளன. ஏழு நாடுகளாக வகைப்படுத்தப்பட்டுள்ள பிள்ளைப பெருமாள் அய்யங்காரது, 108 திருப்பதி அந்தாதி கருத்துப்படியே இப்போது பெரும்பாலும் வழங்கி வருகிறது.

## 108 திருப்பதிகளுள் திருவரங்கம் தலைமை பெறக் காரணங்கள்

1. இன்று இங்கு கோயில் கொண்டிருக்கும் அரங்கப பெருமானே, மலரயன் வழிபடுவதற்காக அர்ச்ச மூர்த்தியாக முதன்முதலில் சத்திய உலகத்தில் தோன்றியவர்.

2. பின்பு இட்சுவாகுவால் மண்ணுலகத்திற்குக் கொண்டு வரப்பட்டு, தொடர்ந்து இராமபிரானால் அயோத்தியில் வழிபடப பட்டவர்.

3. இவ்வரங்கள், ஆழ்வார்கள் அனைவராலும் மங்களா சாஸனம் செய்யப்பட்டவர்.

4. ஒரு நாட்டின் மன்னனுக்கு நடப்பது போன்ற முறையில் இங்கு விழாக்களும் வழிபாடுகளும் நடைபெறுகின்றன.

5. திருவாராதனங்களும், விழாக்களும் ஆகம முறையினின்று வழுவாது இன்றளவும் நடைபெற்று வருகின்றன.

6. இங்கு பிறந்து வாழ்ந்த சான்றோர்களான பெரியநம்பி, பராசரபட்டர், பிள்ளைலோகாசார்யர், வடக்குத்திருவீதிப் பிள்ளை போன்றோரால் இக்கோயில் சிறப்பு பெறுகிறது.

7. தமிழ்நாட்டை அரசோச்சிய மூவேந்தர்கள், விசயநகர மன்னர்கள், நாயக்கர்கள், ஆங்கிலேயர்கள் அனைவரும் இக் கோயிலுக்குக் கொடை வழங்கிப் போற்றியுள்ளனர்.

8. கம்பர் தனது இராமகாதையை இக்கோயிலில் அரங்கேற்றம் செய்தார்.

9. வைணவப் பெருமக்களன்றியும், மாத்வர்களும், சைவர் களும் இப்பெருமானைப் பாடிப் போந்தனர்.

10. இக்கோயிலின் வழிபாட்டு நெறியினை முறைப்படுத்திய இராமானுசருடைய, சமாதி இருக்கும் இடத்திலேயே அவருடைய விக்ரஹம் பிரதிஷ்டை செய்யப்பட்டு, இன்றைக்கும் பக்தர்களால் வழிபடப்பட்டு வருகிறது.

## திருமால் வணக்கத் தொன்மை

திருமாலை முழுமுதற் கடவுளாக வழிபட்டு வரும் கொள்கை, தமிழ்ப் பெருமக்கள் தங்கள் நிலத்தைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் எனப் பகுத்துக்கொண்ட காலத்திலேயே தொடங்கிவிட்டது. தமிழின் தொன்மை நூலான தொல்காப்பியம், இந்நான்கு நிலங்களையும் அதற்குரிய தெய்வங்களையும் கூறுமிடத்து 'மாயோன் மேய காடுறை உலகம்'[123] என்று கூறுகிறது. இத்தெய்வ வழிபாடு களைத் தொல்காப்பியகாலத்திற்கு முன்பே தமிழர்கள் மேற்கொண் டிருந்தனர் என்பதனையும், இத்திருமால் வணக்கத்தை தமிழகத்தை அரசோச்சிய அரசப் பெருமக்கள் போற்றிப் பாதுகாத்துவந்தனர் என்பதையும் 'மேவிய சிறப்பின்'[124] என்று தொல் காப்பியத்திற்கு உரை எழுதிய இளம்பூரணர் மேற்கோளாக எடுத்துக்காட்டும் பழம் பாடல் கொண்டும் தெளியலாம். இவ் வுரையில் இளம்பூரணர், பூசையும் விழாவும் முதலாயின என்று சிறப்பித்து உரை கூறியது நோக்கத்தக்கது. இவ்வாறு தொல்காப்பியர்காலத்தில் காடுறை (முல்லை) தெய்வமாக விளங்கிய திருமால், பின்னர் குறிஞ்சி மருதம் போன்ற நிலங்களிலும் இடம் பெற்றிருக்க வேண்டும்.

தொல்காப்பியர் முல்லைத்திணையை முதலில் சுட்டித் திருமால் வணக்கத்திற்கு முதன்மை காட்டுவதனின்று தமிழகம் தோன்றிய காலத்தே உடன் தோன்றித் தலைமை பெற்று நின்ற திருமாலின் கோயில்களும், கொள்கைகளும், அத்திருமாலின் தொண்டர்களால் பெருகியிருக்க வேண்டும். திருமாலின் திருத்தலங்களில் திருவரங்கம், திருமாலிருஞ்சோலை, திருவேங்கடம், திருவெஃகா போன்றவை

மிகப்பழமை பெற்றனவாகும். பரிபாடலிலும்[125] சிலப்பதிகாரத்திலும் [126] இத்தலங்களில் கோயில் கொண்டருளும் தெய்வத் திருவுருவம் அழகுபடக் கூறப்படுவதைக் காண்கின்றோம்.

வடநாட்டில் ராதாதேவியைக் கண்ணனது காதலியருட் சிறந்தவராகக் கொண்டாடுதல் போலத் தென்னாட்டவர் பண்டைக் காலம் முதலே நப்பின்னைப் பிராட்டியைப் போற்றினர்.

மன்னனைத் திருமாலுக்கு உவமையாகக் கூறும், 'திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே,[127] என்னும் உவமையைப் பூவை நிலை என்று புறத்துறையும் பேசும்.

பாகவதர்களை திருமாலின் சம்பந்தம் உடையவர் என்பர். இதைப் பெரியாழ்வார் 'பக்தர்களும் பகவர்களும் ..... தொழுது . '[128] என்று பேசுவார்.

மேலும் திருமாலை வணங்கும் வைணவக் கொள்கையின் தொன்மையினை மணிமேகலை சமயக்கணக்கர்தந்திரம் கேட்ட காதையுள் காணலாம்.[129] பரிபாடலில் திருமால் பற்றிக்கடுவன் இளவெயினார், கீராந்தையார், நல்லெழுனியார் முதலானோர் பாடியுள்ளனர்.[130] திருவள்ளுவர், திருமாலைத் தாம் பாடிய திருக்குறளில் ஈரிடத்தில் குறித்துள்ளார்.[130]

சேர மன்னன் செல்வக் கடுங்கோவாழியாதனது திருமால் பத்தியினைப் பதிற்றுப் பத்தும்,[132] கோச்செங்கட்சோழன் திருமாலிடம் திருநறையூரில் பத்தி கொண்டளந்த நாலாயிரதிவ்யப பிரபந்தமும், இளம்பெருவழுதி - திருமாலிருஞ்சோலைப் பெருமானிடம் பக்தி கொண்டதைப் பரிபாடலும் பேசும்.

## வைணவம்

இத்திருமால் வழிபாடு சமயவழிபாடாக மாறிய காலத்து வைணவம் என்ற ஓர் அமைப்பு உருவாயிற்று. இவ்வாறு மாற்றம் பெற்ற காலம், மாற்றியோர் முதலிய செய்திகள் தெளிவாக அறிய

இயலவில்லை என்றாலும் இராமானுசர் காலத்தில் வைணவ சமயம் நல்ல அறிமுகம் பெற்றிருந்தது என்பதை அவர் எழுதிய 'ஸ்ரீ பாஷ்யம்' வழி அறிய முடிகிறது.

வைணவம் என்பதற்கு விஷ்ணு சம்பந்தத்தை உடையது என்பது பொருளாகும். விஷ்ணு என்றால் எங்கும் நிறைந்துள்ள என்பது பொருள். உயிர்ப்பொருள்கள், உயிரில்லாப் பொருள்கள் எல்லா வற்றிலும் நிறைந்து வாழ்பவன் என்பது அதன் பொருளாகும். அந்த நிறைவு வானத்தளவு நிறைந்திருத்தல் போன்ற நிறைவு அன்று, 'உள்ளே நின்று நியமனம் செய்வது' என்று வேதாந்திகள் கூறு கின்றனர். விஷ்ணு, வாசுதேவன், நாராயணன், இறைவன் என்பன ஒரு பொருட் பல சொல்.

'உடல்மிசை உயிரென கரந்தெங்கும் எங்கும் பரந்து உளன்.' [133] என்ற நம்மாழ்வார் கருத்தின்படி உடலுக்கு உயிர் போல உலகத்திற்கு எல்லாம் ஓருயிராக இருக்கும் இறைவனை அடைய இறைவனது அருளே வழியாகும். பத்தியையும், சரணாகதியையும் உயிர் நிலையாகக் கொண்ட திருத்தொண்டொன்றே அதற்கு வழியாகும்.

இத்தகைய பெருங்கொள்கைக்கு இடம் தருவது இராமானுசர் ஸ்ரீபாடியத்தில் வெளியிடும் ஸ்ரீவைணவ விசிட்டாத்துவைதக் கொள்கை தான் என்பது வைணவ அறிஞர்களின் கருத்து.

இதனால் அருளே இறைவனது சொரூபம் என்பதும், அன்பே அடியவருக்கு உரியது என்பதும் நிலைநிறுத்தப்படுகின்றன. இத்தகைய அடிப்படைக் கொள்கையே விசிட்டாத்துவைதத்தின் உட்பொருள்.

'மறந்தும் புறந்தொழாமாந்தராய்' ஒருமை உள்ளத்துடன் ஒரே குறியாகத் திருமாலைப் பரம்பொருளாய்க் கருதி சரணடைய விரும்பிய வர்கள் அனைவரும் வைணவர்கள். விஷ்ணு எங்கும் பரந்திருப்பதால் உலகமெல்லாம் வைணவ மயமாக வேண்டும் என்று கருதினார் இராமானுசர்.

திருமால் அடியவர்களிடம் சாதியைக் குறிப்பிடுவது கூடாது என்ற கொள்கை வழக்கத்திலிருந்தது என்பதற்கு இராமானுசரின் வாழ்க்கையும் உபதேசங்களும் சான்று தருகின்றன.

இராமானுசரின் 'விசிட்டாத்துவைதத்தை' அருள்நெறி என்று சிறப்பாகக் கூறலாம். 'நன்னெஞ்சே, நம்பெருமான் நமக்கு அருள தான் செய்வானே'[134] என்பது நம்மாழ்வாரின் வாக்காகும். பொய்கையாரும் 'உளன் கண்டாய் நன்னெஞ்சே உத்தமன்'[135] என்ற செய்தியை நம்மாழ்வாருக்கு முன்னே கூறிவிட்டார். ஆழ்வார்கள் தாங்கள் கண்ட வைணவத்தை 'தீதில் நன்னெறி' என்று கருதினர் எவன் தன்னைத் தாழ்த்திக் கொள்கின்றானோ அவனே வைணவன் 'நீசனேன் நிறைவொன்றுமிலேன்' என்பது திருவாய்மொழி [136]

'ஒருவனுக்கு வைணவத்துவமுண்டு, இல்லை என்றும் இடம தமக்கே தெரியும் காண்' என்று சீயர் (நஞ்சீயர்) பலகாலும் அருளிச் செய்வார். "அதாவது பிறர் துன்பம் கண்டால் 'ஐயோ' என்று இரங்குவானாகில் அவன் நமக்குப் பகவத் சம்பந்தமுண்டு என்று இருக்க, அது இன்றி, அடுக்கும் இத்தனையும் வேண்டும் பட்டிடுவொனுக்கு என்று இருந்தானாகில் அவன் தமக்குப் பகவத் சம்பந்தமில்லை" என்றாம்.[137]

வைணவ சமயம் அனாதியானது. ஸ்ரீயுடன் கூடிய விஷ்ணுவை வழிபடும் கடவுளைக் கொண்டதால் இதை ஸ்ரீ வைணவம் என்று அழைக்கிறார்கள். ஸ்ரீவைணவ சமயம் வேதத்தையும், வேதத்தை விளிக்க வந்த புராணங்கள் மற்றும் ஆழ்வார்கள் அருளிச் செய்த திவ்ய பிரபந்தங்களையும் அடிப்படையாகக் கொண்டது. ஸ்ரீவைணவ நெறியை உயிரெனக் காத்து உடலென வளர்த்தவர்கள் ஆழ்வார்களும் ஆசார்யர்களும் ஆவர்.

திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி முதலியன நான்கு வேதங்களின் சாரமாகக் கொள்ளப்பட்டன. பெரியதிருமொழி, சிறிய திருமடல், பெரியதிருமடல், திருவெழு கூற்றிருக்கை, திருநெடுந் தாண்டகம், திருக்குறுந்தாண்டகம் ஆகிய ஆறும் வேதத்தின் ஆறு அங்கங்களாகும். மற்ற பிரபந்தங்கள் உபாங்கங்களாகும்.

## திருமாலுக்குண்டான ஆறுகுணங்கள்

ஞானம், சத்தி, பலம், ஐசுவர்யம், வீரியம், தேஜஸ்

## தேவிமார்கள்

திருமகள், மண்மகள், ஆய்மகள்,
'திருமகளும் மண்மகளும் இருபாலும் தொழ'

## திருமால் உடைமைகள்

அனந்தன் என்னும் ஆதிசேடனாகிய படுக்கை; கருடன் என்கிற கொடியும், வாகனமும், விஷ்வக்சேனர் என்னும் சேனை முதன்மையார் அமைச்சரும், சேனாதிபதியும் இன்னும் பல நித்தியமாய் அங்கிருக்கும் நித்திஸூரிகளும் இங்கிருந்து சென்று வீடுபேறடைந்த முக்தர்களும் ஆவர்.

## இறைவனுடைய நிலைகள்

பர, வியூக, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை என்பன திருமாலின் ஐந்து நிலைகளாகும். சங்க இலக்கியமான பரிபாடலும், திருமாலின் ஐந்து நிலைகளாகப் பர, வியூக முதலியவற்றைக் குறிக்கின்றது.

## பரநிலை

பரத்துவ நிலை, பரமபதத்தில் ஸ்ரீதேவி, பூதேவி, நீளா தேவிகளுடன் திருமாமணி மண்டபத்தில் வீற்றிருந்து, நித்திய ஸூரிகளுக்கும், முக்தர்களுக்கும் சேவை கொடுக்கும் நிலை. இது பிரகிருதி மண்டலத்திற்கும் அப்பாலுள்ள வைகுண்டத்திலிருப்பதால் மண்ணாட்டவர் எளிதில் அடைய முடியாதநிலையில் அமைந்துள்ளது.

## வியூக நிலை

திருப்பாற்கடலில் உள்ளது. பரமபதத்தினின்று இறங்கிப் பாற்கடலில் ஆலிலைமேல் பள்ளிகொண்டு அடியார்களின் குறை

களைக் கேட்கவும், படைத்தல், காத்தல், அழித்தல் என்ற மூன்று செயல்களை நடத்தவும், சங்கர்ஷணன், ப்ரத்யும்னன், அநிருத்தன், வாசுதேவன் என்ற திருப்பெயர்களுடன் விளங்கும் நிலை. இந்நிலையைக் நாம் இப்போதுள்ள நிலையில் சென்று காண இயலாது. ஆழ்வாரும் 'பாலாழி நீ கிடக்கும் பண்பை யாம் கேட்டேயும்' [138] என்று சொல்கிறார்.

## விபவ நிலை

பெருக்காறு போல் இறைவன் அவதரித்த காலத்தில் இருந்தவர்களுக்கே அனுபவிக்கலாம்படியும், பிற்காலத்தவர் களுக்கு கிட்டாததும் ஆகிய நிலையாகும்.

## அந்தர்யாமி நிலை

'இறைவன்' மனித உயிர் மற்றும் மற்ற உயிரினங்களின் உள்ளத்தில் திருக்குணங்களுடன் எழுந்தருளியிருந்து உயிரை நடத்தும் நிலை, இந்நிலை, தோண்டினால் அன்றிக் குடிக்க நீர் கிடைக் காத பூமி க்குள்ளிருக்கும் நீரினைப் போல உள்ளது. கண்ணுக்குப் புலப்படா திருக்கிறான். அந்நிலையில் அவனை அட்டாங்க யோகத்தா லல்லாது நேரில காண முடியாது.

## அர்ச்சை நிலை

நீர் வேட்கை கொண்டவன் எளிதில் நீர் பருகும்படி, ஆற்றில் தேங்கின மடுக்கள் போலிருக்கிறபடியால், கோயில்களில் எல்லோருடைய கண்களுக்கும் இலக்காகும்படி 'பின்னானார் வணங்கும் சோதியாய்', 'கருத்துக்கு நன்றும் எளியனாய், மண்கொள் ஞாலத்து உயிர்களுக்கெல்லாம் அருள் செய்பவனாயிருக்கும்' நிலை.[139] திருக்கோயில்களிலும், இல்லங்களிலும் உருவ வடிவத்தில் இருந்து வழிபாடு செய்வார்க்கு அருள்பாலிக்கும் நிலை.

பொய்கையாழ்வார் 'தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே'[140] என்ற பாசுரத்தில் அர்ச்சாவதாரச் சிறப்பை உலகறியச் செய்துள்ளார். நம்மாழ்வார் தம் திருவாய்மொழியிலும் 'கலியுகம் ஒன்றும் இன்றிக்கே தன்னடியார்க்கு அருள்செய்யும் மலியும் சுடரொளி மூர்த்தி'[141] என்றும், 'தஞ்சமாகிய தந்தை தாயொடு'[142] என்றும் அர்ச்சை நிலையின் பெருமையை விளக்கியுள்ளார்.

ஆண்டாள் நாச்சியார் இறைவனின் ஐந்து நிலைகளையும் தமது திருப்பாவையில் 'மார்கழித்திங்கள்' முதல் பாடலில் 'நாராயணனே நமக்கே பறை தருவான்'[143] என்று பரத்துவ நிலையையும், 'பாற் கடலுள் பையத்துயின்ற பரமன்'[144] என்று இரண்டாம் பாடலில் வியூக நிலையையும் 'ஓங்கி உலகளந்த உத்தமன்பேர் பாடி'[145] என்று மூன்றாம் பாடலில் விபவநிலையையும் 'ஆழிமழைக் கண்ணா' என்று நான்காம் பாடலில் 'ஆழி போல் மின்னி வலம்புரிபோல் நின்று அதிர்ந்து[146] என்று அந்தர்யாமி நிலையையும், ஐந்தாம் பாடலான 'மாயனை மன்னு வடமதுரை மைந்தனைத் . . . தூமலர் தூவித் தொழுது வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்க, போயபிழையும் புகுதருவான் நின்றனவும், தீயினில் தூசாகும்.'[147] என்று அர்ச்சை நிலையையும் விவரிக்கின்றார்.

இவ்வாறு திருக்கோயிலில் அர்ச்சாவதார நிலைபெற்ற பெருமாளுக்கு வழிபாடும், விழாவும் எடுத்துப் போற்றினர் சான்றோர்.

ஆழ்வார்களும், ஆசாரியர்களும் படுபாடு கிடந்ததும் இந்த அர்ச்சாவதாரம் தன்னிலேயாம். ஆழ்வார்கள் அனைவராலும் பாடப் பெற்றும், பிரும்மாவால் ஆராதிக்கப்பட்டும், இட்சுவாகு வழி இராமனால், திருவாராதனமும், வழிபாடும் செய்யப்பட்ட பெருமாள் திருவரங்கம் அரங்கன் ஆவார்.



இயல் — 1

# அடிக்குறிப்புகள்

1. திருக்கோவையார் - பேராசிரியர் உரை 14
2. நன்னூல் - பதவியல் 21
3. பார்த்தசாரதி அய்யங்கார் (பதிப்பாசிரியர்) ஸ்ரீரங்க மஹாத்மியம் தசாத்யாயி அத். 3. 105 - 107
4. மேலது - ஸ்ரீ ரங்க மஹாத்மியம் தசாத்யாயி அத். 6. 114 - 117
5. மேலது - அத் 6 பக்கங்கள் 117 - 120
6. மேலது - அத் 7 பக்கங்கள் 177 - 120
7. மேலது - அத் 7 பக்கங்கள் 117 - 120
8. மேலது - அத் 7 பக்கங்கள் 117 - 120
9. மேலது - அத் 8 பக்கங்கள் 120 - 123
10. மேலது - அத் 8 பக்கங்கள் 120 - 123
11. மேலது - அத் 9 பக்கங்கள் 123 - 126
12. அவ்பாயர் திருவரங்கம் திருக்கோயில் (தமிழாக்கம்) பக்கம் 7
13. கோயில் ஒழுகு பக்கம் 137 (1909)
14. பெரியாழ்வார் திருமொழி 5:4:9
15. பெரியதிருமொழி 1 : 8 : 2
16. ஆண்டாள் நாச்சியார் - திருப்பாவை 2
17. ஸ்ரீரங்கராஜஸ்தவம் (பூர்வசதகம்) சுலோகம் 79 பக்கம் 65 (அண்ணங்கராசாரியர் உரை)
18. டாக்டர் தெ. ஞானசுந்தரம் பெரியதிருமொழி உரையும் தமிழாக்கமும பக்கம் 266.
19. அவ்பாயர், திருவரங்கம் திருக்கோயில் பக்கம் 8
20. மேலது பக்கம் 8
21. கம்பராமாயணம், குலமுறை கிளத்துப்படலம் 2ஆம் பாடல்
22. பார்த்தசாரதி அய்யங்கார் (பதிப்பாசிரியர்) ஸ்ரீரங்க மஹாத்மியம தசாத்யாயி பக்கம் 118
23. ஆ. சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி பக்கம் 569
24. மு. அபிரகாம் பண்டிதர், கருணாமிர்தசாகரம் (பதிப்பு 1917)
25. தேசிகர் அருளிய ஹம்ச சந்தேசம் பாடல் எண் 40
26. ஸ்ரீரங்க ராஜஸ்தவம் (உத்தர சதகம்) 78ஆம் சுலோகம்
27. அவ்பாயர், திருவரங்கம் கோயில், பக்கம் 10

28. மேலது பக்கம் 11
29. சவுத் இண்டியன் இன்ஸ்கிரிப்ஷன்ஸ், வால்யூம் XXIV1982
30. அவ்பாயர், திருவரங்கம் கோயில் பக்கம் 12
31. அவ்பாயர், திருவரங்கம் கோயில் பக்கம் 12
32. கல்வெட்டு எண் 192 மற்றும் 261, 272 வால்யூம் XXIV1982
33. ஏ.ஆர்.நெ. 81க்கு 1938-39 க.எண் 197 கோ.ஒ. 10-11
34. கோயில் ஒழுகு, பக்கம் 10-11 (1888)
35. மேலது பக்கம் 15 - 18
36. அவ்பாயர், திருவரங்கம் கோயில் பக்கம் 14
37. மேலது பக்கம் 14
38. ஏ.ஆர்.எண் 87 ஆப் 1936 - 37 கல்வெட்டு எண் 521
39. நரசிம்மாச்சாரியார், கோயில் தத்துவம் பக்கம் 12
40. திருமாலை பாடல் எண் 19 பெருமாள் திருமொழி பாடல் எண் 1:10
41. நரசிம்மாச்சாரியார், கோயில் தத்துவம் பக்கம் 41
42. பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் - திருவரங்கத்துமாலை 95.
43. கோயில் ஒழுகு பக்கம் 11 (1888)
44. பெருமாள் திருமொழி 4 : 9
45. பெருமாள் திருமொழி 1 : 2
46. கோயில் ஒழுகு பக்கம் 231 (1909)
47. அவ்பாயர், திருவரங்கம் கோயில் பக்கம் 24
48. அவ்பாயர், திருவரங்கம் கோயில் பக்கம் 25
49. கோயில் ஒழுகு, பக்கம் 62 (1888)
50. மேலது பக்கம் 159 (1909)
51. கல்வெட்டு எண் 427 ஏ.ஆர்.நெ. 19 ஆப் 1938 - 39
52. கோயில் ஒழுகு, பக்கம் 16 (1888)
53. கோயில் ஒழுகு, பக்கம் 16 (1888)
54. பிள்ளைப்பெருமாள் அய்யங்கார் திருவரங்கக்கலம்பகம் வரலாறு பக்கம் (iii)
55. கோயில் ஒழுகு, பக்கம் 236 (1909)
56. பெருமாள் திருமொழி 2:3
57. கோயில் ஒழுகு, பக்கம் 194 (1909)
58. கோயில் ஒழுகு, பக்கம் 168-169 1909 மற்றும் 170-171 (1909)
59. திருச்சந்தவிருத்தம் பாடல் எண் 3
60. ஸ்ரீரங்கராஜஸ்தவம் பூர்வசதகம் 49வது சுலோகம் பக்கம் 39 - 40

61. பெருமாள் திருமொழி 1: 4
62. கோயில் ஒழுகு பக்கம் 119 (1909) மற்றும் உத்தமநம்பி வைபவம் பக்கம் 22
63. கோயில் ஒழுகு, பக்கம் 18 (1888)
64. மேலது, பக்கம் 18 (1888)
65 கோயில் ஒழுகு பக்கம் 12 (1888) மற்றும் ஸ்ரீரங்கராஜஸ்தவம
66. கோயில் ஒழுகு, பக்கம் 16, 20 (1888) மறறும் ஸ்ரீரங்கராஜஸதவம 38ஆவது சுலோகம்
67. அவ்பாயர், திருவரங்கம் கோயில், பக்கங்கள் - 21
68. கோயில் ஒழுகு, பக்கம் 153, (1909)
69. மேலது பக்கம் 120 (1909)
70. கோயில் ஒழுகு, பக்கம் 120 (1909)
71. சே. கிருஷ்ணமாசாரியர், பகவத்விஷயம, நோபிள் பிரஸ, திருவல்லிக்கேணி, சென்னை. வால்யூம் 7, பக்கம் 49
72. கோயில் ஒழுகு, பக்கம் 135 மற்றும் கல்வெட்டு ஏ.ஆர்.எண் 87 ஆப் 1936 - 37.
73. நீலகண்டசாஸ்திரியார் 'தி சோலாஸ்' வால்யூம் 1, பக்கங்கள் 316-317
74. கலிங்கத்துப்பரணி - இராசபாரம்பரியம் பாடல் 28
75. விக்கிரமசோழன் உலா - வரிகள் 40 - 42
76. எபிகிராபி இண்டிகா வால்யூம் நெ. 21 பி, மற்றும் 'தி சோலாஸ்' பக்கம் 228 - 224
77. சதாசிவ பண்டாரத்தார் டி.வி. பிற்காலச் சோழர் சரித்திரம் பகுதி 2
78. மேலது
79. கோயில் ஒழுகு பக்கம் 2-3 (1888)
80. பார்த்தசாரதி அய்யங்கார் (பதிப்பாசிரியர்) ஸ்ரீரங்க மஹாத்மியம் தசாத்யாயி பக்கம் 111
81. சிலப்பதிகாரம், இந்திரவிழாவூரெடுத்த காதை வரிகள் 118-121
82. ஸ்ரீரங்கம்கோயில் மஹாத்தமியம் தசாத்யாயி 10ஆம் அத்தியாயம் பக்கம் 126 - 131
83. பெரியாழ்வார் திருமொழி 4:8:7
84. பெருமாள் திருமொழி 1 : 1
85. திருமாலை பாடல் எண் 23
86. முதல் திருவந்தாதி பாடல் எண் 6; இரண்டாம் திருவந்தாதி பாடல் எண்கள் 28,70,88;மூன்றாம் திருவந்தாதி பாடல் எண் 62.

87. நான்முகன் திருவந்தாதி பாடல் எண்கள் 3, 30 (அரங்கம்); திருச்சந்த விருத்தம் 49, 52, 53 (அரங்கம்); திருச்சந்தவிருத்தம் 50 (ரங்கம்); திருச்சந்தவிருத்தம் 93
88. திருமாலை பாடல் எண் 29 (தென்னரங்கம்) திருமாலை பாடல் எண் 17, 45 திருப்பள்ளியெழுச்சி பாடல் எண் 10, பெரியதிருமொழி 5:4 1:10, திருக்குறுந்தாண்டகம் பாடல் எண் 19
89. பெரிய திருமொழி 5:4:1
90. நான்முகன் திருவந்தாதி 31
91. நாச்சியார் திருமொழி 5, 11:11
92. பெருமாள் திருமொழி 1:2
93. பெருமாள் திருமொழி 1:3
94. திருவாய்மொழி 7:2:9
95. பெரியதிருமொழி 5:4:1
96. திருச்சந்தவிருத்தம் 119
97. திருமாலை 30
98. திருவாய்மொழி 7 : 2: 1
99. திருமாலை 23
100. பெரியதிருமொழி 5 : 4 : 1
101. மேலது 11 : 8 : 8
102. மேலது 5 : 5 : 10, திருக்குறுந்தாண்டகம் 7, மற்றும் பெருமாள் திருமொழி 1 : 8
103. திருநெடுந்தாண்டகம் 25
104. திருநெடுந்தாண்டகம் 24, பெரியதிருமொழி 5 : 4 : 8
105. அமலனாதிபிரான் 6
106. நாச்சியார் திருமொழி 11 - 4, நாச்சியார் திருமொழி 11 - 7
107. நாச்சியர் திருமொழி 11 - 2, 11 - 9
108. மேலது 11 - 3
109. சிறிய திருமடல் 71
110. திருமாலை 19
111. மேலது 19
112. நாச்சியார் திருமொழி 11 - 2
113. திருநெடுந்தாண்டகம் 25
114. திருநெடுந்தாண்டகம் 24
115. அமலாதிபிரான் 7

116. திருவாய்மொழி 7:2:1, 7:2:7, 7 : 2 : 6
117. மேலது 7 : 2 : 9
118. பெருமாள் திருமொழி 1 : 8
119. மேலது 1 : 11
120. மேலது 2 : 2
121. மேலது 2 : 3
122. மேலது 1 : 4
123. தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல் நூற்பா 5
124. தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல் நூற்பா 30
125. பரிபாடல் பாடல் எண்கள் 1, 2, 3, 4, 13, 15
126. சிலப்பதிகாரம் நாடுகாண் காதை 156 - 158
127. திருவாய்மொழி 4 : 4: 8
128. பெரியாழ்வார் திருமொழி 4:9:6
129. மணிமேகலை, காதை 19 65 - 66
130. பரிபாடல் பாடல் எண்கள் 2, 3, 4, 5, 13, 15 சிலப்பதிகாரம் நாடுகாண் காதை 156 - 158
131. திருக்குறள் 610, 1103
132. பதிற்றுப்பத்து 19ஆம் பத்து 7ஆம் பாடல்
133. திருவாய்மொழி 1 : 1 : 7
134. மேலது 10 : 6 : 4
135. முதல் திருவந்தாதி 99
136. திருவாய்மொழி 3 : 3 : 4
137. புருசோத்தமநாயுடு, திருவாய்மொழி (தமிழாக்கம்) (திருவாய்மொழி முதல் பத்து 2ஆவது பகுதி ஈடு முன்னுரை) பக்கம் 107
138. பெரியதிருவந்தாதி 34
139. திருநெடுந்தாண்டகம் 10, திருவாய்மொழி 3 : 6 : 11
140. முதல் திருவந்தாதி 44
141. திருவாய்மொழி 5 : 2 : 11
142. மேலது 3 : 6 : 9
143. திருப்பாவை முதல் பாடல்
144. மேலது 2ஆம் பாடல்
145. மேலது 3ஆம் பாடல்
146. மேலது 4ஆம் பாடல்
147. மேலது 5ஆம் பாடல்

# இயல் - 2

## நூல்கள் வாயிலாக அறியப்படும் விழாக்கள்

'வீழ்' என்ற சொல்லடியாகப் பிறந்தது விழாவாகும். வீழ் என்பதற்கு 'விருப்பம்' என்று பொருள் கொள்வார் பரிமேலழகர்.[1] எனவே விழா என்ற சொல் விருப்பத்துடன் செயலாற்றுதலை உணர்த்தும்; இறைவன் மாட்டு மாந்தர்க்கு உண்டாகும் அன்பின் பெருக்கம் விழாவாயிற்று.

மக்களில் சிறப்புடையார்க்குச் செய்யும் விழாவினின்று வேறு படுத்திக் காட்டற் பொருட்டு இறைவனுக்குச் செய்யும் விழாவிற்குத் 'திரு' என்ற அடைமொழி சேர்த்துத் 'திருவிழா' என வழங்கினர்.

விழா என்பது 'விழித்தல்' என்னும் சொல்லினின்று வந்த தென்பார் சான்றோர். அதற்கு அவர் வைகுண்ட ஏகாதசி, சிவராத்திரி போன்ற விழாக்களில் மக்கள் விழித்திருந்து வழிபடுதலை எடுத்துக் காட்டாக கூறுவர்.

எண்ண மகிழ்தலும், காண மகிழ்தலும் ஆகிய பயன்களை விழாக்கள் நல்குவதால் மக்கள் விழா எடுத்தனர். விழாக்கள், நம்பிக்கையின் அடிப்படையில் கொண்டாடப்பட்டு வருகின்றன. மக்களே விரும்பி ஏற்றுக் கொண்டாடும் நிகழ்ச்சியாதலின் அது விழா என்று போற்றப்பட்டது.

"அனைத்து விதமான சம்சாரத்துக் கடலை இவ்விழாவின் மூலம் மனிதர்கள் கடக்கின்றனர் எனும் காரணத்தால் இதை அறிஞர் 'உற்சவம்' என்கின்றனர்." என்று பாத்மசம்ஹிதையில் உள்ளது.[2]

நீர் வளமும், நிலவளமும், மனநலமும் பெற்று வாழும் மக்கள், அவற்றைத் தந்த இறைவனிடம் நன்றி உடையவராய் இருந்தமையால் இவ்விழாக்கள் பலவாறு கொண்டாடப்பட்டன. நம்நாட்டில் திரு விழாக்கள் பண்டுதொட்டு நடைபெற்று வருகின்றன என்பதை நாம் பண்டைய நூல்கள் வழி அறிகின்றோம்.

## 2:1:1 தொல்காப்பியம்

தொல்காப்பியம் குறிப்பிடும் "அமரர்கண் முடியும் அறுவகை யானும்", "காமம் புல்லிய வகையினும்"[3] அமைந்த பாடாண் கூறுகள், திருவிழாக்கள் உருவாகும் சூழல்களைக் குறிப்பன. இறைவனைத் தம்மை ஆள்பவனாகவும், தம்மை அடியானாகவும் கருதி வாழ்த்தும் நிலை பாடாண் திணைப் புறனடையாகக் குறிப்பிடுகின்றது.

## 2:1:2 சங்க இலக்கியம்

விழவு, விழா, சாறு என்ற சொற்களால் விழா குறிப்பிடப் பெறும். அவற்றுள் விழவு என்ற சொல் பெருமளவிலும், சாறு என்ற சொல் அடுத்தும், விழா என்ற சொல் அருகியும் பயன்படுத்தப்பட்டுள்ளன. 'மறவர்' முதன் முதலாக அம்பு தொடுத்தற்பொருட்டு நிகழ்த்தும் விழாவினைப் 'பூந்தொடைவிழா' என அகநானூறு பேசுகிறது.[4] 'உள்ளி விழா' என்ற விழாவையும் அகநானூறு குறிப்பிடும். திருமாலின் திருநாளாகிய திருவோணத்தன்று நிகழும் ஓணவிழா ஐப்பசித் திங்களில் நடைபெற்றிருக்க வேண்டும். மு. இராகவையங்கார் ஆவணித் திங்கள் அவிட்ட நாளன்று நடைபெறும் விழா, பண்டு ஓண நாளாகக் கருதப்பட்டதாகக் கூறுவர். கார்த்திகைத் திருவிழா நடை பெற்றதை அகநானூறும், களவழி நாற்பதும், கார்நாற்பதும் குறிக் கின்றன.[5] அரங்கத்தில் நடைபெற்ற பங்குனித் திருநாளைப் 'பங்குனி முயக்கம்' என்று அகநானூறு கூறும்.[6] 'மடியாவிழாவின் யாணர் நன்னாடு' எனும் புறநானூற்று அடியால் விழாக்கள் தொடர்ந்து நடைபெற்றமை யையும், அவற்றால் நாட்டின் வளம் சிறந்தமையையும் அறிகின்றோம்.[7]

"ஆவணி அவிட்டமே, உறையூர்ப்பங்குனி உத்திரமே, கருவூர் உள்ளிவிழாவே" என விழாக்களை இறையனார் களவியல் உரை வகைப்படுத்திப் பேசுகின்றது.[8]

அகப்பொருட்துறையில் 'ஊர் துஞ்சாமை' என்னும் துறை ஒன்றுள்ளது. ஊரார் உறங்காமல் விழித்தற்குக் காரணம், அவ்வூரில் விழாக்கள் மகிழ்ச்சியாகக் கொண்டாடப்பட்டமையும், மக்கள் அவற்றைக் கண்டு மகிழ்ந்தமையும் ஆகும்.

'சாறுதலைக் கொண்டென' என்ற புறநானூற்றுத் தொடருக்கு உரையாசிரியர் 'ஊரின்கண் விழாத் தொடங்கிற்காக, அவ்விழாவிற்கு உதவப் போகவும்' என்று உரை எழுதியுள்ளார்.[9] விழாக்காலங்களில் ஊரில் பேரரவம் நிறைந்திருந்ததைக் 'கல்லென் விழவு' என்ற புறப்பாடல் கொண்டு உணரலாம்.[10]

இவ்விழாக்கள் பல, முழுநிலவு நாள்களில் நடைபெற்றன. வளர்பிறையில் தொடங்கப்பட்டதெனப் பரிபாடல் கூறுகிறது.

நன்மையை விரும்பிச் செய்யப்படும் இவ்விழாக்கள், நல்ல நாளிலும், நல்ல நேரத்திலும் செய்யப்படுமாயின் அவை நன்மை யினைத் தருகின்றன. அந்நிலையில் அவை மக்களிடையே நம்பிக்கை யை உருவாக்குகின்றன. அந்நம்பிக்கை மக்களிடம் தொடர்ந்து நிலைபெறுகின்றது. 'கோள்களின் நிலைமைகள் மனித வாழ்வோடு தொடர்பு கொள்கின்றன' என்ற நம்பிக்கையால் முழுமதி நாள், நிறை மதி நாள், வளர்பிறை போன்ற நாள்களில் இவ்விழாக்கள் அமைத்துக் கொள்ளப்பட்டன.

## 2:1:3: காப்பியங்கள்

ஐம்பெருங்காப்பியம், ஐஞ்சிறு காப்பியங்களில் காடுகளில் கோயில்கள் அமைத்து வழிபட்ட செய்தி பேசப்படுகிறது. கொற்றவைக் குக் கோயிலிருந்தமையும் அதனை மற்றவர்கள் வழிபட்டமையும் இளங்கோவால் பேசப்படுகிறது.[11] 'அணிகிளர் அரவின் அறிதுயில் அமர்ந்த' திருவரங்கத்தில் சிலாதலம் ஒன்று இருந்ததாகவும், அச்சிலையிருக்கையின் மீது அந்தரசாரிகள் தோன்றிக் கவுந்தி அடிகளிடம் அறிவுரை கூறிப் போந்ததாகவும் இளங்கோவடிகள் பேசுகிறார்.[12] வான்வழி வந்த கோவலனோடு கண்ணகி விண்ணகம் புக்க செய்தியை வியந்து, குறவர்கள் முருகனுக்கு விழவயர்ந்த செய்தி வஞ்சிக் காண்டத்தில் பேசப்படுகிறது.[13] ஆயர்கள் திருமாலுக்கு விழா எடுத்துக் குரவைக் கூத்தாடியமை ஆய்ச்சியர் குரவையால் உணரப் படும். வேட்டுவவரி, ஆய்ச்சியர் குரவை, குன்றக்குரவை ஆகிய சிலப்பதிகாரத்தின் பகுதிகள் கொற்றவை, திருமால், முருகன் ஆகிய தெய்வங்களுக்கு எடுக்கப்பெற்ற விழாக்களைச் சுட்டுவனவாகும்.[14]

பூம்புகாரில் கோயில்கள், எழுவகைக் கோட்டங்கள், சதுக்கங்கள் ஆகியவை இருந்தமையைச் சிலப்பதிகாரத்தின் வழி அறிகின்றோம்.

மணிமேகலை மலர் பறிக்கச் சென்ற உவ வனத்தில் பளிங்கறையில் புத்த பீடிகை ஒன்று இருந்ததையும், அதனிடை வீற்றிருந்த தெய்வத்திற்கு மலரிடுவோர் நினைந்து செய்தால் அம்மலர் அப்பீடத்தினின்று மறைவதையும், நினைப்பின்றி இட்டால் அது அச்சிலாதலத்திடையே கிடப்பதையும் சுதமதி மணிமேகலையிடம் கூறுவதைக் காட்டி புத்த சமயக் கருத்தினை விளக்குகிறார் சாத்தனார்.[15]

சக்கரவாளக் கோட்டம் என்ற இடுகாட்டினைக் கோயில் போலச் சாத்தனார் பாராட்டிப் பேசக் காண்கின்றோம்.

யசோதர காவியம், வேனில் விழா நடந்தமை பற்றியும், வசந்த விழா கொண்டாடும் கூறுபாடுகளையும் விளக்குகிறது.[16]

## 2:1:4 *பக்தி இலக்கியங்கள்*

தேவாரத்தில் திருஞானசம்பந்தர், மயிலையம்பதியில் திங்கள் தோறும் நடைபெறும் விழாக்களை விளக்குகிறார்.

ஐப்பசி ஓண விழாவும், கார்த்திகை விளக்கீட்டு விழாவும், மார்கழித் திருவாதிரைத் திருநாளும், தைப்பூசத் திருநாளும், மாசிக் கடலாட்டு விழாவும், சித்திரை அட்டமி விழாவும், வைகாசிப் பொற்றாப்பு விழாவும் (ஊஞ்சல் விழா) (போன்ற திருநாள்கள் திங்கள்தோறும் முழுநிலவு நாள்களில்) நடைபெற்றதை விளக்குகின்றார்.[17] விழாக்களில் அடியவர்களுக்கு உண்டி கொடுத்து உபசரிக்க வேண்டும் என்ற குறிப்பை திருஞானசம்பந்தர் மயிலைப் பதிகத்தின் முதல் பாடல் வாயிலாக வலியுறுத்துகின்றார்.

தமிழர்கள் இறைவனுக்குக் கோயில் எடுத்து வழிபட்டதோடு விழாக்கள் நடத்தி மகிழ்ந்தனர் என்றும் அறிகின்றோம். காடுகளிலும், மலைகளிலும், ஆற்றிடையும் கோயில் எடுத்து, அவற்றில் விழாக்களை நடத்தினர் என்ற செய்தியினை உணர்கின்றோம். 'காடும், காவும், கவின்பெறு துருத்தியும், ஆறும் குளமும், வேறுபல் வைப்புஞ்,

சதுக்கமும், சந்தியும், புதுப் பூங்கடம்பும், மன்றமும், பொதியிலும், கந்துடை நிலையிலும், தெய்வ வழிபாடு நடைபெற்றமை திருமுருகாற்றுப் படை வாயிலாக அறிய முடிகின்றது.[18]

இவ்விழாக்கள், மக்களால் தொடர்ந்து, கட்டுப்பாட்டிற்குள் நிகழ்த்தப்பட்டு வந்தமையால் அவை சடங்குகளாயின. விழாக்கள், சமுதாயம் தழுவியதாக அமையும். விழாக்கள், மக்கட்கு அறிவூட்டுவன வாயும், சமுதாயம் மற்றும் சமயம் சார்ந்த தன்மைகளை உள்ளடக் கியனவாகவும் கருதப்படுகின்றன.

தொல்காப்பிய காலத்திலும், சங்ககாலத்திலும் தொடங்கிய கோயில் வழிபாடுகள் இன்றளவும் தமிழர்களால் போற்றிப் பின்பற்றப் படுகின்றன. அன்று நிகழ்ந்த விழாக்களில் சில இன்று அரசியல், சமுதாய மாற்றங்களால் நடைமுறையில் இல்லாமல் போயின. ஒரு காலத்தில் ஒரு குழுவினரால் விடப்பட்ட சடங்கு முறைகளும், அதைத் தொடர்ந்த விழாக்களும் அடுத்துவரும் காலத்தில் தவிர்க்கப் பட்டிருக்கலாம். ஆயினும் விழக்களின் சிறப்பினைப் பண்டு அவர்கள் உணர்ந்தவாறு இன்றும் நடத்தி வரும் சிறப்பினையும் ஈண்டு எண்ணற்பாலது. ஊர்மக்கள் கூடி விழாக்களில் தங்களை இணைத்துக் கொள்ளுதல் போன்ற செயற்பாடுகள் இன்றும் சிற்றூர்களில் நிகழ்வதைக் காவல் தெய்வத்திற்கு விழா எடுக்கும் போது காண முடிகின்றது. இலக்கியங்கள் சுட்டுவது போன்றே கையுறைப் பொருள்கள் எடுத்துக் கொண்டு இறைவனை வழிபடுதலை இன்றும், 'பெரிய படையல்' வைத்துப் பெருமாளை வழிபடும் நிகழ்ச்சியோடு எண்ணிப் பார்க்கலாம்.

## 2:2 பாஞ்சராத்திர ஆகமத்தில் கூறப்பட்டுள்ள விழாக்கள்

வைணவத் திருக்கோயில்களில் வழிபாடு, விழா முறைகட்கு ஏற்பட்ட ஆகமங்கள் பாஞ்சராத்திரம், வைகானசம் என்பன.

திருவரங்கம் கோயில் வழிபாடு விழா, ஆகியவை பாஞ்சராத்திர ஆகமத்தை அடிப்படையாகக் கொண்டதாகும். ஒரு காலத்தில் வைகானசம் இக்கோயிலில் நடைமுறையில் இருந்ததாகவும் பின்னர் இராமானுசர் காலத்தில் அம்முறை மாற்றப்பட்டு பாஞ்சராத்திர ஆகம

முறை பின்பற்றப்பட்டதாகவும் 'கோயில் ஒழுகு' கூறும்.[19] ஆயின் இக்கோயிலார் சிலர் இக்கருத்தை மறுத்து இக்கோயிலில் என்றென்றும் பாஞ்சராத்திர ஆகமமே நடைமுறையில் இருந்ததாகக் கூறுவர்.

பாஞ்சராத்திர ஆகமம் என்பது இறைவன் தன் உந்தியில் பிறந்த நான்முகனுக்கு உபதேசம் செய்து, அறியாமை இருளைப் போக்கியது என்றும், இறைவன் ஐந்து இரவுகளில் ஐந்து முனிவர்கட்கு உபதேசித்தது என்றும், இதனால் பாஞ்சராத்திரம் என்னும் பெயர் ஏற்பட்டது என்றும் கூறுவர்.

பாஞ்சராத்திர ஆகமம், வழிபாட்டு முறையை மட்டும் கூறும் நூல் அன்று. சிற்பம், கட்டிடக் கலை, நகர அமைப்பு, உற்சவங்கள், மந்திரங்கள், அவைகளுக்கான முத்திரைகள், ஒழுக்க நெறிகள் ஆகிய பல செய்திகள் இவ்வாகமத்தில் கூறப்பட்டுள்ளன. இவைகளை ஆராய்ந்தால் அன்று முதல் இன்றுவரை வளர்ந்து வந்துள்ள சமுதாய நிலையைப் பற்றிய அரிய செயல்களை அறியலாம். ஆகமத்தின் சிறப்பு நோக்கமான 'கடவுள் முன் எல்லோரும் ஒரு குலம்' என்ற கொள்கையை வேதவழியோடு இணைத்துக் காட்டும் திறனும் இந்நூலால் வெளிப்படும்.

இறைவழிபாட்டில் அனைவருக்கும் இடமுண்டு. வழிபடும் நிலையைப்பெற எல்லோரும் அதற்கான தகுதியைப் பெற வேண்டும். அத்தகுதி தீட்சையாகும். அகப்பூசை, புறப்பூசை என்ற இருவகை வழிபாடுகளிலும் அனைவருக்கும் உரிமை உண்டு என இவ்வாகமம் கூறுகின்றது.

பாஞ்சராத்திரத்தின் அடிப்படையான தத்துவம், பற்றற்று, பரமனைத் தொழுது, அதன்மூலம் பிறவிப் பெருங்கடலை நீந்துவ தாகும். இவ்வாகமத்தில் நூற்றெட்டு சம்மிதைகள் உண்டென்று கூறப் படுகிறது. திருவரங்கம் கோயிலில் அந்த நூற்றெட்டில் ஒன்றான பாரமேசுவர சம்மிதை முறைப்படி ஆராதிப்பதாகச் சொல்லப்பட்டாலும், சில கிரியைகள் பாரமேசுவர சம்மிதை வழியிலும் மற்றவை பாத்ம சம்மிதை முறையிலும் நடைபெற்று வருகின்றன. ஏனெனில் பாரமேசுவர கிரியைகள் மிக விரிவாக உள்ளமையால் அப்படியே நடை முறைப்படுத்துவது அருமை எனக் கருதிச் சில சடங்குகளுக்குப் பாத்ம

சம்மிதையும், மற்ற சடங்குகளுக்கு வேறு சில சம்மிதைகளும் நடைமுறைக்கு உகந்ததாக ஏற்கப்பட்டுள்ளன.

சம்மிதைகளை இன்று மிகுதியாகப் பழக்கத்திற்குக் கொண்டு வருபவர்கள் அர்ச்சகர்களேயாவார்கள். அவர்கள் தங்களுக்குத் தேவை யான பொருள்களைப் பல்வேறு சம்மிதையினின்று தேர்ந்தெடுத்து அவைகளின் துணைகொண்டு தனித்தனியே பல தலைப்பில் வழிபாட்டுமுறை, விழா முறை, பிராயச்சித்த முறை என்று தொகுத் துள்ளனர்

## 2:2:1 பாரமேசுவர சம்மிதை

பாரமேசுவர சம்மிதை திருவரங்கம் கோயில் அமைப்பிற்கு ஆதாரமாக அமைந்துள்ளது. இருபத்தாறு அத்தியாயங்களைக் கொண்டுள்ள இந்நூலில் பன்னிரண்டாவது அத்தியாயம் பவித்திரத் திருநாள் பற்றியும், பதினாறாவது அத்தியாயம் கொடியேற்றப் பெருவிழா பற்றியும், பதினேழாம் அத்தியாயம் அப்பெருவிழா நடைமுறை விதி பற்றியும் குறிக்கிறது.

## 2:2:2 அகிர்புத்தினிய சம்மிதை

பாஞ்சராத்திர ஆகம சம்மிதைகளில் ஒன்றான அகிர்புத்தினிய சம்மிதை வைணவத் திருக்கோயில்களில் இன்றியமையாது நடைபெற வேண்டிய ஐந்து விழாக்கள் பற்றிக் குறிக்கிறது. அவை 1) அத்தியயனத் திருநாள் 2) அக்கிரயனத் திருநாள் 3) கிருஷ்ணஜெயந்தி 4) கார்த்திகை திருவிளக்கு 5) பட்சத் திருநாள் [20] என்பன.

**அத்தியயனத் திருநாள்:** மார்கழித் திங்களில் நடைபெறும் திருநாள் அத்தியயனத் திருநாளாகும். இது வைகுண்ட ஏகாதசி திருவிழாவாகக் கொண்டாடப்பெறும். இருபது அல்லது இருபத்தி ரண்டு நாள்கள் நடைபெறும். இவ்விழாவில் மோட்ச உற்சவமும் அடங்கும். தைத்திங்களில் நடைபெறும் அறுவடைத் திருநாள் **அக்கிரயன உற்சவம்** எனப்படும். ஆவணித் திங்களில் கண்ணன் பிறந்தநாளில் நடைபெறும் திருநாள் **கிருஷ்ண ஜெயந்தி உற்சவம்**

எனப்படும். இராமன், வராகன், நரசிம்மன் போன்ற தெய்வங்களின் பிறந்தநாள் வழிபாடும் இவ்விழாவோடு நடைபெறும்.

கார்த்திகைத் திங்கள் முழுநிலவன்று நடைபெறும் தீபத் திருநாள் விளக்கீட்டுத் திருநாளாகும்.

திங்கள்தோறும் ஏகாதசி, அமாவாசை போன்ற நாள்களில் நடைபெறும் விழா, பட்ச உற்சவம் எனப்படும்.

பாஞ்சராத்திர ஆகமம் கூறும் இவ்வைந்து திருநாள்களும் திருவரங்கம் கோயிலில் நடைபெற்று வருகின்றன.

## 2:2:3 பாஞ்சராத்திரம் குறிக்கும் விழாக்கள்

பெருவிழா - பிரம்மோத்சவம் - பெருந்திருவிழா ஆண்டு தோறும் ஒவ்வொரு வைணவத் திருக்கோயில்களிலும் நடைபெறும் இவ்விழாவைக் குடமுழுக்கின் போதும், கோயிலில் திருவுருவப் பிரதிட்டையின் போதும் நடத்துவர். இதற்குப் பிரும்ம உத்ஸவம் என்ற பெயருண்டு. கொடியேற்றத் திருநாள் என்று தமிழில் இவ்விழாவை அழைப்பர். இப்பெருவிழாக்களேயன்றி, ஆழ்வார்கள், ஆசாரியார்கள் பிறந்தநாளையும், பிரதிட்டை நாளையும் விழாவாகக் கொண்டாடினர் அத்தியயனத் திருநாள் இராப்பத்தின் பத்தாம் நாளின் மறுநாள், ஆழ்வார் மோட்சம் என்று கொண்டாடுவது மோட்ச உத்சவம் எனப்படும்.

சதுர்மாத சயனத்தின் கடைசி நாளில் இறைவனைத் துயில் எழச் செய்வது உத்தான உற்சவம், போதன உற்சவம், பிரபோத உற்சவம் எனப் பல பெயர்களால் அழைக்கப்பெறும். கார்த்திகைத் திங்கள் முழுநிலவு நாளிலிருந்து பன்னிரண்டு நாள் கழித்து, இவ்விழா நடைபெறும். இக்கோயிலில் இவ்விழாவைக் கைசிக ஏகாதசி என்று அழைப்பர்.

ஊஞ்சல் திருநாள், பெருவிழாவின் எட்டாம் நாள் இரவு நடைபெறும். இது தனித் திருநாளாகவும், மூன்று அல்லது ஏழு அல்லது ஒன்பது நாள் திருநாளாகவும் நடைபெறும். கிருஷ்ணன் பிறந்த நாளன்றும் இவ்விழா நடைபெறும்.

வசந்தத் திருநாள் சிறப்புத் திருநாளாகி மாசித் திங்களில் நடப்பது வழக்கம். இவ்விழா வைகாசித் திங்களில் நடை பெறுவதுமுண்டு.

புரட்டாசித் திங்களில் ஒன்பது நாள்கள் தாயாருக்கு இரவு நேரத்தில் நடைபெறும் விழா நவராத்திரி விழா எனப்படும்.

நவராத்திரித் திருநாளின் பத்தாம் நாள் விசயதசமி உத்சவத் தன்று குதிரை வாகனத்தில் பெருமாள் எழுந்தருளி வன்னி மரத்தடிக்குச் சென்று அம்பு போடுவதால் இவ்விழாவை 'வேட்டைத் திருநாள்' என்றும் குறிப்பர். இது வெற்றித் திருநாள் என்றும் கொண்டாடப் பெறும். இவ்விழா புரட்டாசித் திங்களில் நடைபெறும். தெப்பக் குளத்தில் உள்ள மண்டபத்தில் பெருமாள் எழுந்தருளி நடைபெறும் விழா 'தெப்போத்சவம்' எனப்படும்.

பிரணய கலக உற்சவம், பெருமாளுக்கும் தாயாருக்கும் நடைபெறும் பிணக்கு பற்றிய விழாவாகும். இதனை 'ஊடல் விழா' என்றும் கூறலாம்.

பெருமாளை ஆற்றங்கரைக்கு எழுந்தருளப் பண்ணி ஒன்பது கலச நீரால் தெளிப்பது 'கங்கோத்பத்தி' உத்சவம் ஆகும். பவித்திர உத்சவத்தின் கடைசியிலும் இவ்விழா நிகழ்வுறும்.

கந்தகோத்சவம், மார்கழித் திங்களில் வாசனைத் தைலங்கள், சூர்ணம் முதலானவற்றை இறைவனுக்குச் சாத்தி மகிழும் விழாவாகும்.

ஜலக்கிரீடை உத்சவம், மதுமகோத்சவத்தின் ஒரு பகுதியாக நடக்கும். இவ்விழா சிறப்பாகக் கட்டப்பட்ட குளத்தில் இறைவனின் பாதுகையை வைத்து நடத்தப்படும் விழாவாகும்.

இவ்வாறு பல விழாக்களை விளக்கும் ஆகமம், வைணவத் திருத்தலங்களில் நடைபெறும் விழாக்களைத் துவாதசி உத்சவம், பங்க உத்சவம், பரிவர்த்தன உத்சவம், பாசோத்சவம், புஷ்பயாக மகோத்சவம், பிரயோச்சவம், பலோத்சவம், போதனோத்சவம், ராசக்கிரீடை உத்சவம், வைகாச உத்சவம், சதகோத்சவம், சீரங்கோத்சவம், சம்வத்சரோத்சவம், மகேயவா உத்சவம்,

ஹிண்டோத்சவம், ஹலகிரி உத்சவம் போன்ற பல விழாக்களைப் பற்றியும் குறிப்பிடுகின்றனர்.

இவைகளில் காலநேரங்களுக்கு ஏற்ப சில விழாக்கள் மட்டுமே திருவரங்கம் கோயிலில் இன்று நடைபெற்று வருகின்றன. ஒரு காலத்தில் ஏறத்தாழ எல்லா விழாக்களும் நடைபெற்று வந்திருக்கக் கூடும்.

திருவிழாக்கள் பற்றிய ஆய்வினை மேற்கொள்ளும்போது ஆகமம் சுட்டும் விழாக்கள் பற்றி அறிதல் நலம் பயக்கும் எனக் கருதி, இக்கோயிலின் நடைமுறையில் உள்ள பாஞ்சராத்திர ஆகமத்தில் சுட்டப்பட்டுள்ள விழாக்கள் பற்றிய செய்திகள் விளக்கப்பட்டுள்ளன

## 2:3 கோயில் ஒழுகு கூறும் விழாக்களும் வழிபாடுகளும்

'கோயில் ஒழுகு' திருவரங்கத்தில் இருக்கும் புகழ்பெற்ற வைணவத் திருக்கோயிலின் வரலாற்று நூலாகும். இந்நூல் விசய நகரப் பேரரசர் காலம்வரை இக்கோயிலில் நடைபெற்ற நிகழ்ச்சி களைக் கூறுவதாகும். மணிப்பிரவாள நடையில் இந்நூல் எழுதப் பட்டுள்ளது. இந்நூலை வரலாற்றுத் தொடர்புடைய நூல் என்றோ, இலக்கியச் சிறப்புடைய நூல் என்றோ கொள்ள இயலாது. இக்கோயிலுக்கென்று அமைந்த சில வழக்குச் சொற்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. 'உடையவரின் திட்டம்' என்ற பகுதியில் உள்ள வழக்குச் சொற்கள் பல இன்றும் வழங்கப்படுகின்றன. நீண்ட சொற் றொடர்களைக் கொண்டு இந்நூல் அமைந்துள்ளது. இலக்கணப் பிழைகளும், குறிகளும் தவறாகப் பதிப்பிக்கப்பட்டு இருப்பதால் பொருளை நன்கு அறிய இயலவில்லை. திருவரங்கம் கோயிலில் இந் நூலின் படிகள் மூன்று உள்ளன. இம்மூன்றிலும் நூலாசிரியர் பெயர் குறிப்பிடப் பெறவில்லை. இவை 1886ஆம் ஆண்டு அச்சிடப்பட்ட நூல்

1909ஆம் ஆண்டு ஆனந்தா அச்சகத்தில் அச்சிடப்பட்ட நூல். 1909ஆம் ஆண்டு உமாபதி சிவம் அச்சகத்தில் அச்சிடப்பட்ட நூல். இவை, இந்து அரசர்களும் அவர்களின் படைத் தலைவர்களும் பல காலங்களில் இக்கோயிலுக்குக் கொடுத்திருக்கும் கட்டளைகளை விளக்குகின்றன. ஆயினும் வரலாற்றுத் தொடர்பு சரியாக அமைய

வில்லை. ஆசாரிய பெருமக்களின் வழிமுறைகளையும், அரசர், படைத் தலைவர் ஆகியோரின் வழிமுறைகளையும் இக்கோயில் ஒழுகு ஓரளவு காட்டியுள்ளது. இவற்றால் இக்கோயிலில் ஆசாரியப் பெருமக்களது ஈடுபாடும், அரசப் பெருமக்களால் அளிக்கப்பட்ட நன்கொடைகளும் அவர்கள் ஆற்றிய திருப்பணிகளும் பற்றி அறிய முடிகிறது.

ஒழுகு என்பதற்கு ஒழுகும் முறைமை என்று பொருள் கொண்டு, கோயில் என்பதற்கு வைணவத் திருப்பதிகளுள் முதன்மையான திருவரங்கம் பெரியகோயில் என்று பொருள் கொண்டால் இந்நூல் திருவரங்கம் கோயிலின் நடைமுறைகளைச் சுட்டுவதாகக் கொள்ளலாம்.

ஒழுகு என்ற சொல் கிராமப் பதிவு என்ற பொருளில் திருவாய்ப்பாடியில் (தஞ்சாவூர் மாவட்டம்) உள்ள ஸ்ரீபுரீசுவரர் கல்வெட்டில் காணப்படுகிறது.[21] கிராமப் பதிவேட்டில் இறையிலி நிலம்பற்றி மாறுதல்களைச் செய்யும்படியாக உத்தரவு பிறப்பிக்கப் பட்டிருப்பது குறிக்கப்பட்டுள்ளது. குடி வழிப்பட்டியலிலும் ஒழுகு என்ற பெயர் காணப்படுகிறது. ஒழுகு என்பது, ஒழுகலாறு என்ற பொருளையும் சுட்டுவதாகக் கொள்ளலாம்.

கோயில் ஒழுகு போல் அண்ணன் மாளிகை ஒழுகு, திருமலை ஒழுகு (இராமாநுசரின் திருமலை திருப்பதிப் பணிகள்) பலகலவன் ஒழுகு போன்ற நூல்களும் வழங்கக் காண்கிறோம்.

பலகலவன் ஒழுகுதான் பின்னால் கோயில் ஒழுகு என்று மாறியிருக்கலாம் என்பர். உக்கிராணத்து அதிகாரி ஒருவர் கோயிலில் அன்றன்று நடந்த நிகழ்ச்சியினை நான்கு சாட்சிகள் முன்னால் எழுதியதைக் கோயில் ஒழுகு என்பர். கோயில் செயல் முறைகளிலோ, மரியாதைகளிலோ சிக்கல் தோன்றுமாயின் இக்குறிப்பைப் பார்த்துக் கணிப்பர்.

கோயில் கணக்கர்களால் தலைமுறை தலைமுறையாக இக்குறிப்புகள் எழுதப்பட்டு வந்திருக்கக் கூடும். தொடக்க காலத்தில் ஓர் ஏட்டுச் சுவடியில் எழுதப்பட்டன. முகமதியர், ஒய்சளர் படையெடுப் பிற்கு முன் ஏடாக இருந்த அவை அழிக்கப்பட்ட நிலையில் விசயநகர மன்னர்கள் காலத்தில் நூல் வடிவில் எழுதப்பட்டிருக்கலாம் என்று எண்ண இடமிருக்கிறது.

கோயில் ஒழுகில் சில பெயர் பலமுறை கூறப்பட்டிருக்கின்றன. அது படியெடுத்தவர்களால் நேர்ந்த பிழையாதல் கூடும்.

விசயநகர அரசர் காலத்தையும், அதற்குப் பின் நிகழ்ந்த பல செயல்களையும் இந்நூல் குறிப்பது பொருத்தமாக உள்ளது. இந்நூல் மதிற் சுவர்களிலும், தூண்களிலும் உள்ள கல்வெட்டுகளை அடிப்படையாகக் கொண்டு எழுதப்பட்டிருத்தல் கூடும். சில கல் வெட்டுகள் சிதைந்த நிலையில் உள்ளமையால் கோயிலில் நடக்கும் உற்சவங்களை நன்கு அறிந்தவர் கூறியவற்றை ஆதாரமாக வைத்தும் இந்நூல் எழுதப்பட்டிருக்கக் கூடும்.

இந்நூல் திருவரங்கம் கோயிலின் நடைமுறையிலிருந்த குருபரம்பரையின் வரலாறு என்றுகூடக் கூறலாம். வரலாற்றுத் தொடர் பான சமயம் பற்றிய செய்திகளும் இந்நூலில் காணப்படுகின்றன.

1909ஆம் ஆண்டு வெளிவந்துள்ள இந்நூலைப் பற்றி, விளக்கமாக ஹல்டஜ் மற்றும் வெங்கய்யா அவர்களால் 'எபிகிராபி இண்டியா' பகுதி 6இல் பக்கம் 322லும் கே.ஏ. சுப்பிரமணிய அய்யா அவர்களால் இண்டியன் ஆண்டிகுயரி, பகுதி 11இல் பக்கம் 131-144லிலும் விளக்கப்பட்டுள்ளன.

## 2:3:1 பங்குனி உத்திரத் திருநாள்

'ஒரு கால விசேடத்தில் பங்குனி உத்திரத்தன்று, தாயாரின் கொலுவீற்றிருக்கும் குளிர்சோலையில் தாயாரும் பெருமாளும் குமிழி நீருண்டு மகிழ்ந்திருந்தனர்.' இந்நாள் உத்திரத் திருநாளாக ஆண்டுதோறும் கொண்டாடப்படுகிறது.

இராமானுசர் பெருமாளுக்குத் திருவாராதனம் மற்றும் நித்தியத் திருநாள், பட்சத் திருநாள், மாதத் திருநாள், சம்வத்சரத் திருநாள், பெருவிழாக்கள் ஆகியவற்றை நடப்பித்தார். அவரே, இக்கோயிலில் ஆழ்வார்களை இருத்தி அவர்களின் திருநாள்களில் பாஞ்சராத்திர ஆகமவழி திருவிழாக்களை நடப்பித்தார். [22]

## பிரம்மோத்ஸவத்தின் எட்டாம் திருநாள்

இவ்வாறு விழா நடந்து வருங்கால் வழக்கமாக எட்டாம் நாள் அன்று விடியற்காலையில் பெருமாள் எல்லைக்கரைக்கு எழுந்தருளு கிற போது ஆனைக்காவல் (திருவானைக்கா) வடக்குத் தெருவில் அரங்கவாசலில் உள்ளே எழுந்தருளி அகிலாண்டேசுவரிக்குச் சேவை சாதித்து, இளநீர் அமுது செய்து, அங்குள்ள ஜம்பு தலத் தீர்த்தத்திலே திருவடி விளக்கி, அதற்கும் கிழக்கே உள்ள ஆழ்வார் திருமங்கைத் தோப்பில் எழுந்தருளுவார்.

மற்ற பிரும்மோற்சவத் திருநாளின் எட்டாம் நாளும் அவ்வாறே திருவடி விளக்கி அந்த வடக்கு வாசல் வழியாகத் திரும்பி, உத்தமர் கோயில் ஆழ்வார் திருமாளிகையான கதம்பத் தீர்த்தத்திற்கு எழுந்தருளும்காலை, சைவர்கள் கலகம் விளைவித்தனர். மூன்று ஆண்டு காலத்திற்கு இக்கலவரம் நடந்தது.

பின்பு சக வருடம் 1197லிருந்து நளவருடம் பங்குனித் திருநாளிலே எட்டாம் திருநாளுக்கு ஆனைக்கா எழுந்தருளாமல், அவ்வூருக்கு அருகில் அமைந்துள்ள திருவரங்கம் எல்லைக்கரை மண்டபத்தில் பெருமாள் எழுந்தருளினார். [23]

## 2:3:2 சித்திரைத் திருநாள்

சகஆண்டு 1149ஆம் ஆண்டு முகம்மதியர் படையெடுப்பைக் கருதி, பெருமாளையும், அவர்தம் இரு நாச்சிமார்களையும் சிறு பல்லக்கில் வைத்துப் பிள்ளைலோகாசார்யர், ஓர் அர்ச்சகர், இரண்டு பரிசாரகர்கள் மற்றும் ஸ்ரீபாதம் தாங்குவோருடன் திருமலைக் காடுகளுக்கு எழுந்தருளுவித்துக் காத்தனர்.

பின்னர் முகம்மதியர்கள் படையெடுப்பு நீங்கியவுடன் கோபண்ண உடையாரால் சக வருடம் 1193 பரிதாபி ஆண்டு வைகாசித் திங்கள் 17ஆம் நாளில்(A.D.1371) பெருமாள் திருவரங்கத் திருப்பதிக்குத் தம் இரு நாச்சிமார்களுடன் எழுந்தருளினார்.

பெருமாளுக்குப் பல ஆண்டுகள் விழா நடைபெறவில்லை. அனைத்து மக்களும் பெருமாளைக் காணவேண்டுமென்றும்,

வழிபடவேண்டுமென்றும் விரும்பி விருப்பண்ண உடையார் என்பவர் தம் பெயரில் சித்திரைத் திருநாளில் கொடியேற்றத் திருநாளை நடத்தினார்.[24]

## 2:3:3 தைத்தேர்



மன்மத ஆண்டு தைத்திங்கள் புனர்பூச நாளில் வீரபூபதி உடையார் பெயரில் திருநாள் நடந்து, பெருமாளுக்குத் திருத்தேர் விழாவும் நடந்தது.[25]

## 2:3:4 தெப்பத் திருநாள்



தொடக்கத்தில் காவிரியில் இவ்விழா கொண்டாடப்பட்டது விழாவின்போது, தங்க ஓடம் காவிரியில் கவிழும் நிலையேற்பட்டு, அன்றிருந்த கூரநாராயண ஜீயரால் ஓடம் காவிரியில் கவிழாது காப்பாற்றப்பட்டது. பின்னர் ஜீயரால் கோயிலுக்கு மேற்கே குளம் வெட்டப்பட்டு இவ்விழா நடைபெற்று வருகிறது. ஆயிரம் தீப தரிசனம் என்னும் பந்தக் காட்சியும் இத்தெப்பத்திருநாளில் நடைபெறும்.[26]

## 2:3:5 திருப்பவித்திரம்



சகம் 1347ஆம் ஆண்டு ஆவணித் திங்களில் திருப்பவித்திரத் திருநாள் சாற்றுமுறை அன்று அழகிய மணவாளப் பெருமாள் பெரிய ஜீயரை (மணவாள மாமுனிகள்) நேரே அழைத்து "நாளை முதலாகப் பெரிய திருமண்டபத்தில் 'ஈடு' காலக்ஷேபம் நடத்துக" என்று நியமித்தருளினார். அதன்படி பெருமாள் உபயநாச்சிமார்களுடன் புறப்பட்டு, பெரிய திருமண்டபம் ஏறியவுடன், ஜீயர் ஈடு காலக்ஷேபம் நடத்தினார் அன்று முதல் ஓர் ஆண்டு பெரிய அவசரம் அமுது செய்தவுடன் புறப்பட்டருளி 'ஈடு' உரையினைச் செவி சாற்றியருளினார். சாற்றுமுறை அன்று பெருமாள் ஆழ்வார்களுடனே அர்ச்சகமுகமாய்த் தோன்றி 'ஸ்ரீசைலசேதயாபாத்ரம்' தோற்றுவித்தார்.[27]

இன்றும் சுற்றுக் கோயில்களிலும், திவ்ய தேசங்களிலும் நாலாயிரம் சேவிக்கும் போது அந்தத் 'தனியன்' சேவிக்கப்படுகிறது.

## 2:3:6 அத்தியயனத் திருநாள்

ஒரு கார்த்திகைத் திருநாளில் பெருமாள் தன் துணைவியர் இருவருடன் திருமஞ்சனம் கண்டருளி வீற்றிருந்தார். திருமங்கை ஆழ்வார் தனது திருநெடுந்தாண்டகத்தைப் பெருமாள் திருச்செவியில் இசை, நாட்டியத்துடன் இசைத்தார். பெருமாளும் திருவுள்ளம் உகந்தருளி ஆழ்வாருக்கு எல்லா வரிசைகளும் தந்து சிறப்பித்தார். ஆழ்வாரிடம் பெருமாள் "வேண்டுவதென்" என்று வினவ ஆழ்வாரும், "அடியேனுக்கு ஒரு குறையுமில்லை; ஆயினும் மார்கழித் திருநாளில் அத்தியயனத் திருநாள் கொண்டாடும்போது, சடகோபன் சொல்லான திருவாய்மொழியை வேதங்களுடன் கேட்டருளி, வேதசாம்யமாக அனுக்கிரகித்தருள வேண்டும்" என்று விண்ணப்பம் செய்தார். பெருமாளும் மிகவும் உகந்தருளி அப்போதே சடகோபன் திருவாய் மொழிக்கு 'வேதசாம்யம்' அளித்து அத்தியயனத் திருநாளில் வேதங்களுடன் திருவாய்மொழியும் கேட்டருளத் திருவுள்ளம் கொண்டார்.

பின்னர் நாதமுனிகள் தம் காலத்தில் அத்தியயனத் திருநாளில் திருவாய்மொழி ஓதுவது போல், திருப்பல்லாண்டு, பெரியாழ்வார் திருமொழி, திருப்பாவை, நாச்சியார் திருமொழி, பெருமாள் திருமொழி, திருச்சந்தவிருத்தம், திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண்சிறுத்தாம்பு, பெரியதிருமொழி, திருநெடுந்தாண்டகம், திருக்குறுந்தாண்டகம் முதலியவைகளையும் திருமொழித் திருநாள் என்று பகல்பத்துத் திருநாளில் ஓதுமாறு செய்தார். நம்மாழ்வாரின் திருவாய்மொழியைத் 'திருவாய்மொழித் திருநாள்' என்றும் வகுத்து அவற்றைப் பகல்பத்து, இராப்பத்து என்று முறையே பெயரிட்டனர்.[28]

### 1. வசந்தத் திருநாள்

ருத்ரோத்காரி ஆண்டு அண்ணப்ப உடையார் கட்டளையாக வசந்தத் திருநாள் (கேடாக்குழித் திருநாள்) நடந்தது. அதற்கு நிவந்தமாக மல்லிதேவன் புத்தூர் எனும் கிராமம் அளிக்கப்பட்டது.

அதே ஆண்டு புரட்டாசி மாதத்தில் ஆதித்ததேவ உடையார் திருநாளான உத்திரட்டாதியில் திருத்தேர்த் திருநாள் நடப்பிக்கும்படி

அண்ணைப்ப உடையார் திருமலை தந்தான், திருவிக்கிரமன் திருவீதியில் கொடியேற்றத் திருநாள் நடப்பித்து, நிவந்தமாகக் கொடியாலம் என்னும் கிராமத்தை அளித்தார்.[29]

## 2. ஊஞ்சல் திருநாள்

அணியரங்கன் திருமுற்றத்தின் கிழக்குப் புறத்தில் திருவூஞ்சல் மண்டபம் அழகுறக் கட்டுவித்துத் திருநாள் நடப்பித்தது கந்தாடை ராமானுசரின் பணியாகும்.[30]

## 3. ஆயிரங் குடத்திருமஞ்சனம் பெரிய திருப்பாவாடை

திருமலைநாத உத்தமநம்பி அவர்கள் கோயிலின் பெரிய திருமண்டபத்துக்குக் கிழக்கில் நூற்றுக்கால் மண்டபம் கட்டுவித்து, அதில் ஜேஷ்டாபிடேகத்தன்று ஆயிரம் குடங்களால் நீராட்டுவித்தார்.[31]

## ஆடிப்பெருக்கு

இவ்விழா இக்கோயிலில் மிகச் சிறப்பாகக் கொண்டாடப் படுகிறது. அன்றைய நாளில், கோயில் எம்பெருமானடியார்களால் ‘ராக்கிருதை’ என்ற ஒருவகை நடனம் ஆடப்படும். பெருமாள் காவிரிக்கு எழுந்தருளுவார். சேலை மற்றும் மங்கலப் பொருள்கள் பெருமாள் திருமுன் காவிரியில் விடப்படும்.[32]

## கார்த்திகை தீபத் திருநாள்

கார்த்திகை தீபத் திருநாள் பற்றிய செய்தியையும் கோயில் ஒழுகு குறிப்பிடுகிறது.[33]

## கைசிக ஏகாதசித் திருநாள்

“முன்பு திருக்குறுங்குடியில் நடந்த கைசிக விருத்தாந்தத்தைப் பெருமாள் தம்முடைய கோயிலிலே உத்தாந துவாதசியில் கால்யோச்ச காலத்தில் விண்ணப்பம் செய்யச்சொல்லி, ஸ்ரீபாஞ்சராத்ர ஆகமத்தின் வழியில், தாம் அந்நாளில் திருவீதி எழுந்தருளி அதற்குப் பொறுப்பாளராகப் பெரிய கோயில் நம்பிக்கு உரிமை அளித்து, தாம்

கோயிலுள் எழுந்தருளியதும் முதலில் கைசிக புராணம் படித்து, அவருக்கு பிரம்மரத மரியாதையும் அளித்தார்." என்ற செய்தி இவ்விழா பெரிய கோயிலில் நடைபெற்ற வரலாற்றைச் சுட்டுவதாகும்.[34]

## சங்கராந்தி திருநாள் (தைப் பொங்கல்)

ஆயிரங்கால் மண்டபத்து மேற்புறத்தில் சங்கராந்தி திருநாள் நடைபெறும்.[35]

## திருவூறல் திருநாள்

பெருமாள் தனது உலாவிற்கு விருப்பமான தோளுக்கினியா னில் மேல் புறப்பட்டருளி, திருக்காவிரியில் திருவூறல் திருநாளைக் கண்டு மகிழ்ந்தார். அன்று அரையரை அழைத்து, 'நம் நடையழகுக்கு ஈடாகப் பாடும்' என்று அருளப்பாடு சாதிக்க, அவரும் இசையிலே ஒத்துப் பெருமாளுடன் பாடிக்கொண்டே வர கோயிலில் எழுந் தருளினார்.[36]

இன்றைய நடைமுறையில் திருவூறல் திருநாள் என்ற பெயரில் இவ்விழா நடைபெறுதலில்லை. சித்திரை முழு நிலவன்று 'கஜேந்திர மோட்சம்' என்ற பெயரில் தென்திருக்காவிரிக் கரையில் இத்திருநாள் நடந்து வருகிறது.

## மஞ்சன குளித் திருநாள்

கோயில் நான்காம் திருச்சுற்றின் மேல் மூலையில், பெருமாளுக்கு மஞ்சனக்குளித் திருநாள் நடைபெற்று வந்தது. ஒருகால், பெருமாள் மஞ்சனக்குளித் திருநாளுக்கு எழுந்தருளாமல், தனது பரிசாரகர்களுக்கு அருளப்பாடிட்டு, "நம் கலியனை மஞ்சனக்குளித் திருநாள்' கண்டருளப் பண்ணி வாருங்கோள்"[37] என்று திருவுள்ளமாக, அவ்வாறே அன்றிலிருந்து அத்திருநாள் திருமங்கை மன்னருக்கு நடந்து வரலாயிற்று.

இப்பொழுது, மஞ்சனக்குளித் திருநாள் திருமங்கை ஆழ்வாருக்கு இங்கு நடப்பதில்லை. ஒரு காலத்தில் இத் திருநாளைப்

பெருமாள், திருமங்கை ஆழ்வார் அவதரித்த 'திரு ஆலியில்' நடத்தப் பணித்தார். அந்நாளிலிருந்து இத்திருநாள் ஆலியில் தொடர்ந்து நடந்து வருகிறது.

தனக்கு நடந்து வந்த விழாவை ஆழ்வாருக்குச் செய்யப் பணித்தார். பின்னர் ஆழ்வார் அவதரித்தத் திரு ஆலியிலே அவ் விழாவை நடத்த வேண்டும் என்று பெருமாள் கட்டளையிட்டார் என்ற மரபு வழிச் செய்தி ஈண்டு நோக்கத்தக்கது.

இவ்வாறு திருவரங்கம் கோயிலின் தலபுராணமாகவும, அக்கோயிலைப் பற்றி அனைத்துச் செய்திகளும் அறிய உதவும் முதல் நூலாகவும் விளங்கும் கோயில் ஒழுகு என்ற நூல், அக்கோயிலின் திருவிழாக்களை விளக்குகிறது.

இக்கோயிலில் நடைபெற்று வரும் இவ்விழாக்களைப் பற்றிய செய்திகள் கல்வெட்டுக்களில் மட்டுமின்றித் தமிழ் இலக்கியங்கள், வடமொழி நூல்கள், நாலாயிர திவ்யப்பிரபந்த ஈடு உரை, பிள்ளைப் பெருமாளையங்காரின் அஷ்டப் பிரபந்தம், மாத்வர்களின் இலக்கியப் படைப்புக்கள், தியாகய்யர் கீர்த்தனைகள், நாடோடிப் பாடல், கும்மிப் பாடல் போன்ற பலவற்றிலும் இடம் பெற்றுள்ளன.

ஒரு கோயிலில் நடந்து வரும் விழாக்களை, அக்காலங்களில் தோன்றிய இலக்கியப்படைப்புக்கள் குறிப்பிடுவது இயல்பாகும். தமிழ் இலக்கியங்கள், பல விழாக்களைத் தமிழர்கள் கொண்டாடி வருகின்றனர் என்று குறித்தாலும், இக்கோயிலில் (திருவரங்கம் கோயிலில்) நடந்த விழாக்கள் இவை என்று தனித்து சுட்டுவதைக் காண இயலவில்லை.

அகநானூற்றில் ஒரு பாடல், உறையூரில் பங்குனி உத்திர விழா நடந்ததைத் தெரிவிக்கிறது.[38]

இக்கோயிலைப் பற்றி இரண்டுக்கும் மேற்பட்ட இடங்களில் சுட்டும் சிலப்பதிகாரம் கூட[39] இக்கோயிலின் விழாக்கள் பற்றிச் சுட்டவில்லை.

இத்திருவரங்கத்தில் வாழ்ந்த உத்தமநம்பி வழி வந்தோரால் எழுதப்பட்ட திவ்யசூரி சரிதம், இலட்சுமி காவியம்[40] மற்றும் ஸ்ரீரங்கராஜ சரித பாணம் போன்ற வடமொழி நூல்கள் இக்கோயிலின் விழாக்கள் பற்றிய செய்திகளை மிகுதியாகத் தருகின்றன. இக்கோயிலில் உரிமையுடையவராகவும் முறைக்காரராகவும் இன்றும் உள்ள உத்தம நம்பியின் முன்னோர் இக்கோயிலைப் பற்றிக் கூறப்புகுந்தபோது தங்கள் நூல்களில் இக்கோயிலின் விழாக்கள் பற்றியும் விளக்கிக் கூறினர்.

பிள்ளைப்பெருமாளையங்கார் இவ்வூரில் வாழ்ந்த வைணவப் பெரியார் ஆவர். அவரது அஷ்டப்பிரபந்தத்தில், பெருமாள் எழுந் தருளின கருடவாகனம், அனுமார் வாகனம், தேர்த்திருநாள் ஆகியவற்றைக் குறிப்பிடுவதனைக் காண்கின்றோம்.

நாலாயிரம் பாடிய ஆழ்வார் பெருமக்கள், தங்கள் படைப்புக்களில் இவ்வூரில் பெருமாளின் தோற்றம், கோயில் அமைப்பு, மதிற்சுவர் போன்றவைகளைப் பாடிப் போந்தனரே ஒழிய, இவ்வூரில் அவர்கள் காலத்தில் நடந்த விழாக்களைத் தங்கள் நூல்களில் எங்கும் விரிவாக விளக்கியதாகத் தெரியவில்லை.

திருஞானசம்பந்தப் பெருமான் மயிலைப் பதிகத்தில், மயிலையில் திங்கள்தோறும் நடைபெறும் விழாவைச் சுட்டியதைத் தேவாரம் குறிப்பதைக் காண்கின்றோம். அது போன்று ஆழ்வார்கள் குறிப்பிட்டுக் கூறவில்லை.

## 2:4 திவ்யசூரி சரிதம்

திவ்யசூரி சரிதம் என்ற நூலின் ஆசிரியர் கருடவாகன பண்டிதர். இவர் 74ஆவது பட்டத்தைச் சார்ந்த உத்தமநம்பி என்று உத்தமநம்பி வைபவம் குறிப்பிடுகின்றது. இந்நூல் வடமொழி யில் எழுதப்பட்டது. இதன் தமிழாக்கம் கொண்டு இந்நூல் குறிப்பிடும் விழாக்கள் பற்றிக் காண்போம்.

## 2:4:1 பங்குனித் திருநாள்

பங்குனித் திருநாள் இந்நூலில் கூறியுள்ளது போலவே இன்றும் நடைபெறுகிறதெனினும், 'பங்குனித் திருநாளில் உறையூருக்குப் பெருமாள் எழுந்தருளுவது ஐந்தாம் நாளில்' என்று கூறியிருப்பது ஆறாம் நாளில் நடைபெறுகிறது.

'மூன்றாம் திருநாளில் பெருமாள் குதிரை வாகனத்தில் எழுந்தருளி ஜீயபுரம் சென்றார்' என்று இந்நூல் குறிப்பிடுகிறது.[41] பின்னர் மழையின் காரணமாகப் பல்லக்கில் புறப்பட்டார் என்று உத்தமநம்பி வைபவம் கூறுவதால்,[42] அன்றிலிருந்து இன்று வரை ஜீயபுரம் எழுந்தருளும் போது இந்நூல் குறிப்பிடும் குதிரை வாகனத்தில் எழுந்தருளாமல் பெருமாள் பல்லக்கில் எழுந்தருளுகிறார். ஜீயபுரத்தில் உள்ள அம்மையார் தண்ணீர்ப்பந்தல் பற்றி இந்நூல் ஏதும் குறிக்கவில்லை.

பங்குனி உத்திரத்தன்று நடைபெறும் 'பிரணய கலகத் திருநாள்' பற்றிய குறிப்பினையும் இந்நூல் குறிக்கவில்லை.

## 2:4:2 திருப்பவித்திரம்

'ஆவணி மாதம் ஏகாதசி அன்று திருவரங்கநாதன் அனைத்து எம்பெருமான்களும் வணங்கப் பெற்றவனாய், திருப்பவித்திரத் திருநாளில் திருவுள்ளம் பற்றி, அத்திருநாள் காலத்தில் ஒன்பது நாள்கள் வரை, கருடன் முதலிய வாகனங்களில் முறையாக எழுந்தருளி, பின் 'அவபிரதமும்' கண்டருளுவார்.[43]

இன்றும் ஒன்பது நாள்கள் பவித்திர விழா நடைபெற்றாலும், கருடன் முதலிய வாகனத்தில் பெருமாள் புறப்பாடு காண்பது இன்று நடைமுறையில் இல்லை.

இந்நூலாசிரியர் காலத்தில் இவ்விழாவில் பெருமாள் பெருவிழாக் காலத்தைப் போல வாகனங்களில் எழுந்தருளியிருக்க லாம். இம்முறை என்று மாறியது எனத் தெரியவில்லை.

## 2:4:3 அத்தியயனத் திருநாள்

இந்நூல் முதலில் மார்கழி மாதத்தில் அத்தியயனத் திருநாள் நடந்தமையைத் தெரிவிக்கிறது.

"மார்கழி மாதம் பிறந்ததும், மலர்களின் மணமும், பனித் துளிகளின் சேர்க்கையும் இணைந்து குளிர்ந்த இளந்தென்றல் வீசும். இம்மாதத்தில் திருவரங்கத்தில் உள்ள யாவரும் வைகறையில் துயில் எழுந்து, பாற்சோறு, வெண்பொங்கல், தயிர் சாதம், முதலிய அமுது வகைகளைப் பெருமாளுக்குப் படைத்துத் திருப்பள்ளி எழுச்சி கொண்டாடுவர். இம்மாதத்தில் பெருமாள் திராவிட வேதத்தையும், (நாலாயிர திவ்யப்ரபந்தம்) வேதபாராயணத்தையும் திருச்செவியில் ஏற்று ஆயிரக்கால் மண்டபத்தில் எழுந்தருளி இருபது நாள் திருவத்தியயனத் திருநாள் கண்டருளுவார்."

"இவ்விழாவிற்கு, நம்மாழ்வாரை ஆழ்வார் திருநகரியிலிருந்து திருவரங்கம் எழுந்தருளிச் செய்யப் பெருமாள் தம் பணியாளர்களை, விருதுகளோடு அனுப்பினார். கார்த்திகை தீபத்தன்று அவர்கள் இங்கிருந்து ஆழ்வார் திருநகரிக்குச் சென்றனர்." என்ற செய்தியை இந்நூல் தெரிவிக்கிறது. மேலும் இந்நூல் "திருமங்கையாழ்வார் வேண்டுகோளுக்கிணங்க, பெருமாள் நம்மாழ்வாரின் திருவாய் மொழியினை அத்தியயனத்திருநாளில் கேட்டருளினார் என்றும், ஆழ்வாரின் வேண்டுகோளின்படி திருவாய்மொழிக்கு வேதத்தின் சிறப்பினை அளித்தார்" என்றும் தெரிவிக்கிறது.[44]

## 1. ஊஞ்சல் திருநாள்

"சூரியன் மகரராசியை அடைந்ததும், பெருமாள் ஊஞ்சல் விளையாட்டினை விளையாட விரும்பித் தம் தேவிமார்களுடன் (ஸ்ரீதேவி, பூதேவி) நூற்றுக்கால் மண்டபத்தில் இரத்தினமயமான ஊஞ்சலில் விழாக் கண்டு மகிழ்ந்தார்" என்று இந்நூல் கூறுகிறது.[45] இவ்விழா தொடர்ந்து ஒன்பது நாள்கள் நடைபெறுவதையும், ஐப்பசியில் இவ்விழா நடைபெறுவதையும் இந்நூல் குறிப்பிடவில்லை.

## 2. ஆடிப்பெருக்கு

"காவிரி நதி, ஆடிமாதம் 18ஆம் நாளன்று, திருவரங்கத்தைச் சூழ்ந்துகொண்டு, அங்கெழுந்தருளியிருக்கும் பெருமாளிடத்தில் இரத்தினாபரணத்தையும் வஸ்திரத்தையும் தனக்குத் தரவேண்டு மென்று வேண்டிற்று.

அப்போது காவிரி வெள்ளத்தால் சூழப்பட்ட திருமாலின் தோற்றமானது, ஊழிக்காலத்தில் வெள்ளப்பெருக்கில் ஆலிலையில் பள்ளிகொண்டிருக்கும் திருமாலின் தோற்றத்தை ஒத்திருந்தது."[46]

## 3. கிருஷ்ண ஜெயந்தி

'கார் காலமாகிய ஆவணி மாதம், தேய்பிறை, அட்டமி நாளில் (புதன்கிழமையன்று) ரோகிணி நாளில் இரவில் ஸ்ரீஜயந்தி நாளில் திருவரங்கநாதன் திருமஞ்சனம் ஆடி அலங்காரம் செய்து கொண்டு, பலகாரங்கள், அன்னங்கள் முதலியன அமுது செய்தருளி இவ்விழாவைக் காண்பார்.[47]

இவ்வாறே இன்றும் இவ்விழா நடைபெறுகின்றது.

## 4. கார்த்திகை தீபம்

"சொக்கப்பனை எனப்படும் பெருவிளக்கு முழுவதும் அணைந்ததும் பெருமாள் தாயார் சன்னிதி வழியாக புறப்பட்டு அழகிய மணவாளன் திருமண்டபத்தில், சேர பாண்டியன் சிம்மாசனத்தில் வீற்றிருந்து கலியன் பாட்டுக்களைக் கேட்டு அவர் திருமிடற்றில் தைலத்தைப் பூசி அவ்விடத்திலிருந்து விடைபெற்றார்.[48]

இங்கு கார்த்திகை தீபத் திருநாள் நடைபெற்றதையும், அந்நாளில் பெருமாள் திருமுன்னர் திருமங்கை ஆழ்வார் தம் திருப்பாடல்களைப் பாடினார் என்பதையும் அறிகிறோம். இன்றும் அந்நாளில், அரையரால் திருநெடுந்தாண்டகம் பெருமாள் திருமுன்னர் ஓதப்படுகிறது.

## 5. கைசிக ஏகாதசி

பாற்கடலில் பள்ளி கொண்டருளும் பரமபுருடன் பற்றிய செய்தி 'பிரபோதத்தை' (உயர் ஞானம்) உண்டு பண்ணுகிற ஏகாதசி இரவின் முடிவில் ஸ்ரீரங்கநாதன், முற்காலத்தில் கௌசிக மாமுனிவர் கூறிய மொழிகளைக் கேட்டருளியது போலவே, தாழ்ந்த குலத்தினரான பாணன் செய்தருளிய தோத்திரப் பாடலாகிய கைசிக கானத்தையும் கேட்டருளுகின்றார்.[49]

இன்றும் ஏகாதசியின் இரவில், பெருமாள் திருமுன்னர்க் கைசிகப் புராணம் பட்டரால் படிக்கப்படுகின்றது.

மேற்குறித்த விழாக்களன்றி இத்திருக்கோயிலில் நடைபெறும் ஏனைய விழாக்களை இந்நூல் குறிப்பிடவில்லை. இந்நூலில் குறிக்கப்பட்ட விழாக்கள் சிறப்பாக வருணிக்கப்பட்டுள்ளன.

பெருமாளின் விழாக்காலங்களில், திருவீதியில் அவர் உலாவைக் காண விரும்பும் மகளிர் தோற்றத்தை இலக்கியச் சுவை ததும்ப இந்நூலாசிரியர் விளக்குகிறார்.

## 2:5 இலட்சுமி காவியம்

இக்காவியம் உறையூர் கமலவல்லி நாச்சியார் பற்றியும், திருவரங்கநாதன் பற்றியும் எழுதப்பட்டது. இதன் ஆசிரியர் உத்தமநம்பி திருமலாச்சாரியார் (கி.பி. 1450). இவர் உத்தமநம்பி வழித்தோன்றலில் 82ஆவது உத்தமநம்பி ஆவார். இக்காவியத்தில் திருவரங்கம் கோயிலில் நடைபெறும் விழாக்கள் பற்றிய குறிப்புகள் உள்ளன.

### 2:5:1 பங்குனித் திருநாள்

பங்குனித் திருநாள் ஆதிபிரம்மோத்ஸவம் பற்றி, இக்காவியம் கூறுவது போலவே இன்றும் இக்கோயிலில் நடைபெறுகின்றது.

பெருமாளின் அனுமதியுடன் சேனை முதலியார் (விஷ்வக் சேனர்) பங்குனி பரணியில் அங்குரார்ப்பணம் செய்து, கார்த்திகையில்

ஓமம், பலி, கருடப்பிரதிட்டை முதலியவற்றை நடத்திப் பரிவாரங்களோடு நகர சோதனை செய்வார்.[50]

ஆயின் இன்று நகர சோதனை முன்னும், கருடப் பிரதிட்டைப் பின்புமாக நடக்கிறது.

உரோகிணியன்று முதல் திருநாள் நல்ல நேரத்தில் தொடங்கிய தாகக் கூறும் காவியம், இன்று முதல் திருநாளன்று கண்ணாடி அறையில் பெருமாள் எழுந்தருளுவதைப் பற்றிக் குறிக்கவில்லை காரணம் கண்ணாடி அறை பிற்காலத்தில் சேர்க்கப்பட்டதாகத் தெரிகிறது.

இரண்டாம், மூன்றாம், நான்காம் திருநாள்கள் பற்றிய குறிப்புகள் காவியம் கூறும் முறையில் நடைபெறுகின்றன.

ஐந்தாம் திருநாள் உறையூர் எழுந்தருளுவதாகக் காவியம், திவ்யசூரி சரித்தைப் போன்றே குறித்துள்ளது. [51] ஆயின் இன்று ஆறாம் திருநாள் அன்று பெருமாள் உறையூர் எழுந்தருளுகிறார்.

ஆறாம் திருநாள் யானை வாகனம் பற்றிக் காவியம் குறிப்பிட்டு அன்றைய தினம் பெருமாள் பல்லவராயன் தோட்டம் சென்று, யானை வாகனத்துக்கேற்ற உடை பூண்டு, கோயில் வந்து யானை வாகனம் ஏறி வீதி வலம் செல்வார் என்று தெரிவிக்கிறது.[52]

இன்று பங்குனித் திருநாளில் யானை வாகனம் இல்லை. பல்லவராயன் மடம் என்பது மணவாள மாமுனிகள் சன்னிதிக்குப் பெயர். அது பல்லவராயனால் கட்டப்பட்டது என்று அங்குள்ள கல்வெட்டு கூறுகின்றது.[53]

மேலும் யானை வாகனத்தில் பெருமாளோடு அர்ச்சகர் உட்கார்ந்து வருவதும், யானை வாகனம் விட்டிறங்கிப் பெருமாளும், ஆண்டாளும் மாலை மாற்றிக் கொள்வதும் ஆகிய இக்கால நிகழ்ச்சிகள் காவியத்தில் இடம் பெறவில்லை.

## ஏழாம் திருநாள்

"மகத்தன்று பெருமாள் வசந்த வேடம் தரித்துக் கொண்டு உபய நாச்சிமாரோடு சூர்ணாபிஷேகம் செய்து கொண்டார்.

கூடியிருந்த எல்லோரும் ஒருவர் மேல் ஒருவர் மஞ்சள் பொடியைத் தூவி விளையாடினர். அன்று மாலை நேரத்தில் பெருமாள் புறப்பட்டு, கொட்டார வாசலில் நெல் அளவு கண்டார். பின்பு வலமாக வந்து தாயார் கோயில் போய் இருபுறமும் வரிசையாய் நிற்கும் தாசிகள் மூலம் திருவந்திக்காப்பு செய்துகொண்டு, சிம்மாசனத்தில் வீற்றிருந்து திருமஞ்சனம் கண்டருளிப் பூந்தேரில் புறப்பட்டு, மூலைதோறும் நடனங் களைப் பார்த்துக்கொண்டே வீதிவலம் வந்து உள்ளே எழுந்தார்."[54]

பாஞ்சராத்திரப்படி இன்று நடக்கிற ஜலக்கிரீடை, காவியத்தில் சொல்லப்படவில்லை.

## எட்டாம் திருநாள்

"பூரத்தன்று காலையில் பெருமாள் ஸ்ரீரங்கத்தின் எல்லையைப் பார்ப்பதற்காகப் புறப்பட்டு, நாழி(கை)கேட்டான் வாசல் வழியாக ஐந்து கோபுரங்களையும் தாண்டி வாமனாச்சரமத்தைப் பார்த்துக் கொண்டே தென் திருக்காவிரி வடகரை சென்றடைவார்" என்று காவியம் கூறும்.[55]

வாமனாச்சரமம் என்ற காவியம் கூறும் வாமனப் பெருமாள் சன்னிதி பஞ்சகோபுரத்திற்கு வெளியே என்று கணக்கிட்டவாறு இராய கோபுரத்திற்கு உட்பட்ட திருக்குறளப்பன் சன்னிதியே என்று தெரிகிறது. இச்சன்னிதி, புராணப் புகழ் பெற்றதென்று கோயில் ஒழுகும் தெரிவிக்கும்.[56]

வாமனப் பெருமாளுக்கு ஸ்ரீரங்கத்தில் உபநயனம் நடப்பதாகப் பாஞ்சராத்திர பாரமேசுவர சம்ஹிதையிலிருக்கும் விளக்கம், ஸ்ரீரங்க மஹாத்மியம் என்னும் நூலிலும் உள்ளது.[57]

மேலும், எல்லையைப் பார்ப்பதற்காகப் பெருமாள் செல்லும் தென்காவிரி வடகரைக்கு இன்று பெருமாள் செல்வதில்லை. அதற்கு மாறாகப் பெருமாள் வடதிருக்காவிரி தென்கரைக்கு எழுந்தருளுகிறார்.

## ஒன்பதாம் திருநாள்

"உத்திரத்தன்று பெருமாள் இரதயாத்திரை செய்து தாயார் கோயிலுக்குச் செல்வார்"[58]

இவ்வாறு காவியம் கூற இன்று தாயார் கோயிலுக்குப் பெருமாள் செல்வது முன்னும் ரதயாத்திரை பின்னுமாக நடைபெறு கிறது.

தாயார் கோயிலில் நடக்கும் பிரணயகலகம் பற்றியும், கத்யசரணாகதி பற்றியும், திவ்யசூரி சரிதம் கூறாதது போன்றே இக்காவியமும் குறிக்கவில்லை. இக்கவியின் காலத்தில் பிரணய கலகம் என்ற விழா நடக்கவில்லையோ, அன்றி நடந்து, கவி அதைக் குறிக்க மறந்தனரோ என அறிய முடியவில்லை.

## தீர்த்தவாரி

"பெருமாள் தீர்த்தவாரிக்காக (விழாவின் கடைசியில்) வடதிருக்காவிரி சென்று 'வருண தீர்த்தம்' செல்லும் ரித்விக்குக ளோடு நீராடினார், உடன் வந்தோர் எல்லோரும் நீராடினர்"[59] இவ்வாறு காவியம் கூற, இன்று பெருமாள் தாயாரோடே இருந்துவிடுவதால், தீர்த்தவாரிக்குச் சின்னப்பெருமாள் மட்டும் வடதிருக்காவிரிக்கு எழுந்தருளி தீர்த்தவாரி காண்பார்.

இக்காவியம் 10ஆம் திருநாள் பற்றிக் குறிக்கையில், "அஸ்த நட்சத்திரத்தில் பகல் நேரத்தில் பெருமாள் மண்டபத்தில் திருமஞ்சனம் செய்துகொண்டு பாஞ்சராத்திர முறைப்படி மலர் வேள்வி கண்டருளுவார்" என்று கூறுகிறது.[60]

ஆயின் பத்தாம் நாளில், காவியம் குறிக்கும் மலர்வேள்வித் (புஷ்பயாகத்) திருநாள் இன்று இக்கோயிலில் நடப்பதில்லை பெருவிழாவில் புஷ்பயாகம் நடத்த வேண்டும் என்று ஆகமமும் கூறுகிறது. தேர்த்திருவிழா நடைபெறுகிறது. "தேரிலிருந்து பெருமாள் இறங்கி, ஏழு மதில்களை வலம்வந்து கோயிலுள் செல்கிறார். வழியில் 'படிப்பு' என்னும் திருப்பணி மாலையைச் செவியுறுகிறார் என்று காவியம் கூறுகிறது."[61]

இன்று சப்தாவரணத்தன்று இராமானுச நூற்றந்தாதியைக் கேட்பதன் பொருட்டு மேளதாளமில்லாமல் பெருமாள் புறப்பட்டு வீதிவலம் வரும் நிகழ்ச்சியை, இக்காவியம் சுட்டவில்லை.

சப்தாவரணத்தோடு கவி இவ்விழா பற்றிய நடைமுறைகளை முடித்துக் கொள்கிறார். இன்று நடைபெறும் ஆளும் பல்லக்கு, விடையாற்றி பற்றிய குறிப்புகளைக் கவி சுட்டவில்லை.

கல்வெட்டுகள் குறிக்கும் அம்மையார் தண்ணீர்ப் பந்தலுக்குப் பங்குனித் திருநாள் மூன்றாம் நாள் எழுந்தருளுவதைத் திவ்யசூரி சரிதம் போன்றே இக்காவியமும் சுட்டவில்லை.

## 2:5:2 அத்தியயனத் திருநாள்

பெருமாள் மார்கழி முதல் நாள், திருப்பள்ளி எழுச்சியினால் பள்ளியுணர்ந்து, திருவாராதனம் கண்டருளி, வேதபாராயணம் கேட்டு மேள வாத்தியங்களுடன் அத்தியயனத் திருநாள் மண்டபம் சென்று அடைவார். அங்கு நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களால் ஸேவிக்கப் பெற்று அவர்களின் பாசுரங்களையும், அவற்றில் உள்ள சரித்திரத்தின் அபிநயத்தையும் அனுபவிப்பார்.

மாலையில் பெருமாள் மண்டபத்திலிருந்து புறப்பாடு கண்டு, நின்றபோது நாட்டியம் கண்டும், போகும்போது வாத்யம் கேட்டும் உள்ளே எழுந்தருளுவார். ஒன்பது நாளும் இவ்வாறு நடந்து, பத்தாம் நாள் மோகினி (நாச்சியார் திருக்கோலம்) அலங்காரம் காண்பர்.

பதினோராம் நாள், வேதபாராயணம் கேட்டருளி வடக்குவாசல் வழியாகச் சென்று நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், இராமானுசர் மூவரையும் தம் திருவடிகளால் தீண்டி அருள் வழங்குவார். விழா மண்டபத்தில் எழுந்தருளி, நம்மாழ்வார் பிரபந்தங்களையும், கீதங்களையும் கேட்டருளி, இருபதாம் நாள் அன்று (கடைசி நாள்) நம்மாழ்வார் சரணாகதியையும் ஏற்று அருள்புரிவார்.[62]

இவ்வாறு அத்தியயனத் திருநாள் பற்றி இலட்சுமி காவியம் குறித்த போதிலும், இன்று நடைமுறையில் சில மாற்றங்கள் உள்ளன.

மார்கழி முதல் நாள் விழாத் தொடங்கும் என்று காவியம் குறிப்பது. இன்றைய நாளில் மார்கழித் திங்கள் மறைமதி நாளில் திருநெடுந் தாண்டகமும், மறுநாள் முதல் திருமொழித் திருநாளும் தொடங்குகிறது.

## 2:5:3 தைப்பொங்கல்

"தைத் திங்கள் முதல்நாள் பொங்கல். அன்று பெருமாள் உபய நாச்சிமாரோடு ஆயிரக்கால் மண்டபம் எழுந்தருளுவார்."[63] பெருமாள் இன்றும் அந்நாளில் அம்மண்டபம் எழுந்தருளுகிறார்.

தைத்திங்கள் பூபதித் திருநாள், மாசித் திருநாள் (தெப்பத் திருநாள்) சித்திரை விருப்பன் திருநாள் பற்றிய குறிப்பு இக்காவியத்தில் ஏதும் இல்லை. காரணம், இக்கவியின் காலத்தில் அவ்விழாக்கள் தொடங்கப்படவில்லை. அவை பின்னர் ஏற்பட்ட விழாக்களாகும்.

## 2:6 ஸ்ரீரங்க சரிதபாணம்

பாணம் என்பது நாடகம் போன்று அமைந்துள்ள வடிவம். இந் நூல் கௌண்டிண்ய கோத்திரியான ஸ்ரீநிவாஸ கவியால் எழுதப்பட்டது. இவருடைய காலம் தெரியவில்லை. 1881, 1891ஆம் ஆண்டுகளில் க்ரந்த எழுத்தில் இந்நூல் அச்சிடப்பட்டிருக்கிறது.

## 2:6:1 பங்குனி உத்திரம்

பெருமாள் தம் துணைவியருடன் விளையாடிக்கொண்டு, உறையூர் கமலவல்லி நாச்சியாருடன் சென்று அவளைத் திருமணம் செய்து கொள்வதையும், அவருக்குப் பெருமாளிடம் காதல் உண்டான விவரத்தையும், அது குறித்துத் திருவரங்கத் தாயார் பெருமாள் மீது ஊடல் கொண்டதையும், பிரணயகலகத் திருநாளையும் இக்கவி, நயத்துடன் சொல்கிறார்.

பெருமாள் உறையூர் வல்லியைத் திருமணம் செய்துகொண்டு அவரைத் தனது மடிமீது வைத்து விளையாடிக் கொண்டிருக்கிறார். அப்போது அவளுடைய தாய் நிகுளையும் பெருமாளும் பேசிக் கொள்வதாக, 'நாடகம்' போன்று இக்காட்சி அமைகிறது.[64]

## 2:6:2 ஏனைய திருநாள்கள்

ஒவ்வொரு திருநாள்களையும் சுட்டி, என் மகள் அன்று உன் அழகைக் கண்டு மயங்கினாள் என்று நிசுளை கூறுவதாகவும், பெருமாள் அதற்கு, அவ்விழாக்காலங்களில் உன் மகளைக் கண்டு நானும் மயங்கினேன் என்று கூறுவதாகவும் இப்பகுதி உள்ளது. அதில் இன்று இக்கோயிலில் நடைபெறும் அனைத்து விழாக்களும் சுட்டப்படுகின்றன.

பதினெட்டாம் பெருக்கு, ஜேஷ்டாபிஷேகம், பவித்திரத் திருநாள், கிருஷ்ணஜெயந்தி, உறியடி, நவராத்திரி, ஊஞ்சல் திருநாள், கார்த்திகை தீபத்திருநாள், கைசிகத் திருநாள், மார்கழித் திருநாள், மோகினி அலங்காரம், வேடுபறி - வையாளி, ஏகாந்தம் - வீணைவாத்தியம், படியேற்றம், தைத்திருநாள், பூபதித் திருநாள், (அன்னம், சிம்மம், கருடன், அனுமான், யானை வாகனங்கள், ஏழாம் நாள் - உபய நாச்சிமாரோடு சூர்ணாபிஷேகம், எட்டாம் நாள் குதிரை மீதேறி விளையாட்டு, ஒன்பதாம் நாள் தேரில் உபயநாச்சிமாரோடு எழுந்தருளுதல், உபயநாச்சிமார் தனித்தனிப் பல்லக்கில் பெருமாளின் இருபுறத்தும் எழுந்து வீதிவலம் வருதல்) தைப்பொங்கல், கனுவன்று முத்து நகைபூண்டு, குதிரை மீதேறி பரிவேட்டையாடுதல்; மாசி மாதத்தில் உபயநாச்சிமாரோடு தெப்பத் திருநாள் காணுதல்; பங்குனித் திருநாளில் உபயநாச்சிமாரை விடுத்துத் தாயார் கோயிலில் தாயாரோடு ஒரே இருக்கையில் எழுந்தருளியது இவ்விழாவில் மூன்றாம் நாள் காவிரிக் கரை தாண்டி ஜீயபுரத்தில் அம்மையாரை நினைத்துக் கொண்டு அம்மையார் தண்ணீர்ப்பந்தல் எழுந்தருளியது; சித்திரை மாதத்தில் கொடியேற்றம் செய்துகொண்டு நாளுக்கொரு மண்டபமாக எழுந்தருளியது; பூச்சாத்திக் கொண்டு திருநாள் கண்டது ; வைகாசியில் வசந்தத் திருநாள் கண்டது; தீபாவளித் திருநாள் கண்டது போன்ற திருநாள்களையும், சந்திர புஷ்கரணியில் தீர்த்தவாரி கண்டருளுவது, போன்ற எல்லா நிகழ்ச்சிகளையும் இக்காவியம் நாடகப் பாங்கில் எடுத்துச் சொல்கிறது.[65]

இந்நூலின் காலம் தெரியவில்லையாயினும், தை, மாசி, சித்திரைத் திருநாள்கள் பற்றிக் குறிப்பதால், அவ்விழாக்கள்

தொடங்கியதற்குப் பின் இந்நூல் எழுதப்பட்டிருக்க வேண்டும் என்றும் திவ்யசூரி சரிதம், இலட்சுமி காவியத்திற்குப் பிந்திய நூல் இது என்றும் ஊகிக்கலாம்.

## 2:7 நாலாயிர திவ்வியப் பிரபந்த உரைகளில் இக் கோயில் விழா பற்றிய செய்திகள்

நாலாயிர திவ்யப்பிரபந்த உரையாசிரியர்கள், தங்கள் உரையில் இக்கோயிலில் நிகழும் விழாக்களைச் சுட்டியுள்ளனர்

அ) வாடினேன் வாடி வருந்தினேன் . . . . . (பெரிய திருமொழி 1 1) என்ற திருமங்கையின் பாசுரத்தின் உரையில்,

'வாடினேன்' என்பதற்குக் கொம்பை இழந்த தளிர் போலத் துவண்டேன் என்ற பொருள் உரைக்கப்பட்டுள்ளது.

திருக்கைத்தலம் இழந்தவன் இற்றைப் புறப்பாடு காணப் பெறாத நாம் கற்பூரமும் எலுமிச்சங்காயும் (எலுமிச்சம்பழம்) பெற்றோ மாகில் முடிந்து விழாக்கலைந்து என்று இருக்குமாறே.

திருக்கைத்தலம் (பெருமாளை, அர்ச்சகர்கள் கையில் ஏந்தி வந்து எல்லோருக்கும் காட்சி தருவது) காணாமல் இழந்தவன், கற்பூரமும் எலுமிச்சங்காயும் கிடைத்தால் தின்று இறந்து உய்வு அடையலாம் என்றன்றோ இருப்பான்.

ஒரு நாளைப் புறப்பாடு இழந்தார் வார்த்தை இதுவானால், அநாதிகாலம் இழந்தாருக்கு 'வாடினேன்' என்றல்லது, வார்த்தை இல்லையன்றோ !

திருவரங்கப் பெருமாளின் ஒருநாள் புறப்பாட்டைக் காணாமல இருப்பது 'வாடினேன்' என்ற நிலையைத்தரும்.[66]

ஆ) "தமருகந்ததெவ்வுருவம் . . . . ஆழியானாம்" இப்பாடலில் பெரிய வாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் சில மரபுகள் அருளிச் செய்யப் பட்டிருக்கின்றன. எம்பெருமானார் (உடையவர்) மாதுகரத்திற்கு

எழுந்தருளா நிற்க, சில பிள்ளைகள் காலாலே கீறி 'உம்முடைய பெருமாளின் திருமேனி என்று காட்ட' உடையவர் பாத்திரத்தைக் கீழே வைத்துவிட்டுத் தண்டனிட்டருளினார்.

எம்பெருமானார் உடையவர் பிட்சைக்காகத் திருவீதியில் எழுந்தருளும்போது, தெருப்புழுதியில் விளையாடிக் கொண்டிருந்த சிறு பிள்ளைகள், திருவாழி, திருச் சங்கோடு ஓர் உருவத்தை மண் தரையில் கீறி, உடையவரே ! உம்முடைய பெருமாளைப் பார்த்தீரா என்றழைத்துக் காட்ட, உடையவரும் 'தமருகந்த தெவ்வுருவம் அவ்வுருவந்தானே' என்ற இப்பாசுரத்தை மனதில் பற்றி, அந்தக் கீரலை பெருமாளின் மெய்யுருவமாகக் கருதித் தண்டனிட்டருளினார்.

"கோயிலிலே சில பிள்ளைகள் மணலில் விளையாடு கிறவர்கள் பெருமாளும் நாச்சிமாரும் பெரிய திருமண்டபத்தில் அமுது செய்தருளும் பெரிய திருப்பாவாடை அமுது செய்வித்து, பெருமாள் பிரசாதம் என்று மணலைக் கையால் முகந்தெடுத்து, அந்நேரத்தில் மாதுகரத்திற்கு எழுந்தருளும் உடையவர் அவ்விடத்தில் அது கேட்டருளித் தண்டனிட்டு அவர்கள் எடுத்த பிரசாதத்தைப் பாத்திரத் தாலே ஏற்றார்" என்று ஜீயர் அருளிச் செய்தார்.

பெருமாள் கோயிலில் நடைபெறும் பெரிய திருப்பாவாடைத் திருநாள் நிகழ்ச்சிகளை அபிநயித்து சிறு பிள்ளைகள் தெருப் புழுதியில் விளையாடிக் கொண்டிருந்தபோது, ஒரு கொட்டாங் குச்சியில் மண்ணை வாரி எடுத்துக் கொண்டு கோயிலில் நடைபெறும் அருளப் பாடுகள் சொல்லும் கிரமத்தில் சொல்லிக்கொண்டே வரும் போது 'ஜீயா' என்று அருளப்பாடு சொல்லிக் கூற, அந்தச் சமயத்தில் யாதராச்சமாக பிட்சைக்கு எழுந்தருளிக் கொண்டிருந்த உடையவர் இவ்விளையாட்டொலியைக் கேட்டு மெய்யேபோல் பாவித்து 'நாயிந்தே' என்று சொல்லிக் கொண்டு, சேவித்து, அந்த மண்ணை ஏற்றுக் கொண்டார்.[67]

இவ்விழா ஆனித் திங்கள் ஜேஷ்டாபிஷேகத்தில் மறுநாள் இக்கோயிலில் நடைபெறும் பெரியதிருப்பாவாடைத் திருநாள் ஆகும்.

இ) 'கன்று மேய்த்து இனிதுகந்த காளாய் . . . . . .' என்னும் திருநெடுந்தாண்டகத்திற்கு உரை கண்டபோது,

மன்று = நாற்சந்தி, அஃது அமரக்கூத்தாடுகையாவது, கூத்தாடி முடிந்த பின்பும், அவ்விடம் கூத்தாடுவது போலவே காணப் படுகையாம், 'பெருமாள் எழுந்தருளிப்புக்க திருவீதி போலே காண் திருவாய்ப்பாடியில் அம்பலமிருப்பது' என்று பட்டர் பணிக்கும்படி.

திருவரங்கப் பெருமாள் வீதியில் எழுந்தருளிப் போந்ததும் வீதியைப் பார்க்கும் நேரத்தில் அவர் வருவது போலத் தோன்றும் [68]

பெருமாள் பெருவிழாக்காலங்களில் திருவீதியில் எழுந் தருளுவது வழக்கம் என்பதை இவ்வுரை சுட்டுகின்றது.

ஈ) திருவாய்மொழி ஐந்தாம் பத்து ஒன்பதாம் பகுதியில் முன்னுரையில்,

"இதுதான் நான் அனுபவித்தேன்" என்று ஜீயர் அருளிச் செய்வார். பட்டர் திருவடிகளை ஆச்ரயித்துப் பின்பு ஒருகால் மேல்கோட்டைக்கு எழுந்தருளப் பெரிய விரைவோடே 'திரு நாளுக்கு உதவவேணும்' என்று வர, திருக்கரம்பன் துறையில் (கோயில் வடதிருக்காவிரியில் வடக்குக்கரையில் உள்ள உத்தமர் கோயில்) வந்தவாறே, நினைவின்றிக்கே காவிரி பெருகிக் கிடக்க, இராத்திருநாள் எழுந்தருளி இங்குண்டான சம்பரமங்களெல்லாம் செவிப்படுவது வந்து புகரப்பெரு தொழிவதாய்க் கொண்டு 'போர நோவு பட்டோம்' என்று அருளிச்செய்வார். புறம்பே நின்று அங்குள்ளார் எம்பெருமானைக் கண்டு படுகிற சம்பிரதங்களைச் செவியாலே கேட்டு நிற்பது, கண்ணாலே காணப்போகா தொழிவதாய்க் கிடந்து பட்டாற்போலே கிடந்து கூப்பிடுகிறாராயிற்று இவரும்".

நஞ்சீயர், திருவரங்கம் கோயில் அத்தியயனத் திருநாள் இராப் பத்தில் கலந்து கொள்ள வேண்டி மேல்கோட்டையினின்று வருகையில் இக்கோயிலின் வடகரையில் உத்தமர்கோயில் வந்தார். அப்போது வடதிருக்காவிரியில் வெள்ளம் பெருக்கெடுத்தமையால் ஆற்றின் வழியே வரமுடியாது போயிற்று.

ஆயின் அக்கரையிலிருந்தவாறே, இவ்விழாவின் ஒலிகள் அவர் காதுகளில் கேட்க, தாம் பெருமாளைக் கண்ணால் கண்டு களிக்க இல்லாமல் போயிற்றே என்று மனம் கலங்கினார்.[69]

உ) திருவாய்மொழி 5:10:6 'நின்றவாறு மிருந்தவாறு . . . ஒண்சுடரே'

இப்பாடலின் வியாக்கியானம் "நின்றவாறும், இருந்தவாறும், கிடந்தவாறும் நினைப்பரிய நின்மாயங்கள் இவர் இவ்விஷயத்தில் படுகிற பாடெல்லாம் நமக்கே இதர விஷயங்களில் அனுபவச் சித்த மன்றோ, இவ்விஷயத்தில் இன்றிக்கே ஒழிகிறதித்தனைபோரப் பாடவல்லராயிருப்பார் ஒருத்தர்"

வடக்கு நின்றும் 'பெருமாள் திருவடி தொழ வேண்டும் என்று வர, ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் தீர்த்தத்தில் அன்றிருந்த திருமாலைப் பாடிச் சமைந்து பெருமாளை மத்தகஜங்களை ஒத்திமாறு போல ஏந்தி வசமாக்கிக் கணிசம் கொண்டு, 'நாயிந்தே' தேவர் திருவடிகளுக்குப் போல நல்லான் ஒருத்தன், எழுநூற்றுகாதமாறுண்டு தேவரை திருவடி தொழ வேண்டுமென்று வருகிறது. இவனை அழைத்துக்கொண்டு சம்பாவனை பண்ணியருள வேண்டும் என்ன, பெருமாளும் "அப்படியே செய்கிறோம்" என்று திருவுள்ளமாய் அருளப்பாடிட்டு, திருப்புன்னைக்கீழ் நின்று அவர் நின்ற விடத்தளவும் செல்ல, நாலு கோல் தரை திருக்கைத் தலத்தில் எழுந்தருளி, விண்ணப்பம் செய்வார்களையெல்லாம் அருளப்பாடிட்டு "வாரி கோள், இவன் வந்த தூரத்திற்கெல்லாம் போருமோ நாம் இவனுக்குச் செய்த தரம்" என்று திருவுள்ளமானார்.[70]

வடநாட்டிலிருந்து, பெருமாளை வணங்க வந்த அடியவருக்கு பெருமாள், தான் திருக்கைத்தலத்தில் எழுந்து, அவர் முன் சிறிது தூரம் புன்னை மரத்தடியின் கீழ் அழகு காட்டி எழுந்தருளினார். எழுநூறு காதம் நடந்து வந்து, தன்னை வழிபட வந்த அவருக்குப் பெருமாள் கைத்தலத்தில் சிறிது தூரம் நடந்து காட்டியது, அவரின் அன்பின் பெருக்காம்.

இக்கைத்தல சேவை என்னும் திருக்கைத்தலத்தில் பெருமாள் எழுந்தருளுவது, இக்கோயிலில் விழாக்காலங்களில் உண்டு. வைகுண்ட ஏகாதசித் திருவாய்மொழித் திருநாள் ஏழாம் நாளன்றும், கார்த்திகை தீபத்தன்றும் பெருமாள் அர்ச்சகர்கள் கைத்தலத்தில் எழுந்தருளுவார். மக்களுக்குச் சேவை சாதிக்கும் பொருட்டு பெருமாள் அவ்வாறு எழுந்தருளுவார்.

உரையாசிரியர் 'வடநாட்டினின்று வந்த அன்பர் பொருட்டு பெருமாள் இக்கைத்தலக் காட்சியை அவருக்குக் காட்டினார்' என்று கூறுகின்றார்.

**2:8** பிள்ளைப்பெருமாளையங்கார் தமது 'அஷ்டப்பிரபந்தம்' என்னும் நூலில் திருவரங்கத்தந்தாதி என்னும் பகுதியில் இக்கோயிலில் நடைபெறும் விழாக்களைச் சுட்டுகின்றார்.

அ) சிறந்த குரங்கான அனுமானின் கழுத்தின் மேலும், பறவைகளின் அரசனான கருடனின் பிடரியின் மேலும் பெருமாள் ஏறி அருளுகிறார்.[71]

திருவீதியிலே பெருமாளை விழாக்காலங்களில் வணங்கி மகிழ்ந்தமையைக் 'கண்டானை வீதியிற் கண்டு உவந்தே' என்று குறிப்பார்.[72]

ஆ) "திருவரங்கப் பெருமாள் கருட வாகனத்திலேறிப் பவனி வந்ததைக் கண்டு, ஒரு பெண் தன் நாணம் இழந்து, மதியழிந்து, அவள் சிவந்த கையானது மெலிந்து, மோதிரத்தையும் வளையல்களையும் இழந்தநாள்" என்று அகச்சுவையால் பாடுகின்றார்.

வரை ஆழியார், புள்ளின் வாகனத்தே வந்த நாள் தொடு, இற்றை-
வரை, ஆழிய துயர்ஆய், நாசம், நாணும், மதியும், செங்கை
வரை ஆழியும், வளையும், இழந்தாள் - என் மட மகளே.
என்பது பாடல்.[73]

இயற்கைப் புணர்ச்சி முதலிய சில வகைகளால் தலைவியைக் களவில் கூடிய தலைவன், பிரிந்த பின்பு அப்பிரிவாற்றாமையால், உள்ளமிழந்து, உடல் மெலிந்து, கைவளையும் விரலாழியும் நெகிழ்ந்து

கீழே விழ, ஆடை சோர, நாணங்குலைந்து, நிலைமாறி நிற்கின்ற தலைவியின் துன்பத்தைத் தோழியால் அறிந்த செவிலித் தாய், அத்தலைவனைத் தலைவிக்கு வெளிப்படையாக மணம் புரிவித்துத் துயர் நீக்கக் கருதியவளாய், அத்தலைமகள் நிலைமையை நற்றாய்க்கு உரியவாறு உணர்த்திய துறையில் இச்செய்யுள் அமைந்துள்ளது.

இ) கருமை நிறம் கொண்ட திருமேனியைக் கொண்ட பெருமாள், தொண்டர்கள் வழிபட, ஒளியுள்ள ஆதிசேடனும், கருடனும், யானையும், ஆட்டக் குதிரையும், தேருமாகிய வாகனங்களில் எழுந்தருளித் திருவீதித் திருநாள் கண்டருளுகின்றார்.

**வணம் கரியான்; அரங்கன்; அடியார் தொழ, வாள் அரவு உ-**
**வணம், கரி, ஆடற் பரி, தேர், நடந்து எந்தை;**
என்று குறிப்பிடுகிறார்.[74]

ஈ) மற்றொரு பாடலில் திருவிழாக்காலங்களில், பெருமாள் திருத்தேர் திருநாள் கண்டருளுகின்றார் என்பதனை 'விட தேரை ஊர் அரங்கன் திருத் தாளில் விழு நெஞ்சமே !' என்கிறார்.[75]

## 2:9 மாத்வர்களும் இக்கோயிலும்

அ) துவைதக் கோட்பாட்டினை நிறுவிய ஸ்ரீமாத்வாசாரியர் (கி.பி. 1238 - 1318) திருவரங்கத்திற்கு வந்து இப்பெருமாளை வழிபட்டு, அவரைப் பலவாறு துதித்துள்ளார் என்று தெரிகிறது. 'தாத்பரிய சந்திரிகா' என்னும் நூலை ஸ்ரீமாத்வாசாரியர் இக்கோயிலிலுள்ள மண்டபத்தில் இயற்றினார் என்பர்.

அந்நூலின் முதல் சுலோகத்தில் பெருமாளைச் 'சேஷசாயினே' என்ற பதத்தால் குறிப்பிடுகிறார்.

ஆ) 13ஆம் பீடாதிபதியான ஸ்ரீரகோத்தம தீர்த்தர் (1557 - 1596) திருவரங்கம் கோயில் ஆறாம் திருச்சுற்றிலுள்ள உத்திராதி மடத்தின் மாடியிலிருந்து நாள்தோறும் ரங்க விமானத்தை வழிபட்டு வந்தார்.

இ) முளுபாகல் மடத்தின் 7ஆவது பீடாதிபதியான ஸ்ரீ ஸ்வர்ண தீர்த்தரின் பிருந்தாவனம் ஏழாம் திருச்சுற்றிலுள்ள தெற்குச் சித்திரை

வீதியில் உள்ளது. அவரின் தொண்டரான (சிஷ்யர்) ஸ்ரீஸ்ரீபாதராஜர் (1420 - 1486) இக்கோயிலின் சித்திரைத்தேர் விழாவைத் தரிசித்து, மெய்மறந்து பாடியுள்ளார்.

அவரது பாடல் 'காவிரியரங்கனைப் பார்க்காத கண்கள் இருப்பது ஏனோ?' என்ற பொருளின் அமைந்துள்ளது.

ஈ) கவிகுல திலகரும் உடுப்பி ஸோதா மடத்தின் பீடாதிபதியு மான ஸ்ரீபாரதிரானார் (1480 - 1600) பாரதம் முழுவதும் தீர்த்த யாத்திரை செய்து 'தீர்த்தப்பிரபந்தம்' என்ற நான்கு அத்தியாயம் (மொத்தம் 235 சுலோகங்கள்) கொண்ட நூலை இயற்றியுள்ளார். அதில் 3ஆம் அத்தியாயத்தில் பெருமாளையும், அவரது படுக்கையான ஆதிசேடனை யும், சந்திரபுட்கரணியையும், காவிரி நதியையும் அழகுபட எடுத்தியம்பு கிறார்.

இவ்வாறு மாத்வர்கள் இக்கோயிலைப் புகழ்ந்துப் பாடியும், வழிபட்டும் வந்தனர் என்றறிகின்றோம்.[76]

**2:10** தியாகராஜ ஸ்வாமிகள் தம் கீர்த்தனைகளில் பெருமாளைப் பற்றியும், விழாக்கள் பற்றியும் குறிப்பிடுகின்றார்.

அ) காயத்திரி மண்டபத்தில் பிரணவாகார விமானத்தில் ஆதிசேடன மீது யோக நித்திரை புரியும் ரங்கா! உன்னை 'ஓ ரங்கசாயி' என்று அழைத்தால் 'ஓ' வென்று (பிரணவார்த்தமான ரங்கநாதன் நான்தான என்று) விடையளித்து வரலாகாதோ?

இ) சாரங்கம் என்னும் வில்லையுடைய ஸ்ரீமந் நாராயணன (ரங்கநாதன்) பரமசிவனைத் திரும்பவும் கைலாசபதி ஆக்க வில்லையா? என்று தியாகய்யர் பாடுகிறார்.

புராணத்திலும், ஸ்ரீபாஞ்சராத்திர ஆகமப் பாரமேசுவர சம்மிதையிலும் கூறியுள்ளபடி ஆதியில் பிரும்மாவிற்கு இருந்த ஐந்து தலைகளில் ஒன்றைப் பரமசிவன் களைந்திட, அந்தக் குற்றம் நீங்க ஸ்ரீமந்நாராயணன் சுதர்சன மந்திரத்தைப் பரமசிவனுக்கு

உபதேசித்து, அவர் அதை ஓதி, குறை நீங்கித் திரும்பவும் கைலாச பதி ஆனார் என்பதையும் குறிக்கிறது. இதற்கு ஆதாரமாக இன்றும் இக்கோயிலில் அரையர், (படியேற்ற சேவையில்) 'முக்கண்ணனுக்கு வினைதீர்த்த பெருமாள்' என்று கட்டியம் கூறுகிறார்.

"நல்ல முத்துக்களால் அலங்கரிக்கப்பட்ட உன் திவ்ய ரூபத்தைக் காண வந்தேன்" என்று தியாகய்யர் குறிப்பது, வைகுண்ட ஏகாதசியன்று இங்கு நடைபெறும் முத்தங்கி சேவையைக் குறிக்கும் கீர்த்தனையாகும். அரையர், 'முத்தால் பரவும் பெருமாள்' என்று கட்டியம் கூறுவதும் இதனை வலியுறுத்தும்.

இ) வசந்தத் திருநாள் சாற்றுமுறையில் பெருமாள் குதிரை மீதேறி வருவதைத் "திருமகள் நாயகனே, பெண்கள் அனைவரும் உன் அழகில் மயக்கம் கொண்டு உன்னை அழைக்கிறார்கள். நீ குதிரை மீதேறி வழியில் வரும்போது அரசகுலப் பெண்கள் உன்னைப் பார்த்து மயங்கித் தங்கள் அருகில் வரும்படி அழைக்கின்றனர். அவர்கள் அழைப்பதால் என் விருப்பத்தைக் கேட்கலாகாதா?" என்று பாடுகிறார்.

ஈ) சித்திரைத் தேர் அன்று காலையில் பெருமாள் வெள்ளிக் குதிரையில் வீதிவலம் வருதலை "குதிரை வாகனமேறி, மன்னர்கள் பலரும் ஊழியம் புரிய, ஒளி வீசும் நவரத்தினங்கள் இழைத்த ஆபரணங்களை அணிந்துகொண்டு கஸ்தூரி ரங்கராஜா பவனி வருகிறார். வணங்குவோம் வாரீர். சித்திரை வீதியில் வேட்கையுடன் அவன் எழுந்தருளும் சேவையைக் கண்டு வணங்குவோம் வாரீர்" என அழைக்கின்றார்.

"அரங்கநாதன் குதிரை மீதேறி வருவதே ஒரு தனி அழகு. குதிரையின் நடை அழகு. கடிவாளத்தைப் பிடித்து அமர்ந்து இருக்கும் ஒய்யாரம், புன்சிரிப்புடன் மக்களை நலம் விசாரிக்கும் முறையில் திருக்கையின் அழகு ஆகிய இவை யாவும் அயோத்தியில் சக்கரவர்த்தித் திருமகன் குதிரை மீதேறி அரசவீதி உலா வருவது போலத் தோன்றும்" என்று பாடுகிறார். ராஜவீதி என்று சித்திரை வீதிக்குப் பெயர்.

உ) சங்கராந்தி(பொங்கல்)அன்று வழிபட்டதைக் குறிப்பிடும்போது "கைக்கடங்காத நீண்ட மலர்ந்த கண்களையுடைய இரு நாச்சிமார்களுடன், நீ (பெருமாள்) சிறப்பான நைவேத்தியங்களை அமுது செய்கின்றாய்" என்று பாடுகின்றார். ரங்கநாதனே ராமன், ராமனே ரங்கநாதன் என்றும் ரங்கநாதன் திருவடிகளை அணைத்துக் கொண்டு ராமநாம பஜனை செய்" என்றும் பாடுகிறார்.[77]

## 2:11 நாட்டுப்புறப் பாடல்களில் இக்கோயில் விழாக்கள்

### அ) மார்கழித் திருநாள்

மார்கழி மக நாளாம் – இங்கே மானாத சேதனக் கூட்டங்களாம்
பார்புகழ் ஏகாதசிதனிலே வந்து பாவம் தொலைக்கிறார் பாருங்கடி
கொட்டகை உத்ஸவம் பாருங்கடி – இந்தக் கோயிலுக்கே புகழ் கூறுங்கடி

பெருமாளின் குதிரை வாகன வையாளி

வையாளி நடையும், ஓய்யாரக் கொண்டையும்
மெய்யாகவே சிறு பையனைப் போல்
ஓய்யாரமாகவே ஐயன் வருகிற
உல்லாச சேவை என் சொல்லுவேனடி

### ஆ) திருப்பள்ளி எழுச்சி

கார் முகில் வண்ணனைக் கஸ்தூரி ரங்கனை
பார்புகழ் செந்தமிழ்ப் பள்ளியுணர்த்திடப் பாடும் அரையர்கள் சேவையடி

### இ) ஏகாந்தம்

ஏகாந்த நித்திரை சந்நிதியில் இந்த எக்காளம் பேரிகை ஏதுக்கடி
நாதசுரத் திருச்சின்னம் புல்லாங்குழல் நாடும் வீணை கான ஓசையடி

### ஈ) கோஷ்டி

பஞ்சவாத்தியம் முழங்குதடி – திருப்பல்லாண்டு பாவை வழங்குதடி
கொஞ்சிடு ரஞ்சித செந்திரு சுந்தரன் கோஷ்டி அழகைப் பாருங்கடி.

## உ) கருட சேவை

தெய்வப்புள்ளேறி வருவாண்டி தொழும் தேவர்க் கருளைத்
தருவாண்டி
பொய் நின்ற ஞானமும், பொல்லா ஒழுக்கமும் போக்குமடி
அருளாக்குமடி
வேதக்கருடன் சேவையிற் சேருங்கடி.

## ஊ) அமுது படைத்தல்

பாலும் பழங்களும் தேனுமுண்டு, நெய் பாகும் பருப்பும்
கற்கண்டும் கொண்டு,
காலத்திற்கோர் பிரசாதமுண்டு, அந்தக் கணக்கறிந்ததைச்
சொல்லுங்கடி
பொங்கல், புளியோதரை, தயிரன்னம் வெகுபோக்கியமான
வெண் தோசையடி
எங்கும் கிடைக்காத சர்க்கரைப் பொங்கலும் ரங்கனுக்குச்
சேர்வையாம் என்று சொல்லிப்பாடுங்கள் [78]

இவ்வாறு, திருவரங்கம் பெரியகோயிலில் நடைபெறும் விழாக்கள் இலக்கியங்களிலும், ஆகமங்களிலும், உரைகளிலும், நாட்டுப்புறப்பாடல்களிலும், சமய ஆசிரியர்தம் நூல்களிலும் சுட்டப் பெற்றமை கொண்டு எவ்வாறு காலந்தோறும் அவற்றில் மாற்றங்கள் நிகழ்ந்தன என்பதை அறிய முடிகின்றது.



## இயல் — 2

## அடிக்குறிப்புகள்

1. திருக்குறள் 1103, 1108 பரிமேலழகர் உரை மற்றும் தமிழர் பழக்க வழக்கங்கள் டாக்டர் காந்தி பக்கம் 51 - 59
2. பாத்ம சம்மிதை கிரியாபாதா, அத்.10 சுலோகம் 6
3. தொல்காப்பியம் பொருளதிகாரம் புறத்திணையில் 79ஆம் பாடல்
4. அகநானூறு பாடல் எண் 187, 5 - 9 உள்ளி விழா அக 368, 16 - 19 ஓணை விழா
5. மேலது பாடல் எண் 17, 11-22, களவழி நாற்பது 17, கார் நாற்பது 63
6. அகநானூறு பாடல் எண் 134
7. புறநானூறு பாடல் எண் 212 பக்கம் 31 ஔவை துரைசாமி பிள்ளை உரை
8. இறையனார் களவியல் பக்கம் 101 சைவ சித்தாந்த பதிபபுக்கழக வெளியீடு, 1958 ஏப்ரல்
9. புறநானூறு 82ஆம் பாடல் (பக்கம் 188 உ.வே சாமிநாதய்யர் பதிபபு 1956)
10. புறநானூறு 31ஆம் பாடல்
11. சிலப்பதிகாரம் வேட்டுவரி, 14 - 17
12. மேலது நாடுகாண்காதை 10 - 25
13. மேலது குன்றக்குரவை பாட்டு மடை 6,7,8,9, 10
14. மேலது ஆய்சியர் குரவை படர்க்கை பரவல் 1, 2,3
15. மணிமேகலை மலர் வனம் புக்ககாதை 53 - 61 சககரவாள கோட்ட முறைத்தகாதை 20 - 24
16. யசோதரகாவியம் முதல் சுருக்கம 18ஆம பாடல ஔவை சு துரைசாமிபிள்ளை, சென்னை - 1 பக்கம 11, 79 பிரகாசம் சாலை திருநெல்வேலி சைவசித்தாந்த நூறபதிப்புக் கழகம 1982
17. திருஞானசம்பந்தர் - தேவாரம் மயிலைப் பதிகம் பூமபாவை பாடல்
18. திருமுருகாற்றுப்படை 223 - 226
19. கோயில் ஒழுகு, பக்கம் 28 (1888)
20. அகிர்புத்தினிய சம்மிதை அத். 27 வரி 1 - 36ஏ மைசூர் 1956
21. கோயில் ஒழுகு, அரிராவ் ஆங்கிலம் முன்னுரை பக்கம் (1) (3)
22. கோயில் ஒழுகு, பக்கம் 25 1888

23. மேலது பக்கம் 55 (1888)
24. மேலது பக்கம் 55 (1888)
25. மேலது பக்கம் 64 (1888)
26. மேலது பக்கம் 44 (1888)
27. மேலது பக்கம் 62 (1888)
28. மேலது பக்கம் 6, 23 (1888)
29. மேலது பக்கம் 63 (1888)
30. மேலதுது பக்கம் 71 (1888)
31. மேலது பக்கம் 66 (1888)
32. மேலது பக்கம் 95 (1888)
33. மேலது (ஆங்கிலம்) ஹரிராவ் பக்கம் 6
34. மேலது பக்கம் 33 (1888)
35. மேலது பக்கம் 66 (1888)
36. மேலது பக்கம் 26 (1888)
37. மேலது பக்கம் 28 (1888)
38. அகநானூறு பாடல் எண் 134
39. சிலப்பதிகாரம் நாடுகாண் காதை 156-158 காடுகாண்காதை 35- 50
40. திவ்யசூரிசரிதம் ஆசிரியர் கருடவாகனபண்டிதர் இலட்சுமி காவியம், ஆசிரியர் உத்தமநம்பிதிருமலாசாரியர்
41. ஸ்ரீரங்கசரிதபாணம், கையேடு, ஆசிரியர்சீனிவாசகவி
42. கோயில் ஒழுகு, பக்கம் 24 (1909) மற்றும் உத்தமநம்பி வைபவம் அத். 3, பக்கம் 29 - 30
43. திவ்ய சூரிசரிதம் பக்கம் 154
44. மேலது பக்கம் 163
45. மேலது பக்கம் 163 - 164
46. மேலது பக்கம் 147
47. மேலது பக்கம் 154
48. மேலது பக்கம் 160 - 162
49. மேலது பக்கம் 156
50. இலட்சுமி காவியம் நான்காம் சருக்கம்
51. மேலது பத்தாம் சருக்கம்
52. மேலது பதினைந்தாம் சருக்கம்

53. கோயில் ஒழுகு. மணவாளமாமுனிகள் சன்னிதி முனபுள்ள கல்வெட்டு
54. இலட்சுமி காவியம் பதினாறாம் சருக்கம்
55. மேலது பதினாறாம் சருக்கம்
56. கோயில் ஒழுகு பக்கம் 17
57. ஸ்ரீரங்க மகாத்மியம் பக்கம் 150
58. இலட்சுமி காவியம் பதினேழாம் சருக்கம
59. மேலது பதினெட்டாம் சருக்கம்
60. இலட்சுமி காவியம் பதினெட்டாம் சருக்கம்
61. மேலது. 18ஆம் சருக்கம்
62. இலட்சுமி காவியம் இரண்டாம் சருக்கம் மற்றும் திருவரஙகம பெரியகோயில் மாத இதழ்
63. மேலது
64. ஸ்ரீரங்க சரிதபாணம் மற்றும் உறையூர் நாச்சியாரும் பஙகுனி உத்திரமும் பக்கங்கள் 20-29
65. மேலது
66. பெரியதிருமொழி உரையும் தமிழாக்கமும்,டாக்டர் தெ. ஞானசுந்தரம் பக்கம் 17 - 18
67. முதல் திருவந்தாதி 44 உரை (அண்ணங்கராசாரியர்)
68. திருநெடுந்தாண்டகம் பாடல் 16 உரை (அண்ணங்கராசாரியர்)
69. புருஷோத்தமநாயுடு. திருவாய்மொழி ஈட்டின் தமிழாக்கம் 5 9 பகுதியின் முன்னுரை பக்கம் 363.
70. மேலது பக்கங்கள் 439 - 440
71. திருவரங்கத்தந்தாதி-பிள்ளைப் பெருமாளையயங்கார் பாடல எண 21
72. மேலது பாடல் 41
73. மேலது பாடல் 58
74. மேலது பாடல் 73
75. மேலது பாடல் 93
76. ராஜகோபுரம் கும்பாபிஷேக மலர் ஸ்ரீரங்கம் - கட்டுரை 1986
77. சலவைக் கல்லால் கோயிலில் நுழைவாசலில் எழுதப்பட்டுள்ளது.
78. வாசுதேவன்பிள்ளை - நாட்டுப்புறப்பாடல்கள்

# இயல் - 3

# இக்கோயிலின் கல்வெட்டுகளும் விழாக்களும்

## 3. கல்வெட்டுகள்

## 3:1 கல்வெட்டுகள் வாயிலாக அறியப்படும் இக்கோயிலின் விழாக்கள்

### 3:1:1 முன்னுரை

கோயில்களுக்கு அரசர்களாலோ, அரசியர்களாலோ, படைத் தலைவர்களாலோ, செல்வர்களாலோ வழங்கப்பெறும் நிலங்கள், அணிகலன்கள், பயன்படும் பொருள்கள் ஆகியன எவையாயினும் அவற்றைக் கொடுப்பார் தாம் கொடுத்த ஆட்சிக் காலம் இன்னது என்றும், கொடுத்த பொருள்கள் இன்னவை என்றும், அவற்றைப் பாதுகாப்போர் இன்னின்னார் என்றும் கல்வெட்டுவாயிலாகவும், செப்பேடுவாயிலாகவும் விளக்கி, அவ்வறச் செயலை நிலைபெறச் செய்வதுண்டு.

ஓலைச் சுவடியில் முதலில் எழுதுவர். பின்னர்க் கல்லிலும், செம்பிலும் அதனை வெட்டி வைப்பர். மூல ஓலை அழிந்தாலும், கல்லிலும், செம்பிலும் வெட்டப்பட்டவை என்றும் நிலையாக இருக்கும். 'நல்லார் ஒருவர்க்குச் செய்த உபகாரம் கல்லின்மேல் எழுத்து போல் காணுமே அல்லாத ஈரமில்லா நெஞ்சத்தார்க்கு ஈந்த உபகாரம் நீர்மேல் எழுத்துக்கு நேர்' என்ற ஔவையாரின் மூதுரை ஈண்டு நினைக்கத் தக்கது.[1]

திருவரங்கம் கோயிலில் கிடைத்துள்ள கல்வெட்டுகள் அறுநூற்று நாற்பத்து நான்காகும்.[2] இவற்றைச் சோழர் காலம், பாண்டியர் காலம், ஒய்சளர் காலம், விசயநகர அரசர் காலம், நாயக்கர் காலம் என்று பகுத்துக் காணலாம்.

முதலாம் ஆதித்தன் (கி.பி. 871 - 907) காலத்துக் கல்வெட்டே இக்கோயிலில் கிடைத்த முதல் கல்வெட்டாகும்.[3] இக்கோயிலின் பழைமையை நோக்கும்போது அவன் காலத்துக்கு ஓரிரு நூற்றாண்டு களுக்கு முன்பே கல்வெட்டுகள் இக்கோயிலில் இருந்திருக்க வேண்டும் என உணரலாம். கிடைக்கப் பெற்ற கல்வெட்டுகளிலிருந்து இக் கோயில்களில் நடந்து வரும் விழாக்கள் பற்றியும், நிலம், தோட்டம், பொன் நகைகள் பற்றிய அறக்கட்டளைகளை அளித்தோர் பற்றியும் தெற்றெனஅறிகின்றோம்.

கல்வெட்டுகள் குறிப்பிடும் இக்கோயில் விழாக்கள் பல இன்று நடைமுறையில் இல்லை.

மக்கள் தெய்வத்திடத்தில் வைத்த நம்பிக்கையாலும், தெய்வத்தால் பெற்ற பேறுகளாலும் (வெற்றி, மகப்பேறு, நோய் நீக்கம் போன்றவை) கொடுத்த கொடை, நாளடைவில் மக்களின் மடிமை, போற்றுவோர் இறந்தமை முதலிய நிகழ்ச்சிகளால் தடைப் பட்டு, முட்டுப்பாடுறுதலும் உண்டு. அங்ஙனமே இக்கோயிலுள்ளும் பல திருவிழாக்கள் நடைபெறாது நின்றுவிட்டன. இவற்றுக்கு அடிப்படையான காரணம், கொடை வழங்கியோர்க்கு இருந்த தெய்வ நம்பிக்கை வழிமுறையினர்க்கு இல்லாது போனதும், தாம் கொண்ட நிலங்கள் வருவாய் குன்றிப்போனமையுமாகும். வழிமுறையினர், முன்னோர் வைத்த நிலங்களைத் தம்முடைய நலத்திற்குப் பயன் படுத்தத் தொடங்கியமையும் விழாக்கள் தடைப்படக் காரணமாயின. இது தவிர போர், அரசியல் மாற்றங்கள் காரணமாகவும் விழாக்கள் தடைப்பட்டிருக்கலாம்.

திருவரங்கத்தைப் பொறுத்தவரையில் திருமால் அரங்கத்தில் இடம் பெற்ற நாள் பங்குனித் திங்கள் என்று முன்னையோர் கணக்கிட் டுள்ளனர். இப்பகுதி பங்குனித் திங்களில் தொடங்கும் பிரம்மோத்சவத் தைப் பற்றிக் கல்வெட்டுகள் வழி நின்று முதற்கண் விளக்குகிறது; தொடர்ந்து தை, சித்திரைத் திங்களில் நடைபெறும் பிரம்மோத்சவத் தையும், சிறப்பு விழாக்களையும் விளக்குகிறது.

## 3:1:2 பங்குனித் திங்கள் 'ஆதிபிரும்மாத் திருநாள்'

1. முதலாம் பராந்தகனின் (கி.பி. 907 - 953) 39ஆம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டு, பங்குனி உத்திரத் திருநாளன்று திருமால் ஏகாதசித் திருமஞ்சனம் புக்கருளிப் பெருந்திருவமுது செய்தருளு வதற்கு நிதி நிறுவியமையைக் கூறுகிறது.[4] கல்வெட்டு, பங்குனித் திருநாளின் ஐந்தாம் திருநாள், திருவேகாதசி பெற்ற பூசத் திருநாள் என்று குறிக்கிறது.[5]

2. முதலாம் குலோத்துங்க சோழ தேவரின் (கி.பி. 1070 - 1120) 18ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு பங்குனித் திருநாளைக் குறிப்பதோடு ஐப்பசித் திங்களில் நடைபெற்ற தேர்த்திருநாளையும் சேர்த்துக் கூறுகிறது. அத்திருநாளன்று இரவில் பெருமாள் திருப் புன்னையின் கீழ் எழுந்தருளிக் குலசேகர ஆழ்வாரின் 'தேட்டருந் திறல்' என்ற பாசுரத்தைச் செவி மடுத்தார் என்றும் கூறுகிறது.[6] அம் மன்னனின் 40ஆம் ஆண்டுக் கல்வெட்டு திருவாய்மொழி கேட்டருளி னார் என்று குறித்துள்ளது.[7]

சோழர் காலக் கல்வெட்டிற்குப் பின் பாண்டியர் காலத்துக் கல்வெட்டுகளில் பங்குனித் திருநாள் பற்றிய குறிப்பில்லை. ஓய்சளர் காலக் கல்வெட்டுகளிலும் குறிப்பு ஏதும் காணப்படவில்லை. பின் விசயநகர மன்னர்களின் காலத்துக் கல்வெட்டுதான் பங்குனித் திருநாள் பற்றிக் குறிக்கிறது.

3. கிருஷ்ணதேவராயர் (கி.பி. 1521) காலத்துக் கல்வெட்டு பங்குனித் திருநாளை 'ஆதி பிரும்மாத் திருநாள்' என்று இன்று வழங்கும் பெயரில் குறிக்கிறது. அக்கல்வெட்டு, பங்குனித் திருநாள் இரண்டாம் நாளன்று மாதவய்யங்கார் திருத்தோப்பில் பெருமாள் எழுந்தருளுவதைக் குறிக்கிறது.[8]

4. திருமலைமகாராயர் (கி.பி. 1529) கல்வெட்டு 'பங்குனித் திருநாள் நான்காம் திருநாள் அன்று, நரசிங்கராயர் ஸ்ரீராமராஜ நயினார் திருத்தோப்புக்குப் பெருமாள் எழுந்தருளுதலைக் குறிக்கிறது.[9]

5. சதாசிவராயர் (கி.பி. 1564) கல்வெட்டு ஆதிபிரும்மோத்ஸவத்தின் மூன்றாம் திருநாள் உபயமாக 'அம்மையார் தண்ணீர்ப் பந்தலுக்கு எழுந்தருளுவதைக்' குறிக்கும்.[10]

மற்றொரு (கி.பி. 1565) கல்வெட்டு ஆதிபிரும்மாத் திருநாள் ஒன்பதாம் நாள் பங்குனி உத்திரத்திற்குச் சின்னபெருமாள் வடக்குத் திருக்காவிரியில் எழுந்தருளித் திருமஞ்சனம் கண்டதாகத் தெரிவிக்கிறது.[11] இம்மன்னனின் மற்றொரு (கி.பி. 1566) கல்வெட்டு ஆறு கொடியேற்றத் திருநாள்களைக் குறிப்பிட்டு, அப்பொழுது நிகழும் திருமுளைச் சடங்கில் சேனைமுதலியார், தாயார் சந்நிதிக்குச் செல்வதையும், அங்கு வாதூலதேசிக வம்சத்தவரான கோயில் அண்ணனின் கைங்கர்யமாக நாச்சியார் அமுது செய்யும் தோசை பற்றியும் குறிப்பிடுகிறது. சதாசிவராயர் காலத்தில் இக்கோயிலில் கொடியேற்றத் திருநாள்கள் மொத்தம் ஆறு நடந்ததாகத் தெரிகிறது. அவை 1. அலியராமராஜ உடையார் திருநாள் 2. கிருஷ்ணதேவமகாராயர் திருநாள் 3. ஆதிபிரும்மா திருநாள் 4. விருப்பண்ண உடையார் திருநாள் 5. பூபதி உடையார் திருநாள் 6. சலக்கராசராமராசாவின் ராஜா திருநாள் என்பன ஆகும்.[12]

6. ஸ்ரீரங்கராயர் (கி.பி. 1570) கல்வெட்டு ஆதிபிரும்மாத் திருநாள் ஒன்பதாம் திருநாள் திருவூஞ்சல் மண்டபத்தில் நாச்சியாரும், பெருமாளும் எழுந்தருளித் திருமஞ்சனம் காண்பதைக் குறிக்கும்.[13]

7. வேங்கட தேவராயர் (கி.பி.1588ஆம் ஆண்டு) கல்வெட்டு ஆதிபிரும்மாத் திருநாள் உள்ளிட்ட எட்டுக் கொடியேற்றத் திரு நாள்கள் ஓர் ஆண்டில் நடந்ததைத் தெரிவிக்கும். அவை பூபதி, ஆதி பிரும்மா, விருப்பண்ண, வீரப்ப நாயக்கர், அச்சுதப்ப நாயக்கர், திருமலைராஜா ஆகியோர் பெயர் தாங்கிய விழாக்களுடன மற்று இருவிழாககள்.[14] மற்றொரு கல்வெட்டு (கி.பி. 1596) பங்குனி மாதத் திருத்தேர்த் திருநாள் பற்றியும், அவ்விழாவின் ஐந்தாம் நாளும், ஆறாம் நாளும் பெருமாள் உறையூர் கமலவல்லி நாச்சியார் கோயிலுக்குச் செல்வதைப் பற்றியும் குறிக்கின்றன.[15]

8. மூன்றாம் ஸ்ரீரங்க மன்னனின் கி.பி. 1648ஆம் ஆண்டுக் கல்வெட்டு ஆதிபிரும்மாத் திருநாளின் மூன்றாம் நாள் திருக்காவிரியில் அம்மையார் தண்ணீர்ப் பந்தலுக்கு பெருமாள் செல்வதைத் தெரிவிக்கும்.[16] இம்மன்னனின் மற்றொரு (கி.பி. 1661ஆம் ஆண்டு) கல்வெட்டு பெருமாள் ஆறாம் திருநாள் உறையூர் செல்வதைக் குறிக்கிறது. ஐந்தாம் திருநாள் பற்றிய செய்திகளை அறியப்பட வில்லை.[17]

9. பெருமாள் எல்லைக்கரைக்குச் செல்வதையும் [18] மேலும் இவ்விழாவின் விடையாற்றி பற்றியும் நாயக்கர் காலத்து (கி.பி. 1667ஆம் ஆண்டு) கல்வெட்டு வாயிலாக அறிகின்றோம்.[19]

இவ்வாறு கல்வெட்டுகள் பங்குனித் திங்களில் நடைபெறும் 'ஆதிபிரும்மாத் திருநாள்' பற்றிய செய்திகளை விரிவாகக் கூறுகின்றன.

### 3:1:2:1 பங்குனித் திருநாள் பற்றிய கல்வெட்டுகள் ஓர் ஆய்வு

இன்று காணப்படும் நடைமுறையுடன் ஒப்பிட்ட வகையில் முதலாம் பராந்தகன் கல்வெட்டு, பெருமாள் திருமுளைக்கு எழுந்தருளுவது பங்குனித் திங்கள் உரோகினி நாள் என்று குறிக்க இன்றைய நடைமுறையில் உரோகிணியன்று முதல் திருநாள் தொடங்குகிறது. உரோகிணிக்கு முதல் நாள் கார்த்திகையன்று நகர சோதனையும், கார்த்திகையின் முதல் நாள் பரணியன்று திருமுளையும் நடைபெறுகின்றது. பராந்தக மன்னன் காலத்தில் முதல் திருநாளன்றே திருமுளை நடந்திருக்க வேண்டும் என்று தெரிகிறது.

இலட்சுமி காவியம் என்னும் நூலில் பரணியில் திருமுளை, கார்த்திகையில் ஓமம், பலி, கருடப் பிரதிட்டை முதலியவற்றை நடத்திப் பரிவாரத்தோடு நகர பரிசோதனை என்றிருப்பது, இக்கோயிலின் இன்றைய நடைமுறையை ஒத்திருக்கிறது. திவ்யஸூரி சரிதத்தில் உரோகிணி நாளில் ஸ்ரீரங்கநாதன் ஆதிபிரும்மோத்ஸவத்திற்குத் திருமுளை சாத்துதல், காப்பு நாண் கட்டுதல், பேரிகை கொட்டுதல்,

கொடியேற்றம் முதலிய கண்டு திருவீதி வலம் வந்தார் என்றுரைக்கும் செய்தி, கல்வெட்டை ஒத்துள்ளது.

74ஆவது உத்தமநம்பி (கி.பி. 1017 - 1137) (திவ்யஸூரி சரிதத்தின் ஆசிரியர்) காலத்து இம்மரபு, 82ஆவது உத்தமநம்பி (கி.பி. 1450) (லக்ஷ்மி காவியத்தின் ஆசிரியர்) காலத்தில் மாறுபட்டுப் பரணியன்று திருமுளை, கார்த்திகையன்று ஓமம், பலி, கருடப் பிரதிட்டை நடத்தி, நகரசோதனை ஆகி, உரோகிணியன்று பெருமாள் முதல் புறப்பாடு கண்டிருக்கலாம் என்று தெரிகின்றது. அதுவே இன்றுவரைத் தொடர்ந்து வருகிறது. இச்சிறிய மாறுதலுக்கான காரணத்தை இன்றுள்ள சான்றுகள் கொண்டு அறிய முடியவில்லை.

முதலாம் குலோத்துங்கன் காலத்தில் ஐப்பசித் திங்களில் நடைபெற்ற தேர்த்திருவிழா இன்று இல்லை. ஐப்பசித் திங்களில் ஊஞ்சல் திருநாள்தான் நடைபெறுகிறது. ஊஞ்சல் மண்டபம் கட்டி விழா நடத்தியவர் கந்தாடை ராமானுசர் என்று 'கோயில் ஒழுகு' கூறுவதால் ஊஞ்சல் விழா பிற்காலத்தில் ஏற்பட்ட ஒன்றாதல் வேண்டும். விசயநகர நாயக்கர் காலம் தொட்டு இவ்வூஞ்சல் விழா நடைமுறைக்கு வந்திருக்கலாம்.

முதலாம் குலோத்துங்கன் நாற்பத்தெட்டு ஆண்டுகள் அரசோச்சி, சோழப் பேரரசை உயர்நிலைக்குக் கொண்டு செலுத்தினான் என்பது வரலாற்றுச் செய்தியாகும். இக்காலத்தில் இராமானுசரும் தம் அருளாட்சி செலுத்தி வைணவத்தைப் பரப்பி உயர்நிலைக்குக் கொண்டு வந்தார்.

முதலாம் குலோத்துங்கன் காலத்தில்தான் இராமானுசர் ராஜ கோபுரத்தை முன்னிட்டு வெள்ளை சாத்தி (காவியுடை துறந்து) மைசூர் நாட்டுக்குச் சென்றார் என்று குருபரம்பரை கூறுகிறது.

இந்தச் சோழ மன்னனையே, கிருமிகண்ட சோழன் என்றும், கூரத்தாழ்வானையும், பெரியநம்பிகளையும் கண் இழக்கச் செய்தவன் என்றும் கூறுவர்.[20]

இம்மன்னன் கி.பி. 1118இல் இறந்ததும் இராமானுசர் திருவரங்கத்திற்குத் திரும்பினார் என்று கூறுவர். இராமானுசர் திருமி கண்ட சோழன் காலத்தில் திருவரங்கத்தில் தங்கி இருந்து வைணவப் பணி மேற்கொண்டதும், மன்னனால் அவர் அடைந்த துன்பங்களும் குருபரம்பரை என்ற நூலில் கூறப்பட்டுள்ளன.[21] இந்தப் பகைமை கல்வெட்டுகள் மூலம் அறியப்படவில்லை. இக்கோயிலி லுள்ள சோழர் காலத்துக் கல்வெட்டுகளில் பெரும்பான்மை (82 கல்வெட்டுகள்) முதலாம் குலோத்துங்கன் காலத்தவையே. இது அவன் வைணவமதத்திற்கு எதிரி அன்று என்பதை உணர்த்துவது போன்றுள்ளது. இவன் கொடுத்தனவும் இவனுக்காக மற்றவர்கள் கொடுத்தனவும் கல்வெட்டுகள் வாயிலாக அறியப்படும்.[22]

பின்னர் விசயநகர மன்னர் கிருஷ்ணதேவராயர் (கி.பி. 1521) காலத்துக் கல்வெட்டுதான் பங்குனித் திருநாளை 'ஆதிபிரும்மாத் திருநாள்' என்ற பெயரில் குறிக்கிறது. இன்று ஆதிபிரும்மோத்ஸவம் என்ற பெயரில் இவ்விழா இக்கோயிலில் நடைபெறுகிறது. பிரும்மா இவ்விழாவைச் சத்திய உலகத்தில் நடத்தினார் என்று புராணங்கள் கூறும். பங்குனித் திருநாள் என்று முதலாம் குலோத்துங்கன் காலம் வரை குறிக்கப்பெற்ற இவ்விழா பின்பு கி.பி. 1521இல் ஆதிபிரும்மாத் திருநாள் என்ற பெயரில் அழைக்கப் பெறுவது குறிப்பிடத்தக்கது.

முகமதியருடைய படையெடுப்பாலும், அதை ஒட்டிய பல காரணங்களாலும் இக்கோயில் வழிபாடுகள், விழாக்கள் சிலகாலம் முட்டுப்பட்டுக் கிடந்ததாகத் தெரியவருகிறது. பின்னர் விசயநகர மன்னர்கள் பல கோயில்களைச் சீர்படுத்தியும் புதுப்பித்தும், முன்போல் விழாக்களையும், வைபவங்களையும் கண்டார்கள் என்று நாம் அறிவோம். அதன்படி இடைக்காலத்தில் முட்டுப் பெற்றிருந்த பங்குனித் திருநாள், இவர்கள் காலத்தில் மீண்டும் தொடங்கப்பட்ட பொழுது ஆதி என்னும் அடைமொழி கொடுத்து 'ஆதிபிரும்மாத் திருநாள்' என்று குறிப்பிட்டிருக்க வேண்டுமென்று ஊகிக்கலாம்.

இவ்விழா ஒன்பது நாள்கள் நடந்தன என்றும், பத்தாம் நாள் தேர்த் திருநாள் நடந்தது என்றும் கல்வெட்டுகளால் அறிகின்றோம். இரண்டாம் திருநாள் பெருமாள் மாதவ அய்யங்கார் மண்டபம் சென்றார்

என்றும்; மூன்றாம் நாள், ஜீயபுரம் அம்மையார் தண்ணீர்ப்பந்தல் சென்றார் என்றும்; நான்காம் திருநாள் நரசிங்கராயர் ஸ்ரீராமராஜ நயினார் திருத்தோப்புக்கு எழுந்தருளினார் என்றும், ஒன்பதாம் திருநாள் உத்திரத்தன்று தாயாரும் பெருமாளும் ஊஞ்சல் மண்டபம் எழுந்தருளித் திருமஞ்சனம் கண்டார் என்றும் இக்கல்வெட்டுகளால் அறியப்படும். சின்னப்பெருமாள் (ஸ்நபனபேரர்) வடத்திருக்காவிரி எழுந்து திருமஞ்சனம் கண்டார் என்று கல்வெட்டுகளால் அறிகிறோம். மேலும் கொடியேற்றத்தன்று கந்தாடை அண்ணன் என்பவர் கைங்கரியமாகத் தாயார் சந்நிதியில் தாயார் அமுது செய்யும் தோசை, வடை ஆகியவை பற்றியும் இக்கல்வெட்டுகளால் அறிகின்றோம்.

கல்வெட்டுகள் குறிப்பிடுவன போன்று, இன்றைய நடை முறையில் இரண்டாம் திருநாள் அன்று மாதவய்யங்கார் மண்டபத்திற்குப் பெருமாள் செல்வதில்லை. கோயிலில் உள்ள கருடமண்டபத்திற்குப் பெருமாள் எழுந்தருளுகிறார். மூன்றாம் திருநாள் கல்வெட்டுக் குறித்தவாறு இன்றும் ஜீயபுரம் அம்மையார் தண்ணீர்ப்பந்தல் செல்கிறார். நான்காம் திருநாள், கல்வெட்டு குறிப்பிடும் நரசிங்கராயர் ஸ்ரீராமராஜநயினார் திருத்தோப்பிற்கு எழுந்தருளுவதில்லை. மாறாக ரெட்டிராயர் மண்டபம் செல்கிறார். நரசிங்கராயர்தான் ரெட்டிராயரா என்பது தெரியவில்லை; ஒன்பதாம் நாள் உத்திரத்தன்று தாயார், பெருமாள் ஒருசேர ஊஞ்சல் மண்டபத்தில் வீற்றிருப்பதும், அன்று இரவு சின்னப்பெருமாள் வடதிருக்காவிரி சென்று திருமஞ்சனம் காண்பதும் இன்றைய நடைமுறையில் 'தீர்த்தவாரி' என்ற பெயரில் நடைபெறுகின்றது. ஒன்பதாம் நாளின் தொடர்ச்சியாக மறுநாள் பங்குனித் தேர் 'கோரதம்' என்ற பெயரில் தேர்த்திருநாளாகப் பத்தாம் நாளில் நடைபெறுகிறது.

வேங்கடதேவ மன்னனின் கல்வெட்டுகள் ஆதிபிரும்மாத் திருநாளின் ஐந்தாம் நாளும், ஆறாம் நாளும் பெருமாள் உறையூர் எழுந்தருளுவார் என்று தெரிவிக்கின்றது. அங்கு உறையூர்க் கமலவல்லி நாச்சியார் கோயிலில் அவரோடு வீற்றிருந்து, ஆறாம்

திருநாள் அன்று நள்ளிரவில் அங்கிருந்து திருவரங்கம் திரும்புகிறார் என்று தெரிவிக்கின்றது.

திவ்யசூரி சரிதம் 'ஐந்தாம் நாளில் ஸ்ரீரங்கராசன் தனது ஸ்ரீதேவியின் (கமலவல்லித்தாயாரின்) பிறப்பிடமாகிய உறையூர் சென்றார் என்று தெரிவிக்கிறது.

இலட்சுமி காவியம் 'உறையூருக்குப் பெருமாள் ஐந்தாம் திருநாள் அன்று சென்றார்' என்று குறிக்கிறது. "ஆறாம் நாள் யானை வாகனத்தில் பெருமாள் திருவீதி உலா வந்தார்" என்றும் தெரிவிக்கிறது. ஆயின் இன்று ஐந்தாம் திருநாளன்று சேஷகிரிராயர் மண்டபம் சென்று கற்பகவிருட்ச வாகனத்தில் புறப்பட்டுத் திருவீதி வலம் வந்து கோயில் அடைகிறார்.

முதலாம் இராசேந்திரன் காலத்துக் கல்வெட்டுகளிலிருந்து கோயில்களில் திருவாய்மொழி ஓதுதற்கு 'இறையிலி' நிலங்கள் வழங்கப்பட்ட செய்தி அறியப்படுகினறது. நம்மாழ்வாரின் திருவாய் மொழியும், தொண்டரடிப்பொடியாழ்வாரின் திருப்பள்ளி எழுச்சியும் கோயில்களில் ஓதப்பெற்று வந்த செய்தியை அறியமுடிகிறது.[23]

பங்குனித் திருநாளிலும், ஐப்பசித் திருநாளிலும் தீர்த்தப் பிரசாதம் அருளி, அன்றிரவு பெருமாள் திருப்புன்னையின் கீழ் எழுந்தருளிக் குலசேகராழ்வாரின் 'தேட்டறுந்திறல்' கேட்டார் என்று இக்கோயில் கல்வெட்டுத் தெரிவிக்கின்றது. 'ஐப்பசி, பங்குனித் திருநாள்களில் திருவாய்மொழி கேட்டருளும்போது' என்ற கல்வெட்டுத் தொடரால் இவ்விரு திருநாளிலும் திருமொழி, திருவாய்மொழி ஆகியவற்றைப் பெருமாள் கேட்டிருந்தார் என்றும் அறியப்படும்.

இக்கோயிலின் சந்திரபுட்கரணிக்கரையில் திருப்புன்னை மரம் உள்ளது. அது இக்கோயிலின் தலவிருட்சமாகச் சொல்லப்படும். பராசரபட்டரின் 'ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில்' இப்புன்னையின் கீழ் வைணவர்கள் திருவாய்மொழி ஓதுவார்கள் என்ற குறிப்புமுள்ளது.[24]

இன்றைக்கு அரையர்கள் விழாக்காலங்களில் பெருமாள் திருமுன்னர் திருமொழி, திருவாய்மொழியை இசைப்பதைக் காண்கின்றோம். இதுபோன்றே குலோத்துங்கன் காலத்தில் விழாக் காலங்களில் பெருமாள் திருமுன் இந்நிகழ்ச்சி நடந்திருக்க வேண்டும். ஆயின் கல்வெட்டில் குறித்த 'தேட்டருந்திறல்' திருப்புன்னையின் கீழ் ஓதும் பழக்கம் பங்குனித் திருநாளில் இன்றைய நடைமுறையில் இடம்பெறவில்லை.

ஏழாம் திருநாளன்று 'திருப்பஞ்சாடிக்கீழ் அட்சதை நெல் பரப்புவதைப் பற்றிக்' கல்வெட்டு சொல்கிறது. ஆனால் இன்று ஏழாம் திருநாளன்று, பெருமாள் கோயில் கொட்டாரத்தில் நெல் அளவு காண்பதாக அம்மரபு சற்று மாற்றம் பெற்றுள்ளது.

எட்டாம் திருநாளில் பெருமாள் குதிரை வாகனத்தில் ஊர்ந்து வருதலை 'வேட்டைத் திருநாள்' என்று கல்வெட்டு குறிக்கிறது. அவ்வாறே இன்றும் விழா நடைபெற்று வருகிறது. அன்று பெருமாள் திருவரங்கம் நகரக் கீழ்ப்புற எல்லைக்குச் சென்று வருவார்.

இவ்விழாவின் இறுதி நாளில் விடையாற்றி நடைபெற்றமையும் கல்வெட்டு கொண்டு அறிகின்றோம். ஆயின் இறுதிநாளின் இரவில் ஆளும்பல்லக்கில் பெருமாள் எழுந்து வீதிவலம் வருதலைக் கல்வெட்டு குறிப்பிடவில்லை.

இவ்வாறு கல்வெட்டுகள் குறிக்கும் பங்குனித் திருநாள் இன்று இக்கோயில் நடைமுறையில் எவ்வாறு ஒத்தும வேறுபட்டும் நடைபெறுகின்றது என்பதை அறிய முடிகின்றது.

## 3:1:3 *சித்திரைத்திங்கள் 'விருப்பண்ண உடையார்' திரு நாள்:*

1. வீரபூபதி மன்னன் (கி.பி. 1413) ஆட்சிக் கலவெட்டொன்று அவர் தம்பெயரில் விழா நடத்த நூற்றுமுப்பத்தைந்து பொன் கொடுத்துக கட்டளை நிறுவியதைக் கூறுகிறது. 'சித்திரைத் திருநாள் போல விழா தாழ்வு அற நடத்தும்படி' என்று கூறப்பட்டுள்ளது [25]

இதனால் பூபதி உடையார் திருநாளுக்கு முன்னர் சித்திரைத் திருநாள் நடந்தமை தெரிகின்றது.

2. கிருஷ்ணதேவராயரின் (கி.பி. 1529) கல்வெட்டு, சித்திரைத் திருநாள் நான்காம் திருநாளில் குப்பையன் என்கிற நாராயணனுடைய திருத்தோப்புக்குப் பெருமாள் எழுந்தருளுவதைக் குறிக்கிறது.[26]

3. சதாசிவராயர் (கி.பி. 1554) கல்வெட்டு 'விருப்பன் உடையார்த் திருநாள்' எனப்படும் சித்திரைத் திருநாள் ஐந்தாம் நாளுக்கு வழங்கப்பட்ட கட்டளையைக் கூறும். இவ்வரசனின் (கி.பி. 1566) மற்றொரு கல்வெட்டு ஆறு கொடியேற்றத் திருநாள்களைக் குறித்து, அதில் ஒன்றாக் விருப்பண்ண உடையார் திருநாளைக் குறிக்கிறது. [27]

4. வேங்கட அரசனின் (கி.பி. 1588) கல்வெட்டு விருப்பண்ண உடையார் திருநாள் என்று குறிப்பிடுகிறது.[28] இவ்வரசனின் (கி.பி. 1633) மற்றொரு கல்வெட்டு விருப்பன் திருநாள் ஐந்தாம் திருநாள் கட்டளைக்கு இறைவன் எழுந்தருளுதல் பற்றிக் குறிக்கிறது.[29]

## 3:1:3:1 சித்திரைத் திருநாள் கல்வெட்டுகள் ஓர் ஆய்வு

இதனின்று இவ்விழா விருப்பண்ண உடையார் (கி.பி. 1377 - 1404) என்னும் விசயநகர மன்னன் பெயரில் நிறுவப்பட்டதை அறிகின்றோம். இவ்விழா இன்றும் அவர் பெயரில் சித்திரைத் திங்களில் கொண்டாடப்படுகிறது.

'கோயில் ஒழுகு' இவ்விழாவினைப் பற்றித் தெரிவிக்கும் போது 'இசுலாமியர் படையெடுப்பால் இங்குள்ள சான்றோர் இப் பெருமாளைத் திருமலை திருப்பதிக்கு எடுத்துச் சென்று, நீண்ட காலம் மறைத்து வைத்திருந்தனர் என்றும், படையெடுப்பு நீங்கிய பின்னர் பெருமாளைத் திருவரங்கத்திற்குக் கொண்டு வந்தனர் என்றும், இவ்விடைப்பட்ட காலத்தில் பெருமாளை யாரும் வழிபடாமல் இருந்ததனால், நாட்டின் எல்லாப் புறங்களிலிருந்தும் மக்கள் பெருமாளை வழிபடவேண்டி இவ்விழாவினை நடத்தினர் என்றும் தெரிவிக்கும்.

நான்காம் ஐந்தாம் திருநாள்களுக்குப் பெருமாள் எழுந்தருளும் மண்டபங்கள் பற்றிய செய்திகளைக் கல்வெட்டுகளால் அறிகிறோம். மற்ற திருநாள்களுக்கு எழுந்தருளும் மண்டபங்கள் பற்றிய செய்திகள் தற்போது கிடைத்த கல்வெட்டுகள் மூலம் அறியப்படவில்லை.

இன்றைய நடைமுறையில் நான்காம் திருநாளுக்குப் பெருமாள் திருவரங்கத்திலுள்ள ஆரிய வைசிய மண்டபத்திற்குச் செல்கின்றார். கல்வெட்டு குறிப்பிட்ட குப்பையன் என்னும் நாராயணன் தோட்டத்திற்குச் செல்லவில்லை.

ஐந்தாம் திருநாளன்று கல்வெட்டு குறித்த மண்டபமாகிய உறையூர் எல்லைக்குப் பெருமாள் செல்லாமல் திருவரங்கத்தில் உள்ள பட்டுநூல்காரர் மண்டபத்தில் எழுந்தருளுவார்.

பட்டுநூல் நெசவுக்குப் பெயர் பெற்ற ஊர் உறையூர் என்று அறிகின்றோம். கல்வெட்டு காலத்தில் உறையூர் எல்லைக்கு எழுந்தருளிய பெருமாள், காலப் போக்கில் திருவரங்கத்தில் உள்ள பட்டுநூல்காரர் மண்டபத்தில் எழுந்தருளுவது கொண்டு உறையூரில் அந்த உத்ஸவம் பட்டுநூல்காரர்களால் நடத்தப்பட்டுப் பின்னர் அவர்களால் திருவரங்கத்தில் ஒரு மண்டபத்தில் நடைபெற்று வந்திருக்கலாம் என்று தெரிகிறது.

## 3:1:4 தைத்திங்கள் பூபதி உடையார் திருநாள்

1. வீரபூபதி மன்னன் (கி.பி. 1413) கல்வெட்டு, பூபதி உடையார், தம் பெயரால் எண்பது பொன் கொடுத்துத் தன்னுடைய பிறந்த நாளாகிய தைத்திங்கள் புனர்பூசத்தன்று தேர்த்திருவிழா நடத்தவும், அத்திருநாளைக் கொடியேற்றத்தோடு ஒன்பது நாள் விழாவாகக் கொண்டாட மேலும் ஐந்து பொன் கொடுத்துக் கட்டளை நிறுவினார் என்றும் இவ்விழாவைச் சற்றும் தாழ்வற நடத்த உத்தமநம்பியை நியமித்தார் என்றும் குறப்பிடுகின்றது. இதை முன்னரும் குறிப்பிட்டுள்ளோம்.[30]

2. கிருஷ்ணதேவராயர் (கி.பி. 1511) கல்வெட்டு, தைத்திருநாள் இரண்டாம் திருநாளன்று திருத்தோப்பிலே இறைவன் எழுந்தருளிச் சிறப்பித்தமையைக் கூறுகிறது.[31]

3. அச்சுததேவராயர் (கி.பி. 1531) கல்வெட்டு, திங்கள் பூபதி உடையார் திருநாள், நான்காம் நாளில் திருத்தோப்புக்கு இறைவன் எழுந்தருளுவதைக் குறிக்கிறது.[32] இவ்வரசனின் கல்வெட்டு (கி.பி. 1531) பூபதி உடையார் திருநாள் இரண்டாம் திருநாளில் இறைவன் திருத்தோப்புக்கு எழுந்தருளுவது பற்றிக் கூறுகிறது.[33] மற்றொரு கல்வெட்டு (1555) இக்கோயிலில் நடைபெற்று வந்த ஒன்பது கொடியேற்றத் திருநாள்களைப் பற்றிக் குறிப்பிட்டு, அதில் ஒன்றாகத் தைத் திருநாளைக் குறிக்கிறது.[34] மற்றொரு (கி.பி. 1566) கல்வெட்டு ஆறு கொடியேற்றத் திருநாள்களில் திருமுளையின்போது (அங்குரார்ப்பணம்) கட்டளைக்கு நாச்சியார் ஸ்ரீரங்க நாயகியார் கோயிலில் சேனை முதலியார் அமுது செய்தருளும் தோசைப்படி இரண்டிற்கு அறக்கொடை வழங்கிய செய்தியைக் கூறுகிறது.[35]

4. நாயக்கர் காலத்துக் கல்வெட்டு (கி.பி. 1667) பூபதி உடையார் திருநாள் ஆறாம் நாளில் ஆயிரக்கால் மண்டபத்திற்கு மேற்புறம் உள்ள திருநந்தவனத்தில் அமைந்துள்ள பதினாறுகால் மண்டபத்திற்கு இறைவன் எழுந்தருளுவதற்கு அளிக்கப்பட்ட கட்டளை பற்றிக் குறிக்கின்றது. மேலும் அத்துடன் ஆதிபிரும்மாத் திருநாள் விடையாற்றி, திருமலை நாயக்கன் திருநாள் மூன்றாம் நாளைக்கும் சப்தாவரணக் கட்டளைக்கும் நிதி வழங்கியமையை இக்கல்வெட்டுக் குறிக்கிறது.[36]

மற்றொரு கல்வெட்டு (கி.பி. 1669) பூபதித் திருநாள் இரண்டாம் நாளில் பெருமாள் விட்டலராசர் மண்டபத்திற்கு எழுந்தருளுவதைக் குறிக்கின்றது.[37]

5. பதினாறாம் நூற்றாண்டுக் கல்வெட்டொன்று, காப்புக் கட்டுதல், கொடியேற்றம், யாகசாலை புகுதல் போன்ற செய்திகளைக் குறிக்கின்றன. மேலும் பெருமாள் இரண்டாம் திருநாளிலிருந்து ஆறாம்

திருநாள்வரை வாகன மண்டபத்தில் எழுந்தருளுவதும், ஏழாம் திருநாளன்று எல்லைக்கரையில் உள்ள பதினாறுகால் மண்டபத்தில் அமுது செய்தலும், ஒன்பதாம் திருநாள் திருத்தேர் ஏறியருளுதலும் ஆகியவை பற்றியும் இக்கல்வெட்டு அறிவிக்கிறது. இவ்விழாவில் சேனை முதலியார் எழுந்தருளுவதும், கொடி யேற்றத்தின்போது பிள்ளைக் கயிறு போடுதல் போன்ற விழாச் சடங்குகளும், பெருமாள் விழாக்காலத்தில் ஒவ்வொரு நாளும் அமுது செய்தலும் ஆகியவை பற்றியும் இக்கல்வெட்டில் குறிக்கப்படுகிறது.[38]

### 3:1:4:1 பூபதி உடையார் கல்வெட்டுகள் பற்றி ஓர் ஆய்வு

பூபதி உடையார் திருநாள் இன்றும் இதே பெயரில் தைத் திங்களில் பெருவிழாவாகக் கொண்டாடப்படுகிறது. திருமுளை, கொடியேற்றம் போன்ற அனைத்துச் சடங்குகளும் கல்வெட்டுகள் குறிப்பிட்டவாறே இன்றும் நடைபெறுகின்றன.

இரண்டாம் திருநாளன்று இறைவன் திருத்தோப்பிலே எழுந்தருளும் நிலையின்றித் தாயார் திருமுன் உள் மண்டபத்தில் எழுந்தருளுகிறார்.

கி.பி. 1511ஆம் ஆண்டுக் கல்வெட்டு இரண்டாம் திருநாளில் திருத்தோப்பிற்கு எழுந்தருளுவதைக் குறிக்க, கி.பி. 1533ஆம் ஆண்டுக் கல்வெட்டும் திருத்தோப்பே என்றே குறிக்க, கி.பி. 1699ஆம் ஆண்டுக் கல்வெட்டு மட்டும் விட்டலராசர் மண்டபம் என்று குறிப்பிடுவது கொண்டு, முதலில் இரண்டாம் திருநாளில் பெருமாள் திருத்தோப்பிற்கு எழுந்தருளியது மாற்றம் பெற்று விட்டலராசர் மண்டபத்தில் எழுந்தருளியிருக்க வேண்டும். இப்பொழுது இரண்டுமின்றித் தாயார் சந்நிதிக்குப் பெருமாள் எழுந்தருளுகிறார் என்று அறிகிறோம்.

ஐந்தாம் திருநாளன்று எல்லப்பம்மன் உபயமாகத் திருத்தோப்பில் பெருமாள் எழுந்தருளுவதைக் கல்வெட்டு கூற, இன்று அவ்விழா கோயிலுள்ளே அரங்க விலாச மண்டபத்தில் நடைபெறு கின்றது.

ஆறாம் திருநாளன்று ஆயிரக்கால் மண்டபத்துக்கு மேல்புறம் உள்ள திருநந்தவனத்தின் பதினாறுகால் மண்டபத்தில் பெருமாள் எழுந்தருளும்போது உபயம் என்று கி.பி. 1667ஆம் ஆண்டு கல்வெட்டு கூறுகிறது. மற்றொரு கல்வெட்டு, நாச்சியார் ஸ்ரீரங்க நாச்சியாரம்மாள் கோயிலுக்குத் தென் பகுதியில் உள்ள குலசேகரன் திருவீதியில் கட்டுவித்த நாலுகால் மண்டபத்தில் ஆறாம் திருநாளில் பெருமாள் எழுந்தருளுவதைக் குறிக்கின்றது.

கல்வெட்டுகள் குறித்த இடங்களில் பெருமாள் இன்று எழுந்தருளுவதில்லை. அதற்குப் பதில் ஏழாம் திருச்சுற்றின் வெளியே உள்ள சுக்கரவாரத் தோப்பில் ஆறாம் திருநாளுக்கு எழுந்தருளுகிறார்.

ஏழாம் திருநாள் பெருமாள் நாச்சியார் சந்நிதியில் எழுந்தருளுவ தாகக் கல்வெட்டு குறிப்பிட்டவாறே இன்றும் நடைபெறுகிறது.

எட்டாம் திருநாளில் எல்லாக் கொடியேற்றத் திருநாள்களிலும் பெருமாள் எல்லைக்கரைவரை செல்வதாகக் கல்வெட்டுகள் குறிக்க, இன்று பங்குனித் திருநாளுக்கு மட்டுமே எல்லைக்கரை (ஊரின் கீழ்ப்புற எல்லையில் உள்ள மண்டபம்) செல்கிறார். தை, சித்திரைப் பெருவிழாக்களில் அங்குச் செல்வதில்லை. பூபதித் திருநாள் எட்டாம் நாளில் பெருமாள், அரங்கவிலாச மண்டபத்திலேயே உபயம் காண்கின்றார்.

மேற்குறித்த கல்வெட்டுகளிலிருந்து, முதலாம் பராந்தகன் (கி.பி. 907) காலத்தில் பங்குனித் திருநாளும்[39] முதலாம் குலோத்துங் கன் காலத்தில் பங்குனித் திருநாளும், ஐப்பசி தேர்த்திருநாளும்[40] விஜயநகர மன்னன் சதாசிவராயர் (கி.பி. 1566) காலத்தில் ஆண்டொன்றில் ஆறுகொடியேற்றத் திருநாள்கள் நடைபெற்று[41] வெங்கட அரசன் (கி.பி. 1588) காலத்தில் எட்டு கொடியேற்றத் திருநாள்களும் நடைபெற்று[42] இக்கோயில் விழாக்கள் காலந்தோறும் வளர்ந்து பெருகி வந்திருக்க வேண்டுமென்று தெரிகிறது. ஆயின் இன்று இக்கோயிலில் மூன்று கொடியேற்றத் திருநாள்களே நடந்து வருகின்றன. அவை 1) பங்குனித் திங்கள் ஆதிபிரும்மாத் திருநாள்

2) தைத் திங்கள் பூபதி உடையார் திருநாள் 3) சித்திரைத் திங்கள் விருப்பண்ண உடையார் திருநாள் என்பன.

### 3:1:5 மாசித் திங்கள் தெப்பத்திருநாள்

மாசித் திங்கள் நடைபெறும் திருநாளைக் கிருஷ்ணதேவ மகாராயர் திருநாள் என்று கல்வெட்டுகள் குறிக்கும். ஆயின் இன்று மாசித் திங்களில் நடைபெறும் விழா அவர் பெயரில் குறிக்கப் படுவதில்லை. இத்திருநாளைத் தெப்பத் திருநாளாகப் பத்து நாள்களுக்குக் கொண்டாடிவருகின்றனர்.

1. கிருஷ்ண தேவராயர் (கி.பி. 1521ஆம் ஆண்டு) கல்வெட்டு கந்தாடை மாதவய்யங்கர் என்பவர் எண்பது பொன் கொடுத்து அதன் வட்டியிலிருந்து இவ்வரசன் பெயரில் மாசித் திருநாள் ஐந்தாம் நாளில் திம்மராசர் தோப்புத் துறைக்கு மேலத் தோப்பு மண்டபத்தில் பெருமாள் எழுந்தருளுவதற்கு உடயம் வழங்கிய செய்தியைக் கூறுகின்றது.[43] இம் மன்னனின் கி.பி. 1525ஆம் ஆண்டுக் கல்வெட்டு, இவ்வரசன் பெயரில் திருத்தேர் நடைபெற்றதைக் குறிப்பதாகும்.[44]

2. அச்சுததேவரின் (கி.பி. 1535, கி.பி. 1536, கி.பி. 1539ஆம் ஆண்டுகளில் எடுக்கப்பட்ட) கல்வெட்டுகள், கிருஷ்ணதேவராயர் திருநாளின் இரண்டாம் திருநாள் பற்றியும், அத்திருநாள் விடாய் ஆற்றிக்குப் பெருமாள் அக்கச்சி அம்மன் தோப்பில் எழுந்தருளி ஆறாம் திருநாளன்று தெப்பக்குளம் எழுந்தருளுவதைப் பற்றியும் குறிக்கின்றன.[45]

3. சதாசிவராயரின் கல்வெட்டு (கி.பி. 1555) ஒன்பது பெருவிழாக்கள் இக்கோயிலில் நடந்தமை பற்றியும், மாசித்திருநாள் ஆறாம் திருநாள் பற்றியும் குறிக்கின்றது.[46]

ஸ்ரீரங்கராசனின் (கி.பி. 1578) கல்வெட்டு தெப்பத் திருநாள் ஐந்தாம் நாள் பற்றிக் குறிக்கிறது.[47]

4. ஸ்ரீரங்கராசன் (கி.பி. 1620) (கி.பி. 1650) கல்வெட்டுகள் பெருமாள் தெப்பத் திருநாளன்று மாசி மூன்றாம் நாள் உபயம் பற்றியும், எட்டாம் நாளில் எல்லைக்கரை மண்டபத்தில் எழுந்தருளுதல் பற்றியும் குறிக்கின்றன. ஐந்தாம் திருநாளன்று அடியேனுடைய உபயமாக மண்டபத்தில் ஏறியருளுகையில் என்றிருக்கிறது.[48] கி.பி. 1655ஆம் ஆண்டுக் கல்வெட்டில் கிருஷ்ணதேவராயரின் திருநாள் ஆறாம் திருநாளுக்கு முத்தரச நல்லூரில் உபயமாக எழுந் தருளுதல் பற்றிய குறிப்புள்ளது.[49]

## 3:15:1 தெப்பத்திருநாளில் கல்வெட்டுகள் பற்றி ஓர் ஆய்வு

கிருஷ்ணதேவராயர் மாசித் திருநாள் என்று கொண்டு, அது இப்பொழுது நடக்கும் மாசித் திங்கள் திருநாள் என்றால், கல்வெட்டின் படி அத்திருநாளுக்குக் கொடியேற்றம் முதலிய சடங்குகள் உண்டு. இன்று நடைபெறும் மாசித் தெப்பத் திருநாளுக்குக் கொடியேற்றம் இல்லை. மாசித் திங்களில் இப்பொழுது நடைபெறும் தெப்பத் திருநாள் கோயில் ஒழுகின்படி ஆடித்திங்கள் ஆடிப்பதினெட்டாம் பெருக்கன்று நடந்ததாகத் தெரிவிக்கிறது.

கூரநாராயணஜீயரால் நடத்தப்பட்ட இவ்விழா, சில மந்திர நூல் வல்லோர் சூழ்ச்சியால் தெப்பம் திசைமாற, இவரது மந்திர சக்தியால் பெருமாள் காவிரி நீரில் விழாது கரைக்கு மீட்கப்பட்டதாகக் கோயில் ஒழுகு கூறும். சுந்தரபாண்டிய மன்னன் தங்கத்தால் திருப்பள்ளி ஓடம் செய்து கொடுத்ததாகவும் இந்நூல் கூறும். பின்னர் கூரநாராயணஜீயர், கோயிலின் ஏழாம் சுற்றைக் கடந்து மேற்குப் பகுதியில் அவருக்குச் சொந்தமான இடத்தில் தெப்பக்குளம் கட்டுவித்து, மாசித் திங்களில் நடந்துவந்த கிருஷ்ணதேவராயர் திருவிழாவோடு அது இணைக்கப்பட்டுத் தெப்பத் திருவிழாவாக நடந்துவருவதாகக் கொள்ள இடமிருக்கிறது. காலப்போக்கில் கொடி யேற்றம் போன்ற சடங்குகள் நிறுத்தப்பட்டு, பெருவிழாவாக இல்லாமல் தெப்பத்திருவிழாவாக மட்டும் நடைபெற்று வந்திருக்கலாம்.

அன்றி, கிருஷ்ணதேவராயர் திருநாளுக்கும், இன்று நடைபெறும் தெப்பத்திருநாளுக்கும் சிறிதும் தொடர்பில்லாமலும்

இருக்கலாம். கொடியேற்றத் திருநாள்களில் இக்கோயிலில் இன்று மூன்று விழாக்களே நடக்கின்றன. கல்வெட்டு குறிப்பிடும் ஒன்பது கொடியேற்றத் திருநாள்களில் இக்கிருஷ்ணதேவராயர் உள்ளிட்ட ஆறு திருநாள்களும் நடைபெறாமல் போயிருக்கலாம். பின்னர்த் தெப்பத் திருநாள் மட்டும் கல்வெட்டில் குறித்தவாறு வேங்கட மன்னன் காலத்திற்கு முன்போ பின்போ தொடங்கப்பட்டிருக்க வேண்டும்.

மாசித் திருநாளைக் கிருஷ்ணதேவராயர் திருநாள் எனக் கல்வெட்டுகள் குறிப்பிடும். இவ்விழா கந்தாடை மாதவய்யங்காரால் தொடங்கப்பட்டு, 1555ஆம் ஆண்டுவரை கிருஷ்ணதேவராயர் பெயரிலே நடந்து வந்ததாகக் கல்வெட்டுகள் குறிக்கின்றன ஸ்ரீரங்க அரசனின் 1578ஆம் ஆண்டுக் கல்வெட்டே மாசித் திருநாளைத் தெப்பத் திருநாள் என்று கூறுகின்றது. இந்நூல் கி.பி. 1555, கி.பி. 1578 ஆண்டுகள் இடைப்பட்ட காலத்தில் தெப்பக்குளம் வெட்டப் பட்டிருக்க வேண்டும்

இவற்றோடு இக்கோயிலில் ஆதித்ததேவ உடையார் பிறந்த நட்சத்திரமான புரட்டாசி உத்திராடத்தில் தேர்த்திருவிழா நடந்தமையும்[50] தெய்வத்தரையன் திருநாள் என்றொரு திருநாள் நடந்தமையும், பிறகல்வெட்டுகள் வாயிலாகத் தெரிய வருகின்றன.[51] இவ்விழாக்கள் இன்று நடப்பதில்லை.

## 3:1:6 திருப்பவித்திரத் திருநாள்

1. அச்சுததேவ மகாராயரின் (கி.பி. 1530) கல்வெட்டு திருப்பவித்திரத் திருநாள் பற்றிக் குறிக்கிறது. அத்திருநாள சாற்று முறை அன்று முதலாழ்வார் மண்டபத்தில் பெருமாள் எழுந்தருளுவதைக் கூறுகிறது.[52]

2. வெங்கடராயனின் (கி.பி. 1681) கல்வெட்டு, திருப்பவித்திரத திருநாளின் முதல் நாளன்று, பெருமாள் யாகசாலைக்கு எழுந்தருளுதல் பற்றிக் குறிக்கிறது.[53]

3. நாயக்கர் காலத்துக் (கி.பி. 1636) கல்வெட்டு, திருப்பவித்திரத் திருநாள் நிகழும் ஆறு நாள்களுக்கு இறைவன் அமுது

செய்தல் பற்றிக் குறிக்கிறது. இவ்விழா ஒன்பது நாள்கள் நடைபெறும் என்றும், கோட்டை சென்னமநாயக்கன் மண்டபத்தில் இவ்விழா நிகழ்வுறும் என்றும் குறிக்கிறது.[54]

### 3:1:6:1 திருப்பவித்திரத் திருநாள் கல்வெட்டுகள் பற்றி ஓர் ஆய்வு

இக்கல்வெட்டுகள் கூறுவது போன்று இப்பவித்திர விழா சாற்று முறையில் பெருமாள் முதலாழ்வார் சந்நிதி எழுந்தருளுவது இன்றைய நடைமுறையில் இல்லை. பெருமாள் முதல்நாள் யாக சாலைக்கு எழுந்தருளுதல் இன்றுண்டு. இன்றும் இவ்விழா ஒன்பது நாள்கள் நிகழ்வுறுகிறது. விழா நடக்கும் இடத்தைச் சென்னம நாயக்கன் மண்டபம் என்ற பெயரின்றிப் பவித்திர மண்டபம் என்ற பெயரில் இன்று அழைக்கின்றனர்.

இவ்விழாவிலும் பிரும்மோத்ஸவம், தெப்ப உத்ஸவம் போன்று பெருமாள் நாளொரு வாகனத்தில் எழுந்தருளிப் புறப்பாடு கண்டார் என்று இலட்சுமிகாவியம் தெரிவிக்கின்றது. பலவகை வாகனங்களின் மேலிருந்தவாறு இத்திருநாள் பல நாள்களிலும் பெருமாள் எழுந்தருளியதை இலட்சுமிகாவியம் நூல் கூறும். இன்றைய நடைமுறையில் அவ்வாறில்லை. இது பற்றிய செய்திகள் கிடைத்த கல்வெட்டுகளிலும் காணப்படவில்லை. இன்றைய நாளில் பெருமாள் பவித்திர மண்டபத்திற்குப் புறப்பாடு காணுதலும் அங்கு வீற்றிருந்து, திரும்பவும் மூலஸ்தானம் செல்வதுடன் நின்றுவிட்டது.

### 3:1:7 மார்கழி வைகுண்ட ஏகாதசி விழா

1. முதலாம் குலோத்துங்கனது 40ஆவது அரசாட்சி ஆண்டுக் கல்வெட்டு வைகுண்ட ஏகாதசி திருநாளை திருவாய்மொழி கேட்டருளும் பொதுத்திருநாள் என்று குறிப்பிடுகிறது. இரண்டாம் இராசாதிராசதேவன் (கி.பி. 1146 - 1163) ஒன்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு வைகுண்ட ஏகாதசித் திருநாள் நடந்தமையைத் தெரிவிக் கிறது. அது வைகுந்தத் திருநாளும், திருவேட்டைத் திருநாளும் நடை பெற்றதைக் குறிக்கின்றது.[55]

2. இரண்டாம் ராசேந்திரன் (கி.பி. 1216-1256) பன்னிரண்டாம ஆட்சியாண்டுக் கல்வெட்டும், வீரராமநாதனின் (கி.பி. 1263) எட்டாம் ஆட்சியாண்டின் கல்வெட்டும் "திருவத்தியயனம் பெருமாள் எழுந்தருளித் திருமாலை எடுப்பதற்கு" என்றும், "வைகுண்ட தாசர் திருநாள்கள் திருவத்தியயனத் திருநாள்களுக்கும் ஒரு திருமாலை சாத்துதற்கும்" என்றும் இவ்விழா பற்றிக் குறிக்கின்றன [56]

வைகுண்ட ஏகாதசியை ஒட்டிய இத்திருநாள் இராசாதிராச சோழனுக்கு முற்பட்டவனும் திருவரங்கம் கோயிலில் பல விழாக்களும், வைபவங்களும் கண்டவனுமான முதல் குலோத்துங்க சோழனால் ஏற்படுத்தப்பட்டது என்பது ஊகம்.

3. அச்சுததேவமகாராயரின் (கி.பி. 1541) கல்வெட்டில குறிக்கப்படும், பெரிய திருவத்தியயனம் வேதபாராயணம் என்ற தொடர்களும் திருவாய்மொழி வேதத்திருநாள் என்ற தொடர்களும் இவ்விழா நாள்களில் வேதங்களும், திருவாய்மொழியும் ஓதப்படும் இயல்பை உணர்த்துகின்றன.[57]

4. ஸ்ரீரங்கராயரின் (கி.பி. 1574) கல்வெட்டு, ஸ்ரீராஜராஜதேவா திருவாய்மொழித் திருநாள் காலையில் சன்னிதியில் வேதபாராயணம் செய்கிற போது, இராயர் அவசரத்தில் முதல் திருநாள் அன்று காலையில் வேதம் ஓதப்பட்டதைக் குறிக்கிறது. இவ்வரசனின் (கி.பி. 1581) கல்வெட்டு திருமொழித் திருநாள் ஐந்தாம் நாளில் பெருமாள் சித்திர மண்டபத்தில் எழுந்தருளுவதைக் குறிபபதாகும முத்தங்கி பற்றியும் திருப்பாவை ஓதுவதைப் பற்றியும் குறிப்பிடும் இம மன்னனின் (கி.பி. 1582) கல்வெட்டு சிதைந்த நிலையில் உள்ளது.[58]

5. வேங்கட அரசனின் (கி.பி. 1588) கல்வெட்டு திருவாய்மொழி விண்ணப்பம் செய்யும் தம்பிரான்மார் பற்றிக் குறிப்பிடும் இம்மன்னனின் (கி.பி. 1592) மற்றொரு கல்வெட்டு இவ்விழாவில் இயற்பா ஓதுதற்குப் பொலியூட்டுக் கொடுத்தது பற்றிக் குறிக்கிறது [59]

6. நாயக்கர் காலத்துக் (கி.பி. 1681) கல்வெட்டு திருவாய் மொழித் திருநாள் ஒன்பது நாள்களுக்கும், திருப்பவித்திரத் திருநாள்

ஆறு நாள்களுக்கும் ஆக பதினைந்து நாள்களுக்கும் பெருமாளுக்கு அமுது படைத்தமை பற்றிக் குறிக்கிறது.[60]

## 3:1:7:1 மார்கழித் திருநாள் கல்வெட்டுகள் பற்றி ஓர் ஆய்வு

திருவரங்கம் கோயிலின் சிறப்பாகக் கொண்டாடப்பெறும் மார்கழி வைகுண்ட ஏகாதசித் திருவிழாவை, வைகுந்தத் திருநாள் திருவத்தியயனத் திருநாள், திருமொழித் திருநாள், திருவாய் மொழித் திருநாள், வேதபாராயணத் திருநாள் என்ற பெயர்களில் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

'வைகுண்ட ஏகாதசித் திருநாளைத் தொடர்ந்த திருவேட்டைத் திருநாள் என்ற கல்வெட்டுத் தொடரைத் திருவாய்மொழி இராப்பத்துத் திருநாள் எட்டாம் நாளில் 'வேடுபறித் திருநாளாக' கொள்ள இடமிருக்கிறது. இவ்விழாவின்போது பணி மேற்கொள்பவர் கூறும் 'திருவடி வளர்வது' போன்ற இக்கோயிலின் பழக்கச் சொற்களைக் கல்வெட்டுகள் சுட்டுகின்றன.

வீரராமநாதனின் கல்வெட்டு, திருவத்தியயனத் திருநாள் களுக்கு மாலை வழங்கியது பற்றியும், அவனது துணைவியார் கமலா தேவியார் மலர்வனம் அமைத்தது பற்றியம், மாலை கட்டிப் பெருமாளுக்குச் சாத்தியது பற்றியும் குறிப்பிடுகின்றன. இன்றும் இக்கோயிலில் விழா நாள்களிலும், நாள்வழிபாட்டிலும், மதுரகவி யாழ்வார் நந்தவனத்திலிருந்து மலர்கள் எடுக்கப்பட்டுப் பெருமாள், தாயார் ஆகிய இருவருக்கும் மாலைகள் சாத்தப்படுகின்றன. கமலா தேவியார் நந்தவனம் பற்றிய செய்திகள் இன்று ஏதும் கிடைக்க வில்லை.

அச்சுததேவராயர் கல்வெட்டுகள் திருவாய்மொழி ஓதியமை பற்றியும், விண்ணப்பம் செய்வார் பற்றியும் குறிப்பிடுகின்றன. இன்றும் அரையர் என்பவர் (தம்பிரான்மார் என்று கல்வெட்டு குறிக்கும்) பெருமாள் திருமுன்னர் நாலாயிரத்தை விண்ணப்பம் செய்கின்றனர்.

நாதமுனிகள், 'தம் காலத்தில் இவ்விழாவில் திருமொழி, திருவாய்மொழிகளை ஓதச் செய்தார்' என்றும் நூல்கள் வழி செய்தி ஈண்டு அறியத்தக்கது.

ஸ்ரீரங்கராசன் கல்வெட்டில் குறிக்கப்பெற்றவாறு இன்றும் திருவாய்மொழித் திருநாளில் நாள்தோறும் கோயிலில் பெருமாள் முன வேதபாராயணம் ஓதப்படுகிறது. மற்றொரு கல்வெட்டு திருமொழித் திருநாள் (பகல்பத்து) பற்றிக் குறிக்கிறது. இத்திருநாள் பற்றி இவனது இக்கல்வெட்டே முதன்முதலில் குறிக்கிறது. பெருமாள் திருமொழித் திருநாளின் ஐந்தாம் நாள் சித்திர மண்டபத்தில் எழுந்தருளினார் எனறு கல்வெட்டு குறிக்க, இன்று அர்ச்சுன மண்டபத்தில் திருமொழித திருநாள் பத்து நாளும் பெருமாள் எழுந்தருளுகிறார்

கார்த்திகைத் திங்களில் நடைபெறும் கைசிகத் திருநாளும சித்திரமண்டபத்தில் நடைபெறுவதாகக் கல்வெட்டில் குறிப்பிடப் பட்டுள்ளது. இன்று அத்திருநாள் அர்ச்சுன மண்டபத்தில் நடை பெற்று வருகிறது. அர்ச்சுன மண்டபம் என்று இன்று வழங்கும் இடமே, கல்வெட்டுக் காலத்தில் சித்திர மண்டபம் என்ற பெயரில வழங்கியிருக்க வேண்டும்.

திருவாய்மொழித் தொடக்க நாளில் பெருமாளுக்கு இரத்தின அங்கியும், மூலவருக்கு முத்தங்கியும் சாத்தப்படும இதனை ஸ்ரீரங்கராயரின் கல்வெட்டு, 'முத்தங்கிசாத்தி' எனறும அனறு திருப்பாவை சேவிக்கப்படும் எனறு குறிப்பிடுகிறது

வேங்கட அரசன் கல்வெட்டு குறிப்பிடும் 'திருவாயமொழி விண்ணப்பம் செய்யும் தம்பிரான்மார்' என்ற சொல் அரையர் களையே குறிப்பதாகும். அரையர்கள் வைகுண்ட ஏகாதசித் திருநாள இருபது நாள்களும் திருமொழி, திருவாய்மொழி ஓதுவர். அது குறித்தே அவர்களுக்குத் தம்பிரான்மார் என்ற பெயருமுண்டு, கோயில ஒழுகு தெளிவாக விளக்கும் அரையர் என்ற பெயர் கல்வெட்டுகளில காணப்பட வில்லை. கல்வெட்டுகளில் 'மந்நன்' எனற சொல்லே அரையர்களைக் குறிக்கும்.

இவ்விழாவில் நிறைவு நாளின் மறுநாள், அதாவது இருபத்தோராம் நாளன்று நாலாயிரத்தின் இயற்பா ஓதப்படும். அது பற்றிய செய்தியை இம்மன்னனது கல்வெட்டு 'இயற்பா சிறப்புக் கட்டளை' என்று குறிப்பது கொண்டு உணரலாம்.

முன்னர் அரையர்களால் திருமொழித் திருநாள் பத்து நாள்களும் திருமொழியும், திருவாய்மொழித் திருநாள் பத்து நாள்களும் திருவாய்மொழியும் ஓதப்பட்டு மறுநாள் இயற்பா முழுவதும் முன்னர் வழிபடப்பட்டு வந்தது. பின்னர் உடையவர் காலத்தில் திருமொழி, திருவாய்மொழி இரண்டையும் அரையர் சேவிக்கவும் இயற்பாவைத் திருவரங்கத்தமுதனார் சேவிக்கவும் நியமனம் செய்யப்பட்டன.[61]

இன்றைய நடைமுறையில் திருவரங்கத்தமுதனார் வழி வந்தோர் இக்கோயிலில் தம் முறையினைத் துறந்தமையால், அரையர்களே முன்போல இயற்பாவையும் இவ்விழாவில் ஓதி வருகின்றனர்.

மார்கழித் திங்கள் முதல் நாளன்று இவ்விழா தொடங்கப் பெறும் என்று இலட்சுமி காவியம் தெரிவிக்கிறது. கல்வெட்டுகளி லிருந்து இவ்விழாவின் தொடக்க நாள் பற்றிய செய்திகளைக் குறிப்பாக அறியமுடியவில்லை.[62] இன்று இவ்விழாத் தொடக்கம் மார்கழித் திங்கள் மறைமதி நாளிலிருந்து தொடங்கப் பெறுகிறது.

கோயில் ஒழுகு குறிப்பிடும், "இவ்விழாவின் பொருட்டு நம்மாழ்வார் ஆழ்வார் திருநகரியிலிருந்து எழுந்தருளப் பண்ணப்பட்டு விழா முடியும்வரை இருந்து பின்னர் ஆழ்வார் திருநகரி சென்றடையும் வழக்கம் இருந்து வந்தது. உடையவர் காலத்தில் நம்மாழ்வார், ஆழ்வார் திருநகரியிலிருந்து எழுந்தருளப் பண்ண சில இடையூறுகள் உண்டானதால், உடையவர் நம்மாழ்வாரையும் மற்ற ஆழ்வார்களையும் (திருமங்கையாழ்வார் நீங்கலாக) இக்கோயிலில் பிரதிட்டை செய்தார்[63] போன்ற செய்திகள், கிடைத்த கல்வெட்டுகள் எதிலும் காணோம்.

இவ்வாறு வைகுண்ட ஏகாதசிப் பெருவிழா திருவரங்கம் திருக்கோயிலில் நடைபெறுமாற்றைக் கல்வெட்டுகள் துணைக் கொண்டு அறிய முடிகிறது.

## 3:1:8: சிறப்பு விழாக்கள்

### 1. வசந்தத் திருநாள்

நாயக்கர் காலத்துக் (கி.பி. 1665) கல்வெட்டு, வசந்தத் திருநாள் பற்றிக் குறிக்கும்.[64] ஒருமுறை வைகாசித் திங்கள் காவிரியாற்றில் பெருவெள்ளம் வந்ததால், அங்கு நடைபெற்று வந்த இவ்விழா கோயிலுள் ஐந்தாம் திருச்சுற்றில் உத்தமநம்பிகளால் குளம் வெட்டப் பட்டுக் கேடாக்குழித் திருவிழாவாக நடைபெறத் தொடங்கியது. இவ் விழா ஒன்பது நாள்கள் சக்கரத்தாழ்வார் சன்னிதி வடபுறம் உள்ள நாலுகால் மண்டபத்தில் நடைபெறும் என்றும் தெரிவிக்கிறது. கல்வெட்டுக் குறித்த இடத்திலேயே தொடர்ந்து இன்றளவும் இத்திருநாள் நடைபெற்று வருகின்றது.

### 2. நவராத்திரித் திருநாள்

இவ்விழாவைக் கல்வெட்டுகள் மகாநவமித் திருநாள் என்று குறிப்பிடுகின்றன.

1. மகாநவமித் திருநாளன்று அரங்கநாச்சியார் தனது மண்டபத்தில் ஒன்பது நாளும் எழுந்தருளியிருப்பதாகக் குறிப்பிடும் கல்வெட்டு மரபு இன்றும் மாறாமல் நடைபெற்று வருகிறது.[65]

2. கிருஷ்ணதேவராயர் (கி.பி. 1525) கல்வெட்டு விசயதசமி பற்றிக் குறிக்கிறது. இது "மகா நவமியின் பத்தாம் நாளன்று பெருமாள் காலையில் பல்லக்கில் எழுந்தருளுவார் என்றும், மாலையில் குதிரை வாகனத்தில் எழுந்தருளுவார்" என்றும் குறிக்கிறது.[66]

விசயதசமியன்று பெருமாள் காலையில் பல்லக்கில் புறப்பட்டு கோயிலின் ஏழாம் திருச்சுற்றினைத் தாண்டி கீழவாசல் எல்லையிலுள்ள

சிங்கபெருமாள் சன்னிதியில் எழுந்தருளியிருந்து, மாலை நேரத்தில் குதிரை (வாகனம்) நம்பிரானின் மீது புறப்பட்டுக் கோயில் வந்தடைவார். இந்நிகழ்ச்சி கல்வெட்டினை ஒத்துள்ளது. கல்வெட்டு குறித்தவாறு இன்று காலையில் பல்லக்கிலும், மாலையில் குதிரை நம்பிரானிலும் பெருமாள் எழுந்தருளுகிறார்.

### 3. ஊஞ்சல் திருநாள்

வீர அச்சுத சேனை மகாராயர் (கி.பி. 1538) தம்முடைய உபயமாக ஸ்ரீரங்கதேவருக்கு ஊஞ்சல் திருநாளைக்குத் திரு ஊஞ்சல் மஞ்சத்துக்கு விசுவநாத நாயக்கரால் மன்னர் பெயரில் வெள்ளி அளிக்கப்பட்டது[67] என்ற செய்தி கல்வெட்டால் தெரிய வருகிறது.

### 4. ஆடிமாதப் பிறப்பு

நாயக்கர் கல்வெட்டு (கி.பி. 1669) சித்திர மண்டபத்துக் கருங்கல் குறட்டில் ஆடிமாதப் பிறப்பிற்குப் பெருமாள் எழுந்தருளுதல் பற்றிக் குறிக்கிறது.[68] இன்றைய நடைமுறையில் இது தட்சிணாயன புண்ணியகாலப் புறப்பாடாக சந்தன மண்டபத்தில் நடைபெறுகிறது. கல்வெட்டு குறித்துள்ள சித்திர மண்டபத்தில் நடப்பதில்லை.

### 5. பெரிய திருப்பாவாடை

நாயக்கர் காலத்துக் கல்வெட்டு ஒன்று (கி.பி. 1570) 'பெரிய திருப்பாவாடைக்கு அமுது . . . . . . .' என்று குறிக்கிறது.[69] மேலும் இக்கல்வெட்டு இக்கோயிலில நடக்கும் பல விழாக்களைச் சுட்டிச் செல்கிறது.

### 6. கிருஷ்ணஜெயந்தி

கிருஷ்ணதேவராயர் (கி.பி. 1514) கல்வெட்டு கிருஷ்ண ஜெயந்தி உறியடித் திருநாளில் திருவீதிக்குக் கிருஷ்ணன் எழுந்தருளி வசந்தம் கொண்டருளுகிற கட்டளை பற்றிக் குறிக்கிறது.[70]

### 7. தீபாவளித் திருநாள்

ஸ்ரீரங்கராயரின் (கி.பி. 1568) கல்வெட்டு, 'தீபாவளித் திருநாளன்று சன்னிதியில், குண்டு கட்டித் திருவிளக்கு இடுதல்' என்ற மரபு பற்றிக் குறிக்கிறது.[71] இன்று இத்திருநாளில் குண்டுகட்டித் திருவிளக்கு இடுவதில்லை. 'சாளி அலங்காரம்' என்ற பெயரில் பணத்தைப் பையில் கட்டிப் பெருமாள் திருவடியில் வைத்து இவ்விழா கொண்டாடப்படுகிறது.

குண்டு கட்டி என்பதும் பணத்தைக் குண்டாக ஒரு பையில் கட்டுவதைக் குறிப்பதாக இருக்கலாம்.

### 8. கார்த்திகைத் திருநாள்

சடாவர்மன் வீரபாண்டியன் (கி.பி. 1307) 10ஆம் ஆட்சி யாண்டுக் கல்வெட்டு "கார்த்திகைத் திருக்கண்ணாலத்திற்குப் புறப்பட்டு அபிடேக மண்டபத்தில் சுந்தரபண்டியன் பந்தலின் கீழ், சுந்தரபாண்டியன் கட்டிலில் பெருமாள் தன் பெண்டுகளுடன அமாந்து சடகோபன் (நம்மாழ்வார்) பாட்டுக் கேளா நிற்கின்றார்" என்று கூறுகிறது.[72]

இன்றும் தீபத் திருநாளன்று பெருமாள் உபயநாச்சிமாரோடு வீற்றிருந்து இவ்விழா காணுவார்.

### 9. கைசிக ஏகாதசி

அச்சுததேவராயரின் (கி.பி. 1537) கல்வெட்டு, பெருமாள் ஸ்ரீரங்கநாத தேவர்க்குக் கைசிகத் திருநாளன்று சித்திர மண்டபத்தில் எழுந்தருளி அமுது செய்விக்கப்பட்டதைக் கூறுகிறது.[73] இன்றும் இவ்விழா கைசிக ஏகாதசியன்று ஆகம நூல்களில் சொல்லப்பட்டவாறு நடைபெறுகின்றது.

### 10. தைப்பொங்கல்

1. மூன்றாம் இராசேந்திரன் (கி.பி. 1253) கல்வெட்டு 'பெருமாள் உத்தராயணத்தில் புறப்பட்டருளி, விக்கிரமசோழன் பெரிய திரு

மண்டபத்துப் புகழாபரணன் திருமுத்துப் பந்தல் கீழ் சேரபாண்டியர் தம்பிரான் கட்டிலில் எழுந்தருளியிருந்தார்" என்று தெரிவிக்கிறது.[74]

2. கிருஷ்ணதேவராயர் (கி.பி. 1523) கல்வெட்டு "பாடி வேட்டைச் சிறப்புக்கட்டளை அழகிய மணவாளன் திருத்தோப்பில் சங்கரமத்தின் மூன்றாம் நாள், பெருமாள் பாடி வேட்டையாக எழுந்தருளி அமுது செய்யும் சிறப்புத் தளிகை" என்று குறிக்கிறது.[75]

3. அச்சுததேவராயர் (கி.பி. 1533) கல்வெட்டு, 'சங்கரமத் திருநாள் பாடி வேட்டைக்கு, வடகரை செம்பியம் நல்லூர் ஆம்பர தீர்த்த மண்டபத்தில் பெருமாள் எழுந்தருளி அமுது செய்தல்' என்று குறிக்கிறது.[76] மற்றொரு கல்வெட்டு, 'சங்கரம மூன்றாம் நாள் பாடி வேட்டைக்குப் பெத்தப்ப நாயக்கர் தோப்பில் புறப்பட்டருளி, திருவேட்டைத் திருக்கண் சாற்றுதற்கு முன்னதாகப் பெருமாள் எழுந்தருளியிருந்து அமுதுசெய்தருளி' என்று குறிக்கிறது.[77]

மேற்குறித்த கல்வெட்டுக்களிலிருந்து, பொங்கல் திருநாள் பற்றியும், அதைத் தொடர்ந்து நடைபெறும் பாரிவேட்டைத் திருநாள் பற்றியும், அந்நாள்களில் பெருமாள் எழுந்தருளும் மண்டபங்கள் பற்றியும் அறிய முடிகிறது. இன்று பொங்கலின் மறுநாள் மாட்டுப் பொங்கலன்று பாரிவேட்டை நடைபெறுகிறது. பரிவேட்டையை இவ்வூரார் பாரிவேட்டை என்று வழங்குவர். கல்வெட்டுகள் பாடி வேட்டை என்றே குறிப்பிடுகின்றன.

சங்கரமம் என்று கல்வெட்டு குறிப்பது மகர சங்கரமம். அதாவது, தை மாதப் பிறப்பன்று சூரியன் மகர ராசிக்குள் நுழையும் நாள்.

பரி வேட்டை அழகிய மணவாளன் தோப்பில் நடைபெற்ற தாகக் கல்வெட்டுகள் குறிக்கின்றன. ஆனால் இன்று கோயிலின் தெற்குப் பகுதிக்குப் பெருமாள் குதிரை மீதேறிச் சென்று வேட்டை யாடி வருவதாக அமைகிறது. ஒரு காலத்தில் அவ்விடம் தோட்டமாக இருந்ததாகவும் அதற்கு அழகிய மணவாளன் தோட்டம் என்ற

பெயரிருந்தது என்றும் பின்னர்க் காலப்போக்கில் அப்பகுதி வீதியாக மாறிவிட்டது என்றும் இவ்வூரார் கூறுகின்றனர்

பெருமாள் பரிவேட்டைக்கு வடகரை செம்பியநல்லூர் ஆம்பரத் தீர்த்தமண்டபத்தில் எழுந்தருளுகிறார் என்பதும் இன்று நடைமுறையி லில்லை. ஆம்பரத் தீர்த்த மண்டபம் என்பது இலால்குடிசெல்லும் வழியில் தாளக்குடியில் உள்ளது. மாசித் திங்கள் நடைபெறும் தெப்பத் திருநாள் ஐந்தாம் திருநாளன்று தாளக்குடிக்குப் பெருமாள் எழுந்தருளுவதும், அப்புனித நீரில் நீராடுவதும் நடைமுறையிலுள்ளது. கல்வெட்டு குறித்தவாறு பரிவேட்டையன்று பெருமாள் அங்கு செல்வதில்லை.

இன்று பெருமாள் பரிவேட்டைக்குச் செல்லுங்கால் ஆயிரக்கால் மண்டபத்திலிருந்தவாறே குதிரை வாகனத்தில் எழுந்தருளுகிறார். கல்வெட்டு குறிக்கும் பெத்தப்ப நாயக்கர் தோப்புக்குச் செல்வதும், அங்கிருந்து திருவேட்டைக்குப் புறப்படுவதற்கு முன் நிகழும் செயல் களும் இன்று அவ்விடத்தில் நடைபெறுவதில்லை.

### 11. யுகாதிப் பண்டிகை

கிருஷ்ணதேவராயர் (கி.பி. 1514) கல்வெட்டு யுகாதித் திருநாள் நடந்தமையைத் தெரிவிக்கிறது.[78] யுகாதித் திருநாள் தெலுங்கு வருடப் பிறப்பன்று கொண்டாடப்படும். அப்பொழுது பெருமாள் புறப்பாடு கண்டு திருமஞ்சனம் கண்டருளுகிறார்.

### 12. தமிழ் வருடப்பிறப்பு

மூன்றாம் சடாவர்மன் சுந்தரபாண்டியன் ஒன்பதாம் ஆட்சி யாண்டுக் (கி.பி. 1296) கல்வெட்டு 'சித்திரை விஷுக்குத் திருப்பள்ளி யறையிலேயே பெருமாள் நாச்சிமாருடன் திருவாராதனம் காண்பார்.' என்று கூறுகிறது.[79]

இன்று சித்திரைத் தமிழ்ப் புத்தாண்டன்று பெருமாள் மூலத்தானத்தினின்று புறப்பாடு கண்டு, சந்தன மண்டபத்தில் திருமஞ்சனம் கண்டு செல்வதாக நடைபெறுகின்றது.

### 13. சித்திரை முழு நிலவு

வேங்கடராயரின் (கி.பி. 1597) கல்வெட்டு, 'சித்திரா பௌர்ணமி அன்று பெருமாள் தென் திருக்காவிரிக்கு எழுந்தருளும் போது கரையில் உள்ள தோப்பில் எழுந்தருளுதல்' பற்றிக் குறிக்கிறது.[80]

சித்திரை முழு நிலவன்று தென் திருக்காவிரிக்குப் பெருமாள் எழுந்தருளுவதும், அன்று மாலை பெருமாள் காவிரியில் 'கஜேந்திர மோட்சம்' காண்பதும் இன்றும் உள்ளது. இவ்விழா நடைபெறும் மண்டபம் அம்மாமண்டபம் என்னும் பெயரில் வழங்கப்படுகிறது. ராணி மங்கம்மாள் என்ற அரசியால் கட்டப்பட்ட மண்டபம் மங்கம்மா மண்டபம் என்று பெயர் மருவி அம்மாமண்டபம் என்று காலப்போக்கில் வழங்கலாயிற்று.

### 14. ஆழ்வார்களின் திருநாள்

சதாசிவராயர் (கி.பி. 1566) கல்வெட்டு, ஆழ்வார்கள் பிறந்த நாளில் ஆண்டுதோறும் அமுதுபடைக்கப்பட்டமை பற்றிக் குறிப் பிடுகிறது.[81] இத்திருநட்சத்திரப் படைப்புகள் இன்றும் நடைபெறு கின்றன.

ஸ்ரீரங்கராயரின் (கி.பி. 1577) கல்வெட்டு, ஆழ்வார்களில் சூடிக்கொடுத்த நாச்சியார் மற்றும் ஆளவந்தார் ஆகியோரின் திருநாள்களில் தயிர்ச்சோறு படைத்தமை பற்றிக் குறிப்பிடுகிறது. ஆண்டாள் பிறந்த ஆடிப் பூரத்தன்று, தாயார் அரங்க நாச்சியார் சன்னிதியில் ஆண்டாளுக்கு அமுது படைக்கப்பட்டதைக் கூறுகிறது. ஆண்டு திருநட்சத்திர நாட்களில் ஆழ்வார்கள் அரங்கநாச்சியார் சன்னிதிக்கு எழுந்தருளி அமுதுசெய்தருளும் கட்டளைக்கும் ஸ்ரீ வைணவர்களுக்கு நாதமுனியாழ்வார் சன்னிதியிலே வழங்கப்படும் தயிர்ச்சோறு பற்றியும் குறிப்பிடுகிறது.[82]

வேங்கடராயரின் கல்வெட்டு, திருமங்கை ஆழ்வார் திருநாளாகிய கார்த்திகைத் திங்கள் கார்த்திகை நாளில் பெருமாள் சன்னிதியில் அமுது படைக்கப்பட்டதைக் குறிப்பிடுகின்றது.[83]

ஆழ்வார்கள் பிறந்தநாளில், பிறந்தநாளுக்குரிய ஆழ்வாரைப் பெருமாள் சன்னிதிக்கு எழுந்தருளப் பண்ணி, அங்கு ஆழ்வாருக்கு மரியாதைகள், அமுது படைத்தல் முதலியன நடந்தேறி, திருவீதியிலும் வருவார். பின்பு தாயார் சன்னிதிக்கு எழுந்தருளச் செய்து அங்கும் மரியாதைகள், அமுது படைத்தல் முதலிய நடந்தேறி, ஏனைய ஆழ்வார்கள் சன்னிதிக்குச் சென்று அங்கும் அமுது படைத்தல முடிந்தவுடன் ஆழ்வார்தம் சன்னிதிக்கு எழுந்தருளுவார்.

இதனின்று கல்வெட்டுகள் சுட்டிய வழியில் இன்றும இவ் வழக்கம் நடைமுறையில் உள்ளது.

15. திங்கள்தோறும் ஏகாதசி நாள்களில் திருமஞ்சனம்

'அழகிய மணவாளப் பெருமாள்புறம் எழுந்தருளி, ஏகாதசியன்று எண்பத்தோரு கலசங்களால் திருமஞ்சனம் கொள்வார்' என முதல் குலோத்துங்கனின் பதினைந்தாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுக் குறிக்கின்றது.[84]

அம்மன்னனின் நாற்பத்தொன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டும், நாற்பத்திரண்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டும் ஏகாதசியில் நடைபெறும் திருமஞ்சனம் பற்றிக் குறிக்கின்றது.[85]

விக்கிரம சோழனின் மூன்றாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு, அழகியமணவாளப்பெருமாள் ஏகாதசித் திருமஞ்சனம் காணுதல பற்றியும், அமாவாசையில் அமுது செய்தல் பற்றியும் குறிப்பிடுகிறது.[86]

இன்றைய நடைமுறையில், பெருமாள் திருவறையினின்று புறப்பட்டுச் சந்தனு மண்டபத்தில் எழுந்தருளி, திங்கள்தோறும் ஏகாதசி, அமாவாசை மற்றும் பெருமாள் பிரதிட்டை கண்டருளிய நட்சத்திரமான ரேவதி ஆகிய நாள்களில் திருமஞ்சனம் காண்கின்றார்

திருவரங்கம் கோயிலில் கிடைத்த கல்வெட்டுகளிலிருந்து இக்கோயிலில் அக்காலத்தில் நடைபெற்ற விழாக்கள் பற்றியும் அவை இன்று எவ்வாறு ஒத்தும், வேறுபட்டும் நடைபெறுகின்றன என்பது பற்றியும் அறிய முடிகின்றது.

## 32 கல்வெட்டுகள் வாயிலாக அறியப்படும் அமுது படைத்தல் பற்றிய செய்திகள்

### 3:2:1 விளக்கம்

இக்கோயில் கல்வெட்டுகள் விழாக்காலங்களிலும், நாள் வழிபாட்டிலும், பெருமாளுக்குப் படைக்கும் அமுது வகைகளைப் பற்றிக் குறிக்கிறது.

இறை வழிபாட்டில் தலையாய ஒன்று இறைவனுக்கு அமுது படைத்தலாகும். தமிழர்கள் தாங்கள் பெற்ற வளத்திற்கும், வாழ் விற்கும் இறைவனது துணையே காரணம் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் தங்கள் தங்கள் தெய்வத்திற்குப் படையல் படைத்தார்கள். சிலப்பதிகாரத்தில் கொற்றவைக்கு எயினர்கள், அவர்களது நாட்டில் விளைந்த பொருள்களைப் படைத்து விழா நடத்தினர் என்கிறார் இளங்கோ.[87]

இறைவனை வழிபடச் செல்லும்போது கையுறைப் பொருள்கள் கொண்டு செல்லும் மரபு தொன்றுதொட்டு வருவதாகும். பிற்காலச் சோழர்களிலிருந்து நாயக்கர் காலத்து மன்னர்கள் வரை தாங்களோ அன்றி, தங்கள் படைத்தலைவர்களோ, பணம், நிலம் போன்றவை களைப் பொலியூட்டாக நிறுவி, அதை இக்கோயில் விழாவிற்கும், வழிபாட்டிற்கும் அமுது படைத்தற்கும் பயன்படுத்துமாறு வேண்டி யுள்ளனர் என்பதை இக்கோயில் கல்வெட்டுகள் விளக்குகின்றன. அவ்வாறு பயன்படுத்தாது போயின் இன்ன இன்ன பாவத்தை அவர்கள் அடைவார்கள் என்றும் அதில் எச்சரித்துள்ளனர்.[88]

அக்கல்வெட்டுகள் தெரிவிக்கும் செய்திகளாவன:

### 3:2:2 பிரம்மோத்சவத்தில் இறைவனுக்குப் படைக்கும் அமுது வகை:

**பிரம்மோத்ஸவத் திருநாள்களில், திருமுளையின்போது தாயார் சன்னிதிக்கு சேனை முதலியார் மண் எடுக்க எழுந்தருளும்**

### 3:2:3:3 பூபதி உடையார் திருநாள்

ஆறாம் திருநாளின் போது பொரியமுது, தோசை, வடை, அதிரசம், வெச்சுகூன், பானகம்கூன், சம்பார், நெய், பருப்புப் பதக்கு, மிளகு, சம்பாரம், வெல்லம், தேங்காய், வாழைப்பம் இலையமுது, இளநீர், சந்தனம், கரும்பு முதலானவை களைப் படைப்பர்.[101, 102]

### 3:2:4 தெப்பத் திருநாள்

ஐந்தாம் திருநாளில் பொரியமுது, அதிரசம், வடை, சுகியன், அடைக்காயமுது, இலையமுது, சம்பா தளிகை, அமுது செய்யப்படும்.[103] சம்பா தளிகை, சேமத்தளிகை, அதிரசம், வடை, தோசை, வெச்சமுது கூன் படைக்கப்படும்.[104]

### 3:2:5 திருப்பவித்திரத் திருநாள்

முதல் திருநாளன்று யாகசாலையில் அமுது செய்தருளும் தோசை, வெள்ளிச் சம்பா, சாற்றுமுறை அன்று தளிகை 30, கலம் அதிரசம், இருநூறு சுகியன், இலையமுது, அடைக்காயமுது.[105]

### 3:2:6 வைகுண்ட ஏகாதசி திருமொழித் திருநாள்

திருமொழித் திருநாள் திருமண்டபத்தில் ஏறியருளி அமுது செய்தருளும் பொரியமுது, அதிரசம், வடை, சுகியன், சர்க்கரைப் பொங்கல், அடைக்காயமுது, இலையமுது படைக்கப்படும். திருமொழி ஐந்தாம் திருநாளன்று அதிரசம், வடை, சர்க்கரைப் பொங்கல், அப்பம், வெற்றிலைப் பாக்கு அமுது செய்யப்படும்.[106]

7ஆம் திருநாள் வடை, சுகியன், இட்டிலி, சர்க்கரைப் பொங்கல், அமுது படைக்கப்படும்.[107] 9ஆம் திருநாள் வடை, சுகியன், இட்டிலி, சர்க்கரைப் பொங்கல், அமுது படைக்கப்படும்.[108]

வேதபாராயணம் எட்டாம் திருநாள் ஆயிரக்கால் மண்டபத்தில் அமுது செய்யும் நூறு தளிகையும், அதிரசம் படி ஆறுக்கு அதிரசம் 306ம், வடை படி ஆறுக்கு வடை 306ம், சுகியன் படி ஆறுக்கு 306ம், பொரியமுது ஆறு கலமும், சந்தனப்படி அடைக் காயமுது, இலையமுது, கொம்பில் அஞ்சு, கொடியில் அஞ்சு முதல் கறியமுதும், பதக்கும் உழக்கும் தப்பாமல் நெய் அமுது, பருப்பு அமுது, பின்னையும் பல சம்பாரங்கள்.[109]

நாலாம் திருநாளில் பொரியமுது, ஆறுகலசம்பாரம உள்பட அதிரசம் படி 6, வடை படி 6, கறியமுது வகை கொம்பில அஞ்சு, கொடியில் அஞ்சு, பால் அமுது, நெய்யமுது, வெல்லமுதுக்கு அமுது தேங்காய், பழம், கரும்பு, மிளகு சம்பாரம் அமுது செய்வர்[110] திருப்பவித்திர திருநாள் சாற்றுமுறையன்று சிறப்புக் கட்டளை அமுது செய்யப்படும்.[111]

## 3:2:7 பிற திருநாள்கள்

1. **வசந்தத் திருநாள்** நாளொன்றுக்கு அமுது செய்தருளும் வடைப் பருப்பு அரிவாணம், பருப்பு மாகாணி, தேங்காய், பழம், அரிவாணம் சர்க்கரை, பானகம் கூன்[112]

ஏழாம் திருநாள் வசந்தன் திருநாளில் வடை பருப்பு, அரிவாணம் அமுது செய்வர்.

2. **மகா நவமித் திருநாள்** : ஒன்பது நாளும் தாயார், மண்டபத்தில் எழுந்தருளும்போது சிறப்புக்கட்டளை வினியோகம் செய்யப்படும்.[113]

3. **ஜேஷ்டாபிஷேகம்** பெரிய திருப்பாவாடையன்று, பெருமாள் சாத்தியருளும் சந்தனம், கஸ்தூரி கற்பூரம், சாம்பிராணி தூபத்திற்கும், அமுது செய்தருளும் பொரியமுது, அதிரசம், வடை, சுவியன் அடைக்காயமுது, நெய்யமுது, தயிரமுது, பலாப்பழம், வாழைப்பழம் போன்றவைகள்.[114]

4. ஆடி மாதப் பிறப்பன்று, திருமஞ்சனத்தின் போது தோசை, வடை, அதிரசம், பொங்கல் தளிகை அமுது செய்வர்.[115]

5. ஸ்ரீஜெயந்தி: ஸ்ரீஜெயந்தி உத்ஸவத்தில் கிருஷ்ணராயன் எழுந்தருளி வசந்தன் கொண்டருளுகிற கட்டளைக்கு இலைப் பிளவு உள்ளிட்ட வினியோகம்[116] இராமநவமியின்போது தளிகை, அதிரசம், சுகியன், பொரியமுது, இளநீர், பானகம், சுருளமுது, சாத்துப்படி[117]

6. கைசிகத் திருநாளன்று சித்திரை மண்டபத்தில் பெருமாள் அமுது செய்யும் பொரியமுது, அதிரசம், வடை, சுகியன், சந்தனம் அடைக்காயமுது, இலையமுது[118]

7. பாடி வேட்டையின்போது தளிகை 10, பொரியமுது, அதிரசம் படி நான்குக்கு 204 அதிரசம், வடை படி நான்குக்கு 204 வடை, சுவியன் படி நான்குக்கு 204 சுகியன், பானக கூன் 12, பழ அமுது, தேங்காய் அமுது, சந்தனம் படி 15, அடைக்காயமுது போன்றவைகள் அமுது செய்யப்படும்.[119]

8. யுகாதியன்று பெருமாள் திருமஞ்சனம் கண்டருளித் திருப்பரிவட்டம் சாத்தியருளி எண்ணை இலை பிளவுகள் வினியோகம்[120]

9. வாரம் தோறும் நடைபெறும் சுக்கிரவாரத்தின் புனுகுக்காப் பின்போது பெருமாள் அநந்தரம் அமுது செய்யப்படும்.[121]

10. நாதமுனி ஆழ்வார் கோயிலில் ஸ்ரீஆளவந்தார் திருநட்சத்திரம் திருவாடி உத்திராடத்திற்கு, நாச்சியார் கோயிலில் தாயார் அமுது செய்தருளிய தத்தியோதனம் நாதமுனி ஆழ்வார் சன்னிதியில் ஜீயர் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குச் செலவு செய்யப்படும்.[122]

சூடிக்கொடுத்த நாச்சியார் ஆண்டாள் திருநட்சத்திரத்தன்று தாயார் கோயிலில் ஆண்டாள் எழுந்தருளி, தத்தியோதனம் படைக்கப்படும்.[123] எம்பெருமானார் திருநட்சத்திர உத்சவத்தில் ஆறாம் திருநாளன்று, பொலிக பாசுரத்திற்கும் எம்பெருமானாருக்கு அமுது

படைப்பதற்கு அக்காரவடிசல், தாயார் கோயிலில் 6 தளிகையும், பெருமாள் கோயிலில் 15 தளிகையும் அமுது செய்யப்படும்[124] திருமங்கையாழ்வார் திருநட்சத்திரத்தில் அமுது செய்வதை மற்றொரு கல்வெட்டு சுட்டுகிறது.[125]

11. **அமாவாசை ஏகாதசியில்** அமாவாசை தோறும் அமுது செய்தருளும் கட்டளை பொரி அமுது, வெல்லம், மிளகு, சீரகம், ஏலம், தேங்காய் 100, பழம் 200, அதிரசம், வடை, சுகியன், சந்தனம், அடைக்காயமுது, இலையமுது, தளிகை அஞ்சு[126]

12. தினப்படி நாள் ஒன்றுக்கு தளிகை ஆறு, அமுதுபடி பருப்பு, நெய்யமுது, கருப்புக்கட்டியமுது, கறியமுது, அம்பார் எரிக்கரும்பு முதலானவை அமுது செய்வார்.

நாள் ஒன்றுக்கு அமுது செய்தருளும் பணியாரம் வகை ஒன்றுக்கு பதின்மூன்றாகும்[127] கல்வெட்டுகளில் பெருமாளுக்கு அமுது படைக்கும் கறிவகைகள் குறிப்பிடும்போது செடியஞ்சு, கொடியஞ்சு கறி வகை என்று பல இடங்களில் குறிக்கக் காண்கிறோம்.

விக்கிரமசோழன் கல்வெட்டு, பங்குனித் திருநாளில் பிராமணர்க்கு உணவு வழங்க அறக்கட்டளை நிறுவியதைத் தெரிவிக்கிறது.[128] இவ்வாறு பல கல்வெட்டுகள், வைணவர் களுக்கும் நாள்தோறும் உணவு வழங்க அறக்கட்டளை நிறுவப்பட்ட செய்தியினைக் குறிக்கின்றன.[129]

சென்னை பச்சையப்பன் அறக்கட்டளை தேசாந்திரிகளுக்கு உணவளிக்க நிதி நிறுவியதைத் தெரிவிக்கிறது.[130]

இன்றும் இக்கோயிலில் நாள்தோறும், விழாக்காலங்களிலும், குறிப்பாக அத்தியயனத் திருநாள் இருபது நாள்களிலும் வைணவர் களுக்கு அறக்கட்டளைகள் சார்பாக உணவளித்து வரும் நிலையினைக் காண்கின்றோம்.

கொம்பில் (செடி/மரம்) காய்க்கும் கறி வகைகளில் ஐந்தும், கொடியில் காய்க்கும் கறி வகைகளில் ஐந்தும் இக்கோயிலில் இறைவனுக்குப் படைக்கப்படும் என்று தெரிகிறது.

கொடியில் காய்க்கும் காய்களான, பூசணிக்காய், நார்த்தங் காய், எலுமிச்சை, பாகற்காய், வெள்ளரிக்காய், புடலங்காய் முதலியன வும், கொம்பில் காய்க்கும் காய்களான வாழைக்காய், தேங்காய், மாங்காய், பலாமுசு போன்றவைகள்.

கல்வெட்டு குறிப்பிட்டுள்ள கொடி அஞ்சு கொம்பஞ்சு காய்களைத் தவிர வேறு காய்கறி வகைகள் இக்கோயிலில் அமுது செய்வதில்லை. இன்றும் விழாக்காலங்களிலும், நாள்வழிபாட்டிலும், பெருமாளுக்குக் கொடியஞ்சு, கொம்பஞ்சு காய்வகைகள் அமுது செய்வித்து வருகின்றனர்.

### 3:2:8 இன்றைய நடைமுறையில் பெருமாளுக்கு அமுது படைத்தல்

பிரம்மோத்ஸவ காலங்களில், திருமுளை மண் எடுத்தலில் கல்வெட்டு குறித்தவாறு அண்ணன் கைங்கரியமாக தோசை, வடை தாயார் கோயில் அமுது செய்யப்படும்.

யாகசாலையில் அரிசி வடை அமுது செய்யப்படும். கொடியேற்றத்தின் போது அப்பம் அமுது செய்யப்படும்.

பெருமாள் விழாக்காலங்களில் வாகனத்தில் எழுந்தருளும் போது வாகன வடை அமுது செய்விப்பார். குறிப்பாக யானை வாகனத்தின்போது கரும்பும், குதிரை வாகனத்தின்போது சுண்டலும் படைக்கப்படுகிறது. பெருமாள் திருவீதி உலா வந்தவுடன் பாசிப் பருப்பு, வெல்லம், பானகம், அமுது செய்யப்படும்.

பங்குனி ஆதிபிரம்மாத் திருநாளின் உத்திரத்தன்று மூன்று ஏகாந்தப்படையல் நடைபெறும். அதுபோது ஏகாந்தவடை, ஏகாந்தப் பொங்கல், வடிசல், பருப்பு அக்கார அடிசல் படைக்கப்படும்.

உத்திரம் முடிந்து கோரதத்திலிருந்து பெருமாள் இறங்கிக் கண்ணாடி அறையில் எழுந்தருளும்போது சர்க்கரைப் பொங்கல், வெண் பொங்கல், தோசை, வடை அமுது செய்வார்.

## தெப்பத் திருநாள்

தெப்பத்தன்று குடம் குடமாக பால் அமுது செய்கின்றார். மாசி கருட வாகனத்தின்போது கொழுக்கட்டை அமுது செய்யப்படும். தெப்பக்கரையின் மண்டபத்தில் பெருமாள் எழுந்தருளும்போது அப்பம், தேன்குழல் அமுது செய்வித்துப் பின்னர் தெப்பத்தில் எழுந்தருளும்போது வடை, அப்பம், தேன்குழல், சுகியன், எள்ளுக் கடலை, திருமால்வடை, அரிசி வடை அமுது செய்வர்.

ஸ்ரீஜெயந்தியின்போது சுகியன், எள்ளுக்கடலை, கேலிச்சீடை (உருப்படி) செல்வரப்பம், சிறிய அப்பம் அமுது செய்வார்.

ஏகாதசி, அமாவாசை நாள்களில் திருமஞ்சனம் கண்டவுடன் தோசை, அரிசிவடை, வடிசல் படைக்கப்படும்.

## அத்தியயனத் திருநாள்

வைகுண்ட ஏகாதசி, அத்தியயனத் திருநாளில் கேலிச்சீடை, பணியாரம், கடலைப் பருப்பு, கடலை உருண்டை, சுகியன், பொரி, செல்வரப்பம், அரிசிவடை, அதிரசம், தேன்குழல், சம்பார தோசை, பெரியதோசை, வடிசல், புளிச்சாறு அப்பம், வடை அமுது செய்வார்.

கடைசி நாளான சாற்றுமுறையன்று தோசை, வடை, அப்பம், தேன்குழல், செல்வரப்பம், கேலிச்சீடை, சுகியன், எள்ளுக் கடலை, உப்பு வடை, சின்ன அதிரசம், பெரிய அதிரசம், திருமால் வடை, தேங்காய்க் கீறல், ரொட்டி, நாட்டுச் சர்க்கரை, நெய், தயிர் போன்ற வைகளில் பன்னீராயிரம் பலகாரம் அமுது செய்வார்.

## பெரிய திருப்பாவாடை

திருப்பாவாடையன்று 1365 படி வடிசல், அதில் தயிர், நெய், புளி, தேங்காய், பழவகைகள் சேர்த்து அமுது படைக்கப்படும்.

## சுக்கிரவாரம்

வாரந்தோறும் வெள்ளிக்கிழமை சுக்கிரவாரத்தில் பெரிய பெருமாள் மார்பில் உள்ள இலக்குமிக்குத் திருமஞ்சனம் செய்வித்து மிளகு புளியோதரை, பெரிய தோசை அமுது செய்விக்கப்படும்.

மேலும் விழாக்காலங்களில் தேங்காய் கீறல், சர்க்கரை, வாழைப்பழம் படைப்பர். இக்கோயிலில் படைக்கப்படும் தயிர் சாதத்தில் மிளகும், சுக்கும் போடப்படும். எல்லாப் பலகாரங்களும் சுத்தமான முத்திரையிடப்பட்ட நெய்யினால் செய்யப்படவேண்டும்.

கல்வெட்டு குறிப்பிடும் இட்லி அமுது இன்றைய நடைமுறை யில் இல்லை. மற்றைய அமுது வகைகள் இன்றைய நடைமுறையில் பெருமாளுக்குப் படைக்கப்படுகின்றன.

படைக்கப்பட்ட அமுது வகைகளைக் கோஷ்டிக்குக் கணக்கில் கண்டவாறு வினியோகம் செய்தும், முறைக்காரர்களுக்கு விட்டவிழுக்காடு அடிப்படையில் அனுப்பியும், மீதியைக் கோயில் ஸ்ரீ பண்டாரத்தில் பொதுமக்களுக்கு விலைக்கு விற்றும் வருகின்றனர்.

## 3:3 கல்வெட்டுகள் வாயிலாக அறியப்படும் இக்கோயிலின் விட்டவன் விழுக்காடு

### 3:3:1 விளக்கம்

இன்று கோயிலார் இதனை 'விட்ட விழுக்காடு' என்றழைக் கின்றனர். விட்டவன்விழுக்காடு என்பதே விட்ட விழுக்காடு என்றாயிற்று. விழாவை ஏற்படுத்தியவரோ, திருப்பணிகளை மேற்கொண்ட வர்களோ

அவ்விழாக்களில் அமுது செய்யும் அமுதின் ஒரு குறிப்பிட்ட அளவினை அவரது வழியினருக்கோ, அன்றி அவரால் குறிப்பிட்டவருக்கோ அவருடைய வீட்டுக்கு மேளதாளத்தோடு அனுப்புதல் விட்டவன் விழுக்காடு எனப்படும். இந்த விட்டவன் விழுக்காடு பற்றிக் கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன.

விட்டவர்களுக்கு என்னும் பொருள் கொண்டால் விழாவில பங்குகொள்ள வராதவர்கள், விட்டவர்கள் எனப்பட்டு அவர்களுக்குரிய பகுதிப் பிரசாதத்தை அவர்களுக்குச் சேர்ப்பது என்றும் கூறலாம்.

ஒருவர், விழாவை ஏற்படுத்தி அதற்குண்டான எல்லாப் பொருட் செலவுகளையும் தாமே ஏற்றுக்கொண்டு, அதைத் தொடர்ந்து செய்ய அறக்கட்டளை நிறுவி, தொடர்ந்து அதைச் செயல்படுததிவர ஒருவரை நியமிப்பார்.

மேலும், சிலர், தங்கள் அறக்கட்டளைக்குத் தம் வழிவந்தவர் களைக் காப்பாளர்களாக நியமிக்காமல், தங்களுடைய ஆசாரியர்களை யோ, வேறு சிலரையோ நியமித்து அவற்றை தொடர்ந்து செய்ய வேண்டும் எனக் கல்வெட்டுகளில் குறித்துள்ளனர்.

திருவரங்கம் கோயில் கல்வெட்டுகளும் இவ்விட்டவன் விழுக்காடு பற்றிக் குறிப்பிடுகின்றன. ஆயினும் இன்றைய விழாக்களில் அனுப்பப்படும் சிறப்புகளிலிருந்து அவை பெரிதும் வேறுபட்டுக் காணப்படுகின்றன.

மேலும் இன்றைய விழாக்களில் கோயிலில் பெருமபணி மேற கொண்டுள்ள ஸ்தலத்தார்கள், அரையர் போன்றோர்களுக்கு இச் சிறப்புகள் மிகுதியாகச் சென்றடைகின்றன. சில விட்டவிழுக்காடுகள், இக்கோயிலில் அமைந்துள்ள சுற்றுச் சன்னிதிகளுக்கு, விழாவின் சிறப்பு குறித்து அனுப்பப்படுகிறது. அச்சன்னிதிகளில் இன்று பொறுப் பேற்று நடத்தி வருபவர் அதைப் பெற்றும் வருகின்றனர்.

## 3:3:2 கல்வெட்டுகள் தெரிவிக்கும் விட்டவன் விழுக்காடு

1. ஆதி பிரம்மாத் திருநாள் இரண்டிற்கும், அமுது செய்யும் விட்டவன் விழுக்காடு ஸ்ரீரங்கம் வியாபாரம் மங்கா செட்டி குமாரர் பரமேச்வரன் குறிப்பிடப்பட்டுள்ளது.[131]

2. கொடியேற்றத் திருநாள், ஆறு திருநாள்களும் (ஆலிமராஜா உடையார், கிருஷ்ணதேவராயர், பிரும்மா, விருப்பண்ண உடையார், ஜெயராஜ ராமராஜர், பூபதி உடையார், சலக்க ராசாராமராசா திருநாள்கள்) திருமுளைக்குப் பெருமாள் தாயார் கோயில் எழுந்தருளும்போது ஆண்டுதோறும் அண்ணன் கைங்கரியமாகத் தாயார் அமுது செய்யும் தோசை, படி இரண்டாக விட்டவன் விழுக்காடு தாயார் கோயிலிலேயே வழங்கப்பெற வேண்டும்.[132]

3. எட்டுக் கொடியேற்றத் திருநாள்களில் எம்பெருமன் கோயிலில் எழுந்தருளி அமுது செய்யும் பொலியூட்டில் கொடியேற்றம் தோறும் ஒரு படி தோசை அமுது செய்தலில் விட்டவன் விழுக்காடு பத்தில் ஒன்று திருவேங்கடத் தாத்தய்யங்கார் பெற்றுவரக் கடவர்.[133]

4. விருப்பன் திருநாள் அமுது செய்தருளும் கட்டளை விட்டவன் விழுக்காடு பத்தில் ஒன்று ஏகாங்கி பெறுவார்.[134]

5. பூபதி உடையார் திருநாள் நான்காம் திருநாளன்று திருத்தோப்பு திருமண்டபத்தில் எழுந்தருளியிருந்து சிறப்பு அமுது செய்தருளுகிற கட்டளைக்குப் பொலியூட்டு, விட்டவன் விழுக்காடு நாளில் நாலில் ஒன்று திருவரங்கன் திருப்பதியில் வாழும் வைணவர்கள் பெறுவர். அதே திருநாள் ஐந்தாம் திருநாளன்று பெருமாள் எழுந்தருளும்போது அமுது செய்தலில், விட்டவன் விழுக்காடு பெரிய திருமலைநம்பி மடத்துக்கு அனுப்பப்பட வேண்டும்.[135]

6. தெப்பத் திருநாள் ஐந்தாம் திருநாளில் நொச்சியம் தோப்பிற்கு எழுந்தருளும்போது செய்யும் அமுது விட்டவன் விழுக்காடு, பொரி கலத்துக்குக் குறுணியும், திருப்பணியாரம் தளிகை

பத்தில் ஒன்றும் சக்கிரராயர் திருமலையர்க்குக் கட்டளையாக வழங்கப் படும்.[136]

7. வேதபாராயண, திருவாய்மொழித் திருநாட்களில் நான்காம் திருநாளன்று அக்கச்சி அம்மன் ஏற்படுத்திய கட்டளையின் விட்டவன் விழுக்காட்டை ஆசாரியன் கோயில் கந்தாடை அண்ணன் பெறறு வருவர்.[137]

8. திருவாய்மொழித் திருநாள் ஒன்பது, திருப்பவித்திரத் திருநாள் ஆறு, ஆக பதினைந்து நாள்களும் மற்றும் மார்கழித் திங்கள் பெரிய திருவடித் திருநாள்களிலும் அமுது செயதலை விட்டவன விழுக்காடாக வாதூல தேசிகர் பெற்றுக் கொள்ளக் கடவர்.[138]

9. மகாநவமி ஒன்பது நாளும் தாயார் திருநாளில் அமுது செய்யும் விட்டவன் விழுக்காடு. நாலில் ஒன்று தெற்குத் திருவீதி கந்தாடை இராமானுசய்யங்கார் இராமானுச கூடத்திற்கு அனுப்பப் படுகிறது.[139]

10. கிருஷ்ணதேவராயர் திருநாள் திருத்தேர் அன்றும், ஸ்ரீராம நவமித் திருநாள் அன்றும், அமுது செய்வதில் விட்டவன் விழுக்காடு நான்கில் ஒன்று அமுது வழங்கப்பெறும்.[140]

கிருஷ்ணய்யா திருநாள் ஆறாம் நாளில் முத்தரச நல்லூர் மண்டபத்தில் அமுது செய்யப் பெருமாள் எழுந்தருளும்போது விட்டவன் விழுக்காடு உத்தமநம்பி பெற்று வருவர் [141]

11. ஆடித் திங்கள் முதல் நாளன்று கருங்கல் குறட்டில் பெருமாள் எழுந்தருளும்போதும், மகா நவமித் திருநாளன்று தசோதி பூசைக்குக் கருவூல நாச்சியார் அமுது செய்தருளும்போதும் இப் பொலிவூட்டை ஏற்படுத்திய முத்திரை ராமன் அவர்களின் புதல்வன் பரம்பரையாகப் பெறவேண்டும்.[142]

12. சித்திரா பௌர்ணமி அன்று தென் திருக்காவிரி, தோப்பு மண்டபத்தில் பெருமாளுக்கு அமுது செய்யும் அமுதின் விட்டவன்

விழுக்காடு கேசவய்யங்கார் பரம்பரையினர் பெறுவதாகவும் திருக் கொடியேற்றத்தன்று இரவு திருப்பள்ளி அறையில் அமுது செய்தருளும் பொங்கலும் அவரே பெறுவது என்றும் குறிப்பிடப் பட்டுள்ளது.[143]

13. நாள் கட்டளை நாலில் ஒன்றும்; அமாவாசை நாள் தோப்புக் கட்டளை பத்தில் ஒன்றும், பராசரபட்டர் திருவேங்கடய்யங்கார் பெற்று வருவதாகக் குறிக்கின்றது.[144]

14. சூடிக்கொடுத்த நாச்சியார், ஆளவந்தார் ஆகியோர் திருநாள்களில் அமுது செய்வதை, விட்டவன் விழுக்காடு தாயார் சன்னிதியில் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு வழங்கப்பெறுதல் வேண்டும்.[145]

15. நாதமுனி ஆழ்வார் திருநாளில் ஒருநாள் ஒரு படி தோசை அமுது செய்தருள அவ்வமுதினை விண்ணப்பம் செய்வார் பெறக் கடவர்.[146]

16. எம்பெருமானார் திருநாளில் பெருமாள் அமுது செய்யும் அக்கார அடிசில் தளிகை ஆறும் ஆக மொத்தம் இருபத்தோரு தளிகைகளும் வைணவர்களுக்கு வழங்கப்படும். இதற்காக வரும் விட்டவன் விழுக்காடு பெரியகோயில் தளிகை ஒன்றரையும் தாயார் கோயில் தளிகை அரையும் ஆக இரண்டும் எம்பெருமான் திருக்வோலக்கத்தில் யாத்திரீகர்க்கு வழங்கப்பெறும்.[147]

இவ்வாறு கல்வெட்டுகளினின்று பெருமாளுக்கு அமுது படைக்கும் அமுதினை விட்டவன் விழுக்காடாக அதற்குரியவர்கள் பெற்று வந்தனர் என்று அறிகின்றோம்.

கல்வெட்டுகளில் குறித்தவாறு உபயங்கள் இன்று பல நடவாமையாலும் கால மாறுதல்களில் பல உபயங்கள் நின்று போன மையினாலும், இன்றைய நடைமுறையில் விழாக் காலங்களில் அமுது செய்யும் அமுத வகைகள் விட்டவன் விழுக்காடு அனுப்பப் பெறுதலில் மேற்கூறிய உரிமையாளப் பரம்பரை மறைந்து போனதாலும் பெரிய அளவில் மாறுபட்டுள்ளன.

## 3:3:3 இன்றைய நடைமுறையில் விட்டவன் விழுக்காடு

கோயிலார் விட்டவன் விழுக்காடு அனுப்புவதில் கணக்குப் புத்தகம் ஒன்றினை வைத்து, அதில் குறிப்பிட்டவாறு கணக்கப் பிள்ளை மூலமாக உரியவர்களுக்கு அனுப்புகின்றனர். இது யார் காலத்திலிருந்து பின்பற்றப்பட்டதென்பததை அறிய முடியவில்லை. ஆயின் கோயிலோடு தொடர்புடையவர்களுக்குத்தான் இந்த விட்டவன் விழுக்காடு சென் றடைகின்றது என்பது மட்டும் நம்மால் தெளிவாக அறிய முடிகின்றது. திங்கள் வாரியாக இந்த விட்டவன் விழுக்காட்டைக் குறித்து வைத் துள்ளனர்.

பங்குனித் திருநாள், முதல், இரண்டாம் திருநாள் விட்டவன் விழுக்காடு யாருக்கும் குறிப்பிடப்படவில்லை. மூன்றாம் திருநாள் உடையவர் இராமானுசர் சன்னிதிக்கும், அண்ணன் / அப்பனுக்கும் செல்கிறது. ஆறாம் திருநாளன்று உறையூர் நாச்சியாருக்கும் உடையவர் இராமானுசருக்கும், அண்ணன் / அப்பனுக்கும் செல்கிறது.

சித்திரைத் திருநாள் முதல், இரண்டு, நான்கு, ஐந்தாம் திருநாள்களில் அண்ணன்/அப்பன் விட்டவன் விழுக்காட்டைப் பெறு கின்றனர். மூன்றாம் திருநாள் விட்டவன் விழுக்காடு உத்தமநம்பி பெறுவார். ஆறாம் திருநாள் அண்ணன் / அப்பனும் உத்தமநம்பியும் பெறுகின்றனர். ஏழு, எட்டு, ஒன்பதாம் திருநாள்கள் அண்ணன் / அப்பன் பெறுவர்.

தை மாதம் பூபதி திருநாள் முழுவதும் விட்டவன் விழுக்காடு அண்ணன் / அப்பன் பெறுவர். ஆவணி மாதம் திருப்பவித்திரத் திருநாளின் விட்டவன் விழுக்காடு கோயிலுள் உள்ள கோதண்டராமர் சன்னிதிக்குச் செல்கின்றது. திருப்பவித்திரத் திருநாள் சாற்றுமுறை விட்டவன் விழுக்காடு கோயிலுள் உள்ள தீர்த்தக் கரை வாசுதேவப் பெருமாள் சன்னிதிக்குச் செல்கின்றது.

## பகல் பத்து – திருமொழித் திருநாள்

அத்தியயன விழாக்காலங்களில் அந்த நாள்களில் அரைய ரால் பாடப்படும் ஆழ்வார்களின் பாடல் அடிப்படையிலோ, அன்றி அவர்களால் கூறப்படும் வியாக்கியான அடிப்படையிலோ விட்டவன் விழுக்காடு அனுப்பப்படும்.

திருநெடுந்தாண்டகத்தன்று, திருமங்கையாழ்வார் சன்னிதி க்கு விட் டவன் விழுக்காடு போகிறது. அன்று திருநெடுந்தாண்டகம் அரையரால் இசைக்கப்படும்.

திருமொழி முதல் திருநாளன்று பெரியாழ்வார் சன்னிதிக்கு அனுப்பப்படும். அன்று பெரியாழ்வார் பாசுரம், பெருமாள் திருமுன் அரையர்காளல் இசைக்கப்பெறும். இரண்டாம் திருநாள் அன்றும் பெரியாழ்வார் பாசுரம் தொடர்வதால் விட்டவன் விழுக்காடு அன்று இல்லை. மூன்றாம் திருநாளன்று இராமானுசர் சன்னிதிக்கு விட்டவன் விழுக்காடு செல்கிற நாளில் திருப்பாவைப் பாசுரம் இசைக்கப் பெறும். எம்பெருமானாரைத் (இராமானுசரைத்) 'திருப்பாவை ஜீயர்' என்றழைப்பதால் அவர் சன்னிதிக்கு அது உரியதாகிறது. நான்காம் திருநாள் குலசேகராழ்வார் பாசுரம் சேவிக்கப்படுவதால் அவர் சன்னிதிக்கு விட்டவன் விழுக்காடு அனுப்பப்படுகிறது. ஐந்தாம் திருநாள் திருப்பாணாழ்வாரின் 'அமலனாதிபிரான்' பாசுரம் சேவிப்பதால், அவர் கோயில், திருமாளிகையைச் சார்ந்ததால், திருமாளிகைக்குச் சிறப்புக்கள் அனுப்பப்படும். ஆறாம் திருநாளன்று 'கண்ணிநுண் சிறுத்தாம்பு' பிரபந்தத்தில் ஈடுபட்ட மணவாள மாமுனிகள் இன்று அரையர்க்கு பகுமானம் அனுப்புவார் அதனால் 'பெரிய ஜீயர்' என்று அழைக்கப்படும் மணவாளமாமுனிகள் சன்னிதிக்குச் சிறப்புகள் உரியதாகிறது. ஏழாம் திருநாள், திருமங்கையாழ்வாரது பெரியதிரு மொழி சேவிப்பதால் அவர் சன்னிதிக்கு விட்டவன் விழுக்காடு செல்கிறது. எட்டாம் திருநாள் 'பெரிய திருமொழி' பாசுரங்கள் சேவிக்கப் படுவதால் திருமங்கை மன்னனுக்கு விட்டவன் விழுக்காடு இல்லை. ஒன்பதாம் திருநாளும் பெரிய திருமொழிப்பாசுரம் தொடர்வதால்

விட்டவன் விழுக்காடு இல்லை. பத்தாம் திருநாளும் 'திருநெடுந் தாண்டகம்' பெரிய திருமொழியாகையால் விட்டவன் விழுக்காடு இல்லை.

## இராப்பத்து – திருவாய்மொழித் திருநாள்

முதல் இருநாள்களும் விட்டவன் விழுக்காடு இல்லை. மூன்றாம் திருநாள் கந்தாடை இராமானுசரும், நான்காம் திருநாள் கோயிலண்ணன் திருமாளிகையாரும், ஐந்தாம் திருநாள் பராசரபட்டரும், ஆறாம் திருநாள் அகோபிலமடத்தாரும், ஏழாம் திருநாள் உத்தம நம்பியும், எட்டாம் திருநாள் வேதவியாசபட்டரும், ஒன்பதாம் திருநாள் கோயிலண்ணன் திருமாளிகையாரும் விட்டவன் விழுக்காட்டைப் பெற்று வருகின்றனர். பத்தாம் திருநாள் விட்டவன் விழுக்காடு இல்லை.

பதினொன்றாம் நாள் இயற்பா அன்று, திருவரங்கத்தமுத னார் விட்டவன் விழுக்காட்டைப் பெற்று வருகிறார்.

பகல்பத்து திருநாளும், இராப்பத்துத் திருநாளும், 'தோசை, வடை, அப்பம் ஆகியவை முன்னர் கூறப்பட்டவர்களுக்கு அனுப்பப் படும். அரையர் சேவை இரண்டு உள்ள நாள்களில் தோசை, வடை, அப்பம் அதிக அளவில் அவர்களுக்கு அனுப்பப்படும்.

அத்தியயனத் திருவிழா நாளில் விட்டவன் விழுக்காடு அனுப்பப்படும். இருபது நாள்களிலும் ஐம்பது தோசை, ஐம்பது வடை, ஐம்பது சில்லரையப்பம் அவரவர்களுக்கு அனுப்பப்படும். அத்தியயனத் திருநாள் இருபது நாள்களிலும், ஆழ்வார்கள் மண்டபத்தில் அமுது செய்வது அரையர் வீட்டிற்கு அனுப்பப்படுகிறது

## பிற விழாக்கள்

1. வசந்தத் திருநாள் முழுவதும் விட்டவன் விழுக்காடு உத்தமநம்பிக்கு உரியதாகும். அண்ணன் / அப்பனுக்கும் உரிமை உண்டு.

2. புரட்டாசித் திங்கள் தாயார் மகா நவமித் திருநாள் முழுவதும் விட்டவன் விழுக்காடு அண்ணன் / அப்பன் பெற்று வருகின்றனர்.

3. ஐப்பசி மாதம் ஊஞ்சல் திருநாளில், கந்தாடை ராமானுசர் பெற்று வருகிறார். இன்றைய நடைமுறையில் அவர் பொறுப்பில் இல்லாததால் கோயிலார் அதைப் பெறுகின்றனர். தாயார் ஊஞ்சலின் விழுக்காட்டினை அண்ணன் / அப்பன் பெறுகின்றனர்.

4. ஆனி மாதம் நடைபெறும் ஜேஷ்டாபிடேக விழாவில் கோயில்கந்தாடை வாதூலதேசிகர் வழிவந்தவரான கோயில் கந்தாடை அண்ணன் / அப்பன் போன்றோர் பெற்று வருகின்றனர்.

5. ஆடி மாதம் பதினெட்டாம் பெருக்கு விழாவில் விட்ட விழுக்காடும் அவரே பெற்று வருகிறார்.

6. கிருஷ்ணஜெயந்தித் திருநாள் விட்டவன் விழுக்காடு உத்தமநம்பிக்கு அனுப்பப்படுகிறது. கிருஷ்ணஜெயந்தியின் மறுநாள் நடைபெறும் உறியடியின்போது விட்டவன் விழுக்காடு இக்கோயிலின் தீர்த்தக்காரரான பெரியநம்பிக்கு அனுப்பப்படுகிறது.

7. தீபாவளித் திருநாள் விட்டவன் விழுக்காட்டினையும் அண்ணன் / அப்பன் அவர்களே பெறுகின்றனர்.

8. கார்த்திகை மாதம் ஏகாதசித் திருநாள் விட்டவன் விழுக்காடு பராசரபட்டர், வேதவியாச பட்டர் பெற்று வருகின்றனர். கார்த்திகைத் திருவிளக்குத் திருநாளின் விட்டவன் விழுக்காடு உத்தமநம்பி பெறுகின்றார். கோயில் மிராசு கணக்குப்பிள்ளைக்கு விட்டவன் விழுக்காடு செல்வதில்லை. ஆயின் அவருக்கு மரியாதை மட்டும் அனுப்பப்படுகிறது. மரியாதை என்பது மாலை, சந்தனம் முதலியவை.

9. சித்திரையில் நடைபெறும் கோடைத் திருநாளின்போது, அண்ணன் / அப்பன் விட்டவன் விழுக்காடு பெறுவர். தாயார் கோடை விழாவிலும், அவரே பெறுவார்.

10. சித்திரா பௌர்ணமியன்றும், விட்டவன் விழுக்காட்டினை அண்ணன் / அப்பன் ஆகியோர் பெறுவர்.

திருமாளிகைக்கு விழாக்காலங்கள் தவிர மற்ற நாள்களில் நான்கு படி சோறும், பாசிப் பருப்பும் அனுப்பப்படும்.

கோயில் கணக்குப் புத்தகத்தில் அண்ணன் / அப்பன் பற்றிக் குறிக்கும்போது திருமாளிகை விட்டம் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கல்வெட்டுகளில் கோயில் அண்ணன் என்றும், கோயில் கந்தாடை அண்ணன் என்றும் குறிக்கப்பட்டுள்ளது.[148]

உத்தமநம்பி பற்றிக் குறிக்கும்போது 'பிள்ளையன் விட்டம்' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. கல்வெட்டிலும் உத்தமநம்பி பற்றிக் கூறும்போது பிள்ளையன் என்று குறிக்கக் காண்கின்றோம்.[149]

இவ்வாறு திருவரங்கம் திருக்கோயிலில் படைக்கப்படும் அமுது முதலாய சிறப்புகளைப் பெறுதற்கு உரியாரும், அவர் பெறும் முறையும் கல்வெட்டுகள் வாயிலாக அறியப்படுவதோடு இன்று நடைமுறையில் இவ்வுரிமை எவ்வாறு மாற்றப்பெற்றுள்ளது என்பதும் அறியப்படும்.

இக்கோயிலில் இன்றைய நடைமுறையில் விட்டவன விழுக்காடு, வீரவண்டி, சேமக்கலம் அகிய இசைக் கருவிகளின் இசை முழக்கத்தோடு, இறைவனுக்குப் படைக்கப்பட்ட அமுதை தட்டிலோ, கூடையிலோ வைத்து உரியவர்கள் இல்லத்திற்குக் கொண்டு செல்லப்படுகிறது.



## இயல் — 3

## அடிக்குறிப்புகள்

1. ஔவையார் மூதுரை பாடல் எண் 2
2. சவுத் இண்டியன் இன்ஸ்கிரிப்ஷன்ஸ் வால்யூம் xxiv 1982
3. திருவரங்க கோயில் கல்வெட்டு எண் 1 ஏ.ஆர். எண் 69 ஆப் 1892
4. மேலது 7 ஏ.ஆர். எண் 415 ஆப் 1961 - 62
5. மேலது 9 ஏ.ஆர். எண் 95 ஆப் 1936-37
6. மேலது 63 ஏ.ஆர். எண் 62 ஆப் 1892
7. மேலது 87ஏ.ஆர். எண் 119 ஆப் 1947-48
8. மேலது 373 ஏ.ஆர். எண் 42 ஆப் 1938 - 39
9. மேலது 387 ஏ.ஆர். எண் 32 ஆப் 1938 - 39
10. மேலது 483 ஏ.ஆர். எண் 374 ஆப் 1953
11. மேலது 484 ஏ.ஆர். எண் 57 ஆப் 1936 - 37
12. மேலது 485 ஏ.ஆர். எண் 354 ஆப் 1953 - 54
13. மேலது 490 ஏ.ஆர். எண் 298 ஆப் 1950 - 51
14. மேலது 507 ஏ.ஆர். எண் 336 ஆப் 1952 - 53
15. மேலது 515 ஏ.ஆர். எண் 289 ஆப் 1950 - 51
16. மேலது 532 ஏ.ஆர். எண் 205 ஆப் 1951 - 52
17. மேலது 536 ஏ.ஆர். எண் 175 ஆப் 1951 - 52
18. மேலது 545 ஏ.ஆர். எண் 109 ஆப் 1937 - 38
19. மேலது 545 ஏ.ஆர். எண் 109 ஆப் 1937 - 38
20. நீலகண்டசாஸ்திரியார், சோழாஸ் (பக்கங்கள்) 295 - 296
21. குருபரம்பரை பிரபாவம் (ஆறாயிரப்படி) பக்கம் 221 மற்றும் ஸ்ரீ இராமானுஜர் பக்கம் 241
22. சவுத் இண்டியன் இன்ஸ்கிரிப்ஷன்ஸ் வால்யூம் xxiv கல்வெட்டு எண் 26 - 108
23. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரிகள் 'தி சோழாஸ்', செகண்ட் எடிசன் சென்னை 1955 பக்கம் 639
24. பராசரபட்டர் அருளிய ஸ்ரீரங்கராஜஸ்தவம், பூர்வசதகம் 49ஆவது சுலோகம் பக்கம் 46
25. திருவரங்கம் கோயில் கல்வெட்டு எண் 306, ஏ.ஆர். எண். 59 ஆப் 1938-39
26. மேலது 388 ஏ.ஆர். எண் 28 ஆப் 1938 - 39

27. மேலது 476 ஏ.ஆர். எண் 376 ஆப் 1953 - 54
28. கல்வெட்டு எண் 505 ஏ.ஆர். எண் 256 ஆப் 1950 - 51
29. மேலது 530 ஏ.ஆர். எண் 45 ஆப் 1938 - 39
30. மேலது 306 ஏ.ஆர். எண் 59 ஆப் 1938 - 39
31. மேலது 362 ஏ.ஆர். எண் 257 ஆப் 1930
32. மேலது 403 ஏ.ஆர். எண் 263 ஆப் 1929 - 30
33. மேலது 405 ஏ.ஆர். எண் 24 ஆப் 1938 - 39
34. மேலது 478 ஏ.ஆர். எண் 373 ஆப் 1953 - 54
35. மேலது 485 ஏ.ஆர். எண் 354 ஆப் 1953 - 54
36. மேலது 545 ஏ.ஆர். எண் 109 ஆப் 1937 - 38
37. மேலது 547 ஏ.ஆர். எண் 110 ஆப 1937 - 38
38. மேலது 547 ஏ.ஆர். எண் 110 ஆப் 1937 - 38
39. மேலது 7 ஏ.ஆர். எண் 415 ஆப 1961 - 62
40. மேலது 9 ஏ.ஆர். எண் 417 ஆப 1961-62 மேலது 63 ஏ.ஆர எண 62 ஆப 1892
41. மேலது 485 ஏ.ஆர். எண் 354 ஆப் 1953 - 54
42. மேலது 507 ஏ.ஆர். எண் 336 ஆப் 1952 - 53
43. மேலது 373 ஏ.ஆர். எண் 42 ஆப் 1938 - 39
44. மேலது 525 ஏ.ஆர். எண் 67 ஆப் 1938
45. மேலது 419 ஏ.ஆர். எண் 318 ஆப் 1950 - 51
46. மேலது 478 ஏ.ஆர். எண் 373 ஆப் 1953 - 54
47. மேலது 479 ஏ.ஆா. எண் 135 ஆப் 1938 - 39
48. மேலது 525 ஏ.ஆா. எண் 67 ஆப் 1938
49. மேலது 534 ஏ.ஆர். எண் 50 ஆப் 1936 - 37
50. மேலது 329 ஏ.ஆர். எண 7 ஆப் 1938 - 39
51 மேலது 136 ஏ.ஆர். எண் 61 ஆப் 1936 - 37
52. மேலது 406 ஏ.ஆர். எண் 343 ஆப் 1952 - 53
53. மேலது 531 ஏ.ஆர். எண 299 ஆப் 1950 - 51
54. மேலது 556 ஏ.ஆர். எண் 9 ஆப் 1936 - 37
55. மேலது 87 ஏ.ஆர். எண் 119 ஆப் 1947 - 48 மேலது 128 ஏ.ஆர். எண் 73 ஆப் 1936 - 37
56. மேலது 169 ஏ.ஆர். எண் 317 ஆப் 1952 - 53 மேலது 269 ஏ.ஆர். எண் 65 ஆப் 1936 - 37
57. மேலது 447 ஏ.ஆர். எண் 324 ஆப் 1950 - 51

58. மேலது 496 ஏ.ஆர். எண் 105 ஆப் 1938 - 39
மேலது 501 ஏ.ஆர். எண் 311 ஆப் 1950 - 51
மேலது 502 ஏ.ஆர். எண் 288 ஆப் 1950 - 51
59. மேலது 506 ஏ.ஆர். எண் 337 ஆப் 1952 - 53
60. மேலது எண் 556 ஏ.ஆர். எண் 9 ஆப் 1936 - 37
61. கோயில் ஒழுகு பக்கம் 32 (1888)
62. இலட்சுமி காவியம் 2ஆம் சருக்கம்
63. கோயில் ஒழுகு பக்கம் 25 (1888)
64. திருவரங்கக் கோயில் கல்வெட்டு எண் 544 ஏ.ஆர். எண் 61 ஆப் 1938-39 மற்றும் கோயில் ஒழுகு பக்கம் 119 (1909) மற்றும் உத்தம நம்பி வைபவம்
65. மேலது எண் 431 ஏ.ஆர். எண் 43 ஆப் 1938 - 39
66. மேலது 380 ஏ.ஆர். எண் 293 ஆப் 1950-51
67. மேலது 431 ஏ.ஆர். எண் 43 ஆப் 1938 - 39
68. மேலது 546 ஏ.ஆர். எண் 11 ஆப் 1938 - 39
69. மேலது 490 ஏ.ஆர். எண் 298 ஆப் 1950 - 51
70. மேலது 368 ஏ.ஆர். எண் 41 ஆப் 1938 - 39
71. மேலது 489 ஏ.ஆர். எண் 350 ஆப் 1953 - 54
72. மேலது 212 ஏ.ஆர். எண் 49 ஆப் 1936 - 37
73. மேலது 427 ஏ.ஆர். எண் 19 ஆப் 1938 - 39
74. மேலது 167 ஏ.ஆர். எண் 64 ஆப் 1892
75. மேலது 374 ஏ.ஆர். எண் 68 ஆப் 1938 - 39
76. மேலது 409 ஏ.ஆர். எண் 16 ஆப் 1938 - 39
77. மேலது 423 ஏ.ஆர். எண் 17 ஆப் 1938 - 39
78. மேலது 368 ஏ.ஆர். எண் 41 ஆப் 1938 - 39
79. மேலது 222 ஏ.ஆர். எண் 40 ஆப் 1936 - 31
80. மேலது 516 ஏ.ஆர். எண் 99 ஆப் 1938 - 39
81. மேலது 486 ஏ.ஆர். எண் 183 ஆப் 1951 - 52
82. மேலது 498 ஏ.ஆர். எண் 351 ஆப் 1953 - 54
மேலது 506 ஏ.ஆர். எண் 337 ஆப் 1952 - 53
மேலது 519 ஏ.ஆர். எண் 326 ஆப் 1952 - 53
மேலது 523 ஏ.ஆர். எண் 8 ஆப் 1938 - 39
83 மேலது 524 ஏ.ஆர். எண் 97 ஆப் 1938 - 39
84. மேலது 93 ஏ.ஆர். எண் 108 ஆப் 1947 - 48

85. மேலது 98 ஏ.ஆர். எண் 216 ஆப் 1951 - 52
86. மேலது 111 ஏ.ஆர். எண் 127 ஆப் 1947 - 48
87. சிலப்பதிகாரம் மதுரை காண்டம் வேட்டுவ வரி
88. கிடைக்கப்பெற்ற சோழர்காலம் முதல் நாயக்கர் காலம் வரை உள்ள பல கல்வெட்டுகள் மூலம் அறியப்படுகின்றன.
89. மேலது 485 ஏ.ஆர். எண் 354 ஆப் 1953 - 54
90. கல்வெட்டு எண் 489 ஏ.ஆர். எண் 350 ஆப் 1953 - 54
91. மேலது 507 ஏ.ஆர். எண் 336 ஆப் 1952 - 53
92. மேலது 516 ஏ.ஆர். எண் 99 ஆப் 1938 - 39
93. மேலது 489 ஏ.ஆர். எண் 350 ஆப் 1953 - 54
94. மேலது 545 ஏ.ஆர். எண் 109 ஆப் 1937 - 38
95. மேலது 532 ஏ.ஆர். எண் 205 ஆப் 1951 - 52
96. மேலது 387 ஏ.ஆர். எண் 32 ஆப் 1938 - 39
97. மேலது 490 ஏ.ஆர். எண் 298 ஆப் 1950 - 51
98. மேலது 428 ஏ.ஆர். எண் 123 ஆப் 1937 - 38
99. மேலதுமு 388 ஏ.ஆர். எண் 28 ஆப் 1938 - 39
100. மேலது 490 ஏ.ஆர். எண் 298 ஆப் 1950 - 51
101. மேலது 490 ஏ.ஆர். எண் 298 ஆப் 1950 - 51
102. மேலது 559 ஏ.ஆர். எண் 83 ஆப் 1936 - 37
103. மேலது 499 ஏ.ஆர். எண் 135 ஆப் 1938 - 39
104. மேலது 511 ஏ.ஆர். எண் 21 ஆப் 1938 - 39
105. மேலது 401 ஏ.ஆர். எண் 343 ஆப் 1952 - 53
106. மேலது 490 ஏ.ஆர். எண் 298 ஆப் 1950 - 51
107. மேலது 490 ஏ.ஆர். எண் 298 ஆப் 1950 - 51
108. மேலது 490 ஏ.ஆர். எண் 298 ஆப் 1950 - 51
109. மேலது 412 ஏ.ஆர். எண் 36 ஆப் 1938 - 39
110. மேலது 447 ஏ.ஆர். எண் 324 ஆப் 1950 - 51
111. மேலது 556 ஏ.ஆர். எண் 9 ஆப் 1936 - 37
112. மேலது 544 ஏ.ஆர். எண் 61 ஆப் 1938 - 39
113. மேலது 544 ஏ.ஆர். எண் 61 ஆப் 1938 - 39
114. மேலது 490 ஏ.ஆர். எண் 298 ஆப் 1950 - 51
115. மேலது 546 ஏ.ஆர். எண் 11 ஆப் 1938 - 39
116. மேலது 368 ஏ.ஆர். எண் 41 ஆப் 1938 - 39
117. மேலது 421 ஏ.ஆர். எண் 2 ஆப் 1938 - 39

118. மேலது 427 ஏ.ஆர். எண் 19 ஆப் 1938 - 39
119. மேலது 423 ஏ.ஆர். எண் 17 ஆப் 1938 - 39
120. மேலது 368 ஏ.ஆர். எண் 41 ஆப் 1938 - 39
121. மேலது 453 ஏ.ஆர். எண் 81 ஆப் 1937 - 38
122. மேலது 498 ஏ.ஆர். எண் 351 ஆப் 1953 - 54
123. மேலது 498 ஏ.ஆர். எண் 351 ஆப் 1953 - 54
124. மேலது 523 ஏ.ஆர். எண் 8 ஆப் 1938 - 39
125. மேலது 524 ஏ.ஆர். எண் 97 ஆப் 1938 - 39
126. மேலது 400 ஏ.ஆர். எண் 266 ஆப் 1930 - 31
127. மேலது 404 ஏ.ஆர். எண் 356ம ஆப் 1953 - 54
128. மேலது 122, ஏ.ஆர். எண் 33 ஆப் 1936 - 37
129. மேலது 504 ஏ.ஆர். எண் 91 ஆப் 1936 - 37
மேலது 512 ஏ.ஆர். எண் 35 ஆப் 1938 - 39
மேலது 518 ஏ.ஆர். எண் 439 ஆப் 1954 - 55
130. மேலது 605 ஏ.ஆர். எண் 145 ஆப் 1938 - 39
131. மேலது 522 ஏ.ஆர். எண் 16 ஆப் 1936 - 37
132. மேலது 485 ஏ.ஆர். எண் 354 ஆப் 1953 - 54
133. மேலது 507 ஏ.ஆர். எண் 336 ஆப் 1952 - 53
134. மேலது 416 ஏ.ஆர். எண் 260 ஆப் 1930
135. மேலது 403 ஏ.ஆர். எண் 263 ஆப் 1929 - 30
மேலது 408 ஏ.ஆர். எண் 259 ஆப் 1930
136. மேலது 511 ஏ.ஆர். எண் 21 ஆப் 1938 - 39
137. மேலது 447 ஏ.ஆர். எண் 324 ஆப் 1950 - 51
138. மேலது 556 ஏ.ஆர். எண் 9 ஆப் 1936 - 37
139. மேலது 368 ஏ.ஆர். எண் 41 ஆப் 1938 - 39
140. மேலது 375 ஏ.ஆர். எண் 265 ஆப் 1980
141. மேலது 535 ஏ.ஆர். எண் 176 ஆப் 1951 - 52
142. மேலது 546 ஏ.ஆர். எண் 11 ஆப் 1938 - 39
143. மேலது 516 ஏ.ஆர். எண் 99 ஆப் 1938 - 39
144. மேலது 400 ஏ.ஆர். எண் 266 ஆப் 1930
145. மேலது 498 ஏ.ஆர். எண் 351 ஆப் 1953 - 54
146. மேலது 506 ஏ.ஆர். எண் 337 ஆப் 1952 - 53
147. மேலது 523 ஏ.ஆர். எண் 8 ஆப் 1938 - 39
148. மேலது 485 ஏ.ஆர். எண் 354 ஆப் 1953 - 54
149. மேலது 102 ஏ.ஆர். எண் 32 ஆப் 1948 - 49

# இயல் - 4

## திருவரங்கம் கோயில் - இராமானுசரின் நடைமுறைச் சீர்திருத்தம்

### 4:1 விளக்கம்

பண்டைக்காலத்தில் ஆட்சி நடைமுறைத் தன்மைக்கு இந்தக் கோயில் ஒரு முழு நிறைவான சிறந்த எடுத்துக்காட்டாக இலங்குகிறது உடையவர் எனப்படும் இராமானுசர் ஆகிய பெரும் சீர்திருத்தக் காரருக்கு முற்பட்ட காலத்தில், இக்கோயிலில் ஐந்துவகையான அலுவற் பதவிகள் மட்டுமே இருந்தன. இராமானுசர் அவற்றைப் பத்தாக உயர்த்தினார்.[1] அவர்களின் வேலைகள் என்னவென்பதை 'கோயில் ஒழுகு' விரிவாகக் குறிக்க காண்கிறோம். மேலே சுருக்கமாகக் கூறிய செய்திகளைவிட, அது மேலும் பல செய்திகளைத் தெரிவிக் கின்றது. ஆதலின் அதுபற்றி இங்கு ஆராய்தல் நலம் பயக்கும்.

### 4:2 பத்துக்கொத்தின் பணிகள்

1) கோயில் அலுவலர்களுள் *திருப்பதியார்* என்பவர்கள், முதல் வகையினராவர். இவர்கள் இராமானுசரைத் தங்கள் ஆன்மீகக் குருவாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டவர்கள். மூலத்தான ஊழியத்திற்கு இவர்கள் பொறுப்பு உடையவர் ஆவர். இவர்களின் தலைவர் தண்டு என்னும் முத்திரைக்கோல் ஏந்திச் செல்வர். கோயிலில் நடைபெறும் நிகழ்ச்சிகள் பற்றிய செய்திகளை, இவர் அவ்வப்போது உசாவி அறிந்து வைத்துக்கொள்வார். கோயிற் பணியாளர்கள் எல்லாரையும் போலவே, இவ்வூழியர்களும் முறைப்படி நீராடிய பிறகு, வைகறைக் காலம் முதல் தமது கடமைகளைச் செய்யத் தொடங்குவர்.

கோயிலின் மூலத்தானக் கதவு திறந்த உடனேயே, இவர்கள் முகப்பு மண்டபத்தையும், பித்தளை பதித்த திருவாயிலையும்,

பிரதட்சிணப் பிரகாரத்தையும், திருவலகிட்டுத் தூய்மை செய்வர். வழிபாட்டில் பயன்படுத்தப்பெறும் திருவிளக்குகள் அனைத்தையும் நெய்வார்த்து திரியைத் துடைத்தும் அல்லது மாற்றுத் திரியிட்டும், தம் உதவியாளர்களாகிய ஏகாங்கிகளால் அளிக்கப்படும் நெய்யை வார்த்தும், போற்றிப் பராமரிப்பர். வழிபாட்டுக் காலங்களில் இவர்கள் திருவிளக்குகளை ஏற்றிப் பூசை புரியும் அர்ச்சகர்களிடம் அவற்றை முறையே எடுத்துக் கொடுப்பர். அர்ச்சகர் ஓமம் புரியும் பொழுது, இவர்கள் விளக்குகள் ஏற்றுவர். மற்றும் தூபங்கள் இடுவர். சுவாமிக் காகச் செய்யப்படும் பலவகையான பிரசாதங்கள் முதலியவற்றைப் பிறரிடமிருந்து பெறுவதும், பெற்று எடுத்துச் செல்வதும், இவர் தம் பணிகளில் ஒன்று.

முஸ்லிம்களின் படைப் பற்றாட்சிக்கும் பின்னர், இவர்களின் பணிகளில் ஏற்பட்ட மாறுதல்களைக் கோயிலொழுகு குறிப்பிடு கின்றது. பிற்காலத்தில், சிறப்புத் திருநாள்களில் வேதம் ஓதுதலும், பிரபந்தம் பாடுதலும்கூட, இவர்களின் கடமையாயிற்று. இவர்களில் சிலர் சிறப்புரிமைகள் பெற்று, எம்பெருமானுக்குரிய நிவேதனம் விளைபொருட் காணிக்கைகள் என்பவற்றுடன் தொடர்புடைய வற்றில், காசாகவும் ஏராளமான செல்வம் தொகுத்தனர். மிகவும் சமீப காலத்தில் இவர்கள் சந்தனம் வழங்கிச் சிறப்பிக்கப் பெற்றனர்.[2]

2) இரண்டாவது வகையினர் *திருப்பணி செய்வார்* எனப்படுவர். இவர்கள் திருமஞ்சனத்திற்குத் தண்ணீர் கொணருவர். வழிபாட்டுச் சடங்குகளில் தண்ணீர் மிகவும் முதன்மையாக மதிக்கப்பெற்றது. இவர்கள் ஆன்மீகத் தலைவர்களாக விளங்கித் துறவிகள் ஆகிய ஞானாசிரியர்களின் வழி வழிச் சந்ததியினரிலிருந்து, பரம்பரை முறையில் தேர்ந்தெடுக்கப்படுபவராவர். இவர்கள் எண்ணிக்கையில் ஐந்துபேர் மட்டுமேயாவர். புனித இடங்களில் தண்ணீர் தெளிப்பதும், திருவிழாக்களிலும், ஊர்வலங்களிலும் இறைவனுக்குக் குடை பிடிக்கப்படும் போதும் தண்ணீர் வார்ப்பதும், வாசனைப் பொருள்கள் இட்ட பரிமளத் தண்ணீரை இறைவனுக்கு

நறுமணம் கமழும் பொருட்டு உயரச் சிதறுவிப்பதும், இவர்களின் பணியாகும். நம்பெருமாள் புறப்பாட்டுக்கு முன்னர் திருவுலாச்செல்லும் திருவீதிகளில், தண்ணீர் தெளிக்கப்படுமாறு மேற்பார்வை செய் வதும், இவர்களின் கடமையாகும். வேதமும், திவ்யப்பிரபந்தமும் ஓதுபவர்களுக்கு முன்னர் குடை பிடித்தலும், ஊர்வலத்தினை முன் நின்று நடத்துதலும், பக்தர்கள் கொணரும் வெற்றிலை, தேங்காய், பழம், காணிக்கை முதலியவற்றைக் கோயிலின் சார்பில் பெறுதலும், அவற்றைப் பல்வேறு வகையான கோயில் அலுவலர்களுக்கு முறையே வழங்குதலும், இவர்களுக்குச் சிறப்புரிமையாகும். சமய, சம்பிரதாய வரனமுறை களையும் அல்லது கோயில் தொடர்புடைய எந்தச் செய்தியையும் ஆராய்ந்துணர விரும்பும் பக்தர்களின் குழுவைக் கூட்டுவிப்பதும், அவர்கள் நிகழ்த்தும் ஆராய்ச்சி விவாதங்களை விசாரித்துத் தீர்ப் பளிப்பதுங்கூட, இவர்களின் கடமையாகும்.

இராமாநுசரின் காலத்தில் இவர்களுக்கு வழங்கப்பெற்ற சிறப்புரிமைகளுள், வீதிகளை மேற்பார்வையிடக் கோயில் யானை களின் மீது அமர்ந்து செல்லும் உரிமையை இவர்கள் தமக்கென அமைத்து வைத்துக் கொண்டார்கள். ஆனால் இந்தக் கடமைகள் மிகுதிப்பட்ட போதும், முஸ்லீம்களின் குடியிருப்பிற்குப் பிறகும், இவர்கள் தங்களுடைய உரிமைகளில் சிலவற்றைப் பிராமணர்களுக்கு ஏதேனும் ஒன்றிற்குப் பதிலாகவோ அல்லது நன்கொடையாகவோ விட்டுக் கொடுத்துவிட்டனர்.[3]

3) பட்டியலில் அடுத்திருப்பவர்கள், இராமாநுசரால் ஒரு தொகுதியாக மாற்றி அமைக்கப்பெற்ற ***பிரமணர்கள்*** அல்லது ***நம்பிகள்*** என்போர் ஆவர். இவர்கள் நேரடியாக எம்பெருமான் கைங்கர்யத்திற்கும், அவரைப் பூசிப்பதற்கும், மூன்றாம் பிரகாரத்தி லுள்ள சிறு சிறு சன்னிதிகளிலுள்ள அர்ச்சாமூர்த்திகளைப பூசிப்பதற்கும், நியமிக்கப்பெற்றனர். நாள்தோறும் கருவறையில் செய்யப்படும் பூசையின்போது, இவர்கள் தூப தீபங்கள் ஏந்துவர்

திருவரங்கத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் அழகிய மணவாளன், நம்பெருமான், திருஅரங்கன் போன்ற பல திருநாமங்களால்

அழைக்கப் பெறுகிறான். நம்பெருமாளது ஆடை அணிகலன்களைக் கழற்றியும், மாற்றியும் அணி செய்வர்; சுவாமிக்காகக் கொணரப்பெறும் வெற்றிலை, பாக்கு, தேங்காய், பழம், பால், பாயாசம் முதலிய வழிபாட்டுப் பொருள்களை ஏற்பர். நாள்தோறும் நடைபெறுகின்ற திருமஞ்சனங்களிலும், விசேட காலங்களில் நிகழும் அபிடேகங்களிலும், அருகேயிருந்து அந்தந்த சடங்கிற்குத் தேவைப்படும் பொருள்களை இவர்கள் எடுத்துக் கொடுப்பர். உதாரணமாக, நம்பெருமாள் தந்தசுத்தி செய்துகொண்டபிறகு, இவர்கள் கண்ணாடி எடுத்துக் கொடுப்பர். கொடிக்கம்பத்தில் கொடி யேற்றுவதும், கதாயுதம், சங்கு, சக்கரம், விருதுக்கொடி என்பனவற்றைப் பாதுகாத்து எடுத்து அளிப்பதுங்கூட இவர்களின் கடமையாகும்.

நம்பெருமாள் திருவுலாச் செல்லப் புறப்படுங்கால் அவரை வாகனங்களில் ஏற்றி அமர்த்துவதும் இவர்களின் கடமையாகும். இவர்கள் எம்பெருமானுக்குப் புதிய சிறந்த பூமாலைகள் சாற்றுவர். எம்பெருமான் திருமேனியிலிருந்து களைந்த பழைய பூமாலைகளைப் பிரசாதமாகக் கோயிலில் ஆட்சித் தலைவருக்கு அளிப்பர். நம்பெருமாளுக்கு மேலே குடைபிடிக்கும் உரிமையும்கூட இவர்களுக்கு வழங்கப் பெற்றிருந்தது.

மாலைவேளைகளில், நம்பெருமாள் கருவறைக்குத் திரும்பும் போதும், காவலர்கள் சென்றுவிட்ட பின்னரும், இவர்கள் திருவரங்கத்தி லேயே பிறந்த பக்தர்களாகிய உள்ளூரார்களுடன் சேர்ந்து, பூட்டி முத்திரையிடப் பெற்ற பொற்கதவு வாயிலைக் காவலிருந்து பாதுகாப்பர். அரங்கனுக்கு உரிய அணிகலப் பேழைகளைப் பத்திரமாக வாங்கி வைத்திருந்து, அவற்றின் பொறுப்பிற்குரிய அணிகல அலுவலர்களின்பால் திரும்ப ஒப்படைப்பர்.

நடைமுறை வழக்கத்திற்கேற்ப வேதங்களிலிருந்து சில பகுதிகளைப் பாராயணம் செய்வதற்கும், நம்பெருமாள் எழுந்தருளும் வாகனத்தைப் பற்றிய புகழுரைகளாக உள்ள பாடல்களை ஓதுவதற்கும், இவர்கள் உரிமையுடையவர்கள். இவர்களில் வயது முதிர்ந்தவரும், அறிவு மிகுந்தவருமாக உள்ளவர்கள், பாரமேச்வர சம்மிதையின் நுன்பொருள்களை மாணவர்களுக்குக் கற்பித்துப் பயிற்சி அளிப்பர்.

4) அடுத்து வருபவர்கள் திருவரங்கத்திலேயே பிறந்த *உள்ளூரார்* எனப்படும் பிராமணர்கள் ஆவர். இவர்கள் இராமாநுசரின் சிஷ்யர்கள். இவர்கள் மூலவருக்கும், புறவுலா வரும் உற்சவ மூர்த்திக்கும், கைங்கரியம் செய்ய அமைக்கப்பெற்றவர்களாவர். அரங்கன் பூசைக் குரிய புனிதப் பாத்திரங்கள், ஸ்வாமியின் பட்டாடை, பருத்தியாடைகள், விசிறி, குடை, அணிகலன்கள், தோரணங்கள், பஞ்சணைகள், உலாக்காலங்களில் உடனெடுத்துச் செல்லப்பெறும் வெற்றிலைப் பேழை, வளைந்த கூர்வாள் முதலிய பலவற்றைப் பாதுகாப்பதும், எடுத்துப் பயன்படுத்துவதும், இவர்களின் பொறுப்பாகும். நாள்தோறும் எல்லாச் சடங்குகளிலும், பயணங்களிலும், உலாக்களிலும் இவர்கள் திருவரங்கச் செல்வனுக்குச் சந்தனம், சுவைமிக்க இனிய பலவகைப் பணியாரங்கள் முதலியன வழங்குவர். திருமஞ்சன நீரில் நறுமணம் கலப்பர். ஆலவட்டப் பணிபுரிவர். ஸ்வாமியின் திருவடி களில் நீர் சொரிந்து பூசிப்பர். நம்பெருமாள் திருநெற்றியில் 'கஸ்தூரி திலகம்' தரிப்பதற்கு முன்னர் தாம்பூலம் வழங்குவர். திருமடைப் பள்ளியி லிருந்து பலவகை நிவேதனங்களைக் கொணர்ந்து அரங்கனுக்குப் படைத்து உண்பிப்பர். புதிதாகத் தோய்த்த ஆடைகளும், துளசி மாலைகளும், சந்தனக் கலவையும் சமர்ப்பிப்பர். வேதமும், திவ்யப் பிரபந்தமும் ஓதுபவர்களின் முன்பு, ஒரு புதிய பாத்திரத்தில் தேங்காய்ப் பால் வைப்பர். அரங்கனுக்கு நிவேதனம் ஆனபிறகு, புனித விளக்குகளை மாற்றி அமைப்பர்.

உறையூரில், ஆண்டுக்கொருமுறை அழகிய மணவாளனும் தாயாரும் சேரும்போதும், இருவரும் உடன் எழுந்தருளி வீற்றிருக்கும் போதும், அணிவகுத்துத் திரளாக நின்று வணக்கம் செலுத்தி, ஆலவட்டப் பணிபுரிவர். சில சிறப்பியல் நிகழ்ச்சிகளின்போது கோயிலின் தலைமை ஆட்சியாளரைக் கௌரவிக்கும் கடமையும்கூட இவர்களுக்கு இருந்தது. அப்போது இவர்கள் வழிபாட்டிற்குரிய பொருள்களை வழங்கிக் கௌரவிப்பர். அவர் பொருட்டு அழகிய மணவாளனுக்கு அர்ச்சனை முதலிய செயல்களைப் புரிவர். சந்தனம், தாம்பூலம் முதலிய பிரசாதங்களை அளித்து வந்தனர்.

பிற்காலத்தில் மற்றைய பல கோயில் அதிகாரிகளைப் போல, உள்ளூரார் என்பவர்கள் தமக்குரிய பணிகளைத் தாமே செய்யாமல், ஏனைய ஊழியர்களிடம் ஒப்படைத்தார்கள். ஆனால் அவற்றைக் கண்காணிக்கும் பொறுப்பையும், தம்முடைய கௌரவப் பணிகளை யும், தாமே வைத்துக் கொண்டனர்.

5) இசைவாணர்களும், திருப்பதிகம் பாடுபவர்களும் ஐந்தாம் வகை ஊழியராக விளங்கினர். இவர்கள் ***விண்ணப்பம் செய்வார்*** எனப்படுவர். வீணை வாசித்தல், வேதம் ஓதுதல், திவ்யப்பிரபந்த பாராயணம் செய்தல், இசைபாடுதல் ஆகியவற்றை, இறைவனின் முன்பு இவர்கள் எல்லாச் சமயங்களிலும் செய்வார்கள். பாடலும், இசையும் தெய்வக் கைங்கர்யத்தில் மிக முதன்மையான பங்கு பெற் றிருப்பதனால், இவர்களின் தொண்டு, கோயிலில் பெரிதும் நிகழ்ந்து வருகின்றன. இவர்கள் இசைக் கலையில் தேர்ச்சியும், சாத்திரங்களில் சிறந்த பயிற்சியும் பெற்றிருக்கின்றனர். அரங்கனின் திருமுன் னிலையில் விறலியர் நடனமாடும் போதும் இவர்கள் பாடுவது உண்டு. இது தற்பொழுது வழக்கில் இல்லை. 'விண்ணப்பம் செய்வார்' எனப்பெறும் இவர்கள், கோயிலில் தனி மரியாதைகள் பெற உரிமை உடையவர்களாவர்.

6) ***திருக்கரகக்கையார்*** என்பவர்களும் அரங்கனது திருவாராதனத்தில் நேரடியாகவும், நிலையாகவும் தொடர்புடையவராக விளங்கினர். சரக்கறைக்குப் பக்கத்திலுள்ள சேம அறையிலிருந்து, வைகறை யாகிய விடியற்காலையிலேயே தீர்த்தப் பாத்திரங்களை எடுத்துக் கொண்டு சென்று, இரண்டு நாள்களுக்குத் தேவையான தீர்த்தங்களைக் காவிரி நதியிலிருந்து அவற்றில் முகர்ந்துகொண்டு, யானையின் மீது வைத்துக் கோயிலுக்குக் கொணர்வது இவர்களின் கடமையாகும். பின்னர், ஒரு நாள் முழுவதும் செய்யப்பெறும் எல்லாப் பூசைகளிலும் பயன்படுத்தப்பெறும் ஐந்து பாத்திரங்களில், இவர்கள் நீர் நிரப்பி வைத்தல் வேண்டும். ஒவ்வொரு நாளும், விடியற்காலையில் நம்பெருமாள் முகங்கழுவித் தந்தசுத்தி செய்துகொள்ளும் சடங்கின் போதும், பாத பூசை புரியும்போதும், தீர்த்தப் பாத்திரங்களை இவர்கள்

ஏந்தி நிற்பர். திருவிழாக்களுக்குப் பூமாலைகள் தொடுத்து அளிக்கும் பொறுப்புள்ள அலுவலரின் கைகளுக்குத் தண்ணீர் வார்ப்பதும், நம்பெருமாளுக்கு பூமாலைகள் தொடுப்பதும், நறுமணம் ஊட்டப்பெற்ற விதைகளால் ஆரங்கள் புனைவதும், முற்காலத்தில் இவர்களின் கடமை களாக இருந்தன. முஸ்லிம்களின் உட்குடியிருப்பு நேர்ந்ததற்குப் பின்னர், இப்பணிகள் பிராமணர் அல்லாத ஊழியர்களுக்கு வழங்கப்பட்டன.

7) பணியாளர்களின் வரிசையில் *ஸ்தானத்தார்* (தலத்தார்) என்பவர்கள் ஏழாம் வகையினராவர். அரங்கன் பூசையோடு தொடர்புடைய எல்லாவற்றையும் கவனித்துக் கொள்வது, இவர்களின் கடமையாகும். சிறப்பாக, அழகிய மணவாளன் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு எழுந்தருளும்போது அவரது பல்லக்கைச் சுமத்தலும், வாகனங்களைத் தாங்குதலும், திருவீதி உலாக்களின் போது தீர்த்தக் கலசங்களுக்குக் குடைபிடித்தலும், நம்பெருமாள் எழுந்தருளும் பல்லக்கிற்குப் பக்கத்தில் ஏதேனும் அசம்பாவிதங்கள் நேராதபடி உடன் செல்லுதலும், இவர் களது கடமையாகும். அழகியமணவாளனுக்குப் பால், தயிர் வழங்கு தலும், உயர் அலுவலர்களுக்குச் சில பிரசாதங்களை அளித்தலும், கோயிலின் தலைமை ஆட்சியருக்குப் பூமாலைகள் சூட்டுதலும், ஸ்வாமியின் விலை உயர்ந்த மணி, பொன், வெள்ளி அணிகலன்கள் வைக்கும் பாதுகாப்பறைக்கு கருட முத்திரை பொறித்தலும், இவர்களுக் குரிய சிறப்புரிமையாகும். முஸ்லிம்களின் உட்குடியிருப்பு நிகழ்ச்சிக் குப் பின்னர்த் திருவீதி உலாக்களை நடத்துதலுக்கும், அரங்கன் பிரசாதங்களை விநியோகித்தலுக்கும் பொறுப்புள்ளவர்களாக, இவர்கள் தொடர்ந்து இருந்து வந்தனர். பிற்காலத்தில், குறிப்பாக நம்பிகளுக்கு, இவர்கள் தம்முடைய உரிமைகளில் சிலவற்றை விட்டுக் கொடுத்தனர். கருட முத்திரையைப் பொறிக்கும் உரிமை, நாச்சியார் சன்னிதியை நிர்வகித்துவந்த அலுவலரிடம் இறுதியாக மாறியது. ஆயினும், இது பற்றி நெடுங்காலம் வழக்கீடுகள் இருந்து வந்ததனைக் கோயி லொழுகு குறிப்பிடுகின்றது.

8) அடுத்து வருபவர்கள் *பட்டர்கள்* எனப்படுபவராவர். இவர்கள் நாள்தோறும் பூசையின்போது கர்ப்பக்கிரகத்தில் இருந்து

வேத மந்திரங்கள் முதலியவற்றை ஓதும் கடமையும், பொறுப்புமுடைய ஒரு தனித் தொகுதியினராவர். இவர்கள் நித்தியப்படி பூசை, சிறப்பியல் நிகழ்ச்சிகள் ஆகிய எல்லாவற்றிலும் உடனிருந்து கலந்துகொள்வர். பரியட்டம், சந்தனம், தனி மாலைகள், தாம்பூலம் முதலிய அரங்கன் பிரசாதங்களைப் பெறுவர். திருவரங்கம் கோயிலின் தலைமை அர்ச்சகராகிய நம்பிகள் ஒருவரே இதற்குமுன் செய்துவந்த பல பணிகள், இராமானுசர் சீர்திருத்தங்களுக்குப் பின்னர் ஒவ்வொரு வருக்கும் ஒவ்வொன்றாகப் பிரித்தளிக்கப்பட்டது.

9) இப்பணியாளர் திரளில், இறுதியாகக் குறிப்பிடத்தக்கவர் ***ஆரியபட்டர்கள்*** என்னும் பிராமணர்கள் ஆவர். இவர்களுடைய முதன்மையான வேலை கோயிலையும் அர்ச்சா விக்ரகங்களையும் கண்ணும் கருத்துமாக இருந்து பாதுகாப்பதாகும். இவர்கள் மூன்றாம் பிரகாரத்தில் வடக்கு வாயில், தெற்கு வாயில் முகப்புகளில் காவலாக நியமிக்கப் பெற்றிருப்பர். முதல் இரண்டு பிரகாரங்களிலிருந்து உள்ளே வருதல், வெளியே செல்லுதல் ஆகிய எல்லாச் செயல்களையும் இவர்கள் இரவிலும் பகலிலும் கூர்ந்து கவனித்துக் கண்காணிப்பர். அழகியமணவாளன் வெளியே திருவுலா எழுந்தருளும்போதும், உள்ளே மீண்டும் திரும்பும் போதும், பல்லக்கில் பின்புறத் தண்டுகளை இவர்கள் சுமப்பர். இரவு நேரங்களில் கோயில் வாயில்களுக்கு அருகி லுள்ள தாழ்வாரங்களில் உறங்குவர். வைகறை விடியலில், அரங்கனை வழிபட வரும் திருப்பதியாருக்கும், யாத்திரிகர்களுக்கும் கோயிற் கதவு களைத் திறந்துவிடுவர். அரச முத்திரை இவர்களின் பொறுப்பிலேயே இருக்கும். அதன் நோக்கம் யாதெனில், இவர்கள் தங்கள் பணிகளைச் செய்யும்போது இவர்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதாகும்.

10) கோயிற் பணிகளின் இறுதி வகையினராக இருப்போர் ***தாசநம்பிகள்*** எனப்படும் குழுவினர்களாவர். இவர்கள் முற்காலத்தில் கோயிலுக்குப் பூமாலைகள் முதலியன தொடுத்து வழங்கி வந்தவர் களின் வழி வந்தவர்கள் ஆவர். இவர்கள் அழகிய மணவாளனுக்காகத் திருநந்தவனங்கள் அமைப்பர்; கர்ப்பக்கிரகத்தின் உள்ளேயும், வெளியேயும் நம்பெருமாள் திரு முன்னிலையில் ஒளி விளக்குகள்

ஏந்துவர். கோயிலின் ஏழு பிரகாரங்களிலும் நம்பெருமாள் திருவுலா எழுந்தருளும் சிவிகையைப் பூமாலைகளால் அழகுபடுத்திப் பணி புரிவர்; மற்றும் பற்பல திருவுலா நிகழ்ச்சிகளுக்குரிய எல்லா வகையான பூமாலைகளையும் இராமாநுசரின் சன்னிதி முதலியவற்றிலுங்கூடப் பணிபுரிவர்; அதற்காகப் பெரும் மரியாதைகளையும் பெறுவர்.

இப்பத்துவகையான கோயிற் பணியாளர்களாகிய அந்தணர் குழுவினருடன் இராமானுசர் மேலும் ***ஏகாங்கிகள்*** என்னும் நான்கு உதவியாளர்களையும் சேர்த்தருளினார். இவர்கள் சன்னிதியின் வாயிற படியிலிருந்தும், விசேட காலங்களில் பக்தர்கள் காணாதபடி மறைக்கும் திரைச்சீலையின் அருகில் இருந்தும், கர்ப்பக்கிரகத்தைப் பாதுகாக்க நியமிக்கப் பெற்றனர். அனுமதி பெறாத மனிதர்களைச் சன்னிதியின் உட்புகாதபடி தடுத்து நிறுத்துவது, இரவிலும் பகலிலும் இவர்களின கடமையாகும். நித்திய நைமித்திக பூசைகளுக்குரிய நிவேதனப பொருள்கள், நறுமணப்பொருள்கள் முதலிய எல்லா வகையான பொருள்களையும் பாதுகாப்பதும் கூட இவர்களின் கடமையாகும்.

இவர்களை மட்டுமேயன்றி மற்றும் ***சாத்தாத முதலிகள்*** எனப் படும் எட்டு வைணவர்களையும் துறவிகளையும் கூட இராமானுசர் நியமித் தார். இவர்கள் அழகியமணவாளனுக்கு கொடி பிடித்தல், பொன், வெள்ளி விளக்குகள் ஏற்றுதல், இராமானுசரின் வாட்படையைத் தாங்குதல், அர்ச்சகர்களுக்கு மெய்காவல்புரிதல் என்பனவற்றிற்குப் பொறுப் புடையவர்களாவர்.

அடுத்து வருபவர்கள், ***வேத்திரபாணிகள்*** எனப்படுவர் இவர்கள் கோயிலுக்கு வெளியே இருந்து எடுத்துச் சேர்க்கப்பெற்றவ ராவர். அழகியமணவாளன் கர்ப்பக்கிரகத்திலிருந்து புறப்பட்டுத் திருவுலா எழுந்தருளும்போது ஒழுங்கும், அமைதியும் நிலவும்படி பார்த்துக் கொள்வது, இவர்களின் கடமையாகும். திருவிழாக்காலங்களில் நம்பெருமாள் திருவீதி உலா புறப்படுவதற்கு முன்னர், இவர்கள் வாழ்த்தியற் பாட்டு ஒலிகள் எழுப்புவர். வேதபாராயணம் முதலியன நிகழும்போது அமைதியை நிலைநாட்டுவர். நம்பெருமாளின் பூசைக் காக நியமிக்கப் பெற்றுள்ள திருப்பதிகம் ஓதுபவர்களுக்கு மக்கள் திரளில் வழி ஒதுக்கி விடுவர்.

## 4:3 அந்தணர் அல்லாதாரின் பத்துக்கொத்தின் பணிகள்

1. அந்தணர்களாகிய இவ்வெல்லாக் குழுவினர்களுக்கும் கூடுதலாக இராமானுசர் உழுதொழில் புரியும் வேளாளர்களையும் நியமித்திருந்தார். கோயிலின் நித்தியப்படித் தேவைக்குரியனவாகிய ***தானியங்கள் அளப்பவர்*** இவர்களுள் முதலாமவர் ஆவர். இவர்களுக்குரிய சிறப்புரிமைகள் இன்னின்ன என்பது குறித்து, மிகுதியான சர்ச்சைகள் இருந்து வந்தன எனத் தெரிகின்றது. கருவூலத்தில் தலைமை அலுவலர் பணி ஒரு வேளாளரால் வகிக்கப் பெறுதல் வேண்டும் என்று, நெடுங்காலமாக ஒப்புக்கொள்ளப்பட்டது. ஆனால் தலவரலாறு கூறுகின்றபடி, பிற்காலத்தில் இராமானுசர் வேறு ஒரு பதவியையும் தோற்றுவித்து, அதனை ஒரு பிராமணருக்கு அளித்தார். அதன் விளைவாகப் பதவியாளர்களுக்குள் அடிக்கடி பூசல்கள் நிகழ்ந்தன. அதனால் மீண்டும் அப்பதவி அந்தணரல்லாத ஒருவராலேயே வகிக்கப் பெறுவதாயிற்று எனத் தலவரலாறு கூறுகின்றது.

2) மற்றும் பல சிறு சிறு பதவிகளும், அந்தணரல்லாதவர்கள் பால் ஒப்படைக்கப்பெற்றன. இரண்டாவது பகுதியாக அமைந்த இவர்க ளுடைய கடமைகள், வழிபாட்டிற்குரிய பொருள்களை எல்லாம் தொகுத்துச் சேமித்து வைப்பதும், அவ்வப்போது எடுத்துக் கொடுப்பதும், உப்பு, மிளகு, சீரகம் முதலிய பொடி வகைகளையும், கோயிற் கதவுகளில் முத்திரை யிடுவதற்குரிய களிமண், அரக்கு முதலியவற்றை தயாரிப்பதுமாகும்.

3) மூன்றாவது தொகுதியினர், தெய்வீக நடனமாடும் ***தேவதாசிகள்*** என்பவர்களாவர். இவ்வகையினர் தஞ்சாவூரில் 11ஆம் நூற்றாண்டில்இருந்து வந்ததாகத் தெரிகின்றது 11ஆம் நூற்றாண்டி லிருந்து முதன்மையாக வளர்ந்து பரவி வந்த இத் தொகுதியினர், 20ஆம் நூற்றாண்டின் இடைப்பட்டப் பகுதியில் (1953 A.D.) அறவே ஒழித்து நீக்கப்பெற்றனர். இவர்களின் கடமைகள் அழகியமணவாள னுடன்தொடர்புடையனவும், கோயிற்சடங்குகளில் மிக்க புனித முடையனவு மாகும். கோயிலொழுகு என்னும் இத்தல வரலாற்று நூலில் தேவ

தாசிகள் என்போர் மிக மதிப்பான சிறப்பிடம் அளிக்கப் பெற்று உள்ளனர். கி.பி. 1323ஆம் ஆண்டில் முஸ்லிம்கள் திருவரங்கம் கோயிலைக் கைப்பற்றி உட்புகுந்தபோது, தேவதாசிகளுள் ஒருத்திக் கோயிலைப் பாதுகாத்ததனை ஒரு சிறந்த முன்மாதிரியாக விளங்கிய செய்தியாக, அந்நூல் குறிப்பிட்டுப் புகழ்ந்து கூறியுள்ளது.[4]

(4, 5) இவற்றை அடுத்து, இருவகைப் பணியாளர்கள் கோயிலையும் அவற்றிற்குப் புறம்பே அமைந்துள்ள கட்டிடங்களையும், பாதுகாப்பவர் ஆவர். தெய்வ வடிவங்களைச் செதுக்குகின்ற ***சிற்பிகள்***, கொடிகள் முதலியவற்றிற்கு வண்ணம் தீட்டுகின்ற ***கம்மியர்கள்***, அரங்கனுக்கு உரிய புதிய நகைகளைச் செய்பவர்களும் பழைய வற்றைப் புதுப்பித்து மெருகேற்றுபவர்களுமாகிய ***பொற் கொல்லர் கள்***, வழிபாட்டிற்குப் பயன்படும் பித்தளைப் பாத்திரங்களைச் செய் பவர்கள் அல்லது பழுதுபார்ப்பவர்களாகிய ***கன்னார்கள்***, கோயில் மணிகள், சேமக்கலங்கள், நிலை விளக்குகள், படிகள், பீடங்கள் ஆகிய வற்றிற்குத் தகடுகள் முதலியவற்றைச் செய்கின்ற ***உலோக வேலைக் காரர்கள்*** ஆகியோர் இப்பணியார் தொகுதியைச் சேர்ந்தவராவர்.

6) ஆறாவது தொகுதியாக விளங்கும் பணியாளர்கள் ***தையற்காரர், தச்சர், நெசவாளர்*** முதலியோராவர். இவர்கள் கோயிற் தூண்களிலும், பந்தல் கூரைகளிலும் தொங்கவிடப்படும் விதானங்கள், மடிப்புத் தொங்கல்கள் முதலியவற்றைத் தைத்துச் சரிகை முதலியனவற்றால் பின்னிச் சித்திர வேலை செய்து அழகுபடுத்துவர். நம்பெருமாளுக்குரிய பலவகை ஆடைகளையும், தோரணம், கொடி முதலியவற்றையும் தயாரிப்பர். மிகப்பெரிய குடைகள், பெரிய ஆலவட்டங்கள், விருதுச் சின்னங்கள், பல்லக்கின் மேற்புறத் துகில்கள் முதலியவற்றைத் தச்சர்கள் செய்து வந்தனர். பூமாலைகள் தொடுத்தற் குரிய பட்டுச் சரிகைகள், சாமரைகள், ஒட்டடை நீக்கிகள், தொங்கற் குஞ்சங்கள் என்பனவற்றை நெசவாளர்கள் தயாரித்தனர்.

7) ஏழாவது தொகுதியாக விளங்கும் பணியாளர்கள், ***சலவையாளர்*** ஆவர். இவர்கள் நம்பெருமாளுக்குச் சாற்றப்படும்

பரியட்டம் முதலிய ஆடைகளைத் துவைத்து உலர்த்துவர். பூசையின் போது பயன்படுத்தப்படுந் தட்டுகள் முதலியவற்றை மூடும் துணிவகைகளை வெளுத்துச் சுத்தம் செய்வர். இவர்களை ***ஈரங்கொல்லி*** என்ற தூய தமிழ் சொல்லால் அழைப்பர்

மண்டபங்களின் கூரைகளை அழகுபடுத்தும் துணிகளில் வண்ண ஓவியம் தீட்டுவர். கோயிலொழுகு நூலில் இச் சலவையாளர் களுக்குச் சிறப்பான மதிப்பிடம் அளிக்கப்பெற்றிருக்கிறது. கி.பி. 1311ஆம் ஆண்டில், டெல்லி சுல்தான் ஒருவரின் ஏவலராகிய சில முஸ்லிம்களால் கவர்ந்து எடுத்துச் செல்லப்பட்ட அழகிய மணவாளப் பெருமாளின் மூலத்திருப்படிமத்தை, அடையாளம் தெரிந்து அறிவித்துக் கண்டுபிடித்து, மீளவும் அதனைத் திருவரங்கத்திற்குக் கொணர்ந்து விசயநகர அரசர்கள் பிரதிட்டை செய்வதற்கு உதவி புரிந்தவர். 'கண் தெரியாத ஒரு சலவையாளரே' என்று கோயிலொழுகு மிகத் தெளிவாக விவரித்துக் கூறுகின்றது.[5]

8) அடுத்துவரும் எட்டாம் தொகுதியினர் ***குயவர்கள்*** ஆவர். இவர்கள் கோயில் திருமடைப்பள்ளியில் நாள்தோறும் பயன்படுத்தப் பட்டுப் பின்னர் உடைத்தெறியப்படும் மட்பாண்டங்களைத் தினமும் புதியனவாகச் செய்து கொடுப்போர் ஆவர்.

9) ஒன்பதாம் தொகுதியினர் ***படகோட்டிகள்*** ஆவர். இவர்கள் காவிரியின் அக்கரையிலிருந்து, கோயில் திருமடைப் பள்ளிக்கு பால், தயிர் முதலியன போன்ற உணவுப் பொருள்களைக் கொணர்ந்து தருவர்.

10) ***இசைவாணர்களும், நடன ஆசிரியர்களும்*** பத்தாம் தொகுதியினராவர். இவர்கள் எல்லோரும் முதன்மையான விழாக் களிலும் விசேட நிகழ்ச்சிகளிலும் கலந்துகொண்டு சிறப்பிப்பர்.

மேற்குறித்த இருபதுக்கு மேற்பட்ட தொகுதியினர் அல்லது பிரிவினர், அரிய பெரிய குழுவினராக அமைந்திருந்தனர். இவர்கள் அனைவரையும் ஒழுங்கு இசைவித்து இணைத்து, ஒழுங்கு பெறச் செலுத்த வேண்டியிருந்தது. வேறு பிற இடங்களில் காணப்படுவது

போன்ற, இவர்களை ஆளும் ஒரு சபையையோ அல்லது ஒரு குழுவையோ பற்றிய குறிப்பு எதுவும் கோயிலொழுகு நூலின்கண் காணப்படவில்லை. கோயிலின் நிர்வாகமானது, ஒரு பெரும் ஆட்சித் தலைவரிடத்தில் இருந்ததைக் குறிப்பிடுவதுடன், இராமானுசரின் காலத்திற்குப் பிறகு, அவர் தம் பலவகைப் பணிகள் குறித்த பட்டியல் ஒன்றையும் அந்நூல் தருகின்றது.

ஒவ்வொரு நாளும் வைகறைப் பொழுதில் கோயிலுக்குச் செல்வதும், அங்கு தம்முடைய மிக நெருங்கிய உதவியாளர்களைச் சந்திப்பதும், ஆட்சித் தலைவரின் கடமையாக இருந்தது. முறையாக வைகறையில் நீராடிய பிறகு, அவர் இரண்டாம் பிரகாரத்திலுள்ள புனிதம் மிக்க கொடிக்கம்பத்தின் அடிக்குச் செல்வார். பிறகு அவா திருமடைப்பள்ளியையும், சரக்கு அறையையும், பூசைக்கும் பிராமணர் களுக்கும் தேவையான நறுமணப் பொருள்களையும் பார்வையிட்டு, அன்று செய்வதற்குரிய பல்வேறு பணிகளையும் ஊழியர்களுககும பகிர்நது அளிப்பார். பிறகு அவர் கோயிலின திருநந்தவனத்திறகுச் சென்று, அன்று நிகழ்வதற்குரிய விழா அலலது சடங்குகளில் பயன்படுத்தப்படுவதற்கு ஏற்ற பல்வேறு வகையான பூக்களைத் தேர்ந்தெடுப்பார். அதன் பிறகு பூசை புரிவதற்கு அவர் செல்வார் பிறகு கோயில் ஊழியர்களின் பிரதிநிதிகள் அனைவரும் அடங்கிய கூட்டத்திற்குத் தலைமை தாங்கி, அவர்கள் தம்முடைய கடமைகளை ஊக்கமாகவும், உண்மை அன்புடனும் செய்வதற்கு ஏற்ற. அறிவுரைகளையும், யோசனைகளையும் கூறுவார். பின்னா பூசை புரிவதற்குச் செய்யப்பட்டுள்ள ஏற்பாடுகளைக் கவனித்து மேற்பார்வை புரிவார். சுவாமிக்கு நண்பகல் நிவேதனம் செய்து முடித்த பிறகு, அவர் தம் மடத்திற்குச் (தற்போதைய ஸ்ரீரங்கநாராயண சீயர் மடம்) சென்று உணவு உண்டு, சிறிது ஓய்வு எடுப்பார். பிற்பகலில் பல வேறுவகை யான சடங்குகளையும் விழாக்களையும் நடத்துவார்.

ஒவ்வொரு சடங்கு அல்லது விழாவையும் ஏற்பாடு செய்தல், அது முறைப்படி சிறப்பாக நடத்தப்படுகின்றதா என்று கவனித்து மேற்பார்வையிடுதல் முதலியன இவருடைய கடமைகளாகும்.

நம்பிகள், பிராமணர்கள் நீங்கலாக இத்துறையில் மற்ற எல்லோரையும் கண்காணித்து ஏவல் கொள்ளுவதற்கு, இவருக்கு அதிகாரமும், உரிமையும் உண்டு. கருவூலத்தில் வைக்கப்பெறும் எல்லாப் பொருள் களின்மீதும், இலச்சினை இடுதலும் கூட, இவரது கடமையாகும். கோயிலின் உள்துறை ஊழியத் தலைவர்கள் அனைவரும் நேரடியாக இவருடைய ஆணைக்குட்பட்டவராவர். இவருக்கு அணுக்க ஊழியம் புரிய, ஏகாங்கி ஒருவர் இருப்பார். இவ்வாட்சித் தலைவருக்கு மிக உயர்ந்த மரியாதைகள் செலுத்தப்படும்.

தலைமை ஆட்சியருக்குத் துணையாக மற்றும் நான்கு அலுவலர்கள் இருந்தனர். அவர்கள் கோயிலின் ஆட்சிக்கும், அதன் புறம்பேயுள்ள கட்டிடங்களுக்கும், பொறுப்புடையவர்கள் ஆவர். சரக்கு அறையின் தலைவர், ஒவ்வொருநாளும், வைகறைப் பொழுதில் திருமடைப்பள்ளிக்குச் சென்று பார்வையிடுவார். சுவாமியின் நிவேதனத்திற்குரிய அரிசி, கோதுமை, தானியங்கள், காய்கறிகள், தேங்காய், பழம், பால், தயிர் முதலிய உணவுப் பொருள்கள் அனைத்தும் குறித்த அளவின்படி கொடுக்கப்படுமாறு கவனித்து ஆவன செய்வார். ஒவ்வொரு நாளும் கோயில் நிலங்களிலிருந்து விளையும் நெல்வகைகள், புளி முதலிய பழ வகைகள் மற்றும் விளைபொருள்கள் அனைத்தும் கோயிலின் சரக்கு அறைக்குக் கொண்டுவரப்படும். எள் முதலிய எண்ணெய் வித்துக்கள், எண்ணெய் அறைக்குக் கொண்டுவரப்பெற்று, உடைத்தோ, அறைத்தோ பயன்படுத்தப்பெறும். சரக்கு அறைத் தலைவரே, நம்பெருமாள் திருவீதி செல்லுவதற்குத் தேவையான வாகனங்களைத் தயாரித்தல், குடைகள், கொடிகள் என்பனவற்றைத் தூக்கிச் செல்லுவதற்குரிய ஆயிரம் கூலியாட்களை நியமித்தல், முதலிய வேலைகளையும் கவனித்துக் கொள்வார்.

திருவிழாவின்போது, இராக்காலங்களில் நிகழ்த்தப்பெறும் வாணவேடிக்கைகளை, அவரே ஏற்பாடு செய்வார். கூலியாட்கள் தமக்குரிய கூலியைத் தானியங்களாகப் பெறுவர். கோயிலுக்கு உரிய யானைகள், குதிரைகள், பசுக்கள், புறாக்கள், புறாக்கூடுகள், மான்கள்,

காட்டுப் பசுக்கள், மயில்கள், கிளிகள் ஆகியவற்றையும் சரக்கு அறைத் தலைவரே கண்காணிப்பார். தலைமை இடையரின் முன்னிலையில், பால் கறத்தல், கறந்த பாலை அதற்குப் பொறுப்புடைய கோயில் ஊழியர்களிடம் ஒப்படைத்தல், என்பனவற்றை மேற்பார்வை இடுதல் இவரது கடமையாகும். ஒவ்வொரு தொழுவமும் ஓர் இடையனால் கவனிக்கப்பெற்று வந்தது. தொழுவத்தைச் சுத்தமாக வைத்துக் கொள்வதும், ஒரு நாளைக்கு இருவேளைகள் பால் கறப்பதைக் கவனித்துக் கொள்வதும், இவ்விடையரின் பணியாகும்.

கோயிற் கண்காணிப்பாளர் ஒருவர், திருமதில்களின் மீதும் கோபுரங்களின் மீதும் வளர்கின்ற புல்லுருவிகளாகிய செடி கொடிகளை நாள்தோறும் அகற்றுவதற்கு ஆட்களை ஏவுவார். திரைச் சீலைகளும், தொங்கல்களும் அழகுற அமைக்கப்படும் வகை களைத் திட்டம் செய்வார். நித்திய நைமித்திகத் திருவிழாக்களில் பந்தல்கள் அமைத்தலையும், அவற்றை அழகுபடுத்துதலையும், கவனித்துக் கொள்வார். அவருக்குத் துணையாக இரண்டு ஏகாங்கிகள் அளிக்கப்பெற்றிருந்தனர். பல்வேறு சரக்கு அறை களுக்கும் பொறுப்பாளராக இருப்பவர், கருவறையின் கிழக்கிலும் மேற்கிலும் அமைந்துள்ள, பூந்தோட்டங்களைக் கவனித்துக் கொள்ளும் கடமையுடையவராவர்; கருவறையையும் ஸ்வாமியையும் அந்தந்தப் பருவ காலத்திற்கு ஏற்பச் சாத்துபடி செய்வதற்குரிய, நறுமண மலர்ச் செடிகளை வளர்ப்பதும், பாதுகாப்பதும், அவரது கடமையேயாகும். காய்கறிகள் பறித்தலையும், கரும்பு மற்றும் சாறுள்ள செடிகள் ஆகியவற்றை வெட்டுதலையும் அவற்றைத் திருமடைப்பள்ளிக்குச் சேர்ப்பித்தலையும், இவரே செய்வார். சரக்கு அறைகளில் ஒழுங்கு முறையைப் பாதுகாத்தலும், அதற்குத் தேவையானபடி தண்டனை களோ, பரிசுகளோ வழங்குதலும் இவரது கடமையாகும்.

கோயில் நிலங்களின் கண்காணிப்பாளர், அந்தந்த பருவ காலத்திற்குரியபடி விதை விதைத்துப் பயிர் செய்தலையும், நிலத்தினின்று விளைவனவற்றையும் மற்றும் பலவகைகளில் திரட்டித் தொகுக்கப் பெற்றனவற்றையும் அவ்வவற்றிற்குரிய சரக்கு அறைகளில்

சேர்ப்பித்தலையும் கவனித்துக் கொள்வார். கோயிலுக்குரிய கிராமங் களிலிருந்து தேர்ந்தெடுத்துக் கோயிலுக்குத் தேவைப்படும் ஊழியர் களை அமர்த்துதல் இவரது பணிகளில் ஒன்று. இவருக்கு உதவியாள ராக ஏகாங்கி ஒருவர் அமர்த்தப் பெற்றிருந்தார். முஸ்லிம்களின் உட்புகவுக்கு முன்னர், சமய நிறுவனங்களின் வரிசைப்புறத்தில், கோயிலுக்கு உள்ளே ஒரு மருத்துவமனை நிறுவப் பெற்றிருந்தது. அதன் நடைமுறையில் ஒரு கிராமம் தானமாக வழங்கப் பெற்று அவ்வறக் கட்டளையின் மூலம், அம்மருத்துவமனை சிறப்புற நடைபெற்ற செய்தி, கல்லெழுத்துக்களில் பதிவு செய்யப் பெற்றுள்ளது. இடையில் முஸ்லிம் படையெடுப்பால், இம் மருத்துவ மனை நலிவுற்றது ஆயினும் கி.பி. 1493ஆம் ஆண்டில் மீளவும் தொடங்கி நடத்தப்பெறுவ தாயிற்று.

## 4:4 திருவரங்கம் கோயிலின் இன்றைய நடைமுறை அமைப்பு

இராமானுசரால் முதலில் ஏற்படுத்தப்பெற்ற அல்லது ஏற்படுத்தப்பட்டதாகச் சொல்லப்படுகின்ற கோயிலின் சீரமைப்பும், நிர்வாகமும், சமயத் தலைவர்களின் பொறுப்பில் 14ஆம் நூற்றாண்டின் முதற்காற் பகுதியில் நிகழ்ந்த முஸ்லிம் படையெடுப்பு வரையில், தொடர்ந்து நடைபெற்று வந்தன. சோழ அரசர்களும், பாண்டிய அரசர்களும், அதனைச் சிறிதும் மாற்றாமல், அதன் பாதுகாப்பாளராக மட்டும் இருந்து வந்தனர். ஆனால் கி.பி. 1311, 1323 ஆகிய ஆண்டு களில் அயலவர்கள் படையெடுத்துக் கொள்ளை யிட்டுச் செய்த அழிவிற்குப் பிறகும் அதனைத் தொடர்ந்து இருந்து வந்த குழப்ப காலத்திற்குப் பிறகு விஜய நகர வம்சத்து அரசர்கள், தங்களுடைய சொந்த ஆட்சியாளர்களை இக்கோயிலில் திணித்தனர். அந்தக்காலம் முதல் ஆங்கிலேய ஆட்சி ஏற்படும் வரையில், இக்கோயிலின் நிர்வாகம் முஸ்லிம் ஆளுநர்களின் ஆணைக்கு அடங்கி உட்பட்டே, நடைபெற்று வந்தது. உதாரணமாக முஸ்லிம்கள் காலத்திலிருந்து முஸ்லிம்கள் அணிகின்ற கைலி என்ற வகைத்துணி சாத்தப்பெற்றது. நம்பெரு மாளுக்கு காலை உணவாகச் ரொட்டி, வெண்ணெய், தயிர் ஆகியவை ஈரத் துணியில் வைத்து நிவேதிக்கப் பெற்றன. தாம்பூலத்தில் இந்துக்களின்

வழக்கப்படி பின்புறத்தில் தடவப் பெறுவதற்குப் பதிலாக உட்புறத்தில் சந்தனம் தடவப்பெற்றது.

## திருவரங்கம் – தில்லை

திருவரங்கம் திருக்கோயில் உலகிலுள்ள பல திருக்கோயில் களினின்றும் பலவகையிலும் வேறுபட்டது. கோயில் என்ற முறையில் தில்லையும் (சிதம்பரம் நடராஜர் கோயில்) திருவரங்கத்தையும் முறையே சைவ வைணவ சமயத்தவர்கள் பாராட்டிப் பேசுவர். தில்லையில் நடராசன் என்ற (அரசன் என்ற) பெயரைக் கடவுள் புனைந்திருப்பதாலும், திருவரங்கத்தில் அரங்க ராசன் என்ற பெயரும் அவ்வாறே வழங்கப் பெறுவதாலும் ஒற்றுமை உண்டே அன்றி, நாள் வழிபாடுகளிலும், சிறப்பு வழிபாடுகளிலும், விழாக்களிலும் இவை முற்றிலும் வேறுபட்டனவாகும்.

தில்லையில் கூத்தன், அரசன் என்று அழைக்கப்பட்டாலும் அரசற்கு உரிய அரண்மனை நடைமுறைகள் அங்கில்லாமல் வேத விதி முறைச் சடங்குகளோடு எல்லாச் செயல்களும் நடைபெறுகின்றன.

தில்லை இராசராசன் போன்ற சோழமன்னர்களின் குல தெய்வமாக விளங்கி, அவர்களால் கட்டளைகள் வகுக்கப்பெற்று அரசுக்குரிய மரியாதைகளும், நடைமுறைகளும் ஓரளவு இருந்தன எனினும், அவற்றில் பல இன்று தடைப்பட்டும், மாற்றமுற்றும் உள்ளன. சோழ மரபினராகிய பிச்சாவரம் சமீன் போன்றவர்களுக்கு இது இன்றும் குலதெய்வமாதலின், நடராசர் நிற்கும் படிக்கீழ் அமர்ந்து முடிசூட்டிக் கொள்ளும் உரிமையை இன்றும் பெற்றுள்ளனர். அவ்வாறே நடராசர் தரிசனம் கொடுப்பதற்கு வெளி உலா புகும் மார்கழி, ஆனி ஆகிய இரண்டு திங்கள்களில் நடக்கும் தரிசன விழாவிற்குப் புறப்பட்டுச் செல்ல அனுமதி வழங்கும் உரிமை கூட இன்றும் அம்மரபினார்க்கு உண்டு. ஆனால் தில்லைக் கோயில் உரிமை அவர்களுக்கு உரியது என்ற முறைமையைக் காட்ட நடராசாவின் கோயில் ஆண்டுக்கு ஒருநாள் இரவில் பூட்டப்பெற்று அத்திறவுகோல் பல்லக்கில் வைக்கப்பெற்று, நால்வர் சுமக்கப் பலர் பின்தொடர

பித்தாபுரம் சமீன்தார் அரண்மனைக்கு எடுத்துச் செல்வர். அத்திறவு கோலை அவர்கள் வாங்கி வீட்டுக்குள் வைத்து கற்பூரம் காட்டி உரிமையை நிலை நாட்டி அத்திறவுகோலை மீண்டும் பல்லக்கில் வைத்துத் தில்லைக்கு அனுப்பிக் கோயில் திறந்து ஆவனபுரியச் செய்த செயல் இன்று நடைமுறையிலில்லை. அன்றியும் அச்செய்தி மறுக்கப்பட்டு வருகின்றது.[6]

திருவரங்கம் கோயில் இது போன்ற நடைமுறைகளை முழுமையாகப் பெற்றுள்ளது. தில்லைக் கூத்தனைக் குலதெய்வ மாகக் கொண்ட மரபினர் இன்று வாழ்வது போலவும், முடி சூட்டிக் கொண்ட உரிமையை வைத்திருப்பது போலவும், திருவரங்கத்தில் ஒருவர் இல்லை. திருவரங்கப் பெருமாள் *இட்சுவாகு குலதனம்* என்றழைக்கப் படுவர். இட்சுவாகு மரபினர் சோழ மரபினரே என்று இலக்கியம், கல் வெட்டு, செப்பேடுகள் சான்று பகர்கின்றன. அதனால் இத்திருக் கோயில் உரிமைக்குச் சோழர்களே உரியவர் என்றாலும், அம்மரபினர் ஒருவரும் இன்று இல்லை. அதற்கு மாறாக ஜீயர், தலத்தார் போன்றோர் உள்ளனர்.

## ஜீயர்

ஜீயர் எனப்படுபவர், இத்தலத்துக்கு முதன்மையராக இன்று விளங்கி வருகிறார். இப்பொறுப்பு, இராமானுசரை முதல் ஜீயராகக் கொண்ட நாள் முதல் ஏற்பட்டதாகும்.

அரங்கநாதர் தன்னை வழிபடுவதற்காகக் கொண்ட (பாஞ்சராத்திரம்) பாரமேச்வர சம்மிதை இரண்டாம் இயலிலும், நான்காம் இயலிலும், திருக்கோயில் நடைமுறைகளைத் துறவிகள் செய்ய வேண்டுமென்றும், இல்லறத்தார் செய்யக்கூடாது என்றும் சொல்லப்பட்டுள்ளது. எனவே இந்தத் தலம் தோன்றிய நாளிலிருந்து துறவிகள் இக்கோயில் நடைமுறைகளைப் பரம்பரையாக நடத்திக்கொண்டு வருகிறார்கள் என்று தெரிகிறது.[7]

"கோயில் ஒழுகு" என்ற நூல் கூரநாராயண ஜீயர் பற்றிய செய்தியைப் பேசுகிறது.[8] அதற்கு முன்னர் ஏறத்தாழ 893 ஆண்டுகள்

இத்துறவியர் வரலாறு தெரியவில்லை. இராமானுசரை முதல் ஜீயராகக் கொண்டு இன்றுவரை உள்ள ஜீயரைப் பற்றிய செய்தியை ஒருசிறு நூலாகக் காண்கின்றோம்.

## தலத்தார்

இந்த ஜீயரே இராமானுசரால் வகுக்கப்பட்ட முதல் நிர்வாகி யாவார். பின்னர் தலத்தாரில் பராசரபட்டர், வேதவியாசபட்டர், உத்தமநம்பி, அண்ணங்கார், ரங்காசார்யர் போன்றோர் இடம் பெறுகின்றனர். இவர்களும் இக்கோயிலில் முதலிடம் பெறும் சிறப்புக் குரியவராக உள்ளனர். பராசரபட்டர், வேதவியாசபட்டர் இருவரும் கூரத்தாழ்வானின் மரபினர். இராமானுசரின் உற்ற தோழர் கூரத்தாழ்வான். இக்கோயிலில் இராமானுசருடன் இணைந்து பெரும் பொறுப்பேற்றிருந் தவர் அவர். உத்தமநம்பி என்பவர் பெரியாழ்வாரின் மரபினர் ஆவர். அண்ணங்கார், ரங்காச்சார்யர் போன்றோர் முதலியாண்டான் திருமரபினர். முதலியாண்டான், இராமானுசரின் தமக்கையாரின் மகனாவர். இவர் இராமானுசருக்குப் பின் இக்கோயி லை நிர்வகித்துத் தலைமைப் பொறுப்பேற்று நடத்தி வந்தார் என்று தெரிகிறது.

## தீர்த்தக் குழுவினர்

மற்றும் பெரியநம்பி, எம்பார், கோமடத்தார், பாலூரார், பிரதிவாதி பயங்கரம், இளையவில்லி, கிடாம்பியார், பாவனாசார்யர், ஆயனார், ஜோஸ்யர், மாருதி ஆண்டான் போன்ற தீர்த்தக்காரர்கள் இக்கோயிலில் நாள்வழி பாட்டிலும் விழாக்காலங்களிலும் சிறப்புப் பெற்றவராவர்.

இப்பொழுது பெரியநம்பி, பாலூரார், பிரதிவாதி பயங்கரம், இளையவில்லி, கிடாம்பியார், பாவனாசார்யர் போன்றோரே சிறப்புப் பெறுகின்றனர். இக்குழுவினரைப் 'பெரியநம்பி இராமானுசனுடையார் திருக்கூட்டத்தினர்' என்று அழைப்பர்.

## உள்துறைப் பணியாளர்கள்

இராமானுசர் தம் காலத்தில் ஐந்து கொத்துப் பணியாளர்களாகக் கோவணவர், கொடவர், கொடுவாள் எடுப்பார், பாடுவார், தழையிடுவார் என்றிருந்ததை இராமானுசர் தம் காலத்தில் பத்தாகப் பெருக்கினார் என்று கோயில் ஒழுகும் கல்வெட்டும் கூறுகின்றன.[9] அதுபற்றி முன்னர் விரிவாகக் கண்டோம். திருமங்கையாழ்வார் காலத்திலும் அதற்கு முன்பும் ஐந்து பிரிவாகத்தான் இருந்திருக்க வேண்டும் என்று தெரிகின்றது.

'கொத்து' என்ற சொல் பணியாளனின் மறுபெயராகவும் தொகுதியாகவும் விளங்கக் காண்கின்றோம். பலரை வைத்து அப் பணியினை மேற்கொள்பவரைக் 'கொத்து' என்ற சொல் குறிக்கும்.

இராமானுசர் அந்தணர் கொத்து பத்து என்றும் அந்தணரல்லா கொத்து பத்து என்றும் விரிவுபடுத்தினராயின், அதன் நோக்கம் விழாக்களின் நடைமுறைச் சிறப்புக் குறித்தேயாம். இக் 'கொத்து' பற்றி கல்வெட்டுகளும் குறிக்கின்றன.

**அந்தணர் கொத்துப் பத்தாவது** : 1) திருப்பதியார் 2) கொடவர் 3) பாகவத நம்பிமார் 4) கொடுவாள் எடுப்பார் 5) பாடுவார் 6) திருமஞ்சனம் எடுப்பார் 7) தழையிடுவார் 8) பட்டாள் 9) ஆரியப்பட்டாள் 10) தாசநம்பி

**அந்தணர் அல்லாதார்** : 1) கணக்கன் வெள்ளாளன் 2) முதலி 3) தாசிகள் 4) உள்காவல் சொல்லச் சேவகம் (திருமேனிக் காவல்) 5) கம்மாளர் 6) சிற்பியர் 7) வண்ணான் 8) குயவன் 9) ஓடக் காரர் 10) மேளக்காரர்.

இவர்களைக் கொண்டே, இக்கோயிலின் பணிகள் நடைபெற்றன. இவ்வுரிமை, பரம்பரை உரிமையாகவும் விளங்கியது.

## உள்துறைப் பணியாளர்கள் – இன்றைய நிலை

இன்று இவர்களில் சிலர், தமது முறைமைகளை மேற் கொண்டும், சிலர் முறைமைகளை மேற்கொள்ளாமலும், துறந்தும் மறந்தும் உள்ளனர். இது குறித்துச் சிந்திப்போமாயின், கோயில்

திருப்பணி செய்ததற்குரியார், அங்ஙனமே திருவிழா நிகழ்த்துவதில் படித்தனம் புரிவோர் போன்றவர்கள், குலமுறைத் தொழிலாக இதனை இயற்றுவதைத் தவிர்த்து, வேறு பணிகளில் ஈடுபட்டு, ஊதியம் பெருகி வருபவர்களாகித் தமக்குரிய கோயிற் பணிகளைத் தாம் இயற்று வதற்கு உரிமையை மட்டும் கொண்டாடி, அந்த உரிமைக்குரிய செயலைப் புரியக் கூலிக்குரியோரை நியமித்து அச்செயலைப் புரிந்து வருகின்றனர். இதனால் இக்கோயிலின் திருத்தொண்டு செய்யும் முறையை மட்டும் பெருமைக்காகக் கொண்டு அதனைச் செய்வதில் மடிமையும், இழிவும், நேரம் இன்மையும் கருதி அவை பிறரால் செய்யப் பெறுவது உண்மைக் கைங்கர்யத்துக்கு நேர்மாறான நிகழ்ச்சியாகும். இப்படிப் பார்த்தால் வெளியூரில் கைங்கர்யத்திற்குரியோர் அச்செயலைப் புரிய வேற்றவரை நியமித்ததுகூட பொறுத்தற்குரியது. ஆனால் சிலர் தங்கள் கைங்கர் யங்களை உள்ளூரில் இருந்தும் செய்யாமலிருக்கின்றனர். சிலர் வெளியூர் சென்றமையால் இப்பணிகளை நிலையாகச் செய்வதில்லை.

இக்கோயிலில் முறைமை உள்ளவர் சிலர் உள்ளூரில் இருந்தும் செல்வர்களாக இருப்பதால் இத்திருப்பணிகளைச் செய்ய நாணம் கொண்டு, கூலிக்குரியோரை நியமித்து அப்பணியைப் புரிந்து வருகின்றனர். இச்செயல் திருப்பணி புரியத் தவம் பூண்டிருக்க வேண்டுமென்ற எண்ணம் மாறி அவை புரிதல் அவம் என்ற நிலைக்கு இழிந்துவிட்ட தன்மையை உணர்த்துகிறது.

திருவரங்கம் கோயில் விழாக்கள் நடைபெறுவதற்குக் கொடை கொடுத்தோர், அவ்விழாக்களை முறையாகச் செய்ததோடு அவர் வழிமுறையினரும் தொடர்ந்து செய்து வந்தனர். இம்மரபு முறை இடையிடையே விழா முறைக்கு உரியார் வருவதற்குத் தடைகள் நிகழ்ந்தபோது (அதற்குரியார் வருவதற்குப் பதிலாக) அவர்களால் நியமிக்கப்பெற்றவர் வந்து அவ்விழாவினை நிகழ்த்தியதுண்டு. அங்ஙனமே கோயில்களில் நிகழும் பணிகட்குரியோர் வந்து அப்பணி செய்ததற்குத் தடை நிகழ்வழி அவர்களால் ஆணையோடு அனுப்பப் பட்டவர்கள். அக்கோயில் திருப்பணிகளைச் செய்து அவற்றிற்குரிய சிறப்பினைப் பெற்றுச் சென்றுள்ளனர். இத்தகைய வழக்கம் இயற்கை

யில் இறப்பு, நோய் போன்ற தடைகள் நிகழ்ந்தபோது நிகழ்ந்த செயலாகும். ஆனால் அது இன்று முறை பிறழ்ந்து இயங்குகிறது.

அரசர்களும் பிறரும் நியமித்த பல விழாக்களும் இன்றைய நடைமுறையிலில்லை. அவை பழையன கழிதல் என்ற முறையில் கழிக்கப்பெற்று ஒழிந்ததோடு, புதியனவும் புகாது, விழாக்கள் அருகி விட்டன. இதனை மீட்டல் இன்று இயலாத செயலாக உள்ளது.

## மணியாரர்

இக்கோயிலில் மணியாரர் என்ற பெயரில் முதலியாண்டான் திருமரபைச் சார்ந்த அண்ணன் வாதூலதேசிகரின் நிர்வாகத்தராக ஒருவர் இருந்து வந்தார். சில நூற்றாண்டுகளுக்குமுன் அண்ணன் வாதூலதேசிகர் வழிவந்தோரில் சிலர் சமயத்தைக் காக்கும் பொருட்டு நகர் நீங்கிச் சென்றமையினால் வாதூலதேசிகர் அல்லாதார் ஒருவர் கோயிலில் நிர்வாகப் பொறுப்பாளராக வாதூலதேசிகரால் நியமிக்கப் பட்டார்.

இன்றைய நடைமுறையில் கோயிலார் அப்பொறுப்பினை வருமானத்தின் பொருட்டு ஏலம் விட்டு, அந்த ஏலம் எடுத்தவர் மணியாரர் ஆகிறார். அவரால் கோயில் நடைமுறைகள் விழாக்கள் நிர்வகிக்கப்படுகின்றன. இன்றைக்கு இவரே கோயிலின் முதல் பொறுப்பாளராக உள்ளார். இவர் முதன்மையேற்ற தினப்படி நிகழ்ச்சிகளும், விழாக்காலங்களில் பெருமாள் புறப்பாட்டிலிருந்து மூலத்தானம் சேரும்வரையிலும் ஆன நிகழ்ச்சிகளும் நடைபெறும்.

## கந்தாடை இராமானுசன்

ஒரு காலத்தில் கந்தாடை இராமானுசன் என்னும் துறவி பெருமாள் புறப்பாட்டிலிருந்து, மூலத்தானம் சென்றடையும் வரை தன் கையில் வாள் ஏந்தியவாறு அவரைக் காத்துப் பணிபுரிந்தார். இங்குள்ள கந்தாடை மடத்தில் அவர் தங்கி இருந்தார். இவருக்குக் கோயிலில் சில சிறப்புகள் இருந்தன. அப்பீடத்தை, அடுத்து அடுத்துப் பலர் துறவு பூண்ட அப்பணியைப் பின்பற்றி வந்தனர். இன்று இப்பீடத்தில் ஒருவரும் இல்லை.

மற்றும் திருப்பதியார், திருமஞ்சன ஊழியக்காரர், தானிகர், பாலூழியம் போன்ற செயல் ஒவ்வொன்றுக்கும் ஒரு முறைக்காரர் இருந்தனர். ஆனால் இன்று பல முறைகளையும் ஒருவரே பார்த்து வருகின்றனர்.

'தாசிகள்' பணி இப்பொழுது நடைமுறையில் இல்லை. மேளக்காரர், குயவர் போன்ற கோயில் உரிமை உள்ளவர்கள் இன்று ஊதியம் பெறும் பணியாளராக உள்ளனர். மற்ற கணக்கன், வெள்ளாளன், முதலி, வண்ணான், சிற்பியர் போன்றோர் இன்றும் உரிமை உள்ள பணியாளராகவே உள்ளனர்.

## வெளித்துறைப் பணியாளர்கள்

கோயில் நிர்வாகம் (வெளித்துறைப் பணி) அன்றும் இன்றும் அரசாங்கத்துக்குரியது என்றாலும், அன்று அரசர்கள் கோயிற் பணியை தவம் என்று கருதினர்; பேறு எனப் போற்றினர். இன்று அரசியலில் உள்ளவர்கள் அத்தகைய கருத்துடையவர் அல்லர். அவர்கள் தொண்டு செய்யும் நிலையில் இன்றைய அரசியலமைப்புமில்லை.

இன்று அரசால் நியமிக்கப்பட்ட அறங்காவலர்கள் ஐவர் துணையுடன், அரசு ஊழியர்களான இணை ஆணையர், நிர்வாக அதிகாரி, மேலாளர், கண்காணிப்பாளர், எழுத்தர், காவல் பணியாளர்கள் போன்றோர் கோயில் விழாக்களையும், வழிபாடு களையும் ஒழுங்குபடுத்துகின்றனர்.



## இயல் — 4

## அடிக்குறிப்புகள்

1. கோயில் ஒழுகு, பக்கம் 30 (1888) மற்றும் கல்வெட்டுக்கள் எண் 202, 203
2. அவ்பாயர், திருவரங்கம் கோயில் பக்கம் 33
3. மேலது
4. கோயில் ஒழுகு, பக்கம் 51 (1888)
5. மேலது பக்கங்கள் 20 - 21 (1888)
6. சிலை எழுபது வன்னிமார் சரித்திரம் வன்னிகுலமித்திரன்
   ஆ. சுப்பிரமணியநாயக்கர்
   அக்னிகுலாதித்தன் பத்திரிகை
   1908 ஆவணி மாதம் 15ஆம் தேதி
   19.08.1943 தில்லைக்கண்ணு சூரப்பசோழர்
   24.08.1983ஆம் தேதி 'இந்தியன் எக்ஸ்பிரஸ்'
   ஆங்கில நாளிதழ் செய்தி
7. ஜீயர் வரலாறு பக்கம் 1, ஸ்ரீரங்கம் ஜீயர் மடத்து வெளியீடு
8. கோயில் ஒழுகு, பக்கம் 43 (1888)
9. கோயில் ஒழுகு, பக்கம் 30 மற்றும் கல்வெட்டு எண் 202, 203

# இயல் - 5

## பிரம்மோத்சவம்

(கொடியேற்றத் திருநாள்)

### 5:1 விளக்கம்

பிரம்மோத்சவம் என்பது எல்லாத் திருமால், சிவன் கோயில் களிலும் ஆண்டுதோறும் நடைபெறும் திருவிழா ஆகும். இவ்விழா பத்து நாள்கள் நடைபெறும். இவ்விழாவைப் பெருவிழா என்றும் கொடியேற்றத் திருவிழா என்றும் கூறுவர்.

விழாக்கள் மூன்று வகைப்படும். அவையாவன நித்தியம், நைமித்திகம், காமியம்.

#### நித்தியம்

நாள்தோறும் செய்யப்படும் விழா நித்தியம் எனப்படும்.

#### நைமித்திகம்

நிலநடுக்கம், திசைகளில் நெருப்புக்கோளம் தோன்றல், பெரிய உற்பாதங்கள், நாட்டில் தீய நிகழ்ச்சி, நோய்கள், எதிரிகளினால் துன்பம், மழை இல்லாமலிருத்தல், எரிகொள்ளி வீழ்தல், இறைவனின் திருவுருவத்தில் அவயவங்கள் அசைதல், அழுதல், பீடத்தினின்று மூர்த்தி நழுவுதல் போன்ற நிகழ்ச்சி நடைபெறும் நேரத்தில் உலக அமைதிக்காகச் செய்யப்படும் விழா நைமித்திகம் எனப்படும். நாள் விழாவின் வழிபாட்டில் ஏதேனும் குறை ஏற்படினும், அதைத் தீர்க்க இவ்விழா நடத்தப்பெறும்.

#### காமியம்

அறம், பொருள், இன்பம், வீடு ஆகியவைகளில் ஏதேனும் ஒரு பயனைக் கருதி நேர்த்திக்கடன் பூண்டு நடத்தப்படுவது காமியம் ஆகும். காமியத்தின் காரணமாகத் தலைக்கட்டு (உபயம்) வந்தது.

ஏறத்தாழ எல்லா சம்மிதைகளும் விழா மூன்று வகை என்பதை வலியுறுத்தும். ஆயினும் அவைகளின் பெயர்களையும், செயல் முறைகளையும் சற்று வேறுபடுத்திக் கூறுவதும் உண்டு.

பிரம்மோத்சவம் நடத்தப்பெறும் பொதுவழக்குப் பற்றி சம்மிதைகள் கூறும் நடைமுறை

| | | |
|---|---|---|
| மிருத்சங்கரணம் | - | மண் எடுத்தல் |
| அங்குரார்ப்பணம் | - | அம்மண்ணில் குறிப்பிட்ட நவதானியங்களை முளைக்கச் செய்தல், திருமுளை |
| ரக்ஷாபந்தனம் | - | காப்பு நாண் கட்டுதல் |
| துவஜாரோஹணம் | - | கொடியேற்றுதல் |
| பேரிதாடனம் | - | முரசு முழக்குதல் |
| பலிப்பிரதானம் | - | தெய்வங்களுக்கு பலியிடுதல் |
| கும்பத்தாபனம் | - | குறிப்பிட்ட மந்திரங்களைச் சொல்லி குடங்களில் தண்ணீர் வைத்தல் |
| யாகசாலை ஓமம் | - | யாகசாலை சென்று சில வழிபாடுகளை மேற்கொள்ளல் |
| வழிபாடு | - | திருவுருவத்தை ஒரு பீடத்தில் இருத்தி வழிபாடு செய்தல் |
| வாகனம் | - | விழாக்காலங்களில் பல்வேறு வாகனங்களில் பெருமாளை எழுந்தருளச் செய்து திருவீதி வலம் வருதல் |
| சூர்ணாபிடேகம் | - | ஏழாம் திருநாளன்று மஞ்சள்பொடி கொண்டு உத்சவரை வழிபடுதல் |
| குதிரை வாகனம் | - | எட்டாம் திருநாளன்று குதிரை வாகனத்தில் பெருமாளை எழுந்தருளச்செய்தல். |
| பிரணயகலகம் | - | ஊடல் விழா; பெருமாளுக்கும், தாயாருக்கும் இடையில் ஊடல் விழா. |
| அவபிருதம் | - | விழாவின் கடைசி நாளில் உத்சவரை நீராட்டுதல் (திருமஞ்சனம்) |

புஷ்பயாகம் - இறைவன் மீது பல்வேறு மலர்களைத் தூவுதல்
துவஜா அவரோகணம் - கொடியிறக்கம், விழா முடிவுற்றதை அறிவிப்பது

இவ்வாறு பிரம்மோத்சவ நடைமுறை பற்றிப் பொதுவாக ஆகமங்கள் கூறுகின்றன. இக்கோயிலுக்கென்று ஏற்பட்ட பாரமேச்வர சம்மிதை[1] 'உத்சவத்திற்கு காப்புகட்டுதல், ஆசாரியனை நியமித்தல், ஆசாரியனை அலங்கரித்தல், உத்சவத்திற்கு முந்தைய நாளில் ஆசாரியனுக்கும், தெய்வத்திற்கும் காப்புகட்டுதல், அன்று மாலை சேனைமுதலியார், இறைவன் எழுந்தருளும் திருவீதிகளில் நகர சோதனைக்காக வலம் வருதல், தெய்வத்திற்கும் காப்பு கட்டிய பின்னரே ஆசாரியன் காப்புக் கட்டிக் கொள்ளுதல்' போன்ற செய்திகளைக் கூறுகிறது.

மேலும் அச்சம்மிதை, "முதல் திருநாளன்று பெருமாள் திருவீதி வலம் வந்தவுடன், மண்டபத்திற்கு எழுந்தருள, அங்கு பெருமாளுக்குத் திருமஞ்சனம் நடத்த வேண்டும். யாகசாலையில் உத்சவத்திற்கு வேண்டிய கும்பம் நிறுவி, ஓமகுண்டத்தில் ஆராதனை, ஓமம் முதலியன செய்ய வேண்டும். யாகசாலையில் நான்கு புறம் வாயில் அமைத்து, வழிபாடு நடத்தி, மேடையில் உள்ள கும்பத்தை வழிபட்டு ஓம குண்டத்திற்கும் ஆராதனை நடத்த வேண்டும். மறுநாளிலிருந்து திருவரங்க மாளிகையார் என்னும் யாகசாலைப் பெருமாள் யாக சாலையில் வீற்றிருப்பார்" என்பதனையும் கூறுகிறது.

பிரம்மோத்சவ காலங்களில் பெருமாள் கண்ணாடி அறைக்குள் செல்வதையும், காலை உத்சவம், மாலை உத்சவம் என்ற இரு நேரங்களிலும் பெருமாள் திருவீதி உலா வர வேண்டிய தையும் முதல ஆறு திருநாள்களில் எந்தெந்த தேவதைகளை வழிபட வேண்டும் என்பதையும், ஓமங்கள் செய்யும் பலிக்கும் என்னென்ன பொருள் தேவை என்பதையும் இவ்வாகமம் குறிக்கிறது. ஆயின் முதல் ஆறு திருநாள்களில் எந்த வாகனத்தில் பெருமாள் எழுந்தருள வேண்டு மென்ற குறிப்பினைக் காணோம்.

ஏழாம் திருநாள் - சூர்ணாபிடேகம், நெல் அளவு: எட்டாம் திருநாள் குதிரை வாகனம், ஒன்பதாம் நாள் - தேர்த்திருநாள்; தேர் நிலைக்கு வந்ததும் திருமஞ்சனம் அன்றே தீர்த்தவாரி; பத்தாம் திருநாள் - கொடியிறக்கம் ; ஆசாரியனிடம் கொடியைக் கொடுத்துச் சிறப்புச் செய்தல் முதலிய செய்திகளை விவரிக்கிறது.

திருவரங்கம் கோயிலில், பிரம்மோத்சவம் பெரும்பான்மை யிலும் பாரமேசுவர சம்மிதையை ஒட்டி நடந்தபோதிலும், சிறுபான்மை பாத்மசம்மிதை முதலிய பிற சம்மிதைகளை ஒட்டியும் நடைபெறுகின்றது.

### 5:2:1 திரு மண்எடுத்தல் (மிருத் சங்க்ரணம்)

மிருத் - களிமண்; சங்கிரணம் - எடுத்தல்; திருமுளைக்காக மண் எடுத்தல் என்று பொருள்படும்.[2]

இவ்விழாவில் ஆசாரியன் தன்னைத் தூய்மைப்படுத்திக் கொண்டு பெருமாளிடத்தில் சென்று விழாச் சிறப்புடன் நடைபெற வேண்டி விண்ணப்பிப்பார். பின் விஷ்வக்சேனரிடம் (சேனைமுதலியார்) சென்று இவ்விழாவை நடத்திக் கொடுக்குமாறு வேண்டுவார்.

மண் எடுப்பதற்கு மண் பானையுடன் சென்று, மண்ணை வடக்கு, வடக்கிழக்கு, கிழக்கு திசைகளுள் ஒன்றிலிருந்து எடுக்க வேண்டும்.

ஆசாரியர் கிழக்கு நோக்கி அமர்ந்து பூமி தேவியிடம், "அம்மா! உன் உடம்பில் பல்வேறு இடங்களிலிருந்து மண்ணை வெட்டி பூசைக்காக எடுத்துக் கொள்கிறேன் என்று வேண்டி மண்ணெடுப்பார்.[3] இவ்வாறு எடுத்துக்கொண்ட மண்ணை யானை மீதோ, வாகனத்திலோ, பரிசாரகரின் தலையிலோ ஏற்றி, மந்திரங்களை உச்சரித்தவாறு ஊரை வலமாக வருவார். கோயிலுக்குள் அம்மண்ணை வடக்கிலோ, கிழக்கிலோ வைப்பர். பாலிகைகளை வடகிழக்குத் திசையில் பரப்பி நல்ல நேரத்தில் விதைகளைத் தெளிப்பர். பெரியாழ்வார் 'மண்ணும் மணமும் கொண்மின்' என்று கூறுவது ஈண்டு நோக்கத்தக்கது.

### 3:2:2 திருமுளை (அங்குரார்ப்பணம்)

அங்குரம் - முளைவிடல், இதைத் தமிழில் திருமுளை சாத்துதல் என்று கூறுவர்.[4] ஒன்பது தானியங்களை மண்ணில் விதைக்கச் செய்து முளைவரச் செய்தல். இந்நிகழ்ச்சி கோயில்களில் திருவிழாத் தொடக்கத்திலும் இந்து சமுதாயத் திருமணங்கள் முதலான மங்கள நிகழ்ச்சிகளின் தொடக்கத்திலும் நடைபெறும். நவதானியங்களை விதைக்கும்போது மந்திரங்கள் ஓதுவர்.

அகநானூறு [5] சிலப்பதிகாரம் [6] மணிமேகலை[7] போன்ற தமிழ் இலக்கியங் கள் இத்திருமுளை பற்றிக் குறித்துள்ளன. திருமண நிகழ்ச்சியில் திருமண நாளுக்கு முன்பு ஒரு பாத்திரத்தில் இவ்வாறு நவதானியங்களை முளைக்கச் செய்வர். இன்றும் திருமணச் சடங்குகளில் இந்நிகழ்ச்சியினைக் காண்கின்றோம்.

தமிழ்ப் பேரகராதியில்; முளைக்குட்டம், முளைக்கோட்டு, முளைக்காட்டல், முளை தெளித்தல், முளைப்பாலிகை, பாலிகை கொட்டுதல், பாலிகை தெளித்தல் என்பவை காணப்படுகின்றன.[8]

### பாத்மசம்மிதை

அங்குரார்ப்பணத்திற்குத் தேவையான மண்ணை, வெளியி லுள்ள உத்யான பூமியிலிருந்தோ, நதிக்கரையிலிருந்தோ கொண்டு வருவதற்காகக் கருடனையோ, விஷ்வக்சேனரையோ, பல்லக்கில் எழுந்துருளச் செய்து இன்னிசை முழங்க அலங்கரிக்கப்பட்ட மண்வெட்டியையும், பாலிகையையும் சுமந்து, சுற்றிலும் அந்தணர்கள் வேதங்களை முறையே ஓதிவர, ஆசாரியன் அவ்விடத்தில் கிழக்கிலோ, வடக்கிலோ சென்று மண்ணைத் தோண்டி எடுத்ததும், முன்பு கூறியவாறு அம்மண்ணுடன் கோயிலை அடைந்து அந்திவேளையில் (மாலை நேரத்து) யாகசாலையில், கும்பங்களுடன் பன்னிரண்டு பாலிகைகளையும் அதைப்போன்று பதினாறு பாலிகைகளையும் சோம குண்டத்துடன் வடகிழக்கு திசையில் (ஈசான திக்கில்) வைக்க வேண்டும். நல்ல வேளையில் ஆசாரியன் அவற்றில் விதைகளை விதைக்கச் செய்வார்" என்று கூறுகிறது.[9]

## 5:2:3 சேனை முதலியார் (விஷ்வக்சேனர்)

இவர் விஷ்ணுவின் தளபதி என்றும், விஷ்ணுவின் அமைச்சர் என்றும் குறிக்கப் பெறுவர்.

இவர் நித்தியஸூரிகளில் ஒருவர், திருமாலின் அந்தரங்கச் செயலர், கோயில் நிதியைப் பாதுகாப்பவர், உக்கிராணத்தைப் பாதுகாப்பவர், விஷ்ணுவின் எல்லாத் தளவாடங்களையும் பாதுகாப்பவர், எல்லா இடையூறுகளையும் நீக்குபவர். வைணவர் எந்த மங்கலச் செயலைச் செய்வதாக இருந்தாலும் முதலில் இவரை வழிபட்ட பின்பே தொடங்குவர். இது சைவரின் (கணபதி பூஜை) விநாயக வழிபாட்டை ஒக்கும்.

விழாக்களில், பெருமாள் புறப்பாட்டிற்கு முன் நகர சோதனைக் காக இவர் திருவீதியில் எழுந்தருளுவது வழக்கமாகும்.

கோயில் ஒழுகு, இவரது சன்னிதி திருவரங்கத்தில் கட்டப்பட்டது பற்றி விரிவாகக் கூறுகிறது.[10] பராசரபட்டரும் ஸ்ரீரங்க ராஜஸ்தவத்தில் இவரைப் பற்றிக் கூறுகிறார்.

புராணங்களும் இவரைப் 'பிரமதத்தின் மகன் என்றும், 14ஆம் மனு என்றும், அக்னி காரியங்களுக்கு இவரை வழிபட வேண்டு மென்றும், இவரே விஷ்ணு என்றும் கூறுகின்றன. ஆகமமும் இவர் கோயிலுள் வடகிழக்கு திசையில் (ஈசான திக்கில்) இருக்கிறார் என்று கூறுகின்றது.[11]

### 5:2:3:1 வைணவக் கோயில்களில் சேனைமுதலியார் வழிபாடு

சேனைமுதலியார் பேரின்ப உலகத்தில் திருமாலுக்கு அடக்கமாக இருந்து வழிபடும் கருடன் முதலிய பலருள் ஒருவராவர். அங்ஙனமே உலகியலில் சேனைமுதலியார் என்பவரைப் படைத்துத் திருவரங்கம் கோயில் அவருக்குரிய தொழில் முதலியவற்றை வரையறுத்துப் போற்றுவதும் ஒரே வழி வைகுண்டத்திலுள்ள சேனை முதலியாரை நினைந்து இங்கும் தெய்வமாகப் பேசுவதும், வழக்கமாக

உள்ளது. எல்லாத் திருச்சுற்றுக் கோயில் தெய்வங்களுக்கும் பலி கொடுத்த பிறகு சேனை முதலியாருக்குத் தரையில் பலி வைக்கப் படுகிறது.[12]

பெருவிழாக்கள் நல்லமுறையில் நடந்தேற இவரிடம் அர்ச்சகர் வேண்டுவர். மண் எடுத்தல் முதலிய சடங்குகளில் இவர் முக்கியப் பேங்கேற்பர். இராமானுசர் தம் 'சரணாகதி கத்யம்' என்னும் நூலில் பெருமாளுடைய திருவடிகளில் எப்போதும் காத்துக் கொண்டிருக்கும் நித்தியஸூரிகளுள் சேனைமுதலியாரையும் கருடனையும் முக்கிய மாகக் கூறுகிறார்.[13]

வைணவர்கள் தங்கள் நெற்றியில் திருமண் இட்டபின் தங்கள் குருவை வழிபட்டு, பின்னர் குருவின் குருவை வழிபட்டு, அந்த வழியில் மணக்கால் நம்பி, உய்யக்கொண்டார், யமுனைத் துறைவர், நாதமுனி, நம்மாழ்வார், சேனை முதன்மையர் (சேனை முதலியார்) இலக்குமி, விஷ்ணு, நாராயணன் என்று பலரை வணங்குவர். இதனின்று இராமானுசரின் வைணவ சமயத்தில் சேனைமுதன்மையார், ஒரு சிறந்த இடத்தைப் பெறுகிறார் என்று அறிகின்றோம்.[14]

வைணவக் கொள்கையின்படி சேனைமுதலியார் குரு பரம்பரையில் முதலிடம் பெற்றவர் என்பது தெரிகிறது. இக்கோயிலில் இரண்டாம் திருச்சுற்றின் வடகிழக்கு மூலையில் சேனைமுதலியார் சன்னிதி அமைந்துள்ளது. இச்சன்னிதியிலேயே சேனைமுதலியார், அனுமன், விடணன் முதலானோர் கோயில் கொண்டுள்ளனர்.

## 5:2:4 காப்புக் கட்டுதல் (ரக்ஷாபந்தனம்)

காப்புக் கட்டுதல் என்பது, விழாவை முன்னிட்டுத் தெய்வங் களுக்கும், திருநாள் நடத்தும் அர்ச்சகருக்கும் கட்டப்படும் காப்பு ஆகும். வடநாடுகளில் காப்பு கட்டுதலைத் திருநாளாகக் கொண்டாடு கின்றனர். உரிய காரியத்தைச் செய்யவும், ஏதும் அணுகாது இருக்கவும், எடுத்த காரியம் வெற்றியடையவும் மந்திரம் ஓதிச் செய்யும் இச்சடங்கு பயன்நல்கும் என்று மக்கள் நம்புகின்றனர்.

காப்புக் கட்டுதல் திருமணச் சடங்குகளிலும் செய்யப்படுகிறது என்று கிரியைச் சூத்திரத்தின் மூலம் அறிகின்றோம்.[15] திருமணத்தின் பின் கைம்மை வராமலிருக்க இச்சடங்கு நடை பெறுகிறது.

அகநானூறு[16] நெடுநல்வாடை[17] போன்ற தமிழ் இலக்கியங்களில் திருமணச் சடங்குகளில் தலைவன், தலைவிக்கு காப்புகட்டும் வழக்கம் இருந்தமை புலப்படுகிறது. இன்றும் அவ்வழக்கம் உள்ளது. 'காப்பு நாண் கட்டக் கனாக்கண்டேன் தோழி' என்பது நாச்சியார் திருமொழி.[18]

திருமணப் பெண்ணுக்கு சிறப்புத் தன்மை இக்காப்பினைக் கட்டியதால் வருகிறது. அதுபோன்றே கோயில்களிலும் காப்பு கட்டிய அர்ச்சகருக்கு, ஒரு சிறப்பு இதனால் ஏற்படுகிறது. திருநாள்கார அர்ச்சகர் இக்காப்பினைக் கட்டிக்கொண்ட பிறகு சில ஒழுக்கங்களைக் கடைபிடிக்க வேண்டும் என்று விதிக்கப்பட்டுள்ளது.

கோயிலில் இறைவன் பிரதிட்டையான நாள் விழாவின்போதும், பிரம்ம உத்ஸவத்தின் போதும், தெப்ப உத்ஸவத்தின் போதும், ஊஞ்சல் உத்ஸவத்தின் போதும் பவித்திர உத்ஸவத்தின் போதும் விழாத் தொடக்கத்தில் காப்பு நாண் கட்ட வேண்டும் என்று ஆகமம் கூறுகிறது.[19]

காப்பு நாண், பொன்னினாலோ, பருத்தி நூலினாலோ, பட்டு நூலினாலோ இருக்கலாம். அது ஏழு அல்லது ஐந்து புரிகளைக் கொண்டு முறுக்கப்பட்டு மஞ்சளும், சந்தனமும் பூசப்பெற்று விளங்கும்.

அக்காப்பு நாண் நெல் தானிய பீடத்தின் மேல் ஒரு பொன் அல்லது வெள்ளிக் கலசத்தின் மீது வைக்கப்பட வேண்டும். மேள தாளங்களுடன் வெற்றிலை, பாக்கு, பழம், மலர்களுடன் மூலத் தானத்திற்கு எடுத்துச் செல்ல வேண்டும். இந்தக் காப்பு நாண் கட்டும் விழாவின்பொழுது அர்ச்சகர் இலக்குமியைத் தொழுது, விழாவிற்கு அவரது துணையை நாடுவார். உற்சவர் திருவுருவத்தின் முன்னால்

இவை இறைவியர்க்கு இடக்கையிலும், இறைவருக்கு வலக்கையிலும் காப்புக் கட்டுவர். பின்பு அர்ச்சகர் தானும் காப்பு கட்டிக்கொள்ளுவர்.

இவ்விழா, சமுதாய வழக்கமாக இருந்து பிறகு சமய வழக்கமாக மாறியிருக்கலாம். இவ்வழக்கம் மக்கள் காப்பின் மீது வைத்துள்ள நம்பிக்கையின் வெளிப்பாடாகும். காப்பு கட்டுதல், விழாக் காலங்களில் எல்லாக் கோயில்களிலும் வழக்கமாகிவிட்டது. காப் பென்பது மந்திரமேற்பட்ட, மஞ்சள் தோய்த்த ஒற்றைப்படை நூலான கயிறு. மஞ்சள் சிகப்பு நிறங்கள் கெட்டதை விரட்டும் என்றும், கண்ணேறுகளைக் களையும் என்றும் நம்பப்படுகிறது.

### 5:2:5 கொடியேற்றம் (துவஜாரோகணம்)

திருவிழாவின் தொடக்கத்தின் அடையாளமாக இவ்விழா நடைபெறும். திருமுளை சாத்தும் விழாவிற்குப் பின் கொடியேற்றம் நடைபெறும். கொடியேற்றிய பிறகு, அத்திருநாள் முடிவுற்று கொடியிறக்கும் நாள்வரை அவ்வூரார் அந்த ஊரிலேயே இருக்க வேண்டும் என்ற சமுதாயக் கட்டுப்பாடு ஒன்று உண்டு. மக்கள் அனைவரும் ஒரு மனதாய் அவ்விழாவில் பங்கேற்று இறையருளைப் பெற்று உய்ய வேண்டும் என்பதே அதன் நோக்கம். யாகசாலையின் முன்பு விலங்கு பலி கொடுப்பதற்குப் பதிலாக ஒரு கொடியை நடுவது வழக்கமாக இருந்து அது கோயில்களில் கொடிமரமாக அமைந் துள்ளது.

கொடியேற்றம் நிகழ்ச்சி, தீய கணங்களை விரட்டும் பொருட்டுச் செய்யப்படுகிறது. மக்களின் வீட்டின்பத்திற்கு சடங்காகக் கருதப்படுகிறது.

கோயில்களில் கொடியேற்றுதலால் ஊருக்கு நன்மை உண்டு என்று அக்னி புராணம் கூறுகிறது.[20]

பிரம்மோத்சவத்திற்குக் கொடி ஏற்றம் இன்றியமையாதது என்றும், ஓரிரு நாட்கள் நடைபெறும் உத்சவத்திற்குக் கொடியேற்றம் தேவையில்லை என்றும் பாத்மசம்மிதை கூறுகிறது.[21]

## 5:2:5:1 கொடி ஏற்ற நடைமுறை

இதனை நண்பகலுக்கு முன் நடத்த வேண்டும் என்றும், இது அவபிருதத்தின் (விழா முடிவு நாளின்) முன்னதாக 19, 18, 12 நாளுக்குள் ஒன்றில் செய்ய வேண்டும் என்றும் பாத்மசம்மிதை கூறும்.[22]

கொடியில் உள்ள கருடனின் கண் திறப்பதைக் காலை நேரத்தில் நடத்துவர் என்று தெரிவிக்கிறது. கொடியில் வரையப்பட்ட கருடனை, அர்ச்சகர் வழிபட்டு, விழாச் சிறப்பெய்த இறைஞ்சுவார். கொடியேற்றத்திற்கு முன் கருடக்கொடிப் படத்தைக் கோயிலுக் குள்ளும், வெளியிலும், திருவீதிகளிலும் மேள தாளங்களுடன் வாகனத்திலோ, யானையிலோ, தேரிலோ ஏற்றி ஊர்வலம் வர வேண்டும் என்று பாத்மசம்மிதை தெரிவிக்கும்.[23]

சிறப்பு மந்திரங்களைச் சொல்லிக் கொடியேற்ற வேண்டும். அர்ச்சகர் ஓதும் மந்திரங்கள் எல்லாவிதமான பாதுகாப்பையும் கோயிலுக்குத் தரும்.

தருப்பைப் புல்லினால் கொடி மரம் சுற்றப்பெறும்[24] கொடியிலுள்ள கருடனுக்குப் பாசிப் பருப்புப் பொங்கலை நிவேதனம் செய்த பின் ஆசாரியன் தருப்பையினால் ஆன கயிற்றினால் கொடியைப் பறக்கவிடுவார்.

## 5:2:6 முரசு முழங்குதல் (பேரீதாடனம்)

பெருவிழாத் தொடக்கத்தில் முரசு முழங்கும். தேவதைகளை யும் மற்றத் தெய்வங்களையும் விழாவின் பொருட்டு அழைப்பது இதன் நோக்கம்.

தமிழ் நூல்களில் பறை, முரசு, முழவு என்ற இசைக் கருவிகளைப் பற்றி அறிகின்றோம். ஊரில் உள்ளோர்க்கு ஒரு காரியத்தைப் பற்றி அறிவிப்பதற்குப் பறை அறைதல் என்று பெயர். ஊரெல்லாம் சென்று முரசுகொட்டிச் சொல்லுதல் ஒரு வழக்கமாகும்.

முரசு அடிப்பவருக்கு-அடிப்பன் என்று பெயர். பறையன் என்று தமிழ்ப் பேரகராதி கூறும்.[25] புறநானூற்றின்படி அவன் ஒரு குடிமகன் என்று அறிகின்றோம்.[26]

போருக்குப் புறப்படுவதற்கு முன்பும், பிறர்க்கு கொடை கொடுக்கும் போதும், திருமணத்தின் போதும், இறப்பின்போதும் முரசு முழங்கும் என்று இலக்கியங்கள் பேசும்.[27] இந்திர விழாத் தொடக்கத் திலும், முடிவிலும் முரசு முழங்கியமை சிலப்பதிகாரத்தால் அறியப் படும்.[28]

எந்த ஊரில் கோயில் இருக்கிறதோ அவ்வூரில் பேரிதாடனம் முழங்க வேண்டுமென்று ஆகமம் கூறுகிறது.

ஊரில் இருக்கும் இறைவனே அரசன் என்பதும், அவனே முதல்வன் என்பதும் இலக்கியம் காட்டும் உண்மை. அரசன் போருக்குப் புறப்படும்போதும் முரசு முழங்கியதாக அறிகின்றோம். கோயில்களில் முரசு முழங்கும் வழக்கம் அவ்வூரின் அரசியல் வழக்கத்தைத் தழுவிய தாகவும் காணப்படுகின்றது.

கோயில்களில் திருவிழாவிற்கு முன் இசைக்கப்பெறும் முரசு திருவிழா நிறைவு பெறும்வரை ஒரே இடத்தில் இருக்கும் என்று தெரிகிறது.

பேரிதாடனத்தின்போது பேரி வாத்தியத்திற்குப் புது ஆடையினைப் போர்த்தி வழிபாடு நடத்த வேண்டும். பேரிதாடனம் செய்பவன் வலப்புறத்து விஷ்ணுவையும், இடப்புறத்து இலக்குமி யையும் இருக்கும்படி வேண்ட வேண்டும். நடுவில் நிலமகளை அழைக்க வேண்டும். இவ்வாறு பேரிக்கு வழிபாடு நடத்துகையில், தேவதாசிகள் பூச்சொரிவர். அப்பேரியின் பக்கத்தில் அதோசன் என்ற தெய்வம் அழைக்கப்பட வேண்டும். அதுசமயம் மூன்று முறை மந்திரம் ஓதவேண்டும். பிறகு பேரியைத் தட்டி, மக்களுக்கு நன்மை உண்டாக வேண்டுமென்று வேண்டுவர்.

பிறகு ஆசாரியன் பறை கொட்டுபவரிடத்தில் வாத்தியத்தைக் கொடுப்பர். அவர் நீராடிப் பூணூலால் தரித்து, திருமண் அணிந்து இருப்பார்.

விஷ்வக்சேனர், பஞ்சாயுதங்கள், ஆதித்தர்கள், வசுக்கள், உருத்திரர்கள், மருத்துவர்கள், ஒன்பது நதிகள், பிரம்ம உலகத்து முனிவர்கள், சிவலோகத்துத் தேவர்கள் முதலான இவர்கள் எல்லாரையும் பேரி இசையின் மூலம் அழைக்க வேண்டும். அப்பொழுது அர்ச்சகர் சுலோகம் சொல்லியவாறு இருக்க, பரசவர் பேரியை முழக்கியவாறிருக்க வேண்டும்.[29]

தெய்வத்தை அழைக்க பேரிகொட்டும் வழக்கம் இன்றும் மலைவாழ் மக்களிடம் காணப்படுகின்றது. மூன்று வருணத்திலும் சேராத பரசவனுக்குப் (பறைகொட்டுபவனுடைய சாதிப்பெயர்) பூணூல் அணிவித்து திருமண் சார்த்தியதால் அவனை உயர்த்தி, பேரியை இசைக்கச் செய்வதன் மூலம் ஒரு சமுதாய உயர்வினை அவனுக்குத் தந்தமை விளங்கும்.

வேதகால தெய்வங்களையும் பிற தெய்வங்களையும் அழைப்ப தால் வேத கால முறைமையும், வேதமல்லாத காலத்து முறைமையும் ஒருங்கிணைந்த ஒருமுறை கோயில்களில் வழக்கத்துக்கு வந்துள்ளது என்பதை இதனால் அறிகின்றோம்.

## 5:2:7 ஊர்தி (வாகனம்)

பெருவிழாக்காலங்களிலும் மற்ற விழாக்காலங்களிலும், திருவீதிகளில் இறைவன் வாகனங்களில் எழுந்தருளுவது வழக்க மாகும்.

ஏதாவது ஒரு தனிப்பட்ட தெய்வத்திற்குரிய ஊர்தி 'வாகனம்' எனப்படும். தெய்வங்களுக்குப் பக்கத்தில் அவரவர்களுக்குரிய ஊர்திகளும் காணப்படும். திருமாலுக்கு கருடனும், சிவனுக்கு காளையும், விநாயகருக்கு மூஞ்சூறும், முருகனுக்கு மயிலும் முறையே ஊர்திகளாம். அடியார்க்கு அருள்புரிய இறைவன் விரைந்து வருவான் என்பதை இவ்வாகனங்கள் உணர்த்தும்.

விழாக்காலங்களில் பல்வேறு ஊர்திகளை ஒரே தெய்வத் திற்குப் பயன்படுத்துவர். திருநாள் காலங்களில் உற்சவமூர்த்தியை வாகனத்தில் எழுந்தருளச்செய்து அடியார்தம் தோளில் சுமந்து கொண்டோ, வண்டிகளில் ஏற்றி இழுத்துக்கொண்டோ கோயில் திருச்சுற்றிலும், வீதிகளிலும் ஊர்வலம் வருவர்.

கோயில்களில் வழிபாடுகள் ஏற்படுத்தப்பட்டு உற்சவ வடிவத்தை ஊராரின் நன்மைக்காக வெளியில் எடுத்துச்செல்லும் வழக்கம் ஏற்பட்ட நாள்முதல் வாகனங்கள் பயன்பட்டிருக்கும் எனக் கருதலாம். பெருவிழாவின் நோக்கமே, திருவீதிகளில் இறைவனை வாகனத்தில் எழுந்தருளச் செய்வதுதான். விழாக்களுக்கு முன்பே, தச்சர்களையும், சிற்பிகளையும் கொண்டு வாகனத்தைச் செப்பனிடுவர்.

இரவிலாவது, பகலிலாவது, ஆசாரியன் விரும்பியவாறு வாகனங்கள் மேல் உற்சவத் திருமேனியைத் தேவிகளுடனோ, அவர்களில்லாமலோ எழுந்தருளப் பண்ணலாம்.

திருப்பாதம் தாங்குவார், (இறைவனைத் தம் தோள்களில் தாங்குபவர்) தலைப்பாகை கட்டிக் கொள்ளுவர். முதல் நாளில் சிவிகை வாகனம், இரண்டாம் நாள் சேஷ வாகனம், மூன்றாம் நாள் சூர்யப்பிரபை, நான்காம் நாள் புஷ்ப விமானம், ஐந்தாம் நாள் கருடன், ஏழாம் நாள்(பூந்தேர்) பூரதம், எட்டாம் நாள் குதிரை வாகனம் என்றவாறு இப்பெரு விழாவிற்கு வாகனங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன

## 5:2:8 பொடிபூசுதல் (சூர்ணாபிடேகம்)

பெருவிழாவின் ஆறு அல்லது ஏழாம் நாளில் நடைபெறும இவ்விழாவை 'ஸ்நபனம் ஜலதுரோணி' என்றும் கூறுவர். வாசனைப் பொடியும் எண்ணெயும் இறைவன் திருமேனியின் மேல் விளக்கமாகப் பூசப்படுகிறது. இதனைத் தமிழில் 'தோத்திரத் திருமஞ்சனம்' என்று கூறுவர்.

ஆகமத்தில் இந்த உத்சவத்தின் முறை விரிவாகக் கூறப் பட்டுள்ளது.

ஈசுவர சம்மிதையில் இவ்வுத்ஸவம் திருநாளின் ஆறாம் நாள் காலையிலோ அன்றி மாலையிலோ பலி பூசைக்குப் பிறகு நடத்தலாம் என்று கூறப்பட்டுள்ளது.[30]

பாத்ம சம்மிதையில், தீர்த்தத் திருநாளில் ஒரு பகுதியாக இது நடைபெறும் என்று கூறப்பட்டுள்ளது. மேலும் இந்தச் சூர்ணம் தயாரிக்கும் முறை பற்றியும் இவ்வாகமம் கூறுகிறது. கொடி மரத்திற்கு முன்னால் உள்ள இடத்தைத் தூய்மைப்படுத்தி, அதன்மேல் தானியங்களைப் பரப்பி, அதில் உரலையும், உலக்கையும் வைத்து, இலக்குமியை அதில் சாந்நித்தியம் கொள்ளச் செய்து தேவதாசிகள் பாட இப்பொடி தயாரிக்கப் பெறும்.[31]

திருவுருவத்திற்குப் பொடி பூசும் முறை பற்றியும் இவ்வாகமம் கூறுகின்றது. சூர்ணம் தயாரானவுடன் விக்கிரகத்தை மண்டபத்திற்கு எழுந்தருளச் செய்து இலை ஆசனத்தில் அமரச் செய்ய வேண்டும். விக்கிரகத்திற்கு முன்னால் இடத்தைத் தூய்மை செய்து, தான்யத்தைப் பரப்பி நறுமணப்பொடி சேர்க்கப்பட்டக் குடத்தை வைத்து, அக்குடத் திற்குப் புண்ணியாகவாசனம், ப்ரோட்சணம் முதலியன செய்து, இலக்குமியை எழுந்தருளுமாறு வேண்ட வேண்டும்.

பிறகு அர்ச்சகர் ஸ்ரீசூக்த மந்திரங்களைச் சொல்லி மஞ்சள் பொடியால் விக்கிரகத்திற்கு அபிடேகம் செய்வர்.[32]

## குதிரை வாகனம் (மிருகோத்சவம்)

குதிரை வாகனம் பெருவிழாவின் முக்கியமான பகுதியாகும். இது விழாவின் எட்டாம் நாள் நடைபெறும். இதனை வேட்டைத் திருநாள் என்றும் அழைப்பர்.

சூர்ணாபிடேகத்திற்கு மறுநாள் மிருகோத்சவம் என்னும் குதிரை வாகனத் திருநாள் நடத்தலாம் என்று ஆகமங்கள் கூறுகின்றன. 'விசயதசமியின் போதும், பொங்கல் திருநாளின் போதும் குதிரை வாகனம் உண்டு. பாத்மசம்மிதையில் நீராடல் உத்சவத்திற்கு முன்பு இது நடைபெற வேண்டுமென்று கூறப்பட்டுள்ளது.[33]

குதிரை வாகனத்தில் பெருமாள் எழுந்தருளும்போது, வேட்டைக் குரிய கத்தி, அம்பு முதலான படைக் கருவிகளைத் திரு வுருவத்திற்குச் சார்த்தி அழகாக அலங்கரிப்பர்.

## 5:2:9 பக்த உத்சவம்

அடியார்களுக்கு அன்பை அருளுவதற்காகச் செய்யும் ஒரு சிறப்புத் திருவிழா. இவ்விழாவைத் தனி விழாவாகவும், பெரு விழாவின் அங்கமாகவும் நடத்தலாம்.

## 5:2:10 தேர்த் திருவிழா (ரத உத்சவம்)

பெருவிழாவில் தேர்த் திருவிழா மிக முக்கியமானது. இது ஏழாம் நாள் அல்லது ஒன்பதாம் நாளில் நடைபெறும் இறைவன் திருவுருவைத் தேரில் எழுந்தருளச்செய்து, அலங்கரித்து, பொதுமக்கள் திருவீதிகளில் தேரினை இழுத்துவர இவ்விழா நடைபெறும்

தேரன்று மக்கள் யாவரும் அதில் கலந்து கொண்டு தேரை இழுப்பதால் தேர்த்திருநாளுக்குத் தனிச் சிறப்பு உண்டு. அது சாதி வேறுபாடு காணாமல் யாவரும் கலந்து கொள்ளும் திருவிழா ஆகும் 'செடிக்கு வேர், திருநாளுக்குத் தேர்', 'ஊர்கூடித் தேர் இழுத்தல்' என வழங்கிவரும் தமிழ்ப் பழமொழிகளுக்கு ஏற்ப அனைவரும் மன முவந்து ஈடுபடும் விழாவாகிறது.

தேரின் வடிவம், கோயில் விமானத்தின் வடிவம் போல் இருக்க வேண்டும் என்று சொல்லப்படுகிறது.

ஒரு தேர் மரத்தினாலோ அன்றி உலோகத்தினாலோ செய்யப் படலாம். அது பவளத்தாலும் பூவாலும் அலங்கரிக்கப்பட வேண்டும். தேரின் உச்சியில் கருடக் கொடியைப் பறக்க விட வேண்டும்.[34]

தேரையே கருடனாகக் கருத வேண்டும் என ஆகமங்கள் கூறுகின்றன. அத்தேரைப் புண்ணியாகவாசனம் செய்து, பசுமாட்டின் (ஆவின்) ஐந்து பொருள்களால் தூய நீர் தெளித்துத் தூய்மை செய்ய

வேண்டும். (பஞ்சகவ்யம் - ஆவின்பால், சாணம், நெய், தயிர், கோமயம் என்பன)

தேரின் மேல் தட்டும், விக்கிரகத்தை வைக்கும் பீடமும், சிகரமும் தங்கமாக இருக்க வேண்டும்.

பாதச் சக்கரங்களின் நான்கில் சத்தியம், சயர்ணம், கருடன், தாட்சியின் என்ற தெய்வங்களை அமைக்க வேண்டும். மாயா என்ற தெய்வத்தைச் சக்கரத்தின் தண்டிலும் (குறுக்கு அச்சு), சந்திர சூரியர்களைச் சக்கரங்களிலும், ஆதிசேடனை அச்சிலும் இருக்கும்படி மனத்துள் எண்ணி ஓத வேண்டும். தேரின் மத்தியில் தர்மம் முதலிய எட்டுத் தெய்வங்களையும் நிற்குமாறு அமைக்க வேண்டும். தேரின் கலசத்தில் திருமால் இருக்குமாறு அமைக்க வேண்டும். தேரின் குடத்தில் வாசுதேவர் இருக்குமாறு செய்ய வேண்டும். கர்மம் முதலான பன்னிரண்டு தெய்வங்கள் தேரின் கழுத்தில் இருக்குமாறு அமைக்க வேண்டும்.

தேரில் கட்டப்பட்டு, தேரை இழுத்துச் செல்வனபோல் தோற்ற மளிக்கும் நான்கு குதிரைகளும் நான்கு வேதங்களாகக் கூறப் பட்டுள்ளன.

தேரில் குமுதாட்சன், கணேசர் (கஜானநர்), உலகபாலர் போன்றோர் அவரவர்களுக்குரிய இடத்தில் இருப்பர். சண்டர், சுபத்திரர் என்ற இருவரும் தேரின் இரு பக்கங்களிலும் அவரவர்களுக்குரிய திக்கை நோக்கி இருப்பர். தேருக்கு வெளியில் சண்டர் முதலான தெய்வத்திற்குப் பலியும் கொடுக்கப்படும்.

எல்லாத் தெய்வங்களையும் இருத்திய பிறகு, ஆசாரியன் உத்சவ வடிவினை உபயநாச்சிமாருடன் தேரில் இருக்கும் ஆஸ்தான பீடத்தில் எழுந்தருளச் செய்து "இடையூறு இல்லாமல் தேர் இழுக்கப்பட வேண்டும்" என்று வேண்டிக் கொள்ள வேண்டும். மண்டபத்தில் நவதானியங்கள் இடப்பட்டுத் தயிர் சாதம் நைவேத்தியம் செய்ய வேண்டும். மூர்த்திகள் வேத ஒலியும், பிரபந்த ஒலியும், மங்கல

ஒலியும் மிக மணி மங்கல இசைக் கருவிகள் முழங்க, மக்கள் ஆரவாரிக்கத் தேர்த் தட்டுக்கு எடுத்துச் செல்லப்படுவர். இசைக் கருவிகளான காளம், சங்கம், பேரி முதலியவை முழங்கக் கொடி ஏந்தி, நடனமாடிக்கொண்டு சத்திர சாமரங்களுடன் தேர்த் தட்டுக்கு இறைவன் திருவுருவை எழுந்தருளச்செய்வர். அங்கு அர்க்கிய பாத்திய உபசாரங்கள் நடக்கும். பொங்கல், பானகம் நைவேத்தியம் செய்யப் படும்.

அர்ச்சகரும், பரிசாரகரும் தேரில் இருப்பர். இறைவன் திருவுருவிற்குக் குடை எடுப்பவரும், கவரி வீசுபவரும், திருவுருவின் இருபுறமும் இருப்பர். சாமரம் வீசுவோர் திருவுருவத்தின் வடபுறமும், தென்புறமும் இருப்பர். தேரை ஓட்டுபவராக ஒரு சாரதியும் தேரின் முன்னால் இருக்க வேண்டும்.[35]

## 5:2:11 ஊடல் விழா (பிரணய கலகம்)

வைணவக் கோயிலில் இதை 'மட்டையடி உத்ஸவம்' என்றழைப்பர். இது பெருமாளுக்கும், தாயாருக்கும் நடக்கும் 'ஊடல்' விழாவாகும். இவ்விழாவில் பெருமாள், தாயார் இருவரின் சார்பாகவும் இருபுறத்திலும் இரு அர்ச்சகர்கள் இருந்து ஒவ்வொரு வருடைய வாதங்களையும் எடுத்தியம்புவர். பிறகு பெருமாளுக்கும், தாயாருக்கும் இடையே ஊடல் நீங்குகின்றது.

ஆகமத்தில் இவ்விழா வேறு சூழலில் நடப்பதாகக் கூறப்பட்டுள்ளது.[36] ஆயின் அங்கு கூறப்பட்டுள்ள முறை பெரு விழாவில் கூறப்பட்டுள்ள முறைமையோடு ஒத்திருப்பதால் அதுவே இங்கு கூறப்படுவதாகக் கொள்ளலாம்.

கஜேந்திர மோட்சத்தில், கஜேந்திரனைக் காப்பாற்றும் பொருட்டுத் திருமால் தாயாரைப் புறக்கணித்துச் செல்வதால் தாயார் ஊடல் கொண்டனர். தாயார் பெருமாள் தன்னிடம் வரும்போது கோயிலில் நுழைய முடியாதபடி கதவை அடைத்து விடுகிறார். கஜேந்திரனும் முதலையும் தேவர்களின் வடிவத்தை எடுத்துக் கொண்டு, பெருமாள் பிரிந்ததற்கான காரணத்தைத் தாயாரிடம்

விளக்க, தாயார் அமைதியடைகின்றார். இந்த உத்சவம் தை மாதத்திலிருந்து பங்குனி மாதத்திற்குள் கோயிலில் நடைபெற வேண்டுமென்றும் கூறப்பட்டுள்ளது.[37]

ஈசுவர சம்மிதையில் இவ்விழா மது மகோத்சவம்[38] என்ற பெயரில் அழைக்கப்படுகிறது. இவ்விழாவைத் தனி விழாவாகவும் நடத்துவதுண்டு.

சந்தன உருண்டை, மலர், சூர்ணம், பட்டுத் துணிகள், பால், கற்பூரம், குங்குமம், தேங்காய் போன்ற பொருட்களைத் தாயார் பெருமாளை நோக்கி ஊடல் காரணமாக வீசுவார் என்று தெரிகிறது. திருவரங்கத்தில் இவ்விழா பங்குனி உத்திரத் திருநாளின் ஒன்பதாம் நாளில் நடைபெறும். இவ்விழா அங்கு வந்து குழுமியிருப்போர்க்கு மகிழ்வை நல்கும். திருவண்ணாமலை சிவன் கோயிலில் நடைபெறும் திருஊடல் திருவிழாவும் ஈண்டு நோக்கத்தக்கது.

## 3:2:12 நீராடல் (அவபிருதம்)

பெருவிழாவின் நிறைவு நாளில் நீராட்டுவிழா நடைபெறும். இவ்விழாவில் தீர்த்த பேரர், கௌதுக பேரர், பலி பேரர் போன்றவர்களுக்குத் திருமஞ்சனம் நடைபெறும்.

முதலில், கோயிலில் இத்திருவுருவங்கள் வாசனைப் பொடியாலும், எண்ணையாலும், நீரினாலும் அபிடேகம் செய்யப்பட்டு, பிறகு ஆற்றுக்கோ, குளத்துக்கோ எடுத்துச் செல்லப்பட்டு, அங்கு நீராட்டத் திருநாள் ஆசாரியரால் செய்யப்படும். இந்நீராட்டத் திருநாளின்போது பக்தர்கள் அந்த இடத்தில் உடன் நீராடுவது வழக்கம். அவ்வாறு நீராடினால் அவர்களுக்குப் பெரும் பேறு கிடைக்கும் என்பது நம்பிக்கை.

இந்நீராடல் உத்சவம் பெருவிழாக் காலங்களிலும், மற்ற விழாக் காலங்களிலும், கிரகண காலங்களிலும், தட்சிணாயணம், உத்திராயணங்களிலும், ஏகாதசி, திருவோணம், உரோகிணி, புனர்பூசம் முதலான சிறப்பு நாட்களிலும் இறைவன் கோயிலில் பிரதிட்டை செய்யப் பட்ட நாளிலும், நாட்டை ஆளும் அரசனது பிறந்த

நாளிலும், முடிசூட்டு விழா நாளிலும் நடத்தலாம் என்று பாத்மசம்மிதை கூறும்.[39]

நீராட்டத்தின்போது கோயில்களில் தீர்த்த பேரர் என்ற திருவுருவத்தைப் பயன்படுத்துவதைக் கொண்டு, வெவவேறு செயல்களுக்கு வெவ்வேறு திருவுருவங்களை அமைத்துக் கொண்டார் என அறிகின்றோம்.

## 5:2:13 மலர் வேள்வி (புஷ்பயாகம்)

பெருவிழாவின் பத்தாம் நாளில் புஷ்பயாகம் நடத்த வேண்டும் என்றும் அப்போது என்ன என்ன மலர்களைப் பயன்படுத்த வேண்டுமென்றும் உணர்த்தும் ஆகமம் அவ்விழாவின் நடைமுறை களையும் புலப்படுத்துகிறது.[40]

காலையில் சக்கர வடிவில் தரையில் தாமரை மலர்களைப் பரப்பிக் கொள்ள வேண்டும். கல்யாண பேரரை (திருவுருவம்) அந்தப் பூவிருக்கை மத்தியில் இருக்கச் செய்து பன்னிரெண்டெழுத்து மந்திரத்தைச் சொல்லி அர்க்கிய பாத்தியம் அளிக்க வேண்டும் திருவுருவின் எல்லா உறுப்புக்களிலும் மலர்களைச் சார்த்தல் வேண்டும். வாசுதேவர் முதலான 24 மூர்த்திகளுக்கும் அவ்வாறே வழிபாடு செய்ய வேண்டும். புஷ்பயாகத்தின் போது புருஷசூக்தம், நாராயணசூக்தம், விஷ்ணுசூக்தம் இவைகளை அர்சசகர் ஓதுவா வெள்ளை மலர்களால் அர்ச்சனை செய்வர். பிறகு நிவேதனமும், ஓமமும் நடைபெறும். சர்க்கரைப் பொங்கல், வெண்பொஙகல, புளியோதரை, தயிர்ச் சோறு என்று நான்கு வகை அனனம் படைககப் பெறும்.

பெருவிழாவை ஒரு நாள் செய்வதாயிருந்தால் புஷ்பயாகம் தேவையில்லை.

இவ்வாறு பெருவிழாவின் தொடர்பாக நடைபெறும விழாக்களை ஆகமங்கள் வழி நின்றும், இலக்கியங்களிலிருந்தும், நடைமுறையிலிருந்தும் ஒருவாறு அறிகின்றோம்.

## 5:3 திருவரங்கம் திருக்கோயிலில் பிரம்மோத்சவத் திருநாள் நடைபெறும் முறை:

### 5:3:1 மண் எடுத்தல்

விழாத் தொடக்கமாக மாலை நேரத்தில் முதலில் சேனை முதன்மையாருக்கும் பின்பு பெருமாளுக்கும் திருவாராதனம் நடைபெற்று, தளிகை அமுது செய்விக்கப்படும். திருநாளுக்கு உரிய அர்ச்சகர் பெரிய பெருமாளிடம் விழாவிற்கான அனுமதியினைப் பெற்றுத் தம் தலையில் சிம்புக் குல்லாய் தரித்துக் கொள்வார். கோயில் புரோகிதர், பரிசாரகர்களுடன், மண் எடுப்பதற்காகத் தாயார் கோயிலுக்கு அர்ச்சகர் புறப்படுவார். மண் வெட்டும் கனித்ரத்துடன் (சிறிய களை கொத்து போல் உள்ளது) உள் வராக நாயனாரை ஒரு பரிசாரகரும், நவதான்யத் தட்டை ஒரு பரிசாரகரும் எடுத்துக் கொள் வர். கோயில் மூலத்தானத்தினின்று இவர்கள் புறப்படும் பொழுது வேத பாராயண கோஷ்டியாரும் வேதம் சொல்லிய வண்ணம் உடன் வருவர். சேனை முதன்மையாருடன் அனுமன், வீடனன் திருவுருவங்களும் தாயார் கோயிலுக்கு எழுந்தருளும். அனைவரும் அகளங்கன் திருவீதி வழியாக வலம் வந்து தாயார் கோயிலை அடைவர். சேனை முதலியாரும், அனுமனும், வீடணனும் தாயார் கோயில் கொலு மண்டபத்தில் எழுந்தருளியிருப்பர். தாயார் கோயில் அர்ச்சகர் தாயாருக்குத் திருவாராதனம் செய்வித்து, விழாவின் பொருட்டு, 'மண் எடுக்கத்' தாயாரின் அனுமதியை வேண்டுவார்.

புரோகிதர் சொல்லும் புருஷசூக்தத்துடன் தாயார் கோயில் திருச்சுற்றில் இருக்கும் வில்வ மரத்தடியில் அமைந்துள்ள கூர்மாசனத்தில் (ஆமை வடிவிலமைந்துள்ள) திருநாள்கார அர்ச்சகர் கிழக்கு நோக்கி அமர்வர். அவ்விடத்தில் சங்கல்பம் செய்து, பூமிக்கும், வராகனுக்கு புண்ணியாகவாசனம் செய்து, ஆராதனம் நடத்தித் தேங்காய் உடைத்து அமுது செய்வித்து, பூசூக்தம் சொல்லி வராகத் தால் மூன்று முறை மண்ணைத் தோண்டி, அவ்விடத்தில் நவதானியம் சேர்த்து வெள்ளித் தட்டில் அம்மண்ணை எடுப்பார்.

வில்வ மரத்தடியில் தலத்தார் மற்றும் ஆசாரியர்களுக்குத் தீர்த்தம், தோசை வழங்கப்பெறும். மண்ணை எடுத்துக் கொண்டு, தாயார் கோயிலிலிருந்து அனைவரும் பெரிய கோயில் வந்து யாக சாலையை அடைவர்.

சேனை முதலியார் மற்றும் அனுமன், விடண ன் முதலானோர், யாகசாலை வாயிலில் விடைபெற்றுத் தங்கள் சன்னிதியை அடைவர்.

திருநாள்கார அர்ச்சகர் தனது சிம்புக் குல்லாயைக் களைந்து, யாகசாலையில், தட்டிலுள்ள மண்ணை வைத்துப் பாலிகை பூசை செய்து, தேங்காய் உடைத்து, அமுது செய்வித்து, பாலிகை தெளித்து, திருமுளை முதலிய சடங்கினைச் செய்வார். அன்றைய நிகழ்ச்சி அத்துடன் முடிவுறும்.

## 5:3:2 நகர சோதனை

மறுநாள், மாலை நேரத்தில் சேனை முதலியார் மட்டும புறப்பாடு கண்டு எவ்வீதியில் பெருமாள் விழாவிற்கு எழுந்தருளு வாரோ அத் திருவீதியில் எழுந்தருளி, விழாவின் பொருட்டு 'நகர சோதனை' செய்வார். இந்த நகர சோதனையின் நோக்கம, விழா நடைபெறுவதை மக்களுக்கு அறிவிப்பதாகும். அந்நகரத்தின் தூய்மையினைப் பெருமாள் புறப்பாட்டிற்கு முன்கூட்டியே அறிந்துவர பெருமாளின் சேனாதிபதியான சேனைமுதலியார் திருவிதி கண்டு வருவதாகவும் கூறுவர்.

**முதல் திருநாள்** : முதல் திருநாளன்று காலையில் கொடி யேற்றம் நடைபெற்று, மாலையில் பேரிதாடனம நடநது. இரவு பெருமாள் உபய நாச்சியார்களுடன் திருச்சிவிகை (பெரிய தோளுக்கினியான்) என்னும் கேடயத்தில் திருவீதி வலம் வருவார்.

## 5:3:3 கொடியேற்றம்

கோயில் நிர்வாகத்திடம் கொடிப்படம் எழுதுவதற்காக ஏற்பட்ட தொகையைத் திருநாள்கார அர்ச்சகர் பெற்று அதைச் சித்திர வேலைக்காரரிடம் கொடுப்பார். அவர் குலசேகரன் திருவீதியில்

வெள்ளைத் துணியில் கருடச் சித்திரத்தை எழுதி, அதற்குரிய தேங்காய் முதலானவற்றை அர்ச்சகரின் பணியாளரான பரிசாரகரிடத்தில் கொடுப்பார்.

திருநாள்கார அர்ச்சகரும், மற்ற ஒரு அர்ச்சகரும், ஆக இருவர் கொடிப்படத்தை எழுந்தருளச் செய்து ஆரியப்பட்டாள் வாசலி லிருந்து வீரவண்டி, சேமக்கல இசை முழக்கத்துடன், திருச்சுற்றுக்கார முதலி இரண்டு காப்பந்தம் பிடிக்க மூலத்தானம் வந்தடைவர்.

கொடியேற்றுவதற்காகக் குறித்திருக்கும் நல்ல வேளைக்கு முன்னரே பெருமாள் நாள்தோறும் கண்டருளும் திருவாராதனம், அமுது வகைகள் கண்டருளித் தோளுக்கினியானில் எழுந்தருளிப் புறப்படுவார். அழகிய மணவாளன் மண்டபத்தில் அமைந்துள்ள சன்னிதிக் கருடன் முன்னால் கருடப்படம் பெருமாளைப் பார்த்தவாறு முன்செல்ல பெருமாள் புறப்பட்டு வந்து ஆலி நாடன் திருவீதியில் கொடிக் கம்பத்தின் அருகிலுள்ள கொடியேற்று மண்டபத்தில் வீற்றிருப்பார்.

எந்த வீதியில் பெருமாள் திருநாளுக்கு எழுந்தருளுவாரோ அந்த வீதியில் கொடிப்படம் கேடயத்தில் எழுந்தருளித் திருப்பாதம் தாங்குவார் தோளில் புறப்பட்டுத் திருவீதி வலம் வந்து, கொடி மரத்தின் அருகே வைக்கப்படும். பெருமாள் முன் வந்தடையும் சாத்தாத வைணவன் கொடியேற்றும் கயிற்றினைத் தன் தலையில் வைத்துக் கொண்டு பெருமாளைச் சுற்றி வந்து, திருச்சுற்றுக்கார முதலியிடம் கொடுக்க அவர் கொடி மரத்தின் உச்சியிலிருந்து கயிற்றைத் தொங்க விடுவார்.

கருடப்படத்திற்குத் திருவாராதனம் நடந்து, வேத விண்ணப்பம் நடைபெறும். பஞ்சாங்கம் வாசித்துப் பெருமாளுக்கும், கருடனுக்கும் அப்பம் முதலான திருப்பணியாரங்கள் அமுது செய்விக்கப்படும்.

பெருமாள் தம் தானீகர் மூலம் 'பற' என்று உத்திரவிட்ட பின் கருடப்படம் கொடிமரத்தின் உயரத்தில் ஏற்றிக் கட்டப்படும். கொடி யேற்றம் நடந்தவுடன் திருக்கூட்டத்தார்க்குத் தீர்த்தமும், அப்பமும்

வழங்கப்பெறும். பெருமாள் புறப்பட்டு, அழகியமணவாளன் மண்டபத்தில் உள்ள கண்ணாடி அறைக்கு எழுந்தருளுவார்.

## 5:3:4 பேரி இசை முழக்கம் (பேரிதாடனம்)

மாலை நேரத்தில் அழகிய மணவாளன் மண்டபத்தின் முன்னர் பெருமாள் திருச்சி (பெரிய தோளுக்கினியான்) என்னும் கேடயத்தில் உபய நாச்சிமார்களுடன் எழுந்தருளியிருப்பார். பேரி வாத்தியத்திற்குத் திருவாராதனம் ஆகி, பேரிதாடன உத்சவத்தின் பொருட்டுத் தேவதைகளுக்கு ஆவாஹனம் நடைபெறும். அர்ச்சகர் பேரிதாடன சுலோகத்தை வாசித்து நிறுத்த, சேவைக்காரன் பேரி வாத்தியத்தை வாசிப்பான் இவ்வாறாக அர்ச்சகர் சுலோகம் சொல்லவும், சேவைக்காரன் பேரி வாத்தியத்தை வாசிப்பதுமாக, மாறி மாறி நிகழ்வுறும்.

அரையருக்கு அருளப்பாடிட்டு, அரையர் நாதமுனியோடு (தாளத்தோடு) வந்து பாசுரம் சேவிக்க, ஆசாரியன் பேரி சுலோகம் சேவிக்க, இவ்வாறு மாறி மாறி பேரிதாடனம் நடந்தேறும்.

பேரிதாடன சுலோகம் சேவித்த அர்ச்சகருக்கும், பாசுரம் சேவித்த அரையருக்கும், பேரி வாத்தியம் இசைத்த சேவைக் காரருக்கும் ஸ்ரீசடகோபன், தீர்த்தம் வழங்கப்படும்.

## 5:3:5 திருவீதிப்புறப்பாடு முதல்நாள்

பெருமாள் திருவீதிப் புறப்பாடு காணச் சித்தமாயிருப்பார் பெருமாளின் திருவீதிப் புறப்பாட்டிற்கு முன் 'தசமூர்த்தியை' திருவீதிகளுக்குப் பலிப் பிரதானம் செய்ய, அவரது சன்னிதியிலிருந்து சாத்தாத வைணவர்கள் எழுந்தருளப் பண்ணி வருவர். கோயிலுள்ளே சன்னிதி முதலாக எந்தெந்த இடங்களில் பலி கொடுக்க வேண்டுமோ அந்தந்த இடங்களில் பலி சாதித்து, தசமூர்த்தியைப் பெருமாள் திருவீதியில் எழுந்தருள இருக்கிறார் என்பதை முன்கூட்டி அறிவிக்க திருவீதியில் எழுந்தருளச்செய்வர்.

பெருமாள் திருவீதியில் எழுந்தருளுவதற்கு முன்னரும் பெருவிழாக் காலங்களிலும் மாசித் தெப்பம் திருநாளின் போதும், இந்தத் தசமூர்த்தியைத் திருவீதியில் எழுந்தருளச் செய்வர். ஆகமங்கள் இந்நிகழ்ச்சியைச் சுட்டவில்லை. ஆகமங்கள் சேனை முதலியாரே திருவீதியில் பெருமாள் புறப்பாட்டிற்கு முன்னர் நாள் தோறும் எழுந்தருளுவார் என்று குறிக்கிறது.[41] இக்கோயிலில் பெருவிழா நாள்களிலும், தெப்பத் திருநாளிலும், முதல் திருநாளுக்கு முந்தைய நாள் நகர சோதனை அன்று மட்டும் சேனை முதலியார் புறப்பாடு நடைபெறுகிறதே அன்றி, ஆகமம் சுட்டியவாறு விழாக்காலங்களில் தினப்படி சேனை முதலியார் புறப்பாடு இல்லை.

தசமூர்த்தி புறப்பாடு ஆனதும், பெருமாளைக் காணும் ஆர்வத்துடன் மக்கள் திருவீதியில் குழுமியிருப்பர். தசமூர்த்தி திருவீதி வந்ததும், பெருமாள் அத்திருவீதியில் புறப்பாடு காண்பார். முதல் திருநாள் அன்றும், ஏழாம் திருநாளன்றும் பெருமாள் உபய நாச்சிமார்களுடன் திருச்சி என்னும் கேடயத்தில் புறப்பாடு காண்பார். மற்ற நாட்களில் பெருமாள் மட்டும் நாள்தோறும் குறிப்பிட்ட வாகனத்தில் எழுந்தருளுவார்.

பெருமாள் மூலத்தானத்தினின்று புறப்பாடு காணும்போது நடைபெறும் வழக்கமான புறப்பாட்டு நெறிமுறைகள் நிகழ்வுற்று, பெருமாளைத் தம் திருத்தோளில் திருப்பாதம் தாங்குவார் எழுந்தருளப் பண்ணியவுடன் எக்காள வாத்தியம் வாசிக்கப்படும். இராசமகேந்திரன் திருவீதி எழுந்தருளித் தெற்கு முகமாகத் திரும்பியவுடன் அனைத்து வாத்தியமும் வாசிக்கப்படும். நாழிகேட்டான் வாசல் வந்தவுடன் வேத பாராயண குழுவினர் வேதம் தொடங்கி சேவித்துக் கொண்டு, பெருமாளின் பின்னே வருவார்கள். பெருமாள் ஆரியபட்டாள் வாசல் வந்ததும் விராலிப் பந்தம், தீவட்டி தீபவர்த்தி உடன் வரும். கருட மண்டபம் நான்முகன் கோபுரம் வந்ததும் பெருமாள் வலம் வரும் வீதியின் மேற்குப் புறம் திரும்பி நிற்பார். உடன் இயல் குழுவினர் (அத்யாபகர்கள் என்னும் நாலாயிரம் சேவிப்பவர்கள்) ஸ்ரீசைலேசதயா பாத்திரம் என்று 'தனியன்' சேவித்து, இயல் தொடங்கி பெருமாளின் முன்னே செல்வர். பூச்சக்கர வெண்குடைகள் நான்கும் முன்னே

செல்ல, நகரா இசைக்கருவி ஒலிக்க, பெருமாளின் பரிவாரம் உடன் வர, நாழி(கை)கேட்டான் வாசல் வழியாகக் கோயிலுள் நுழைந்து, நாலு கால் மண்டபத்தில் அமைந்துள்ள 'திருவந்திக் காப்பு' மண்டபத்தில் நிற்பார். அங்கு பெருமாள், 'திருவீதி உலா' கண்டதன் பொருட்டு வடைபருப்பு, பானகம் அமுது செய்விக்கப்படும். பெருமாளுக்குத் திருவந்திக் காப்பும் நடைபெறும். அர்ச்சகர் வெள்ளிக் குடத்தில் ஒரு பெரிய திரியில் தீயிட்டு, அதைப் பெருமாள் திருமுகத்தை நோக்கி உயர்த்திக் கண்ணேறு கழிப்பார். அனைத்து இசைக் கருவிகளுடன் கார்த்திகை கோபுரம் எழுந்தருளியவுடன், இயல் கோஷ்டிக்குக் கருட மண்டபத்தில் தீர்த்தமும் ஸ்ரீசடகோபமும் சாதிக்கப்படும். திருவீதியில் தொடங்கிய இயல், இவ்விடத்தில் சாற்றுமுறை செய்யப்படும்.

மேலைப்படி வழியாக அழகிய மணவாளன் மண்டபத்திற்குள் அனைத்து இசைக்கருவி முழக்கத்துடன் பெருமாள் எழுந்தருளுவார் பெருமாளுக்கு, திருவீதி உலாவின் பொருட்டுத் திருமஞ்சனம் நடைபெறும். பின் அலங்காரம் செய்து, திருவாரா தனம் நடந்து வேத விண்ணப்பம் நடைபெறும்.

திருநாள்கார அர்ச்சகர் ஐந்து குண்டங்களில் ஓமம் செய்வித்ததும், அனைத்து இசைக்கருவி முழக்கத்துடன் பெருமாள் கண்ணாடி அறையைச் சென்றடைவார்.

யாகசாலைக்குத் 'திருவரங்க மாளிகையார்' என்னும் யாகபேரர் எழுந்தருளி, விழா முடியும் நாள்வரை அங்கேயே வீற்றிருப்பார்.

மூலவர் பெரிய பெருமாளுக்குக் கொடியேற்றப் பொங்கல் அமுது செய்யப்பட்டு, முறைப்படி வழங்கப்பெறும். பின்னர் நாள் வழக்கப்படி பெரிய பெருமாளுக்கு அரவணை, பாலமுது நடைபெறும்.

இவ்விதமாகப் பெருவிழாவின் முதல்நாள் நிகழ்ச்சி நிகழ்வுறும். இவ்விழாவில் உற்சவப் பெருமாள் கண்ணாடி அறையில்

இருப்பதும், யாகசாலையில் யாக பேரராகிய திருவரங்க மாளிகையார் வீற்றிருப்பதும் குறிப்பிடத்தக்கன.

**இரண்டாம் நாள் :** பெருமாள் விடியற்பொழுதில் கண்ணாடி அறையை விட்டுப் புறப்பட்டு வாகன மண்டபம் செல்வார். அங்கிருந்து உரிய வாகனத்தில் எழுந்தருளிக் காலைத் திருவீதி உலாச் செல்வார். கதிரவன் உதயத்திற்கு முன்னதாகவே அனைத்தும் முதல்நாள் திருவீதிப் புறப்பாட்டின் முன் நடந்தது போன்றே நடந்தேறும்.

பின்பு காலையில் பல்லக்கில் புறப்பட்டு, விழா நாள்களுக்கு உரிய மண்டபங்களுக்கு எழுந்தருளுவார். இம்மண்டபங்கள் திருவரங்கத்தைச் சுற்றியுள்ள ஊர்களில் அமைந்திருக்கும். மண்டபத்தில் திருவாராதனம், தளிகையமுது செய்வித்தல், உபயம் செய்வோர் வழிபாடு போன்றவைகள் நடந்தேறும். சில வாகனங்கள் மண்டபத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டு அவ்வாகனத்தில் பெருமாள் எழுந்தருளுவார். அன்றி கோயிலில் உள்ள வாகனத்திலே எழுந் தருளுவார். மாலை நேரத்தில் திருவீதி உலாக் காண்பார். திருவீதி வலம் வந்து யாத்திரை செய்தமைக்காகவும், வாகன ஆரோஹணத் திற்காகவும் கண்ணாடி அறையில் தனிமையில் திருமஞ்சனம் காண்பார்.

இவ்விழாக் காலங்களில் தினம் நடைபெற வேண்டிய ஆறு கால நிவேதனமும் உரிய நேரங்களில் மூலவர் பெரிய பெருமாளுக்கு நடைபெறும்.

இரண்டாம் திருநாள் முதல் ஐந்தாம் திருநாள் வரை வாகனங்களும் செல்லும் மண்டபங்களும் வேறுபடும். இவை தவிர வேறு சிறப்புக்கள் ஏதுமில்லை.

**ஆறாம் திருநாள் :** இந்நாள் யானை வாகனத்திருநாளாக நடை பெறும். பெருமாள் ஆறாம் திருநாளில் மண்டபத்திற்கு எழுந்தருளி, மாலை நேரத்தில் கோயில் வந்து யானை வாகன மண்டபத்தின் உயர் மேடையில் வீற்றிருப்பார். அங்கு பெருமாளுக்கு இளநீர் அமுது செய்விக்கப்படும்.

யானை வாகனத்தில் பெருமாள் எழுந்தருளச் செய்யப்பட்ட பின்னர், திருநாளுக்கு உரிய அர்ச்சகர் பெருமாளுக்குப் பின்னால் அமர்ந்தவாறு அவரைப் (பெருமாளைப்) பிடித்துக் கொண்டு இருப்பார். அவருக்குப் பின் அன்றைய முறைக்கார அர்ச்சகர் அமர்ந்து பெருமாளுக்கு முத்துக்குடை பிடித்துக் கொண்டிருப்பார். யானையின் பீடத்தில் உள்ளூரார், ஊழியக்காரர் இருவரும் இருபுறத்தும் நின்றவாறு பெருமாளுக்குச் சாமரம், திருஆலவட்டம் வீசியவாறு நிற்பர்

பெருமாளுக்கு முன் ஒரு அர்ச்சகர் ஸ்ரீசடகோபத்தையும், மற்றொரு அர்ச்சகர் செங்கோலையும் ஏந்தியவாறு நடந்து செல்வர்.

மற்ற வாகனங்கள் போல, யானை வாகனத்தில் இவற்றைப பெருமாளோடு உடன் வைக்க முடியாமையால் பெருமாளின் செங்கோலையும், ஸ்ரீசடகோபத்தையும் கையில் ஏந்தியவாறு எடுத்துச் செல்கின்றனர். 'செங்கோலுடைய திருவரங்கச் செல்வனார்' என்பார் நாச்சியார்.[42]

மற்ற திருநாள்களைப் போன்றே பெருமாள் திருவீதி புறப்பாடு கண்டு கோயில் வந்து வாகனம் விட்டிறங்கி, உள் ஆண்டாள் சன்னிதியில் ஆண்டாளுடன் மாலை மாற்றிக் கொண்டு கண்ணாடி அறைக்குச் செல்வார்.

**ஏழாம் திருநாள் :** இன்று காலைப் புறப்பாடும், திருவீதி எழுந்தருளு வதும் நடைபெறுவதில்லை. திருநாள்கார அர்ச்சகர், பெருமாள் மற்றும் உபயநாச்சிமார்களுக்கு நீராட்டல் செய்விப்பார். ஜலக்கிரீடைக்கு ஏற்பட்ட சாத்துப்படி (சந்தனம்) பச்சைக் கற்பூரம், குங்குமப் பூ போன்றவைகளைச் சேர்த்துப் பெரிய கொப்பரையில் (பாத்திரம்) இருக்கும் தீர்த்தத்தில் (நீரில்) அவைகளைக் கலந்து ஸ்ரீ சடகோபத் திற்குத் திருமஞ்சனம் செய்விப்பார்.

சந்தன மண்டபத்தின் முன்புறத்தில் கேடயத்தில் பெருமாளும் உபயநாச்சிமார்களும் எழுந்தருளி சூர்ணாபிடேகம் கண்டருளுவர். சூர்ணாபிடேகமாவது, பெருமாள் உபயநாச்சிமார்கள் திருமேனியில்

சூர்ணத்தை தூவுதல். முறைப்படி புனித நீர் வழங்கப்பெறும். பெருமாள் சந்தன மண்டபத்தினின்று உபய நாச்சிமாருடன் மாலை நேரத்தில் புறப்பாடு கண்டு, கொட்டாரம் அடைந்து அங்கு நெல் அளவு காண்பார். நெல் அளவு என்பது பெருமாள் திருமுன் கொட்டப் பட்டுள்ள நெல்லைக் கோயில் முறைக்காரன் 'திருவரங்கம் ஒன்று, பெரியகோயில் இரண்டு, மூன்று' என்று அளவு சொல்லித் 'தங்க மரக்கால்' கொண்டு அளப்பதாகும்.

பின்னர் நாழி(கை) கேட்டான் வாசல் வழியாக வெளி வந்து பூந்தேரில் திருவீதி உலா வந்து, கோயிலுள் எழுந்தருளுவார். ஐந்தாம் திருச்சுற்றில் ஆழ்வான் (சக்கரத்தாழ்வார்) திருச்சுற்று வழியாகத் தாயார்கோயில் எழுந்தருளி அங்கே கொலு மண்டபத்தில் தாயார் நடத்தி வைக்கும் திருமஞ்சனத்தை அனுபவித்துத் தளிகை அமுது செய்து, பரிசனங்களுக்கு வழங்கிப் பெருமாள் உபயநாச்சிமார் களுடன் பெரியகோயில் எழுந்தருளிக் கண்ணாடி அறையில் இருப்பார்.

**எட்டாம் திருநாள் :** இந்நாளில் பெருமாள் பல்லக்கில்எழுந்தருளி, காலைப் புறப்பாடு கண்டு திருவீதி உலா வருவார்.

இரவு குதிரை வாகனம், பெருமாள் அரங்க விலாச மண்டபத்திலிருந்து குதிரை வாகனத்தில் புறப்பட்டு கண்டு, திருவீதி வலம் வருவார். பெருமாள் எழுந்தருளும் தேரின் முன்னர் வையாளி நடைபெறும். இவ்வையாளி என்பது பெருமாள் குதிரையில் அமர்ந்த வாறு வேகமாக இங்கும் அங்கும், குறுக்குநெடுக்காக ஓடி வருவதாகும். மேலும் கோணலாகவும், சுற்றிச்சுற்றி ஓடுவதும் ஆடுவதுமாகும். மறுநாள் தேர்த்திருநாள் நடப்பதால் பெருமாள் தேரைக் கண்டதும் மகிழ்ச்சியின் காரணமாக ஓடி விளையாடுவதாக நம்பிக்கை.

**ஒன்பதாம் திருநாள் :** தேர்த்திருநாள் பொருட்டு குறித்திருக்கும் நேரத்திற்கு முன்னதாக விடியற்பொழுதில் பெருமாள் புறப்பட்டு, நல்ல நேரத்தில் தேரில் எழுந்தருளுவார். தேர் ஏறுவதற்கும், செல்வதற்கும் தக்கவாறு குறை நீக்கத் தானம் செய்த பிறகு, தேர் இழுக்கப்படும். தேர் நிலைக்கு வந்து நின்றவுடன், அரையர் எழுந்து தேரில் திருமொழி

சாற்றுமுறை செய்வார். தலத்தார்களுக்குத் தேரில் சிறப்புக்கள் நடக்கும். கீழே இருக்கும் இயல் குழுவினர்க்கு சாற்றுப்படியும் தீர்த்த மும் வழங்கப்பெறும்.

தசமூர்த்தி, திருவீதி எழுந்தருளியதும், பெருமாள் தேரில் இருந்தபடியே தேர்த்தட்டி, தோசை முதலியன அமுது செய்து புறப்படுவார்.

**பத்தாம் திருநாள் :** இப்பெரிய கோயிலில் சப்தாவரணம் என்னும் பெயரில் இவ்விழா நடைபெறும். அன்றைய நாளில் கோயிலின் ஏழு திருச்சுற்றுகளையும் பெருமாள் சுற்றி வந்து மூலத்தானம் அடைவார். தற்பொழுது இது நடைமுறையில் இல்லை.

அன்று மாலை சந்தன மண்டபத்தில் பெருமாள் திருமஞ்சனம் கண்டு தோளுக்கினியானில் புறப்பாடு கண்டு, சப்பரத்தில் திருவீதி எழுந்தருளுவார். நேரிலேயே திருமொழிச் சாற்றுமுறை நடந்துவிட்ட படியால் இன்று திருவீதியில் இராமானுச நூற்றந்தாதி, பெருமாளுக்கு முன் திருவீதியில் இயல் குழுவினரால் சேவிக்கப்படும். இன்று மேள தாளங்கள் இல்லாமல் இராமானுச நூற்றந்தாதியைப் பெருமாள் திருச்செவிக்குச் சாற்றுவர்.

திருவீதி எழுந்தருளியதும், பெருமாள் ஆழ்வான் திருச்சுற்று வழியாகத் தாயார்கோயில் வந்தடைவார். தாயார் செய்து வைக்கும திருவந்திக் காப்பைப் பெருமாள் ஏற்றுக் கொள்வார். பின் ஆயிரக்கால் மண்டபம் வழியாக உடையவர் (இராமானுசர்) சன்னிதிக்கு எழுந்தருளி, அவருக்கு அருள் வழங்கி அவர் தரும் இளநீரை அமுது செய்து அதைக் கண் திறந்து கொடுக்கும் திருச்சுற்றுக்காரருக்குச் சிறப்பு செய்வார். உடையவர் பெருமாள் அருகில் எழுந்தருளிப் பெருமாளை வழியனுப்பும் முகத்தான் பெருமாளுடன் சிறிது தொலைவு நடந்து உடன் வருவார்.

சப்தாவரணத்தின்போது இராமானுச நூற்றந்தாதியைச் சேவிப்பது இராமானுசர் காலத்திற்குப் பின் ஏற்பட்ட நிகழ்ச்சியாகும்.

கோயில் ஒழுகு என்ற நூல் 'ஒரு சப்தாவரணத்திலே, உடையவரைத் தம்முடனே கூட வர வேண்டாம் என்று பெருமாள் நியமித்தருளி, திருவீதியிலே சகல வாத்தியங்களையும் நிறுத்தி, நூற்றந்தாதியை ஸ்ரீ வைஷ்ணவர்கள் அனுசந்திக்கக் கேட்டருளிப் பெரு மகிழ்வார். அது முதலாகப் பெருமாள் நியமனத்தாலே பெரிய சன்னிதியிலே இயற்பா அனுசந்தித்தவுடனே, நூற்றந்தாதியை வரிசை கேட்டருளுகிறார்" எனக் கூறுகின்றது.[43]

மூன்றாம் திருச்சுற்றில் உள்ள கொடிக் கம்பத்தருகில் பெருமாள் சப்தாவரணத்தன்று, விழா முடிவுற்ற நாளில் படிப்பு என்னும் திருப்பணிப்பு மாலையைக் கேட்டவாறு மூலத்தானம் சென்றடைவார். இப்படிப்பு என்பது வைணவப் பெருமக்களின் ஓராண்வழிவந்த வழி முறைகளுடன், இக்கோயிலுக்கு விழா எடுத்தும், நிதி உதவியும் போற்றிய அரசர் பெருமக்களை வாழ்த்தியமைந்த சொற்கோவை யாகும். பெருமாள், தாயார் ஒவ்வொருவருடைய திருவிழாக்களிலும் கடைசி நாளன்று இது நிகழ்வுறும்.

ஆயனார் வம்சத்தவர்களும், திருத்தாழ்வரை தாசர் குடும்பத் தினரும் இப்படிப்பினைப் பெருமாள் முன் நிகழ்த்துவர். ஆயின் இன்றைய நடைமுறையில் இந்நிகழ்ச்சி நடைபெறுவதில்லை. காரணம் அக்குடும்பத்தினர் இம்முறையைத் துறந்து உள்ளனர்.

யாகசாலையில் இவ்விழாவின்போது வீற்றிருந்த திருவரங்க மாளிகையார் (யாகபேரர்) மூலத்தானம் எழுந்தருளுவார். பின்பு கொடியிறக்கம் நடந்தேறி காப்பு நாண்கள் கழற்றப்படும்.

## விடையாற்றி

விழா நிறைவெய்தியதும், பதினோராம் நாள் விடையாற்றி என்னும் நிகழ்ச்சி நடைபெறும். பெருமாள் அன்று இரவு ஆளும் பல்லக்கில் புறப்பாடுகண்டு திருவீதி வலம் வந்து உள்ளே எழுந் தருளுவார்.

இவ்வாறு இக்கோயிலில் பெருவிழாக்கள், ஆகமம் தழுவிய நிலையிலும், கோயில் பழக்க வழக்கங்களை ஒட்டியும் நடந்தேறும்.

திருமுளை அன்று நடைபெறும் மண் எடுத்தல் என்னும் சடங்கு மூன்று பெருவிழாக்கள், மாசித் திங்களில் நடைபெறும் தெப்பத் திருநாள். ஆவணித் திங்கள் நடைபெறும் திருப்பவித்திரத் திருநாள் ஆக இவ்வைந்து திருநாள்களுக்கு மட்டுமே உரியதாகும்.

பங்குனித் திருநாள் திருமுளைக்கு மட்டும் சேனை முதலியார் மற்றும் அனுமனுடன் வீடணன் எழுந்தருளுவார். பங்குனித் திருநாளை, வீடணன் இக்கோயிலில் நடத்தியமையால் அவரையும் பங்குனித் திருமுளை அன்று எழுந்தருளச் செய்வது வழக்கம். மற்றத் திருமுளைகளில் சேனை முதலியார், அனுமன் என்னும் இருவர் மட்டுமே எழுந்தருளுவர்.

பிரம்மோத்சவம் எனப்படும் பெருவிழா, இக்கோயிலில் பங்குனி, தை, சித்திரைத் திங்களில் நடைபெறுகின்றன. பங்குனித் திங்கள் நடைபெறும் விழா 'ஆதி பிரம்மோத்சவம்' என்னும் பெயரில் அழைக்கப்படும். இவ்விழாவை சத்திய உலகத்தில் பிரமன் இப்பெருமாளுக்கு நடத்தினார் என்று புராணம் கூறும். மேலும் பெருமாள் அயோத்தியினின்று வீடணனால் இங்குக் கொண்டு வரப்பட்ட பொழுதும் இவ்விழாவை, வீடணன் முன் தர்மவர்மா சோழன் நடத்தினான் என்றும் தெரிகிறது.

## 5:4 பங்குனித் திருநாள்

முதல் திருநாள் வழக்கம்போல் நடந்தேறும். இரண்டாம் திருநாள் கோயிலுள் அகளங்கன் திருச்சுற்றில் அமைந்துள்ள கருட மண்டபத்தை ஆஸ்தான மண்டபமாகக் கொண்டு பெருமாள் எழுந்தருளுவார். அன்றைய தினம் முடி திருத்தும் தொழிலாளர் ஒருவர் பெருமாளின் திருமுடி திருத்தி அழகுபடுத்துவதாக ஒரு சடங்கு நடைபெறுகிறது. பெருமாள் முன் கண்ணாடி ஒன்றைக் காட்டி அவர்

அழகினையும், முடியினையும் சீர்படுத்துவது போன்ற நிகழ்ச்சி நடைபெறுகிறது. கோயில் திருமுறைக்கார முடிதிருத்தும் தொழிலாளர் இப்பணியினை மேற்கொள்கின்றார். இன்று திருவீதி புறப்பாடில்லை. இன்று இரவே பெருமாள் ஜீயபுரம் புறப்படுகின்றார்.

**மூன்றாம் திருநாள்** : பெருமாள் ஜீயபுரம் சென்று அம்மையார் தண்ணீர் பந்தல் ஆஸ்தான மண்டபம் செல்கின்றார்.

நம்பெருமாள் கண்ணாடி அறையினின்று பல்லக்கில் இரண்டாம் திருநாள் இரவு புறப்பட்டு மேலூர், திருவாசி, சிலையாத்தி, கிளியநல்லூர் என்னும் சிற்றூர்கள் வழியாக மூன்றாம் திருநாள் காலை ஜீயபுரம் ஆஸ்தான மண்டபம் சென்றடைவார்.

செல்லும் வழியில், அவ்வூர் மக்கள் படைக்கும் வழிநடை உபயங்களைப் பெருமாள் ஏற்றருளுவார். பின்னர் மேலூர் விருட்ச மண்டபத்தில் புன்னாகத் தீர்த்தத்தில் தீர்த்தமாடுகிறார். ஜீயபுரத்தில் பலாச தீர்த்தத்தில் தீர்த்தமாடுகிறார்.

ஜீயபுரத்துக்கு எழுந்தருளுவதைக் கல்வெட்டுகளும் குறிக்கும்.[44] திவ்யசூரி சரிதமும்,[45] இலட்சுமி காவியமும்,[46] ஸ்ரீரங்கராஜ சரிதாபாணமும்[47] மூன்றாம் திருநாளின்போது பெருமாள் ஜீயபுரம் எழுந்தருள்வதைக் குறிக்கக் காண்கின்றோம்.

ஜீயபுரத்தில் "அம்மையார் தண்ணீர்ப்பந்தல்" பற்றி, ஒரு மரபினை இவ்வூரார் கூறுகின்றனர். ஒரு வயதான பெண்மணி, தன் ஒரே மகனுடன் வாழ்ந்து வருகிறார். ஒருநாள் அம்மகன் 'தன் தலைமுடியைத் திருத்திக்கெண்டு வருவதாகச்' சொல்லிச் செல்கின்றான். சென்ற அவன் நேரமாகியும் வரவில்லை. அவன் வரவை எதிர்பார்த்து அவனுக்காக அவ்வம்மையார் தயிர் அன்னம் (தயிர் சாதத்தை) செய்து வைத்துக் காத்துக் கொண்டிருக்கிறார். பெருமாளே அம் மைந்தன் உருவில் அத் தாயிடம் செல்கின்றார். முடி திருத்தித் தன்னை அழகுபடுத்தியவாறு அவளிடம் செல்லும் பெருமாளை, அவள் தன் மகனின் உருவத்தில் கண்டு மகிழ்கிறார். அதன்பின்

பெருமாள் மறைந்து விடுகிறார். இவ்வாறு ஒரு கதையினைக் கூறுகின்றனர்.[48] இன்றும் காலையில், அம்மண்டபம் எழுந்தவுடன் பெருமாள் தயிர் அன்னம் அமுது செய்கிறார்.

ஆண்டிற்கு ஒரு நாள் பெருமாள் அங்கு செல்வதாகவும் அவள் அமைத்திருக்கும் தண்ணீர்ப்பந்தல் மண்டபத்தில் எழுந்தருளுவதற் காகவும் இந்நிகழ்ச்சி அமைவுறும். அது குறித்தே முதல் நாள் அவர் முடி திருத்தி அழகுபடுத்தி அங்கு செல்வதாக ஒரு பழக்கம் ஏற்பட்டது

உடையவர் என்று வழங்கப்பெறும் இராமானுசரே இக் கோயிலின் முதல் ஜீயர் ஆவார். ஜீயபுரம் அவர் பெயரால் அமைந்த ஊர் என்பர். உடையவருக்கும் அவ்வூருக்கும் உள்ள தொடர்பு யாது என்னும் குறிப்பு நமக்குக் கிட்டவில்லை. எனினும் இன்றும் இராமானுசர் கோயில் (உடையவர் சன்னிதி) திருவாராதனக்காரா தங்கள் உபயமாக இத்திருவிழாவை நடத்திச் சேவை மரியாதை பெறுவதிலிருந்து இராமானுசருக்கும் இவ்விழாவிற்கும் தொடர் பிருத்தல் வேண்டும் என்பதை உய்த்துணர முடிகிறது.

## நான்காம் திருநாள்

நான்காம் திருநாள் முறைப்படி நடைபெறும்.

## ஐந்தாம் திருநாள்

இரவில் பெருமாள் கோயிலிலிருந்து புறப்பட்டு காவிரிக் கரையில் இறங்கி, வழிநடை உபயம் கண்டு, ஆறாம் நாள் காலை உறையூர் சென்றடைவார்.

## ஆறாம் திருநாள்

பெருமாள் இன்றைய தினம் தங்கப் பல்லக்கில் புறப்பட்டு தனது இராசதானியான, சோழ நாட்டின் தலைநகராம் உறையூரை அடைவார். உறையூர் (நிசுளாபுரி) மன்னன் திருமகளான கமலவல்லித் தாயாரை அவர் திருமணம் செய்து கொண்டார் என்றும் கூறப்படுகிறது.

உறையூர் கமலவல்லித் தாயார் பற்றிய சரித்திரம் : உறையூர் நாச்சியாரைப் பற்றி இதுவரை கிடைத்த ஆதாரங்களாகிய

1. உறையூர் கமலவல்லித் தாயார் சன்னிதி வைபவம்.
   எஸ். நரசிம்ம அய்யங்கார் உத்தமநம்பி திருமாளிகை.
2. உறையூர் சரித்திரம் - திருச்சிராப்பள்ளி கெசட்டியர்.
3. உறையூர் நாச்சியாரும் பங்குனித் திருநாளும் -
   திருவரங்க ஆலய நூலக வெளியீடு.
4. திவ்யசூரி சரிதம் - கருடவாகன பண்டிதர்.
5. லட்சுமி காவியமும் பங்குனி உததிரமும் -
   உத்தமநம்பி திருமலாசாரியர்.

இவை ஐந்தும் பெருமாளுடைய பங்குனி உத்திர விழாவில் அவர் உறையூர் நாச்சியாரைத் திருமணம் புரிந்து கொண்ட செய்திகளைச் சொல்கின்றன.

## உறையூர் கமலவல்லித் தாயார் சன்னிதி வைபவம்

நிசுளாபுரி மகாத்மியம்
திவ்யஸூரி சரிதம்
கோயில் ஒழுகு
இலட்சுமி காவியம்

இவ்வைந்து நூல்களுள் நிசுளாபுரி மகாத்மியம், காகிதப் பிரதி ஒன்றுதான் கிடைத்துள்ளது. சென்னை, தஞ்சை அரசு நூலகங்களில் இது கிடைக்கவில்லை. மூன்று அத்யாயமாயுள்ள இது பரிதாபி ஆண்டில் ஸ்ரீரங்கம் கீதாபாஷ்யம் ரங்காச்சாரியரால் தமிழில் எழுதி அச்சிடப்பட்டிருக்கிறது. இதிலுள்ளவாறு, உறையூர் நாச்சியார் சரித்திரம் பின்வருமாறு.

“பிருகு மஹரிஷியானவர் சிவன், திருமால், பிரமன் என்ற மூவரில் யார் பெரியவர் என்று அறிவதற்காக மூவரிடமும் சென்றார். சிவன் அந்த முனிவர்க்கு காட்சி கொடுக்கவில்லை. அவரால்

பிரமனையும் காண இயலவில்லை. திருமாலைக் காணச் சென்றார். ஏகாந்தத்திலிருந்த இலக்குமி, பிருகுவை அப்பால் செல்லச் சொன்னாள். அதுகேட்ட பிருகு கோபித்துக் கெண்டு, இலக்குமியை நீ மலைவாழ் இனத்தில் பிறப்பாய் என்று சபித்தார்.

திருமால் இலக்குமியைத் தேற்றி 'நிசுளாபுரியை ஆளும் தர்மவர்மாவின் மனைவி நிசுளையின் வயிற்றில் நீ குழந்தையாகப் பிறக்க, நான் அரங்கநாதனாக வந்து உன்னைத் திருமணம் புரிவேன்' என்றார்.[49]

கோயில் ஒழுகு என்ற நூலில் 'நந்த சோழன் கைங்கர்யம்' என்னும் பகுதியில் தர்மவர்மாவின் வழி வந்தவனான நந்த சோழனுக்குக் கமலவல்லித் தாயார் மகளாகக் கிடைத்தார் என்று கூறும்.[50]

திவ்யஸூரி சரிதம் என்ற நூலில் இப்பெண் தர்மவர்மா விற்குக கிடைத்ததாகக் கூறுகிறது.[51] மற்றவை கோயில் ஒழுகில் கூறியவாறே.

இலட்சுமி காவியம் தர்மவர்மாவின் வழிவந்த நிசுளாபுரி அரசன் கரிகால் சோழன் சந்திர வம்சத்தில் பிறந்த நர்மதை என்னும் மனைவியோடு மக்கள் பேறு வேண்டி ஸ்ரீ இலட்சுமியை நோக்கி நீண்ட நாள் தவம் செய்தான். இலட்சுமி அவன் முன் தோன்றி, நானே உனக்கு மகளாகப் பிறக்கிறேன் என்று கூறி அவ்வாறே பிறந்தாள். ஒரு நாள் அவ்விலட்சுமி காவிரியில் நீராடுங்காலை, ஜீயபுரத்துக்கு எழுந்தருளும் பெருமாள் அவளைக் கண்டு, மனம் விரும்பினார். பின்னர் நடந்த சுயம்வரத்திலும் அவள் அரங்கநாதனைத் திருமணம் செய்து கொண்டார் என்று கூறுகிறது.

உறையூர் கமலவல்லித் தாயார் சன்னிதி வைபவம் என்னும் நூல் 'நந்தசோழன் என்னும் உறையூர்ச் சோழ மன்னன் மகப்பேறு வேண்டித் தவம் மேற்கொள்ள, பெருமாள் நியமனப்படி, தாமரைப் பூவில் பெண் குழந்தை அவதரிக்கவே, அக்குழந்தையை எடுத்து வளர்த்து வந்தான்.

ஒருநாள் தோழிகளுடன் அவள் பூக்கொய்ய நந்தவனம் சென்றிருந்தபோது, ஸ்ரீரங்கநாதன் குதிரை மீதேறிப் பலாசத் தீர்த்தத்துக்கு (ஜீயபுரம்) வேட்டையாடச் சென்றார். அப்பொழுது மன்மதனைக் காட்டிலும் அழகிய தோற்றத்தையுடைய அரங்க நாதனைக் கண்டு தன் நிறையழிந்தாா். கமலவல்லியின் நிறை யழிவைக் கண்ட நந்தசோழன், திருமணத்திற்கு ஏற்பாடு செய்தான்.

திருமணம் செய்து, கமலவல்லியைக் கோயிலுக்கு அனுப்பும் போது பெண் சீதனமாக மிகப்பல திருவாபரணங்களையும், திரவியங்களையும் கொடுத்தான். முந்நூற்றுப் பதின்கலம் தங்க அமுதுப்படியும், அதற்கு வேண்டிய பருப்பமுதும், கொம்பஞ்சுக் கறியமுதும் அவைகளுக்கு வேண்டிய சம்பாரங்களும் தங்கத்தினால் செய்து கொடுத்தான். இவற்றுடன், கமலவல்லியின் பணிவிடைக்காக நூறு பணிப்பெண்களையும் நந்தசோழன் அனுப்பினான்.

கமலவல்லி கோயிலின் திருமணத் தூணுக்குள் புகுந்தவுடன் அரங்கநாதன் (பெருமாள்) திருவடிகளில் ஐக்கியமாகி மறைந்து போனாள். கமலவல்லியுடன் வந்த பணிப்பெண்கள் வழி வந்தோர் ஸ்ரீரங்கம் கோவிலில் உறையூர் வல்லிக் கூட்டத்தார் என்னும் பெயருடன் திருப்பணி செய்து வருபவராயினர்[52] என்று கூறுகிறது.

கோயிலொழுகும், திவ்யஸூரி சரிதமும், கமலவல்லிக்குத் திருமணம் நடந்ததாகக் குறிக்கின்றன. இலட்சுமி காவியம் மட்டும் சுயம்வரம் மூலம் திருமணம் நடந்ததாகக் குறிக்கும்.

இவ்வாறு உறையூர் கமலவல்லித் தாயாரைப் பற்றிய பல தரப்பட்ட செய்திகள் உள்ளன. பங்குனித் திருநாள், ஒரு காலத்தில் இவ்வுறையூரில் நடந்ததாக இலக்கியங்கள் கூறுகின்றன.[53] இப்பொழுது பங்குனித் திருநாள் 6ஆம் நாள் அன்று பெருமாளும், கமலவல்லித் தாயாரும் உறையூர் கோயிலில் ஒரே பீடத்தில் திருக்கலியாணத் திருக்கோலத்தில் வீற்றிருக்கின்றனர்.

உறையூர் நாச்சியார் மண்டபத்தில் பெருமாள் எழுந்தருளி, சன்னிதித் துவாரத்தில் பெருமாள் பல்லக்கிலிருந்தபடியே நாச்சியாருக்கு எதிர் முகமாய்த் திரும்பி நல்ல வஸ்திரம், பரளை, குங்குமப்பூ, சீரசம், கஸ்தூரி முதலிய திருவாபரணங்களால் தன்னை அழகு படுத்திக்கொண்டு, தாம் வரும்போது சாரத்தில் கொண்டிருந்த மாலை, சந்தனம் முதலியவற்றை நாச்சியாருக்கு அணிவித்து அவளை மகிழ்விப்பார். இப்படிப் பெருமாள் நாச்சியாருக்கு உரியராய் ஆன பிறகு, பெருமாள் உறவு குறித்து அமுது செய்வார். பின்பு தாயாரும் கோயிலிலிருந்து தனியாகப் புறப்பட்டு பெருமாளுடன் பக்கலில் எழுந்தருளுவார். திருவாராதனம், அமுது படைத்தல், தீர்த்த விநியோகம் முதலியன நடந்தேறும். இரவு நெடு நேரம் வரையில் பெருமாள் நாச்சியாரோடு எழுந்தருளி அனைவருக்கும் சேவை சாதித்து, நாச்சியாரை உள்ளே அனுப்பித் தான் மட்டும் திருவரங்கம் செல்லப் புறப்பாடு கண்டு, ஏழாம் திருநாள் உதயத்தில் திருவரங்கம் அடையவளஞ்சான் திருவீதியிலிலுள்ள வெளியாண்டாளோடு மாலை மாற்றிக் கோயிலினுள் எழுந்தருளுவார்.

ஏழாம் திருநாளிலும், எட்டாம் திருநாளிலும பிரும்மோத்சவத்தில் கண்டவாறு நிகழ்வுறும். ஒன்பதாம் திருநாள் திருஊடல திரு நாளாக நடைபெறும். பங்குனி உத்திரம் திருவரங்க நாச்சியாரின் திருநட்சத்திரமாகும். அன்று பெருமாள் நாச்சியாருடன் சேர்ந்து இருப்பதற்காக அங்கு எழுந்தருளுகிறார். உறையூர் நாச்சியாரிடம் பெருமாள் சென்று வந்ததால் தாயார் ஊடல் கொள்வதாக இப்பிரணய கலக உத்சவம் இங்கு நடைபெறுகிறது.

உறையூர் நாச்சியாரிடம் கொடுத்த கணையாழியை தேடுவதற காகப் பெருமாள் சித்திரை வீதி, உள் திருவீதிகளைச் சுற்றி வருவார் பெருமாள் திருவீதிகளில் மக்களிடம் யாசிப்பார். பின்பு தாயார் சன்னிதி எழுந்தருளுவார். தாயார், பெருமாள் உறையூருக்குச் சென்று உறையூர் நாச்சியாரைக் கண்டு வந்த காரணம் பற்றி ஊடல் கொண்டு பெருமாளைக் கோயிலுள் விட மறுத்து, தனது கோயிலின் கதவினைச் சார்த்திக் கொள்வார். பெருமாளுக்காக அரையரும், தாயாருக்காகத்

தாயார் சன்னிதிப் பண்டாரியும், மாறி மாறித் தங்கள் வாதங்களை எடுத்து வைப்பர். அங்கு நம்மாழ்வார் எழுந்தருளிப் பெருமாளுக்காகத் தாயாரிடம் தூது சென்று சமாதானம் செய்து வைப்பார்.

சங்க இலக்கியத்தில் பாணன், பாங்கி தூது இடம் பெறுதல் போல இங்கு நடைபெறுவது நோக்கத்தக்கது. தலைவியின் ஊடல் தீர்க்கத் தலைவன் தூது அனுப்புவதைக் காண்கின்றோம். சிவபெருமான், நம்பியாரூரர் பொருட்டுப் பரவை மனைக்குத் தூது சென்றமை பெரியபுராணத்தால் அறியப்படும்.

தாயார், தன் ஊடல் தீர்ந்துப் பெருமாளைக் கோயிலுள் எழுந்தருள அனுமதிப்பார். தன் மூலத்தானத்திலிருந்து தாயார் புறப்பட்டுப் பெருமாளைத் தன் கோயில் புற வாசலில் நின்று வரவேற்பார்.

பெருமாளின் மாலை மற்றும் பொருள்களை ஊழியக்காரர்கள் தம் தலையில் சுமந்தவாறு தாயாரிடம் எடுத்துச் செல்வர்.

உறையூர் நாச்சியார் கோயிலில் நடந்தேறியவாறு, பெருமாளும், தாயாரும், பங்குனி உத்திர மண்டபத்தில் ஒரு சேர வீற்றிருப்பர். பெருமாள் பக்கலில் தாயார் வீற்றிருந்து அனைவருக்கும் சேவை சாதிப்பார். பெருமாளின் ஸ்ரீபாதம், மாலை, கோரா, குல்லாய்ச் சாற்றுப் படி முதலியவை நம்மாழ்வாருக்குச் சாதிக்கப்படும்.

உறையூரில் நடந்தது போலவே இங்கும் ஏகாந்தம் நடைபெறும். இராமானுசரின் 'சரணாகதி கத்யம்' தாயார் பெருமாள் திருமுன் இன்று சேவிக்கப்படும்.

அன்று இரவு சின்னப்பெருமாளுக்கு வட திருக்காவேரியில் தீர்த்தவாரி நடைபெறும்.

உடையவர் சன்னிதியில் சான்றோர்கள் எழுந்து இராமானுசரின் 'கத்யத்ரயம்' சாற்றுமுறை செய்வார்கள்.

பெருமாள் தாயாருக்குத் திருமஞ்சனம் நடைபெற்று, அமுது, நிவேதனம் ஆகி, தீர்த்தம் பிரசாதம் வழங்கப்பெற்ற பின் தாயாரை உள்ளே அனுப்பிவிட்டுப் பெருமாள் பத்தாம் நாள் காலை கோரதத்தில் (தேர்) எழுந்தருளுவார். ஆயின் பத்தாம் நாள் என்றில்லாமல் 9ஆம் திருநாள் என்றே அது குறிக்கப்படும். காரணம் பெருமாள் 9ஆம் நாளின் தொடர்ச்சியாக இவ்விழாவை மேற்கொள்கிறார்.

கோரதத்தில் பெருமாள் வீதிவலம் வந்து, பெரியகோயில் சந்தன மண்டபத்திலுள்ள கண்ணாடி அறையில் எழுந்தருளுவார் அங்கே புஷ்பக விமானத் திருமஞ்சனமென்று, ஏராளமான சந்தனம் முதலிய வாசனைப் பொருள்களோடு ஏகாந்தமாகத் திருமஞ்சனம் நடைபெறும்.

இக்கோயிலின் வழக்கம், பெருமாள் தனது மூலத்தானம் வந்தடைந்து, இரவு அரவணை, பால் அமுது செய்தால், அது ஒருநாள் கணக்காகும். பெருமாள் 9ஆம் திருநாள் தாயார் கோயிலிலிருந்து நேராகக் கோரதத்திற்குச் செல்வதால் அது 9ஆம் நாளாகவே கருதப் படுகிறது.

## 5:5 *சித்திரைத் திருநாள்*

பங்குனி பிரம்மோத்சவத்தில் நடைபெற்றது போன்றே சித்திரைப் பிரம்மோத்சவத்திலும் நிகழ்ச்சிகள் நடைபெறும் ஆயின் விழா நாள்களில் எழுந்தருளும் வாகனங்களும், மண்டபங்களும் வேறு படும். இவ்விரு திருநாள்களிலும் பெருமாள் கோயிலின் ஏழாம் திருச்சுற்றான கலியுகராமன் திருவீதி எனப்படும் சித்திரை வீதியை வலம் வருவார். 'விருப்பண்ண உடையார் திருநாள்' என்றழைக்கப் படும் இவ்விழாவின் தனிச்சிறப்புகள் இப்பகுதியில் சுட்டப்படுகின்றன

சித்திரைத் திருநாள் கொடியேற்றத்தன்று கொடியேற்றம் நடந்தபின் 'அழகிய மணவாளம் பாண்டியகரம்பிள்ளை' என்னும்

கணக்கப்பிள்ளை மூலமாக அழகிய மணவாளம் (பெருமாள்) கிராமத்துக் குத்தகைப் பட்டயம் எழுதி வாசிக்கப்படும்.

தொன்றுதொட்டு இந்நாட்டை ஆண்டு வந்த இந்து அரசர்கள் பல கிராமங்களையும், நிலபுலன்களையும் திருக்கோயில்களுக்குக் கொடையாக வழங்கியவர் என்பதைக் கல்வெட்டுகளால் தெளிவாக உணர்கிறோம். பிற்காலத்தில் இங்கு நாடாள வந்த மராட்டிய ஆளுநர் களும், இஸ்லாமியர்களும் இவற்றுள் பெரும்பாலான கிராமங் களையும், நிலபுலன்களையும் கைப்பற்றிக் கெண்டனர். எனவே அவர்கள் கைப்பற்றிக் கொள்ளாத நிலபுலன்களின் வருவாயே கோயிலுக்குக் கிடைத்தன. கிழக்கிந்தியக் கம்பெனியார் ஆட்சி தோன்றியதும், கோயிலுக்குரிய பல நிலபுலச் சொத்துக்கள் அவர்கள் கைக்கு மாறின. இதன் இழப்பீட்டுத் தொகையாக ஆண்டு தோறும் ஓர் உதவித்தொகை அளிக்கப்பட்டது. பின்னர், ஆங்கிலப் பேரரசின் ஆட்சி ஏற்பட்ட போதும் இத்தொகை அளிக்கப்பட்டது. 1842ஆம் அண்டு இத்தொகை மிகவும் குறைக்கப்பட்டது. இந்நாளைய இந்திய அரசோ மிகமிகக் குறைந்த உதவித்தொகையை அளித்து வருகிறது.

முன்பு கோயிலுக்குச் சொந்தமான கிராமங்களின் உரிமைத் தொடர்பு, இப்போது ஆண்டுதோறும் நிகழும் ஒரு சடங்கின் அளவில் எஞ்சி நிற்கிறது.

இன்று, பெருமாள் திருமுன்னிலையில் கணக்கப்பிள்ளை, அரங்கநாதருக்கு உரிய நிலங்களையும், கிராமங்களையும் ஒரு கற்பனைக் குத்தகைதாரருக்குக் குத்தகை விடுவது போன்று, ஒரு கற்பனைச் சடங்கில் கலந்து கொள்கின்றார். திருவரங்கநாதர் தான் மேற்குறித்த நிலங்களுக்கும், கிராமங்களுக்கும் இன்றும் இனி என்றும், உண்மையான உரிமையாளராகத் திகழ வல்லவராவர் என்பதனை உறுதிப்படுத்தும் வகையில் இக்கற்பனைச் சடங்கு நிகழ்ந்து வருகிறது.

குத்தகைப் பட்டயம் வாசிக்கும் கணக்குப்பிள்ளைக்குப் பெருமாளுடைய எல்லா எடுபிடிப் பொருள்களுடன் கோயில் செலவில் யானையேற்றிப் பிரம்மரதம் என்னும் சிறப்பு செய்வர்.

## சித்திரைத் தேர்

சித்திரைத் திங்களில் நடைபெறும் தேர்த் திருநாள் பெரிய அளவில் இங்கு கொண்டாடப்படும். திருச்சி மாவட்டத்தைச் சூழ்ந்துள்ள கிராமப்புறத்து மக்கள் பெருமளவில் இவ்விழாவில் பங்கேற்பர். கிராமத்து மக்கள் ஆண்டுதோறும் இவ்விழாவிற்காக விரதம் மேற் கொண்டு, கூட்டங்கூட்டமாக வந்தடைவர். இவ்விழாவில் இவர்களில் சிலர் மொட்டை அடித்துக் கொண்டு தங்கள் நெற்றியிலும், உடம்பிலும் பெரிய அளவில் திருமண் அணிந்துகொண்டு கோயில் நுழைவாசல் களில், தங்கள் தலையில் தேங்காய் உடைத்துக் கொள்வர். பிடாரி கோயில் விழாவில் 'தெய்வ ஆவேசம்' வந்து ஆடுவது போல் இவர்கள் 'கோவிந்தா' 'கோவிந்தா' என்று கூவிக்கொண்டு ஆடுவர்.

இன்னும் சிலர் தங்கள் ஊர்களிலிருந்து மாடுகள், கன்றுகள போன்ற உயிரினங்களை பெருமாளிடத்து வேண்டுதலின் பேரில் கோயிலில் கொண்டுவந்து விடுவர். இக்கோயிலில் பெருமளவில் பசு மாடுகள் இருந்தமையைக் கல்வெட்டுகளும் கூறிச் செல்லும். அம்மாட்டுப் பண்ணை இத்திருவரங்கத்திற்கு அருகிலுள்ள சோழங்க நல்லூர் கிராமத்தில் 'உடையவரால்' நிர்வகிக்கப்பட்டதையும் கோயில் ஒழுகு கூறும்.[54]

இன்னும் சிலர் பெரிய காளை மாடுகளின் மீது இருபுறமும் முரசுகளை வைத்து, அவற்றை ஒலித்துக் கொண்டு பெருமாளின் மீது பக்திப் பாடல்களைப் பாடி வருவர். கோடை வெயிலின் காரணமாக தோல் பைகளில் நீரை நிரப்பி, அவற்றைத் தங்கள உடம்பின்மேல தெளித்துக் கொண்டு கோயிலை நோக்கி வருவர்.

மேலும் சிலர், குவளைப்பாட்டு, கும்மிப்பாட்டு போன்ற நாட்டுப் புறப்பாடல்களைப் பாடியவாறு கையில் சலங்கைகளை இசைத்துக் கொண்டு, கோயிலை நோக்கி வருவர். தங்கள் குழந்தை கள், உற்றார் உறவினர் சூழ அவர்களுக்கே உரிய கட்டை வண்டிகளில் வந்து, இங்குள்ள தோப்புப் பகுதிகளில் தங்கியிருந்து சமையல் செய்து

உணவுண்டு, பிறருக்கும் அவற்றை அளித்து விழாவில் தங்களை இணைத்துக் கொள்ளுவர்.

இத்தேர்த் திருநாள் இத்திருக்கோயிலின் விழாவினுள் சிறந்த தொன்றாகக் கருதப்படுகிறது.

## 5:6 தைத்திருநாள்

இவ்விழாவிலும் பங்குனித் திருவிழா, பிரம்மோத்சவம் போன்றே புறப்பாடுகள் அனைத்தும் நடைபெறும். பெருமாள் எழுந்தருளும் மண்டபங்களும், வாகனங்களும் வேறுபடும். இத்திருநாளில் பெருமாள், கோயிலின் ஆறாம் திருச்சுற்றான திருவிக்ரமன் திருவீதி என்னும் உத்திரவீதியில் உலா வருவார். 'பூபதி உடையார்' திருநாள் எனப்படும் இவ்விழாவின் தனிச்சிறப்புகள் மட்டும் இப்பகுதியில் சொல்லப்பட்டுள்ளன. தைத்திருநாளுக்குத் தனித் தேருண்டு. பங்குனி கோரதத்திலும், சித்திரை தேரிலும் பெருமாள் மட்டுமே தனித்து எழுந்தருளுவார். தைத்தேரில்தான் பெருமாள், உபயநாச்சிமார்களுடன் எழுந்தருளுவார். விழாக்களில் பெருமாளுடன் வெளிப்படையாகப் புறப்பாடு கண்ணுறும் உபயநாச்சிமார்கள், இத்தேர்த் திருநாள் புறப்பாட்டின்போது கோயிலிலிருந்து, தேருக்கு எழுந்தருளும்போதும் தேரிலிருந்து கோயிலுக்குள் எழுந்தருளும் போதும் தனித்தனியே இரண்டு மூடுபல்லக்குகளில் பெருமாளின் இருபுறமும் எழுந்தருளுவர். மற்ற விழாக்காலங்களில் பலரும் காணுமாறு பெருமாளுடன் வலம் வரும் உபயநாச்சிமார்கள் தைத் தேரன்று மட்டும் மூடுபல்லக்கில் வருவது குறிப்பிடத்தக்கது.

கதிரலங்காரம் என்ற ஒன்று தைத் தேரன்று நடைபெறும். தேரினின்று பெருமாள் உபயநாச்சிமார்களோடு ஆழ்வான் திருச்சுற்று வழியாகத் தாயார் கோயில் எழுந்தருளிய பிறகு, சின்னப் பெருமாள் சந்திரபுஷ்கரணியில் தீர்த்தவாரி கண்டருளிப் பெருமாளிடம் எழுந் தருளுவார். தாயார் கோயிலில் பெருமாளும், உபயநாச்சிமாரும் வீற்றிருப்பர். அது சமயம் கதிரலங்காரம் நடைபெறும்.

வீராந்தூர்பிள்ளை என்பார் வெளியாண்டாள் சன்னிதியி லிருந்து யானை மீதேறி, கோயில் பணியாளர்கள் எடுபிடிகள் சூழ அழகியமணவாளனுக்காக கிராமக் கதிர் அலங்காரத்தைத் தனது தலையில் எடுத்துக்கொண்டு, உள்ளூர் ஊழியக்காரர் சாமரம் வீச, பால்கார ஊழியர் குடை பிடிக்க, அனைத்து இசைக்கருவிகளும் முழங்க எடுத்துச் செல்வார். அவருக்கு முன்னர் கதிர்க்கோட்டை, தாள், கதிர், வாழைப் பழம், கரும்பு முதலானவைகளைச் சிலர் எடுத்துக் கொண்டு செல்வார்கள். தாள் நெற் கதிர்க்கட்டு, பத்து வாழைப்பழம், இருபது தார், கரும்புக் கட்டு பத்து இவைகளுடன் அவர்கள் புறப்பட்டுத் தாயார் கோயிலை அடைவர்.

கதிர் அலங்காரம் கொண்டு வந்த வீராந்தூர் பிள்ளைக்கும் மற்றும் அறுவர்க்கும் தீர்த்தம், சாத்துப்படி, பரிவட்டம் ஆகியவை சாதிக்கப்படும்.

தாயார் கோயிலுக்குத் தனியாகக் கதிர்கட்டு பத்து, வாழைத் தார் இருபது, கரும்புக்கட்டு பத்து ஆகியவை கொண்டு வந்து கொடுப்பர்.

அறுவடைக் காலத்தில் நடைபெறும் திருநாள் இது ஆகும் முதலில் விளையும் விளை பொருள்களைப் பெருமாளுக்குப் படைத்தல் என்ற மரபினை இது குறிக்கும்.

வைணவக் கோயில்களில் நடக்கும் ஐந்து விழாக்களுள் இதுவும் ஒன்று என்று தெரிகிறது.

இவ்விழாவை ஆக்கிராகயணத் திருநாள் என்று ஆகமங்கள் பேசும். ஆக்கிராகயணம் என்னும் சொல் மார்கழித் திங்கள் இறுதியில், நிலத்தில் விளையும் பொருள்களை, பழங்களை அறுவடை செய்து இறைவனுக்குப் படைத்தலைக் குறிக்கும்.

இவ்விழாவை நடத்துவது, அசுவமேதயாகம் நடத்துவதை ஒக்கும் என்று ஈசுவர சம்மிதை கூறும்.[55]

பாத்மசம்மிதை, இவ்விழாவை நடத்த வேண்டிய மாதங்கள், நாள்கள் பற்றிக் குறிக்கின்றது. முதலில் க்ஷேத்திர பாலனுக்குத்

தயிரன்னத்தை நிவேதனம் செய்து, அறுவடைக்குரிய நல்ல வேளையில் அறுவடை செய்து, அப்பொருள்களைப் பூமியில் பயிரிட்டவராலேயே நெற்கதிர் வண்டியில் ஏற்றுவிக்க வேண்டும் என்றும் வாழை, பலா, தயிர், நெய், தானியம், கிழங்குகள் ஆகியவற்றை ஆடல், பாடல், அலங்காரங்களுடன் எடுத்துச் செல்ல வேண்டும் என்றும் குறிக்கிறது.

இப்பொருள்களைக் கொண்டு வரும்போது, முன்னே சேனை முதலியாரும், பின்னே கருடனும் நன்றாக அலங்கரிக்கப்பட்டு வர, யானை முதலிய வாகனங்களில் பயிரிட்டவரை அமரச் செய்து குடை, சாமரம், கொடி முதலிய சின்னங்களுடன் அழைத்து வரவேண்டும் என்று குறிக்கிறது.[56]

இவ்விழாவைத் தனி விழாவாக ஆகமங்கள் சுட்டியிருந்த போதிலும், இக்கோயிலில் ஒரு சடங்கு நிலையில் இது நடைபெறு கின்றது. தைத்தேர் விழாவென்று இவ்விழா நடை பெறுவது குறிப்பிடத் தக்கது.

இவ்வாறு இக்கோயிலில் நடைபெறும் கொடியேற்றத் திருநாள்களான பங்குனித் திங்கள்ஆதிபிரம்மோத்சவம், சித்திரைத் திங்கள் விருப்பண்ண உடையார் பிரம்மோத்சவம், தைத்திங்கள் பூபதி உடையார் பிரம்மோத்சவம் ஆகிய விழாக்கள் பற்றிய நடைமுறை களையும், சிறப்பியல்புகளையும் கண்ணுற்றோம்.



இயல் — 5

## அடிக்குறிப்புகள்

1. பாரமேசுவர சம்மிதை 17ஆவது அத்தியாயம்
2. மோனியர் வில்லியம்ஸ் வடமொழி ஆங்கில அகராதி
   நியூ எடிசன், டெல்லி. பக்கம் 830, 1126
3. ஸ்ரீபிரசன்ன சம்மிதை அத். 31 வரிகள் 37 - 39
4. மோனியர் / வில்லியம்ஸ், வடமொழி ஆங்கில அகராதி
   நியூ எடிசன், டெல்லி. பக்கம் 1309
5. அகநானூறு பாடல் எண் 86, 136
6. சிலப்பதிகாரம் புகார்க்காண்டம் ஐந்தாம் காதை 14
7. மேலது புகார்க்காண்டம் முதல் காதை 1
8. தமிழ் அகராதி வால்யூம் 5, பகுதி 1 பக்கம் 329
9. பாத்ம சம்மிதை சர்யாபாதா அத். 11 சுலோகம் 61
10. கோயில் ஒழுகு பக்கம் 57 ஸ்ரீரங்கராஜஸ்தவம் பாட்டு 51
11. விஷ்ணுபுராணம்: எ சிஸ்டம் ஆப் இந்து மிதாலஜி அண்ட் டிரேடிசன
    எச்.எச். வில்சன், கல்கத்தா 1972 பக்கம் 362
    மத்யபுராணம் மு.நூ. பக்கம் 216
12. பாத்ம சம்மிதை அத். 5 வரிகள் 36 பி
13. இராமானுசர் சரணாகதி கத்யம் 5ஆம் பத்தி
14. வைணவர்கள் வழிபாட்டு முறை
15. சாங்கியாயன், கிரியாசூத்திரம் 1, 12 - 6, 8
16. அகநானூறு பாடல் எண் 136
17. நெடுநல்வாடை வரி 142
18. நாச்சியார் திருமொழி பாடல் எண் 559
19. ஈசுவர சம்மிதை அத். 12, வரி 114பி, 164 பி
    அத். 13, வரி 99ஏ, 229, அத். 14, வரி 169 ஏ
20. அக்னிபுராணம் அத். 61 கல்கத்தா பக்கம் 1812
21. பாத்மசம்மிதை கிரியாபாதா அத்தியாயம் 10 வரிகள் 24,
22. மேலது அத்தியாயம் 10 வரிகள் 48 - 51
23. மேலது அத்தியாயம் 10 வரிகள் 110 - 116
24. அட்ரு சம்மிதை அத். 54 வரிகள் 78
25. தமிழ் அகராதி சென்னை 1931, தொகுதி நான்கு, பகுதி நான்கு,
    பக்கம் 2564

26. புறநானூறு 335
27. மேலது ஔவையார் பாடல், சாமிநாதய்யர் முன்னுரை
மூன்றாம் பதிப்பு, சென்னை 1936, பக்கம் 78
28. சிலப்பதிகாரம் புகார்க் காண்டம் ஐந்தாம் காதை, 140
29. ஸ்ரீபிரசன்ன சம்மிதை அத். 34, 81
30. ஈசுவர சம்மிதை அத்யாயம் 11, வரிகள் 262 - 263
31. மேலது அத். 11, வரிகள் 210 - 215
32. மேலது வரிகள் 262 - 266
33. பாத்ம சம்மிதை அத். 11 வரி 180
34. ஸ்ரீபிரசன்ன சம்மிதை அத். 47 வரிகள் 2 - 36
35. ஈசுவர சம்மிதை அத். 11 வரிகள் 280 - 90
36. ஸ்ரீபிரசன்ன சம்மிதை அத். 47 வரிகள் 2 - 36
37. மேலது
38. ஈசுவர சம்மிதை, அத். 12 வரிகள் 246
39. பாத்ம சம்மிதை அத். 10 வரிகள் 19 - 22
40. ஈசுவர சம்மிதை அத். 11 வரிகள் 379 பி - 88
41. மேலது
42. கோயில் ஒழுகு பக்கம் 34 (1888)
43. நாச்சியார் திருமொழி 11 - 3, 609
44. கல்வெட்டு எண் 483 ஏ.ஆர். எண் 374 ஆப் 1953
45. திவ்ய சூரிசரிதம் பக்கங்கள் 164 - 166
46. இலட்சுமி காவியம், ஆறாம் சருக்கம்
47. ஸ்ரீரங்க சரிதபாணம் - கையேடு
48. செவிவழிச் செய்தி
49. ஸ்ரீரங்கம் பெரியகோயில் மாத இதழ் 1935 யுவ சித்திரை மற்றும்
உறையூர் நாச்சியாரும் பங்குனி உத்திரமும் (பக்கங்கள்) 1- 3
50. மேலது பக்கங்கள் 4 - 5
51. மேலது பக்கம் 3
52. மேலது பக்கம் 12
53. அகநானூறு 13, சாமிநாதய்யர் உரை
54. கோயில் ஒழுகு பக்கம் 35, அநிருத்த சம்மிதை
55. ஈசுவர சம்மிதை அத். 12 வரிகள் 143 - 160
56. பாத்ம சம்மிதை சர்யாபாதா அத். 14 வரிகள் 168 - 185, சென்னை
1982

# இயல் - 6

# தெப்பத் திருநாள்

## 6:1 விளக்கம்

இறைவனைத் தெப்பத்தில் எழுந்தருளச்செய்து தெப்பக் குளத்தைச் சுற்றிவரச் செய்வர். இவ்விழாவைக் குறிப்பிட்ட ஒரு நாளிலோ, அன்றி சில நாள்களிலோ நடத்துவர் எனத் தெரிகிறது. திருவரங்கம் கோயிலில் இவ்விழா மாசித் திங்கள் நடைபெறும்.

## 6:2 ஆகமம் சுட்டும் முறை

ஸ்ரீபிரசன்ன சம்மிதை:[1] இவ்விழா எட்டு, ஆறு, நான்கு, இரண்டு நாள்களுள் ஏதேனும் ஒன்றுள் நடத்தப்பெறும். இறைவனின் நட்சத்திரத்தன்றோ, மன்னனின் நட்சத்திரத்தன்றோ இவ்விழாவை நடத்துவர். கொடியேற்றத்துடனோ கொடியேற்றமில்லாமலோ இவ்விழா நடைபெறும். திருமுறை, காப்புக்கட்டுதல், பலிதானம் போன்றவைகள் இவ்விழாவிற்கும் உண்டு.

பெருமாளை வாகனத்தில் எழுந்தருளச் செய்து, நாள் தோறும் திருவீதியை வலம் வரச்செய்வர். தெப்பத்தன்று தெப்பக் குளத்தருகில் உள்ள மண்டபத்தில் எழுந்தருளச்செய்து, அங்கு திருவாராதனம் நடப்பித்துப் பெருமாளைக் கோயிலுக்குள் எழுந்தருளச் செய்வர். பின்னர், 'சயனோத்ஸவம்' நடப்பிப்பர். இவ்விழாவில் ஒவ்வொரு நாளும் இசையோடு நடனமும் நடைபெறும்.

தெப்பக்குளம் அறுகோணவடிவத்திலோ, சதுரவடிவத்திலோ, வட்ட வடிவத்திலோ அமையப்பெற்றிருக்கும். நான்கு பகுதிகளில் படியுடன் கூடிய வழிகள் இருக்க வேண்டும். தூய்மையான தண்ணீர் குளத்தில் நிரப்பப்பட்டிருக்கும்.

குளத்தின் நடுவில் உள்ள தெப்பம் மரத்தால் அமைந்து இருப்புத் தூண்களுடன் இருக்கும். தெப்பத்தின் உச்சியில் விமானம் இரண்டு, ஒன்று, நான்கு, ஐந்து விதானங்களுடன் அழகுபடுத்தப்பட்டு மலர்கள், பழங்கள் போன்றவைகளால் கட்டப்பட்டு, வாழைமரங்கள் கட்டப்பட்டுச் சிறப்பான தோற்றத்துடனிருக்கும்.

தெப்பத் திருநாளன்று பெருமாளைத் திருவீதி வலம் வரச் செய்து தெப்பக்குளத்தில் எழுந்தருளச் செய்வர். அதன் முன்னர் அர்ச்சகர் தெப்பத்திற்குப் புண்ணியாகவாசனம் செய்து அனைத்து தேவதைகளையும் அழைத்துத் தெப்பத்தில் இருக்கச் செய்வார்.

### ஈசுவர சம்மிதை[2]

"அர்ச்சகர், பரிசாரகர், வேதபாராயணக் குழுவினர், அத்யா பகக் குழுவினர் போன்றோர் பெருமாளோடு தெப்பத்தில் அமர்ந்திருப் பார்கள். மேளக்காரர்கள் மற்றொரு படகில் அமர்ந்து இசைத்து வருவர். தெப்பத்தைச் சுற்றி வந்ததும் பெருமாளை மண்டபத்தில் எழச் செய்து, திருவாராதனம் மற்றும் அமுது படைத்துத் தாம்பூலம் படைப்பர். பின்பு கோயிலுக்குச் சென்று மூலவரிடத்தில் சக்தியைச் சேர்க்க வேண்டும்."

ஈசுவர சம்மிதை "வளர்பிறை, தேய்பிறை நாள்களில் இவ் விழாவை நடத்தலாம்" என்று கூற, ஸ்ரீபிரசன்ன சம்மிதை "தேய்பிறை யில்தான் நடத்த வேண்டும். விழாவின் நாள் அளவு ஒரு நாளிலிருந்து ஒன்பது நாள்கள் வரை கோயில் வசதிக்கேற்ப நடத்தலாம்" என்றும் கூறுகிறது.

## 6:3 திருவரங்கம் கோயிலில் இவ்விழா நடைபெறும் முறை

இவ்விழா ஒன்பது நாள்கள் நடைபெறுகின்றது. இது பிரம்மோத்சவம் இல்லையாதலால் இவ்விழாவிற்குக் கொடியேற்றம், நகர சோதனை போன்றவைகள் கிடையா. காப்புக்கட்டுதல் இவ் விழாவிற்கு உண்டு.

இவ்விழாவில் காலை, மாலை இரு வேளைகளிலும் பெருமாள் புறப்பாடு கண்டு திருவீதி வலம் வருவார். காலைப் புறப்பாட்டில் பிரம்மோத்சவம் போன்று வாகனத்தில் புறப்பாடின்றிப் பல்லக்கில் எழுந்தருளுவார். மாலைப் புறப்பாட்டின் போது மட்டும் நாளொரு வாகனமாகப் புறப்பாடு காண்பார். இதர திருநாள்கள் போன்றே முதல் திருநாளன்றும், ஏழாம் திருநாளன்றும் காலை நேரத்தில் பெருமாள் திருவீதி எழுந்தருளுவதில்லை.

**முதல் திருநாள்** மதியத்திற்கு மேல் பெருமாள் புறப்பாடு கண்டு, திருக்குறளப்பன் சன்னிதி சென்று, அங்கு திருவாராதனம், தளிகை முதலியவற்றைக் கண்டருளித் திரும்பிக் கோயில் வந்து, வாகன மண்டபத்தில் வாகனம் ஏறிப் புறப்பட்டுத் திருவீதி வலம் வந்து உள்ளே எழுந்தருளுவார்.

இரண்டாம் திருநாள் முதல் ஆறாம் திருநாள் வரை தினந்தோறும் அதிகாலையில் பெருமாள் பொங்கல், பெரிய அவசரத் திருவாராதனம், தளிகை நிவேதனம் முதலியவற்றைக் கண்டருளிப் பல்லக்கில் புறப்பட்டுத் திருவீதி எழுந்தருளி, அன்றைக்கென்று ஏற்பட்ட மண்டபத்தக்குச் செல்வார்.

**ஏழாம் திருநாள்:** முதல் திருநாள் போன்று பெருமாள் மதியத்திற்கு மேல் சன்னிதிவாசலில் உபயநாச்சிமாரோடு திருச்சி(விகை) என்னும் கேடயத்திலிருந்து சூர்ணாபிஷேகம் செய்துகொண்டு கொட்டார வாசலில் நெல் அளவு கண்டருளித் திருவீதி எழுந்தருளுவார். கொடியேற்றத் திருநாள்கள் போல் ஏழாம் திருநாளில் திருவீதி எழுந்தருளிய பிறகு நாச்சியார் சன்னிதிக்கு எழுந்தருளுவதும், அங்கு திருமஞ்சனம் கண்டருளுவதும் கிடையாது.

**எட்டாம் திருநாள்: தெப்பம்** இன்று காலை பெருமாள் திருவீதி எழுந்தருளுவதில்லை. மதியத்திற்கு மேல் உபயநாச்சிமார்களோடு ஏராளமான திருவாபரணங்கள் சாத்திக்கொண்டு திருச்(சி)விகை என்னும் கேடயத்தில் புறப்பட்டுச் சித்திரை வீதி வழியாக மேலவாசல் அடைந்து, ஊரின் மேற்கு பகுதியில் உள்ள தெப்பக்குளத்தை வலம்

வந்து, அங்கே கரையில் அமைந்துள்ள மண்டபத்தில் உத்தமநம்பிக்குச் சேவை மரியாதைகள் செய்வித்துக் குளத்தைப் பார்த்தவண்ணமாக அமர்ந்து, திருவந்திக்காப்பு கண்டருளுவார். கோயில் அதிகாரிகளுக்கும் சேவை மரியாதை செய்வித்த பின்னர் மண்டபத்தில் எழுந்தருளுவார். தெப்பக் குளம் சதுரவடிவில் அமைந்துள்ளது.

மண்டபத்தில் திருவாராதனம், கோஷ்டி வினியோகம் போன்ற செயல்பாடுகள் ஆனதும், பெருமாள் கிளி மாலை சாத்திக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டு, அழகு படுத்தப்பட்டுள்ள தெப்பத்தில் எழுந் தருளுவார். பெருமாள் வலப்புறத்தில் அர்ச்சகர் தலையில் சிம்புக் குல்லாய், பரிவட்டம் கட்டிக்கொண்டு அமர்ந்திருப்பார். இடப்புறத்தில் தானிகர் பிரபன்னபாகை கட்டிக்கொண்டு அமர்ந்திருப்பார். பெருமாளுக்கு முன்பாக கீழே ஒரு வரிசையில் தலத்தார்கள், தீர்த்தக்காரர்கள், ஆசார்ய பெருமக்கள், அத்யாபகர் முதலானோரும் மற்றொரு வரிசையில் அரையர், மணியார், சந்தானராமனாக உட்காருவர். கைங்கர்ய பரிசார கர்களும் தெப்பத்தில் இருப்பர்.

எட்டாம் திருநாள் குதிரை வாகனம் என்ற வழக்கின்படி குதிரை நம்பிரானும் தெப்பத்தில் இருப்பார். முன்புறத்தில் தாசிகள் அலங்கார மாயிருப்பார்கள். வெளிச்சம் குறையாமல் தீவட்டி எரிந்து கொண்டிருக் கும். இடைவிடாமல் மத்தாப்பூ கொளுத்தப்படும். தெப்பக்குளத்தி லுள்ள தெப்ப மிராசுகள் தெப்பத்தின் நுனிப்புறத்திலிருந்து கோல் பிடித்துத்தள்ளுவார்கள். மேளக்காரர்கள் முன்னதாகவே படகிலேறி மைய மண்டபமான நீராழி மண்டபம் போய், அங்கிருந்து மேள வாத்தியங்களை முழங்குவார்கள்.

தெப்பம் மூன்று முறைச்சுற்றி வரும். முதல் சுற்றில் ஒவ்வொரு மூலையிலும் வீரவண்டி, சேமக்கல வாத்தியங்களோடு பெருமாளுக்கு ஒரு தட்டு அறுவாணம் அமுது செய்வர். மூன்றாம் சுற்றில் அவ்வறு வாணம் கீழே அமர்ந்திருப்பவர்களுக்கு விநியோகம் செய்யப்படும்.

பெருமாள் தெப்பத்தை விட்டிறங்கிக் கரை மண்டபம் எழுந்தருளியிருப்பதும் கரை மண்டபத்தில் மீண்டும் திருவாராதனம் நடந்து திருப்பணியாரங்கள், சர்க்கரைப் பொங்கல், குழம்புப்பால் முதலியன அமுது செய்விக்கப்படும்.

பெருமாள் அங்கிருந்து புறப்பாடு கண்டு வடக்கு வாசல் வழியாக நாச்சியார் சன்னிதி வாசலில் திருவந்திக்காப்பு கண்டு, சித்திரை வீதி வழியாய்க் கோயிலுள் எழுந்தருளுவார்.

கிளி மாலை சமர்ப்பித்ததற்காகக் கருவூல நாலு கால் மண்டபத்தில் சாத்தாத வைணவனுக்குச் சேவை மரியாதை செய்து, யானையேற்ற பிரம்மரத மரியாதையுடன் வீட்டுக்குச் செல்வார்.

தெப்பத் திருநாள் ஸ்ரீரங்க நாராயண ஜீயர் ஏற்படுத்திய திருநாளாகையால்[3] விழா நாள்தோறும் விட்ட விழுக்காட்டுப் பிரசாதம் ஸ்ரீரங்க நாராயண ஜீயர் மடத்துக்குச் செல்லும்.

**ஒன்பதாம் திருநாள்:** பந்தக்காட்சி; பெருமாள் முதல் திருநாள் பொங்கல் நிவேதனம் முதலியவற்றைக் கண்டருளிப் புறப்பட்டுச் சித்திரை வீதி வழியாகத் தெப்பக்குளத்துக்கு எழுந்தருளுவார் அங்கே தெப்பக்குளத்தில் ஸ்ரீசடகோபன் மூலமாகத் தீர்த்தவாரி நடைபெறும். இந்தத் திருநாளில் தீர்த்தவாரிக்காகச் 'நம்பெருமாள்' எழுந்தருளுவ தில்லை.

தீர்த்தவாரி நடந்தேறிய பிறகு பெருமாள் திருமஞ்சனம், தளிகை நிவேதனம் ஆகி, 'சூரியப்பிரபை' என்னும் வாகனத்தில் புறப்பட்டுத் தெப்பம் தள்ளியவர்களுக்குக் குளத்தருகில் சேவை மரியாதை செய்வித்து, நூற்றுக்கணக்கான தீவட்டிகளோடு சித்திரை வீதியை வலம் வந்து, தெற்குவாயில் வழியாக உள்ளே சென்று கொடிக்கம்பத்தருகில் திருத்தாழ்வரை தாசருடைய படிப்பைக் கேட்டு உள்ளே எழுந்தருளி மூலத்தானம் சென்றடைவார். பின்னர் விழாக் காப்பு களையப்படும்.



## இயல் — 6

# அடிக்குறிப்புகள்

1. ஸ்ரீபிரசன்ன சம்மிதை அத்தியாயம் 39 வரிகள் 1 - 46
2. ஈசுவர சம்மிதை அத்தியாயம் 12 வரிகள் 1106 - 143 ஏ
3. கோயில் ஒழுகு பக்கம் 46 (1888)

# இயல் - 7

# திருப்பவித்திரத் திருநாள்

## 7:1 விளக்கம்

வைணவத் திருக்கோயில்களிலும், சைவத் திருக்கோயில களிலும் இவ்விழாச் சிறப்புற நடந்தேறும். 'பவித்திரம்' என்பது பருத்தியாலோ அன்றிப் பட்டாலோ நூற்றுத் தொடுககப்பட்ட மாலை யாகும். இம்மாலையில் குறிப்பிட்ட முடிச்சுகள் இருக்க வேண்டும் பவித்திர மாலையை இவ்விழாவின் போது கோயிலிலுள்ள மூர்த்தி களுக்கு அணிவிக்கின்றார்கள்.

இவ்விழா ஆதியில் பிரும்மாவால் பெருமாளுக்கு நடத்தப் பட்டதென்று சொல்வர் சான்றோர். அவ்விழா இனறுவரை திருவரங்கம் கோயிலில் நடந்து வருகிறது. இதற்குப் 'பூணூல் அணியும் விழா' என்றும் பெயர். பூணூலை அணிபவர் உடம்பின் குறுக்காகப் போட்டுக் கொள்கின்றனர். ஆயின் இவ்விழாவில் பவித்திரத்தை மூர்த்திகளுக்கு மாலைபோல் அணிவிக்கின்றனர்.

கோயில் மூலவருக்கும், உற்சவருக்கும் மற்ற மூர்த்திக ளுக்கும் இப்பவித்திரத்தை, அவர்கள் திருமேனி முழுவதும் சாற்று கின்றனர். இவ்வூரார் இதைப் 'பூச்சாண்டி சேவை' என்றும குறிப்பர். பெரியாழ்வார் 'பாரதம் கை செய்த அத்தூதன் அப்பூச்சி காட்டு கின்றான். அன்னே! அப்பூச்சி காட்டுகின்றான்' என்று குறிப்பதும காண்க.[1]

பெரியபெருமாளின் அனைத்து அங்கங்களிலும், ஒவ்வொரு மயிர்க்கால்களிலும் இறைவனின் வெளிப்பாடான எல்லாத் தேவதை களும் அங்க பூதங்களாய் இருப்பதால், ஆவணித்திங்கள் ஏகாதசியன்று உத்ஸவருக்கு யாகசாலையில் சிறப்பு வழிபாடுகள் நடந்தேறி, 365

ஆராதனைகள் செய்வித்துப் பவித்திரம் என்னும் இந்நூலைச் சாற்றிப் பின்னர் ஐந்து குண்ட ஹோமமும், அபிடேகமும் நடைபெறுகிறது.

இவ்விழா நடைபெறுவதன் நோக்கம், நாள் வழிபாட்டில் ஏதேனும் குறை ஏற்பட்டிருக்குமாயின், அவைகளை நிவர்த்தி செய்விக்க 365 ஆராதனைகள் செய்யப்படுகின்றன. இது ஒரு பரிகாரத் திரு நாளாகக் கருதப்படுகிறது.

## 7:2 ஆகமங்கள் சுட்டும் நிலை

காலையிலும், மாலையிலும் வேத மந்திரங்களை ஓதி, புராணங்களைப் படித்து, ஹோமம் செய்கின்றார்கள். இவ்விழாவை ஐந்து நாள்கள் அல்லது ஏழு நாள்கள் நடத்துகின்றனர். இவ்விழாவை ஆவணித் திங்கள் முதல் கார்த்திகைத் திங்கள் முடிய நான்கு மாதங் களுக்குள் செய்ய வேண்டும்.

ஆவணி மாதம் வளர்பிறை ஏகாதசி அன்று இவ்விழா தொடங்கப்பட்டு நடைபெறுவது வைணவத் திருக்கோயில்களில் வழக்க மாக உள்ளது.

பவித்திரம் என்ற சொல் தூய்மைப்படுத்தல் என்ற பொருளைத் தரும்.[2]

பவித்திரம் என்பது தருப்பைப் புல்லினால் செய்யப்பட்டு, வலக் கை மோதிரமாக அணிந்து கொள்வது. பவித்திரம் என்பதற்குத் தூய்மையாக்கும் மந்திரங்களை ஓதுதல் என்றும் பொருள் சொல்வர்.[3]

**ஜெயாக்கிய சம்மிதை** : பவித்திரம் என்ற சொல் இரண்டு பகுதி விகுதிகளால் ஆனது. (ப-திரா), 'ப' என்ற சொல் பாவங்கள் என்ற கருத்தையும், 'திரா' என்பது வழுவினின்று காப்பாற்றப்பட்டது என்ற பொருளினையும் கொண்டதாகக் கொண்டால் பாவங்களில் விழாமல் காப்பாற்றுவது என்னும் பொருள் கொள்ள இடம் தருகிறது.[4]

ஆகவே, பவித்திரத் திருநாள், மனிதனை பாவங்களிலிருந்து காப்பாற்றுவதற்கும், தூய்மையாக்குவதற்கும், வழுவிலிருந்து நீக்குவதற்கும் நடைபெறுகின்றது எனக் கொள்ளலாம்.

**பாத்ம சம்ஹிதை :** உத்சவ காலங்களில் ஏற்பட்ட மந்திரக் குறைகளுக்குப் பரிகாரமாகக் கூறப்பட்டுள்ளது.[5]

**ஈச்வர சம்ஹிதை :** உலக நன்மையின் பொருட்டு, நாள் வழிபாடுகளில் ஏதேனும் குற்றம் குறையிருக்குமாயின் அவற்றிற்குப் பரிகாரமாகக் கூறுப்பட்டுள்ளது.[6]

கோயில் மூர்த்திகளுக்குப் பவித்திரம் அணிவித்தல் பவித்திரத் திருநாள் தொடங்கிவிட்டதற்கு அடையாளமாகும். பிரம்ம உத்சவங் களில் கொடியேற்றம் போல இவ்விழாவின் தொடக்கத்திற்கு இது அடையாள மாகும்.

பிரம்மோத்சவத்தின் கொடியிறக்கம் போன்றே பவித்திரத் தைக் கழற்றுதல் (அவரோஹணம்) இவ்விழா முடிவுற்றதைச் சுட்டும்.

இவ்விழாவிலும் பிரம்மோத்சவம் போன்றே திருமுறை, காப்பு கட்டுதல், கும்ப ஸ்தாபனம், அவபிரதம் போன்ற சடங்கு முறைகள் உண்டு.

"கோயிலில் உள்ள மூலவர், உற்சவர் மற்றும் எல்லா மூர்த்திகளுக்கும் பவித்திரம் அணிவிப்பர். விழாவில் நடனம், பாட்டு முதலியவைகள் இடம் பெறச் செய்வர். நான்கு விதமான அன்னங் களைப் பெருமாளுக்குப் படைப்பர். மறுநாள் கர்மபேரரை யாக சாலைக்கு எழுந்தருளச் செய்து சக்ரமண்டபத்தில் அவரை நிறுத்தித் தீபாராதனைகள் செய்யப்படும்"[7] என்று பாத்ம சம்ஹிதை கூறும்.

## 7.3 திருவரங்கம் கோயிலில் இவ்விழா நடைபெறும் முறை

இவ்விழா ஒன்பது நாள்கள் நடைபெறும். விழாவிற்கு முதல் நாள் மண் எடுத்தல் என்னும் திருமுளைச் சடங்கு பிரம்ம உத்சவத்தில் நடைபெறுவது போன்று நடைபெறும்.

**முதல் நாள்:** ஆவணி வளர்பிறை ஏகாதசியன்று மாலை நேரத்தில் பெருமாள் புறப்பாடு கண்டு, யாகசாலை எழுந்தருளுவார். வேதபாராயணத்தை பண்ணும் உரிமையுள்ள தென்கலையார் வந்து பாராயணத்தை தொடங்குவர். பெருமாளுக்குத் திருவாராதனம் ஆரம்ப மாகும். இத்திருநாள் தினப்படி வழிபாட்டில் குறையிருப்பின் அவற்றின் பரிகாரத்திற்கு ஏற்பட்டதாகையால், திருவாராதனத்தின் முடிவினில் 360 தீபாராதனம் நடைபெறும். இது முடிவதற்கு நான்கு மணி நேரமாகும். அதுவரை வேதபாராயணம் இடைவிடாமல் நடந்து கொண்டிருக்கும்.

முதலில் நாராயண உபநிஷத்துத் தொடங்கிப் பாராயணம் செய்யப்படும். பிறகு சந்நோமித்ர 'அம்பஸ்யபாரே' என்ற உபநிஷத்து பாகமும், 'அச்சித்ர அச்வமேதங்களும்' பாராயணம் செய்யப்படும்.

பெருமாள் திருமஞ்சனம் கண்டருளி, திருவமுது படைக்கப் பெற்று ஐந்து குண்ட ஓமம் நடைபெறும்.

பெருமாளுக்குக் காப்பு, நாண் கட்டி, அவர் திருமுன்னர் வேதபாராயணத்துடன் பவித்திரப் பிரதிட்டை ஆகும்.

மூலத்தானத்தில் மூலவருக்கும் தொடர்ந்து மற்ற மூர்த்தி களுக்கும் பவித்திரத்தை திருமேனி எங்கும் சாற்றுவர்.

பெருமாள் யாகசாலையிலிருந்து உள்ளே எழுந்தருளியதும், பிரம்ம உத்சவம் போன்றே திருவரங்க மாளிகையார் திருநாள் முடிவுறும் வரை யாகசாலையில் எழுந்தருளியிருப்பார்.

**இரண்டாம் நாள் :** இன்றும் முதல் நாள் போன்றே 360 தீபாராதனைகள் நடைபெற்று ஒவ்வொரு தீபாராதனை முடிவிலும் பெரிய பெருமாளுக்குத் திருமுடி முதல் திருவடிவரையில் பவித்திரம் அணிவிக்கப்பெறும். இன்றைக்கும் வேதபாராயணம் முதல் நாள் போன்றே நடைபெறும். ஆயின் இன்று துவாதசியானதால் 'அச்சித்ர

அச்வமேதங்களுக்குப்' பதிலாக 'காடகம்' பாராயணம் செய்யப்படும். மற்ற மூர்த்திகளுக்கும் பவித்திரம் அணிவித்த பிறகு, தாயார் கோயிலுக்கு மேளதாளத்துடன் பவித்திரம் கொண்டு செல்லப் படும். அது அக்கோயிலை வலம் வரும். அதுவரை மூலவரும், உத்சவரும் பொதுமக்களுக்குச் சேவை சாதிப்பர். மூலவர் இன்று ஒரு நாள் மட்டுமே வனமாலை, அங்கோபங்கம் முதலிய பவித்திரங்களோடு சேவை சாதிப்பார்.

பின்னர் அப்பவித்திரங்களைக் களைந்து ஆழ்வார்கள், ஆசாரியர்கள் சன்னிதிகளுக்கு அனுப்புவர்.

பெருமாள் புறப்பட்டு, பவித்திர மண்டபத்திற்கு எழுந் தருளுவார். பவித்திர மண்டபத்தில் பெருமாள் திருவாராதனம் கண்டருளி, அமுது செய்து தீர்த்த வினியோகம் ஆனதும், மண்டபத் திலிருந்து புறப்பட்டு மூலஸ்தானம் எழுந்தருளுவார்.

இரண்டாம் நாளிலிருந்து ஆறாம் திருநாள் வரையிலும் மற்றும் எட்டாம் திருநாளும் பெருமாள் நாள்தோறும் நடுப்பகல் புறப்பாடு கண்டு பவித்திர மண்டபம் சேர்ந்து உத்சவம் கண்டருளுவார்.

**ஏழாம் திருநாள் :** இவ்விழாவன்று பெருமாள் உபயநாச்சிமார்களுடன் திருச்சியெனும் கேடயத்தில் எழுந்தருளிக் கோயில் மூலஸ்தானத்து வாசலில் சூர்ணாபிடேகம் செய்து கொண்டு புறப்பட்டு, கொட்டாரம் சென்று நெல் அளவு காண்பார். இந் நிகழ்ச்சி கள் பிரம்ம உத்சவத்தின் ஏழாம் நாள் நிகழ்ச்சிகளைப் போன்றேயாம். பவித்திர மண்டபத்திற்கு இன்று பெருமாள் எழுந்தருளுவது இல்லை

**எட்டாம் நாள் :** பவித்திர மண்டபத்திலிருந்து பெருமாள் உள்ளே எழுந்தருளியதும் பவித்திரங்கள் களையப்பட்டு சயன மூர்த்திக்குச் சயன உபசாரங்கள் நடக்கும்.

**ஒன்பதாம் நாள் :** காலை நேரத்தில் பெருமாள் சந்திர புட்கரணிக்கு எழுந்தருளி தீர்த்தவாரி கண்டருளுவார். பின்னர் பவித்திர

மண்டபத்தில் பெருமாள் திருமஞ்சனம் கண்டு உள்ளே எழுந்தருளுவர். வழியில் கொடிமரத்தின் அருகில் படிப்பு கேட்டு மூலத்தானம் அடைவார்.

யாகசாலையிலிருந்து திருவரங்க மாளிகையார் உள்ளே எழுந்தருளுவர். வாதூலதேசிகர் அண்ணன் (கோயில் தலத்தார் முறைக்காரர்) அவர்களை அவரது திருமாளிகையிலிருந்து அழைத்து வந்து கோயில் வாசலில் அவருக்குப் பவித்திரம் வழங்குவர். உடனே கோஷ்டிக்கும் பவித்திரம் வழங்கப்பெறும்.

வாதூலதேசிகர் அண்ணன் அவர்களுக்குப் பெருமாள் பிரம்மரத மரியாதை அளித்து, அவருடைய திருமாளிகைக்கு அவரை அனுப்புவார்.

சந்திரபுட்கரிணியின் அருகில் குலசேகர ஆழ்வாரால் எப்போதும் மங்களாசாசனம் பண்ணப்படும் கோதண்டராமன் சன்னிதிக்கு இப் பவித்திரங்கள் மேளதாளத்துடன் எடுத்துச் செல்லப்படும்.

பெருமாள் தன்னை இராமபிரான் அயோத்தி நகரில் ஆராதனை செய்து வந்ததன் பொருட்டு, இப்பவித்திரங்களைத் தம் காணிக்கையாக இக்கோயிலில் உள்ள கோதண்டராமன் சன்னிதிக்கு அனுப்புகிறார் என்பது மரபு.



## இயல் — 7

## அடிக்குறிப்புகள்

1. பெரியாழ்வார் திருமொழி பாடல் எண் 118
2. மோனியர் வில்லியம்ஸ், ஆங்கில அகராதி, நியூ எடிசன் டெல்லி 1951, பக்கம் 611
3. மேலது 11
4. ஜெயாக்கிய சம்மிதை அத்தியாயம் 21 வரிகள் 111 - 112
5. பாத்ம சம்மிதை சர்யாபாதா அத்.14 வரிகள் 33-34 சென்னை 1982
6. ஈசுவர சம்மிதை அத். 14 வரிகள் 2 - 5
7. பாத்ம சம்மிதை சர்யாபாதா அத். 14 வரிகள் 59 - 60

# இயல் - 8

# அத்தியயனத் திருநாள்

## 8:1 விளக்கம்

இவ்விழாவை வைகுண்ட ஏகாதசிப் பெருவிழா என்று திருவரங்கம் கோயிலில் குறிப்பிடுகின்றனர். இவ்விழா பகல் பத்துத் திருநாள், இராப்பத்துத் திருநாள் என்றும், திருமொழித் திருநாள், திருவாய்மொழித் திருநாள் என்றும், பலவாறு வழங்கப்படும். நாலாயிர திவ்யப்பிரபந்தம் முழுவதும் இவ்விழாவில் பெருமாள் திருமுன்னர் அரையர்களால் இயலோடும், இசையோடும், அபிநயத் தோடும் நிகழ்த்தப்படுவதால் இவ்விழாவை முத்தமிழ் விழா என்றும் அழைக்கின்றனர்.

தென்னிந்திய வைணவத் திருக்கோயில்களில் நடைபெறும் விழாக்களில் இவ்விழா சிறப்பு வாய்ந்த ஒன்றாகக் கருதப்படும். இவ்விழா மார்கழி மாதத்தில் நடக்கிறது. இம்மாதம் வழிபாட்டிற்குரிய மாதமாகக் கருதப்படுகிறது. பகவத்கீதையில் கண்ணபிரான் தன்னு டைய வீபூதிகளை எடுத்துச் சொல்லுமிடத்து 'மாதங்களுள் நான் மார்கழியாக இருக்கின்றேன்[1] என்று குறிப்பது இங்கு கருதத்தக்கது.

இத்திருநாள் உயிரையும் இறைவனையும் ஒருமைப் படுத்தும் வைணவப் பண்பாட்டை நடைமுறைப்படுத்துவதாகக் கருதப்படுகிறது. இவ்விழாவில் ஆழ்வார்களின் அருளிச்செயல்கள் அனைத்தும் பெருமாள் முன்னர் ஓதப்படுவதால் 'திவ்யப் பிரபந்தத் திருநாள்' என்றும் இதனைக் குறிப்பிடுவர்.

ஆழ்வார்கள் மறைந்த நாளன்றும் இவ்விழா கொண்டாடப் படுகிறது. அதற்கு 'திருவத்தியயனம்' என்று பெயர். திருவத்தியயனம், அத்தியயனத்திற்குப் புறம்பானது. ஆழ்வார்கள் மறைந்த நாளன்று

அவரவர் பாடல்கள் மட்டும் ஓதப்படும். ஆயின் அத்தியயனத் திரு நாளில் நாலாயிரமும் ஓதப்படும்.

இவ்விழாவில் அரையர் சேவை நடத்தப்படும். இன்றும் திருவரங்கம், திருவில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி போன்ற இடங்களில் இச்சேவை நடந்து வருகிறது.

## இவ்விழாவின் அடிப்படைத் தத்துவம்

வேத உபநிடதக் கருத்துக்களைத் தமிழில் யாரும் எளிதில் அறிந்து கொள்ளும் முறையில் ஆழ்வார்கள் நாலாயிர திவ்யப் பிரபந்தமாக அருளி அதைக் கோயில் வழிபாட்டிலும் சேர்த்தனர். பரம்பொருள் எங்கோ இருக்கிறது என்பதனைவிட அது இங்கு அர்ச்சாவதாரத்தில் எழுந்தருளியிருக்கிறது என்பதனை இவ்விழா வெளிப்படுத்துகிறது. அர்ச்சாவதாரத்தில் தங்களை முழுவதுமாக ஈடு படுத்திக் கொண்டு ஆழ்வார்கள் பாசுரங்களைச் செய்தனர்.

மக்கள் இறைவன் திருமுன்னர் ஒரு இடத்தில் சூழ்ந்திருந்து, ஒருவர் அப்பாடல்களைச் சொல்லக் கேட்டு மகிழ்கிறார்கள்.

எல்லா இடங்களிலும் இறைவன் நிறைந்து உள்ளான் என்று ஆழ்வார்கள் அருளியபோதிலும், அப்பரம்பொருளே அர்ச்சாவதார மூர்த்தியாக இங்கு வீற்றிருக்கிறார் என்பதனையும் அவர்கள் தம் பாசுரங்கள் மூலம் உறுதிப்படுத்தினார்கள்.

அத்தியயனம் என்னும் சொல் படித்தல், வாசித்தல் எனப் பொருள் தருமேனும் இங்கு சிறப்பாக வேதம் ஓதுதலைக் குறிக்கும்.[2] வேதத்தின் பெருமை நாலாயிரத்துக்களிக்கப்பட்டதால் அச்சொல் இன்று திவ்யப் பிரபந்தத்தைச் சொல்வதாக அமைந்துவிட்டது. திருமங்கையாழ்வாரால் திருவாய்மொழியும், பின்னர் நாதமுனிகளால் திருமொழியும் இக்கோயிலில் இவ்விழாவில் ஓதுமாறு பணிக்கப் பட்டது.[3]

திருக்கோயில் வழிபாட்டில், நாலாயிரம் ஓதும் முறை ஒரு அமைதியான புரட்சியை ஏற்படுத்தியது. பிரபந்தங்களை வேதத்தின் நிலைக்கு உயர்த்தவும், வீடுபேற்றின் பொருளை எளிதில் உணரவும் இம்முறை பயன்பட்டது என சீனிவாசாச்சார்யர் குறிப்பிடுகின்றார்.[4]

இவ்விழா ஞானம், கருமம் ஆகியவற்றைவிடச் சரணா கதியைச் சிறப்பாகச் சுட்டுகிறது.

## 8:2 ஆகமங்களில் அத்தியயனத் திருநாள்

இவ்விழா பற்றிப் பல்வேறு ஆகமங்கள் குறிப்பிடக் காண்கின் றோம். அத்தியயனத் திருநாள் என்ற வழக்குடன் ஆகமங்களில் 'மார்க்கசிரோத்சவம்'[5] என்றும் 'மோட்சோத்சவம்'[6] என்றும் 'தனுர்மாத உத்சவம்'[7] என்றும் இவ்விழா கூறப்பட்டிருக்கின்றது.

இவ்விழா நடைபெறும் முறையை ஈச்வரசம்மிதை விவரிக்கும். "மார்கழி மாதத்தில் வடமொழி வேதமும், திராவிட வேதமும் ஓதுவர். சூரியன் தனுர் ராசியில் இருக்கும் மார்கழி மாதத்தில் பொங்கலுக்கு இந்தத் திருநாள் நடைபெறும் விழாக் காணும் திருவுருவிற்கு ஆடை, மாலை முதலானவைகள் அணிவிப்பர். ஆழ்வார்கள் திருவுருவங் களுக்கு மாலை சாற்றுவர். ஒன்பது கும்பம் வைத்துத் திருமஞ்சனம் செய்வர். வெண்பொங்கல், பாயசம், பலகாரங்களோடு நைவேத்தியம் செய்வர். வடமொழி, திராவிட வேதங்களால் இறைவனைப் புகழ்ந்து பாடுவர். இந்தத் தோத்திரங்களை ஓதும் அந்தணர்களுக்கு உணவும், பரிசுகளும் அளிப்பர். அடியார்களுக்குத் தீர்த்தப் பிரசாதங்கள் வழங்குவர். இவ்விழாவைத் தொடங்கு முன் முளைப்பாலிகை அமைப்பர்.

விழாவிற்காக மண்டபம், சிறந்த முறையில் அலங்கரிக்கப் பெறும். பகலில் பெருமாளும், திருமகளும், நிலமகளும், விஷ்வக் சேனரும் மண்டபத்தில் எழுந்தருளுவர். அங்கு அவர்களை நைவேத்தியம் கண்டருளச் செய்வர். வேதங்கள், ஆகமங்கள், புராணங்கள், இதிகாசங்கள் இவற்றால் தோத்திரம் செய்து திவ்யப் பிரபந்தங்களை

ஓதுவர். எட்டு விதமான நைவேத்தியம் செய்து பெருமாள் திருமுன் தேங்காய் பரப்பித் தாம்பூலம் படைக்கச் செய்வர். பின்னர் அவற்றை வைணவர்களுக்கு வழங்குவர்.

உத்சவரை ஊர்வலமாக எழுந்தருளச்செய்து ஆழ்வார்களுடன் மண்டபத்தைச் சுற்றி வருவர். இசை, நாட்டியங்கள் நிகழ்த்தப்பெறும்.

இவ்வாறு பத்து நாள்கள் இவ்விழா நடைபெறும். உத்சவம் நடத்துபவர் விழா முடிவில் அர்ச்சகருக்குத் தட்சிணை கொடுக்க வேண்டும்.[8]

ஸ்ரீ பிரசன்னசம்மிதை, அத்தியயன உத்சவம், மோட்ச உத்சவம் என்ற பெயர்களில் இவ்விழாவைச் சுட்டுவர்.

"மார்கழி மாதத்தில் இறைவனுக்கும், அசுரர்களுக்கும் போர் நடந்து, அசுரர்கள் தோல்வியுற, இருள் மறைந்து ஒளி வருவதால், தேவர்கள் துறக்க உலகத்தை அடைந்தார்கள். எம்பெருமான் அனைவருக்கும் அருள் பாலித்தார் என்பதை எடுத்துக்காட்ட மோட்ச உத்சவம் நடைபெறுகிறது. தேவர்கள் இறைவனைத் தொழுது எல்லோரும் இம்மோட்சத்தை அடைய வேண்டும் என்று வேண்டுவதாக இவ்விழா நடைபெறுகிறது.

இவ்விழா இரண்டு பகுதியாக நடக்கிறது. முன் (பகல்) பத்து, பின் (இராப்) பத்து, ஆக இருபது நாள்கள் இவ்விழா நடைபெறும். மூலவரிடம், உத்சவருக்கு இவ்விழா நடத்துவதாக வேண்டிக்கொள்வர். முதலில் காப்பு நாண் அணிவிக்கும் சடங்கு நடைபெறும். உத்சவ பேரரைப் பின்பு மண்டபத்தில் ஆழ்வார்களுடன் எழுந்தருளச்செய்வா. பல்வேறு நைவேத்தியங்கள் செய்யப்பட்டு எல்லா மூர்த்திகளுக்கும் படைக்கப்பெற வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. இவ்வுத்சவம் முடிந்தபின் ஆடல், பாடல்களோடு உத்சவத் திருமேனியை மூலத் தானம் எடுத்துச் செல்லவேண்டும். பின்னர் இப்படையல்களால் சக்தியை மூலவரிடத்தில் அளிக்க வேண்டும். அப்பொழுதுதான் இவ் வுத்சவத்தின் பலன் மூலவருக்கும் கிடைக்கும்.

தசமி அன்று "இவ்வுத்சவம் இன்னும் பத்து நாள்கள் நடத்த வேண்டும்" என்று மூலவரிடத்தில் விண்ணபிக்கப்பெறும். ஏகாதசி அன்று காலையில் காப்பு நாண் கட்டிய பிறகு, உத்சவ விக்கிரகத்தை வடக்கு வாசல் வழியாக எழுந்தருளப் பண்ணவேண்டும். வேத ஒலியோடு இறைவன் திருவுருவிற்கு உபசாரங்கள் செய்து வைகுண்ட வாசல் கதவுகளுக்கும் வழிபாடு செய்து கதவு திறக்கப்பட வேண்டும். மக்கள், வடக்கு வாசலுக்கு வெளியே நிற்பர். பெருமாள் வடக்கு வாயில் வழியாக வெளியே எழுந்தருளுவார். பின்பு பெருமாள் பிரசாதமாக ஆழ்வார்களுக்குத் துளசி மாலையைச் சாற்ற வேண்டும். சாதரா அணிவிக்க வேண்டும். கற்பூர ஆரத்திக்குப் பிறகு பெருமாளைத் திருக்கோயில் கருவறைக்கு எழுந்தருளச் செய்ய வேண்டும்.[9]

அநிருத்த சம்மிதை இவ்விழாவை அத்தியயன உத்சவம் என்னும் பெயரினால் சுட்டும். "ஐந்து அல்லது பத்து நாள்கள் இவ்விழாவை நடத்தலாம்" என்று இந்நூல் கூறுகிறது. விழாவை ஏகாதசியில் தொடங்க வேண்டும். திருமுளை, காப்பு கட்டுதல் உண்டு. வேதம், தர்மசாத்திரம், இதிகாசங்கள், பக்தர்களின் துதி, அவ்வூர்களில் பற்பல மொழிகளில் வழங்கும் பக்திப் பாடல் ஆகியவற்றை ஓதுதல் முதலியன இவ்விழாவில் நடைபெறும்.[10]

புருஷோத்தம சம்மிதை இவ்விழாவைத் 'தனுர்மாசோத்சவம்' என்று சுட்டும். 'தனுர் மாதத்தில் இருபது நாள்கள் இவ்விழா நடைபெறும். அப்போது வேதம், புராணம், இதிகாசம் போன்றவை களுடன் பக்தர்களின் பக்திப் பாடல்களும் பாடப்பெறும்.[11]

## 8:3 திருவரங்கம் கோயிலில் இவ்விழா நடைபெறும் முறை

### 8:3:1 திருநெடுந்தாண்டகம்

முத்தமிழ் விழாவாகிய வைகுண்ட ஏகாதசிப் பெருவிழா திருவரங்கம் திருக்கோயிலில் மட்டும் திருமொழித் திருநாள் என்றழைக்கப்படும். பகல் பத்துத் திருநாள்களின் முதல் நாள் திரு நெடுந்தாண்டக விழாவாகத் தொடங்கப்படும். ஏனைய வைணவத்

தலங்களில் இத்திருநெடுந்தாண்டகம், விழாவின் முதல் நாள் தொடங்கப் பெறுதல் இல்லை.

மேல்கோட்டையில் 'வேதாந்தி' என்னும் மகாவித்வானை, இவ்வூர் பராசரபட்டர், திருநெடுந்தாண்டகத் தத்துவத்தின் துணை கொண்டு வென்று தன் தொண்டராக்கிக் கொண்டார். அவ்வேதாந்தி யே பின்னர் 'நஞ்சீயர்' என்னும் பெயர் கொண்டார். இக்காரணத்தால் இவ்விழா இவ்வூரில் திருநெடுந்தாண்டகத் திருநாளாகக் கொண்டாடப் படுகிறது.[12] மார்கழித் திங்கள் அமாவாசை அன்று இரவு இவ்விழா ELழ்வுறும். மூலத்தானத்தின் காயத்திரி மண்டபத்தில் அரையர்கள் பெருமாளைப் பார்த்தவண்ணம் நின்றவாறே, பெருமாளின் பெருமை களில் எவையேனும் இரண்டைப் பாடித் திருநெடுந்தாண்டகத்தின் முதல் பாடலான 'மின்னுருவாய்' என்பதனைப் பலமுறை இசையோடு பாடி பின்னர் பாசுரம் முழுவதையும் பாடி முடிப்பர்

பெருமாள் அமுது செய்த தேங்காய்த் துருவல், அரையர் களால் கூடியிருக்கும் வைணவப் பெருமக்களுக்கு வழங்கப்படும்.

பின்பு அரையர்களும், பெருமக்களும் மூலத்தானத்தினின்று வெளியே வருவர். அரையர்கள் சந்தனு மண்டபத்தில் பெருமாளைப் பார்த்தவாறு மீண்டும் 'மின்னுருவாய்'[13] என்ற பாசுரத்தைப் பாடி அபிநயம் செய்வார்கள். இப்பாசுரத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளையின் விரிவுரையும் (வியாக்கியான அவதாரிகைகளும்) இரண்டாம் பாடலான 'பாருருவில் நீரெரிகால'[14] 11ஆம் பாடலான 'பட்டுடுக்கும்' வரை 'தம்பிரான் படி' வியாக்யானம் (விளக்கம்) கூறுவர்.[15]

முதல் பாட்டு விளக்கம் முடிந்ததும், திருமங்கை ஆழ்வார் தம் கோயில் திருவாராதனக்காரர் மூலமாக சந்தனம், தாம்பூலம், பணம் போன்றவைகளை அரையருக்கு அனுப்பி வைப்பார். தன் பாசுரத்தைப் பாடிய அரையர்களுக்கு இதன்மூலம் ஆழ்வார் அருள் செய்கிறார் அரையர்கள் அவற்றைப் பணிவுடன் சூழ்ந்திருக்கும் அன்பர்களிடம் காண்பித்து, பெற்றுக்கொள்வார்கள்.[16]

இவ்வாறு திருநெடுந்தாண்டக விழா நிகழ்வுறும்.

## 8:3:2 திருமொழித் திருநாள் (பகல் பத்து)

இவ்விழா மறுநாள் காலையில் தொடங்கி இரவு வரை நடந்தேறும். இவ்வாறே பத்து நாள்களும் நடக்கும். இவ்விழா நிகழ்ச்சியைக் கீழ்க்காணும் பகுதிகளாகப் பிரித்துக் காணலாம்.

1) மூலத்தானத்தினின்று இறைவன் புறப்படுதல். 2) ஆழ்வார், ஆசாரியர்களுக்குச் சிறப்புச் செய்தல் 3) நிவேதனம் வழங்குதல் 4) தோத்திர பாடக் குழுவினர் 5) மண்டபத்திலிருந்து புறப்பாடு 6) அர்க்கிய பாத்தியங்கள் 7) புனித நீர் வழங்குதல் 8) பத்தி உலா வருதல் 9) படியேற்றம் 10) திருவந்திக்காப்பு 11) உள்ளே எழுந்தருளுதல்.

### மூலத்தானத்தினின்றும் புறப்படுதல்

கருவறையினின்று பெருமாள் புறப்பாடு காணும்போது நிகழும் நிகழ்ச்சிகள் அனைத்தும் இவ்விழாவிலும் நிகழ்வுறும். இவ்விழாவில் ஒவ்வொரு நாளும் ஒரு விதமான அங்கி பூண்டு, அதன்மேல் பல்வேறு திருவாபரணங்கள், கிரீடம், சவுரி முடி, ராஜமுடி, குல்லாய் தரித்து, செங்கழுநீர், ரோசா, கதிர்ப்பச்சை ஆகியவை கலந்த பெரிய உருண்டையான மலர்க்கொத்தைப் பெருமாள் தம் பின் குழலில் கத்தையாகச் சாற்றிக்கொண்டு பெரிய திண்டு மாலையைக் கழுத்தில் அணிந்து 'அரங்கராசனாகக்' காட்சி தருவார்.

பெருமாள் மேலைப்படி வழியாகக் கீழே இறங்கி, வடக்கு முகமாய்த் திரும்பி நின்றவுடன், தானீகர் அரையரை 'இசையறியும் பெருமாள்' என்று அழைக்க, அவர்கள் நாதமுனியுடன் (தாளத்துடன்) பெருமாள் அருகில் வந்து தாளத்தால் இசைப்பர். தானீகர், உத்தமநம்பியின் தலையில் ஒரு பட்டுநூலைச் சமர்ப்பிப்பார். இதன் நோக்கம் அவர் இவ்விழாவை முன்னின்று நடத்த வேண்டும் என்பதாகும்.

பெருமாள், சேனைமுதலியார்க்கு அருள்பாலித்து, தம் மாலையை அவரிடம் தந்து அதன் மூலமாக இவ்விழாவினை அவரிடம்

ஒப்பிப்பார். பெருமாள் கிளி மண்டபத்தின் கீழ் நடையில் ஒய்யார நடை நடந்து, கிளி மண்டபத்திற்கு எழுந்தருளுவார். அங்கு தானீகர், 'சாரீயோம்' என்று அருளப்பாடு சொன்னவுடன் 'நட்டு முட்டு' வாத்தியங் கள் முழங்கும்.

கிளி மண்டபத்திலிருந்து பெருமாள் பகல்பத்து மண்டபத்தில் ஏறி, அங்கு துலுக்க நாச்சியார் முன்னர் தன் நடையழகைக் காட்டுவதற்காக ஒய்யார நடையில் எழுந்தருளிப் படியின் கீழ் நிற்பார். துலுக்க நாச்சியார் அனுப்பும் தாம்பூலத்தைப் பெற்றுக்கொண்டு அரையர் சொல்லும் கொண்டாட்டத்தோடு துலுக்க நாச்சியாருக்குப் 'படியேற்றச் சேவை' அனுபவித்து, பகல்பத்து ஆஸ்தான மண்டபமான அர்ஜுன மண்டபத்தில் எழுந்தருளுவார். பின்னர் திரை போடப்படும்.

## ஆழ்வார் ஆசாரியர்களுக்கு மரியாதை

திருநாளுடையபிரான், கலியன், ராமானுசன், பட்டர்பிரான், மதுரகவி, பொய்கை, பூதம், பேயார், சேரன், பாணன், தொண்டரடிப் பொடி, மழிசை, நம்பி, ஆழ்வான், பிள்ளைலோகாசார்யர் என்றவாறு தானீகர் பெருமாளிடமிருந்து உரக்க அருளப்பாடு சாதித்ததும், அர்ச்சகர், தானீகர், ஊழியக்காரர் அனைவரும் ஆழ்வார்களிடம் சென்று அவர்களுக்குப் பெருமாள் பிரசாதமான பரிவட்டம், மாலை, சந்தனம், ஸ்ரீசடகோபன் இவற்றை அருளப்பாடு வரிசையாகச் சாதிப்பார்.

## அரையர் சேவை

ஆழ்வாராசாரியர்களுக்குப் பெருமாள் மரியாதை நடந்தேறியதும் கோயில் மஹாஜனக் கைங்கரியபரர் அரையர்களை அழைத்து வந்து ஆழ்வார்களுக்கு நடுவில் நிறுத்துவார். இரண்டு அருளப்பாட்டினால் தானீகர் அரையர்களைப் பெருமாளிடம் வருவித்துச் சேவை மரியாதை செய்து வைப்பார். அரையர் கோஷ்டியின் நடுவில் நின்றவாறு பாசுர விண்ணப்பம் செய்வார். 4,7,8,9,10 இந்தத் திருநாள்களில் இரண்டு முறை அரையர் சேவை உண்டு. அரையர் சேவை பின்னர் தனித்து விளக்கப்பட்டுள்ளது.

அரையர் சேவை முடிந்ததும் கோஷ்டியிலிருக்கும் அத்யாபகர்கள் பெருமாளிடம் செல்வர். அர்ச்சகர் அவர்களுக்கு ஸ்ரீசடகோபன் சாதிப்பார்.

### நிவேதன வினியோகம்

அலங்காரத் தளிகை வந்ததும், திரையிட்டுப் பெருமாளுக்கு அமுது செய்வர். பின்னர் ஆழ்வாராசாரியர்களுக்கு அருளப்பாடு வரிசையில் அமுது செய்விக்கப்படும். ஆனால், உடையவர் கூரத் தாழ்வான், பிள்ளைலோகாசார்யர் இவர்களுக்கு மட்டும் திருக்கச்சி நம்பிக்குப் பின்னர் அமுது செய்விப்பர். நம்மாழ்வார் அமுது செய்த அமுது வகைகளை அரையர்களுக்கு முழு உரிமையாக்கி, அவர்களது திருமாளிகைக்கு அவைகளை அனுப்புவர். இங்கு இவ்விழாவில் நம்மாழ்வார் இடத்தில் அரையர் பொறுப் பேற்றிருப்பது அறியத்தக்கது.

### தோத்திரப் பாடக்குழுவினர்

ஆழ்வாராசாரியர்கள் ஸ்ரீசடகோபன் பெற்றுக்கொண்டு, நாள்தோறும் பராங்குசபஞ்சவிம்சதி, நட்சத்திர மாலிகா முதலான தோத்திரப் பாடக்குழுவினருடன் மண்டபத்திலிருந்து புறப்பட்டு, நம்மாழ்வார் சன்னிதிக்குப் போவார்கள். மதுரகவி ஆழ்வார் மட்டும் சன்னிதிக்குள் சென்று ஆஸ்தானத்தில் எழுந்தருளுவார். வெளியே இருக்கும் மற்றவர்களுக்கு மதுரகவி செய்து வைக்கும் பாவனையாகக் கற்பூர ஆரத்தி நடக்கும்.

நம்மாழ்வார் அணிந்திருக்கும் மலர் மாலைகளில் ஒன்றைப் பெரியாழ்வார்க்கும் மற்றொன்றை உடையவருக்கும் சாதித்து, எல்லோருக்கும் நம்மாழ்வாரின் பாதுகையாக 'மதுரகவியும்' சாதிக்கப்படும்.

பெரியாழ்வார், உடையவர், கூரத்தாழ்வான், பிள்ளைலோகாசார்யர் இந்நால்வர் தவிர மற்றவர்கள் அவரவர் சன்னிதிக்கு

எழுந்தருளுவார்கள். பின்னர் இந்நால்வரும் புறப்பட்டு கார்த்திகைக் கோபுரத்திற்கு வெளியில் வந்து நிற்பர். பெரியாழ்வார் கிழக்குப் புறம் நோக்க, அவர் எதிரில் கூரத்தாழ்வான், பிள்ளைலோகாசார்யர் மேற்குப்புறம் நோக்கி நிற்க, இருவருக்கும் மத்தியில் உடையவர் நிற்பார். நம்மாழ்வார் தனக்குச் சாதித்த மாலையைப் பெரியாழ்வார், உடையவருக்குச் சாதித்துத் தம் சன்னிதிக்கு எழுந்தருளுவார். உடனே உடையவர் கிழக்குப்புறம் திரும்பி முன்பு நம்மாழ்வாராலும் இபபோது பெரியாழ்வாராலும் அணிவிக்கப்பட்ட மாலைகளில் ஒன்றைக் கூரத்தாழ்வானுக்குச் சாதித்து அவரை அவர் சன்னிதிக்கு அனுப்பி விட்டு, மற்றொன்றைப் பிள்ளைலோகாசார்யருக்குச் சாதித்து, அவருடனும், தோத்திரப்பாடக் குழுவினருடன் புறப்பட்டு உடையவர் தம் சன்னிதிக்கும், பிள்ளைலோகாசார்யர் அவரது சன்னிதிக்கும் எழுந்தருளுவர். உடையவர் ஆஸ்தானத்தில் எழுந்தருளினபிறகு, தோத்திரப் பாடக் குழுவினருக்குத் தீர்த்தப் பிரசாதங்கள் வழங்கப்படும்

"........... எந்தை பிரான் தனக்கு
அடியார் அடியார் தம் அடியார் அடியார்"[17]

என்ற வைணவத் தத்துவத்தை மேற்கண்ட நிகழ்ச்சி விளக்குவதாகும்.

இதற்குள் பெருமாள் பகல்பத்து மண்டபத்திலிருந்து புறப்பாட்டிற்கு ஆயத்தமாகி, தோத்திரப்பாட குழுவினர் மற்றும் பொதுமக்கள் வருகைக்குக் காத்திருப்பர்.

## மண்டபத்திலிருந்து புறப்பாடு

கதிரவன் மறையும் மாலை நேரத்தில் பெருமாள் அர்ஜுன மண்டபத்திலிருந்து புறப்பாடு கண்டு, துலுக்க நாச்சியாருக்கு ஒய்யார நடை காண்பித்து, வழியில் அங்கங்கே பொதுமக்கள் நடத்தும் உபயங்கள் கண்டு, அவர்கள் படைக்கும் வடைபருப்பு, பானகம் முதலியவைகளை அமுது செய்து, வாத்திய இசை முழங்க, கருவூல நாலுகால் மண்டபத்தில் காட்சி வழங்குவார்.

பெருமாள் 'நின்றால் நடனம் ; நடந்தால் வாத்திய முழக்கம்' என்று இவ்வைபவத்தை இலட்சுமி காவியம் சிறப்பாக வருணிக்கும்.[18]

கருவூல மண்டபத்தில் 'சேவி' என்று அருளப்பாடு ஆனதும் பெருமாள் உலாப்பாட்டு அனுபவித்துக்கொண்டு எதிரிலிருக்கும் யாகசாலை மண்டபம் வரை எழுந்தருளி ஒய்யார நடையில் திரும்பவும் கருவூல மண்டபம் வந்தடைவார்.

## அர்க்கிய பாத்தியங்கள்

'வட்டில் பிடித்தேல்', 'திருக்கரகக்கையேல்' 'சுந்தரபாண்டியம் பிடித்தேல்' என்று தானீகர் அருளப்பாடு செய்ததும், 'இதோ வருதே' என்று சொல்லிக் கொண்டு அந்தந்தப் பாத்திரங்களை ஊழியக்காரர் கள் கொண்டு வருவர். பிறகு 'அருளப்பாடு வேத்திரபாணி' என்றதும் சாத்தாத வைணவன், அர்க்கியபாத்தியம் சமர்ப்பிக்கும் வரையில் கட்டியம் கூறுவார். 'திருவடி விளக்குவதேல்' என்று சொன்னதும், ஊழியக்காரர் கொடுக்கும் உட்சாத்தினால் அர்ச்சகர் பெருமாளுடைய முகத்தையும் பாதங்களையும் துடைப்பார். இது பெருமாள் உலாப் போந்ததால் ஏற்பட்ட அவருடைய களைப்பைப் போக்குவதாக ஐதீகம். 'அடைக்காயமுது நீட்டுவான்', 'திருச்சங்கு பரிமாறுவான்' என்றதும், அர்ச்சகர் பெருமாளுக்குப் பானகம் தாம்பூலங்களை அமுது செய்விப்பர்.

## தீர்த்த வினியோகம்

அர்ச்சகர், உத்தமநம்பி, தானீகர் மூவரும் தீர்த்தம் பெற்றுக் கொண்ட பின்னர், தலத்தார்களுக்கு அருளப்பாடாகும். ஸ்ரீரங்க நாராயண ஜீயர், பட்டர், அண்ணங்கார் இம்மூவரும் பெருமாளுக் கெதிரில் வந்து தீர்த்தப் பிரசாதங்களைப் பெற்றுக் கொள்வர். பின்னர் 'அருளப்பாடு பெரியநம்பி இராமானுசமுடையார்' என்று தானீகர் சொல்ல தீர்த்தக்காரர்களுக்குத் தீர்த்த வினியோகம் நடைபெறும். ஒவ்வொருவராகப் பெருமாளிடம் வந்து மாலை, ஸ்ரீசடகோபம் பெற்றுக் கொள்வர். பிறகு வடைப்பருப்பு வழங்கப்பெறும்.

### பத்திஉலா வருதல்

பெருமாள் பத்தி உலாவாக ஒய்யார நடையில் யாகசாலை வரை சென்று, மீண்டும் அதே ஒய்யார நடையில் மேலப்படி வந்து நிற்பார்.

### படியேற்றம்

பெருமாள் வந்து கிழக்குப்புறம் திரும்பி நிற்பார். சாத்தாத வைணவன் வாரி இறைக்கும் பச்சைக் கற்பூரத்தோடு, 'எச்சரிக்கை' என்ற ஒலி முழக்கத்துடன் பெருமாள் யானைபோல் ஆடியாடி மேலப்படி ஏறி, மிக வேகத்துடன் மேற்குப்புறம் திரும்பி நிற்பார்.

### திருவந்திக்காப்பு

முறைக்காரர் 'தட்டி' கொண்டு வந்ததும், 'அருளப்பாடு பெரியகோயில் நம்பி' என்று அருளப்பாடாகும். திருவரங்கத் தமுதனார் வந்து திருக்காப்புக் கட்டியம் கூறுவர்.

'மங்கள வாத்தியம்' என்று அருளப்பாடானதும் நட்டுமுட்டு முழங்கும். கடதீபம் ஏற்றப்பட்டுக் கீழே வைக்கப்படும்.

'சாமானாயிந்தே சாமா' என்று தானிகர் சொல்ல, வைணவன் 'பேசாதே சாத்து' என்பார்.

அர்ச்சகர் பெருமாளுக்கு அர்க்கிய பாத்தியம் சமர்ப்பித்துத் "திருவடி விளக்குவதேல்' என்றதும் உட்சாத்தினால் பெருமாளுக்குத் திருமுகமும், திருவடியும் துடைக்கப்படும்.

'பரிமாறுவான்' என்றதும் கீழே இருக்கும் கடதீபத்தினால் பெருமாளுக்குத் திருவந்திக்காப்பு ஆகும்.

### உள்ளே எழுந்தருளுதல்

பெருமாள் திரும்பி, ஸ்ரீபாதம் தாங்குவார் திருக்கரத்தில் எழுந்து, பாம்பின் செலவு போல (சர்ப்பகதியில்) மூலத்தானத்தின் உள்ளே எழுந்தருளுவார்.

இவ்வாறு பகல்பத்தின் ஒன்பது நாள்களும் நடைபெறும். பகல்பத்தின் பத்தாம் நாள் 'மோகினி அலங்காரத் திருநாள்' ஆகும். இதை 'மோகனாவதாரம்' என்றும் தமிழில் 'நாச்சியார் திருக்கோலம்' என்றும் கூறுவர். பெருமாள் அன்று காலை நாச்சியார் திருக்கோலம் (பெண் வேடம்) சாற்றி மூலத்தானத்திலிருந்து புறப்பாடு காண்பார்.

மூலத்தானத்திலிருந்து நாச்சியார் திருக்கோலம் தாங்கிப் பெருமாள் பகல்பத்து மண்டபத்துக்கு முன்னாட்களில் புறப்பாடு கண்டதுபோல் கண்டு, அர்ஜுன மண்டபம் அடைவார். அன்றைய தினம் நடைபெறும் இரண்டு அரையர் சேவைகளும் உடன் நிகழ்வுற்று, வேத விண்ணப்பம் முதலியன நிகழ்வுற்று, திரைக் குள்ளேயே தீர்த்த வினியோகம் ஆகும். இன்று அடியார் கூட்டத்திற்குப் பிரசாதம் வ்ழங்குத்தல் இல்லை.

ஒரு காலத்தில் பெருமாள் இவ்வாறு மூலத்தானத்திலிருந்து நாச்சியார் திருக்கோலம் கண்டு அர்ஜுன (பகல்பத்து) மண்டபம் அடைதலில்லை. பெருமாள் தன் வடிவிலேயே, கடந்த ஒன்பது நாள் களைப் போன்று புறப்பாடு கண்டு பகல்பத்து அர்ஜுன மண்டபம் அடைவார்.

அரையரது இராவணவதை நாடகம் பின்னர் பகல்பத்து மண்டபத்தில்தான் பெருமாள் நாச்சியார் திருக்கோலம் பூணுவார். இம்மாற்றத்தின் காரணம் காலையிலிருந்தே மக்கள் அவரைத் 'தாயார் திருக்கோலத்தில்' வழிபட வேண்டும் என்ற வேட்கையாகும்.

## கருட மண்டபத்தில் நடைபெறும் நிகழ்வுகள்

பெருமாள் தாயார் திருக்கோலத்தில் எல்லோருக்கும் சேவை சாதித்துக் கொண்டு மிகவும் மெதுவாக கருடமண்டபம் வந்தடைவார். ஆழ்வார்களும், ஆசாரியர்களும் பெருமாளைச் சூழ்ந்து கருட மண்டபத்தில் இருப்பர்.

கருட மண்டபத்தில் அமைந்துள்ள மண்டபத்தின் வடக்கு திசை நோக்கிப் பெருமாள் நிற்பார். எல்லோருக்கும் சேவைசாதிக்கும்

பொருட்டு நெடுநேரம் திருப்பாதம் தாங்குவார் தோளின் மேலேயே எழுந்தருளியிருப்பார். கருவூல மண்டபத்தில் நடக்க வேண்டிய அர்க்கிய பாத்தியம் முதலிய எல்லாச் செயல்களும் இம்மண்டபத்தில் இந்நாளில் நடைபெறும்.

பெருமாள், ஆழ்வாராசாரியர்களுக்கு அருளப்பாடிட்டு கோயில் கணக்குப்பிள்ளை படிக்கும் கணக்குப்படி 'சர்வாங்க மோகனக் கைலி ஒன்று' என்றவுடன் ஆழ்வார்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு உத்திரீயத்தைப் போர்த்தி, சந்தனமும் ஸ்ரீசடகோபமும் சாதிக்கப்படும்.

இந்நிகழ்ச்சி திருமொழி சாற்றுமுறைக்காக ஆழ்வாராசாரியர் களுக்கு நடைபெறும் சிறப்பாகும். அரையர்களுக்கு அருளப்பாடாகி அவருடைய இசையைக் கேட்டவாறு பெருமாள் உள்ளே எழுந் தருளுவார். மேலப்படியில் திருவந்திக்காப்புக் கண்டருளிப் பெருமாள் மூலத்தானம் எழுந்தருளுவார்.

'இன்று பெருமாள் நச்சியார் திருக்கோலத்திலிருப்பதால் மேலப்படிப் படியேற்றத்தின்போது அரையர் நாச்சியார் பற்றிய பெருமைகளைச் சொல்வார்.' மோகினி அலங்காரத்தின காரணம், 'கள்வன் கொல் பிராட்டி' எனப்படும் திருமங்கையாழ்வாருக்குப் பெருமாளிடம் உண்டான நாயகி பாவத்தை இன்று பெருமாளே அனுபவிப்பதாக ஓர் மரபு.

இவ்வாறு பகல்பத்து திருமொழித் திருநாள் பத்து நாள்கள நிகழ்வுறும்.

## 8:3:3 திருவாய்மொழித் திருநாள் (இராப்பத்து)

மார்கழி ஏகாதசியன்று முதல் இராப்பத்து திருநாள் கொண்டாடப்படுகிறது. இவ்விழாவுக்கென்று தலத்தார் பட்டர் ஒருவர் உண்டு. அவர்தான் பெருமாளுக்காக, வைகுண்டத் திருவாசலைத் திறந்துவைப்பார். இவ்விழா நிகழ்ச்சியைக் கீழ்க்காணும் பகுதிகளாக பிரித்துக் காணலாம்.

1. பட்டரை அழைத்து வருதல் 2. வேத விண்ணப்பம்
3. வேதபாராயண விவரம் 4. திருக்கொட்டகை நிகழ்ச்சி
5. ஆயிரக்கால் மண்டப நிகழ்ச்சி 6. வீணை ஏகாந்தம்
7. ஆறாம் திருநாள் 8. ஏழாம் திருநாள்
9. எட்டாம் திருநாள் 10. ஒன்பதாம் திருநாள்
11. பத்தாம் திருநாள் 12. ஆழ்வார் திருவடி தொழுதல்

### பட்டரை அழைத்து வருதல்

பட்டரை அழைத்து வரப் பெருமாளுடைய விருதுகள் அவரது திருமாளிகைக்குச் செல்லும். பட்டர் தம் சீடர்களுடனும், ஊழியக் காரர்களுடனும் பெருமாளின் விருதுகள் புடைசூழ ஆர்யபட்டாள் வாசல் வந்தடைவார். உடன் ஆர்யபட்டாள் வாசல் கதவு சாத்தப் படும். அவர் வருவதற்குள் பொதுமக்கள் கோயிலுள் வந்துவிடுவர். இக்கதவு பெருமாள் புறப்பட்டு வைகுண்டத் திருவாசல் திறந்த பின்னரே திறக்கப்படும். இத்திருவாய்மொழித் திருநாள் முழுவதும் இதே வழக்கம் கடைப்பிடிக்கப்படும். 'அவர் வருவதற்குள் பொது மக்கள், பணியாளர்கள் மற்றும் கோயில் மரியாதைக்காரர்கள் அனைவரும் குலசேகரன் திருவீதி, இராசமகேந்திரன் திருவீதி, சந்தன மண்டபம் போன்ற இடங்களில் குழுமியிருப்பர்.

### வேதவிண்ணப்பம்

பட்டர் வலம் வந்து சந்தன மண்டபத்தில் உட்கார்ந்ததும், கோயில் மணியாரர் பட்டரை வணங்கி, எழுந்தருளப் பண்ணுவார்.

ஏகாதசி அன்று மட்டும் பெருமாள் வைகறைப்போதில் புறப்பட்டுத் திருமாமணி மண்டபம் (ஆயிரங்கால் மண்டபம்) சேர்வார். தொடர்ந்து மற்ற நாள்களில் நடுப்பகலில் புறப்பாடு கண்டு, திருமாமணி மண்டபம் அடைவார்.

தானீகர் மூலத்தானத்தின் உள்ளிருந்து அருளப்பாடு சாதிக்க பட்டர், தானீகரிடம் ஒரு தேங்காயையும் ஒரு பணத்தையும் கொடுத்து,

பெருமாளை வணங்குவார். பட்டருக்குப் பரிவட்டம் கட்டப்படும். பட்டர், மூலத்தானத்தின் உள்ளே சென்று யஜுர்வேதம் முதல் பஞ்சாதியைச் சொல்லுவார். பிறகு ருக், யஜுஸ், சாமம் சந்தஸ்ஸாமம், அதர்வணம், சுக்லயஜுஸ், ஏகாயன சாகை இவைகளுக்குத் தனித்து அருளப் பாடாகும். அந்தந்த வேதத்தை விண்ணப்பம் செய்பவர்கள் ஒரு தேங்காயையும் ஒரு பணத்தையும் கொடுத்து மூலத்தானத்தின் வெளியில் சந்தன மண்டபத்தில் இருந்தவாறு வேதங்களைத் தொடங்குவார்கள்.

நாள்தோறும் திருவாராதன காலங்களில் வேத விண்ணப் பத்தில் நான்கு வேதங்களும் பிறகு புராணமும், இயலும் இல்லாமல், சந்தஸ்ஸாமம், சுக்லயஜுஸ், ஏகாயன சாகை ஆகியவை ஓதப்பெறும்.

வேத விண்ணப்பம் முடிந்ததும் பட்டர் தமக்குத் துணை யாவாருடன் பகல்பத்து மண்டபத்திலிருந்து வேதபாராயணம் செய்து கொண்டிருப்பார்.

### வேதபாராயண விவரம்

யஜுர் வேதத்தில் உள்ள எண்பத்திரண்டு பிரச்சனங்களில் கடைசியிலுள்ள பிரச்சனங்கள் திருமணம் முதலிய மனிதச் செயல் பாட்டிற்காக ஏற்றபட்டவையாகையால் அவற்றைத் தவிர எஞ்சிய எண்பது பிரச்சனங்களும், நாளுக்கு எட்டு வீதம் இங்குச் சேவிக்கப் படுகின்றன.

### திருவாய்மொழித் தொடக்கம்

பின்னர் அரையர்களை எழுந்தருளப் பண்ணி, திருவாய் மொழியில் 'உயர்வற உயர் நலம்' என்னும் பாட்டு தொடங்கப்படும். பெருமாள் புறப்பட்டு, மேலப்படியில் தலத்தார் முதலானோருக்குச் சிறப்பு செய்வித்து, உத்தமநம்பிக்குப் பரிவட்டம் கட்டி, கீழே இறங்கி, வடக்கு முகமாய்த் திரும்புவார். அருளப்பாடு, 'திருவரங்கன் கூட்டத்தார்'

என்று கூற, அருளப்பாடு ஆகும். திருவரங்கன் கூட்டத்தாராகிய 'உத்தமநம்பி வழிவந்தார், திருவரங்கத்தமுதனார் வழிவந்தோர், அழகிய மணவாளன் சபையார், பட்டர் சிஷ்யர்கள், வாதூல தேசிகர் சிஷ்யர்கள், அனைவரும் திருவரங்கத்தமுதனாரின் வழித்தோன்றல் 'பிள்ளைப் பெருமாளையங்கார்' அருளிய பாடல்களைச் சேவிப்பார் கள்.

பெருமாள் இரண்டடி சென்றதும், 'திருக்குருகூர்தாசர்' 'திருநறையூர் தாசர்' என்று சொல்லிப் பெருமாளுடைய பட்டிலிருந்து இரண்டு நூல் எடுத்து சாத்தாத வைணவர்களின் தலையில் வைக்கப்படும். இன்று பெருமாள் இரத்தின அங்கியுடன் இருப்பதால் ஒய்யார நடையில் செல்லுதல் இல்லை. மறுநாளிலிருந்து கிளி மண்டபத்தின் கீழ்ப்பகுதி துரைப்பிரதட்சணம், நடைக்கொட்டகை, பெரிய கொட்டகை, ஆயிரங்கால் மண்டபம் இப்படி விசாலமாயுள்ள இடங்களிலெல்லாம் ஒய்யார நடை உண்டு.

பெருமாள் நாழிகேட்டான் வாசல் தாண்டி வலப்புறமாய் துரை மண்டபம் எழுந்தருளியதும் வைகுண்டத் திருவாசல் அருகில் பட்டருக்கு அருளப்பாடாகி, யஜுர்வேதம், எட்டாம் பிரசன்னம் சாற்றுமுறை செய்யப்படும். பட்டருக்குப் பரிவட்டம் கட்டித் தீர்த்தம், சந்தனம் சாதித்த பிறகு, மற்ற வேதங்களுக்கும் அருளப்பாடாகி, வேதம் சொல்பவர்களுக்குப் பரிவட்டம் கட்டாமல், தீர்த்தம், சந்தனம் கொடுக்கப்படும். அடியார் கூட்டத்திற்குத் தீர்த்தம், வடைப்பருப்பு வழங்கப்பெற்றுத் திருவாசல் திறந்து பெருமாள் வெளியே எழுந்தருளுவார். அடியார் குழுவிற்கும் பிரசாதம் வழங்குதல் போன்றவைகள் நடைபெறும்.

ஆழ்வார்களும், ஆசாரியர்களும் ஸ்ரீ சடகோபம் பெற்றுக் கொண்டு தோத்திரப் பாடக் குழுவினரோடு புறப்படுவது முதலான பகல்பத்தில் நடைபெற்ற அத்துணைச் செயல்களும் இராப்பத்திலும் உண்டு.

## திருமாமணி மண்டபத்திலிருந்து புறப்பாடு

பனிக்காலமாகையால் பெருமாள் இரவு 'டோரா' (வெல்வெட் கோட் குல்லாய்) போர்த்திக் கொண்டு புறப்பட்டு, கொட்டகையில் மல்லாரி என்னும் மல்லகத்தியில் போய், குளிர்ப் பனிபடாதிருக்க விளாமிச்சம் வேரினால் கட்டப்பட்ட சப்பரத்தில் ஸ்ரீபண்டாரம் வழியாக ஆரியபட்டாள் வாசல் வரை அரையர் செய்யும் கானத்தோடு செல்வார். அங்குத் தானீகர் 'திறோ' என்று கூற, ஆர்யபட்டாள் வாசலைத் திறப்பித்து, உள்ளே எழுந்தருளுவார். பெருமாளும் மற்றவர்களும் உள்ளே எழுந்தருளியதும் அந்த வாசல் சார்த்தப்படும். நாழி(கை) கேட்டான் வாசலும் அப்படியே, 'திறோ' என்று கூற, திறக்கப்பட்டு அங்கே படியேற்றம் அனுபவித்து பெருமாள் உள்ளே எழுந்தருளுவார் உடனே அந்த வாசலும் சாத்தப்படும்.

'திறோ' என்ற வழக்குச் சொல் திறவுங்கள் என்ற பொருளைத் தரும். பெருமாள் வாசலில் வந்து நிற்கின்றார். கதவினைத் திறவுங்கள் என்று சொல்லும் முறையில் 'திறோ' என்ற சொல்லினைத் தானீகர் சொல்கிறார்.

### வீணை ஏகாந்தம்

பெருமாள் இராசமகேந்திரன் வாசல் சென்று, மேற்கில் திரும்பியதும் அங்கிருந்து வீணை வாசிக்கப்படும். ஒரு காலத்தில் விஜயரங்க சொக்கநாதரின் மனைவியார் இந்த வீணை வாசிப்பு ஏகாந்தத்தின்போது நடனமாடினார் என்று சொல்லப்படுகிறது

வீணை மிராசுதாரர் வீணை வாசிக்க, சாத்தாத வைணவர்கள் 'எச்சரிக்கை' 'எச்சரிக்கை' 'சாத்து' என்று கோஷித்துக் கொண்டு (சப்தம் கொடுத்துக்கொண்டு) வர அவர்கள் வாரியிறைக்கும் பச்சைக் கற்பூரப்பொடி கலந்த பூவிதழ்களோடு, பெருமாள் இராசமகேந்திரன் திருவீதி மேலப்படியில் வீணை கானத்தோடு படியேற்றம் அனுபவித்துக் கொண்டு உள்ளே எழுந்தருளுவார்.

பெருமாள் உள்ளே எழுந்தருளி, மணியாரருக்கு அருள் வழங்கி, அவரைப் பெரு மரியாதையோடு வெளியே அனுப்பியபின் மூலத்தானம் எழுந்தருளுவார். திருக்காப்பு நீக்கி, மங்களார்த்தி ஆன பிறகு, நாழி(கை)கேட்டான் வாசலும், ஆர்யபட்டாள் வாசலும் திறக்கப் படும். நாள்தோறும் இதே முறையில் நிகழும்.

இரண்டாம் திருநாள் முதல் ஐந்தாம் திருநாள்வரை பெருமாள் திருவாபரணம் கூடத் தெரியாமல் போர்த்திக் கொண்டு உள்ளேயிருந்து புறப்பட்டு, வைகுண்டத் திருவாசலில் திரை சமர்ப்பித்து, போர்வையைக் களைந்து மாலை சாற்றிக்கொண்டு பிறகுதான், வைகுண்டத் திருவாசல் திறக்கப்படும்.

முக்தசேதனனை, அமானவன் மண்ணுலகில் இருந்து எடுத்துச் செல்லும்போது அவனுக்கு உலகச் செல்வத்தில் வேட்கை பிறவாமலிருக்கப் போர்த்துக் கொண்டு போகிறார் என்பர். இரண்டாம் திருநாள் - முதல், வைகுண்ட திருவாசலிலிருந்து ஆயிரக்கால் மண்டபம் வரை வழிநடை உபயம் நடைபெறும். அங்கங்கே பானகமும், வடைப் பருப்பும் அமுது செய்விக்கப்படும்.

மூலத்தானத்தில் வேத விண்ணப்பம் நடந்ததுபோன்றே, திருவாசல் திறக்கும் முன்னர் துரை மண்டபத்தில் உள்ள நாலுகால் மண்டபத்தில் பெருமாள் திருமுன் வேத விண்ணப்பம் நிகழ்வுறும்.

## திருக்கொட்டகை நிகழ்ச்சி

வைகுண்டத் திருவாசல் திறந்ததும், பெருமாள் வெகு விரைவாகப் புறப்பட்டு, ஆயிரக்கால் மண்டபத்தின் முன் மணல்வெளி யில் அமைந்துள்ள பெரிய கொட்டகையில் நிற்பார். அவ்விடத்தில் அமைந்துள்ள நாலுகால் மண்டபத்திலிருந்து, அரையர்களுக்கு 'திருவாய்மொழி விண்ணப்பம் செய்வார்' என்று அருளப்பாடாகி 'மலைப்பு' என்னும் அபிநயத்துடன் பெருமாளிடம் வந்து சேவை மரியாதை பெற்றுக்கொண்டு முதல் திருநாள் ஆகையால், திருவாய்மொழி முதல் பத்தின் முதல் பாட்டு 'உயர்வற'[19] தாளத்தோடு

சேவிப்பர். இப்படியே பத்து நாள்களுக்கும் பத்துக்களில் ஒவ்வொரு பத்துக்குமுள்ள முதல் பாட்டு சேவிக்கப்படும்.

பெருமாள் இக்கொட்டகையில் நீண்டநேரம் பல்லாயிரக் கணக்கானவர்களுக்குச் சேவை சாதித்தவண்ணமிருப்பார். அரையர் படியேற்றக் கொண்டாட்டங்களோடு ஆயிரங்கால் மண்டபம் செல்வார். அங்கே திருவந்திக்காப்பாகி திருமாமணி மண்டபத்தில் எழுந் தருளுவார்.

## ஆயிரங்கால் மண்டபத்தில் நடக்கும் நிகழ்ச்சிகள்

அலங்காரம் அமுது செய்ததும், அரையர் சேவை நடைபெறும். ஒவ்வொரு பத்திலும் முதல் பாட்டுக்கு அபிநய வியாக்கியானங்கள் நிகழ்த்தப்பெறும். இத்திருநாளில் அரையர் சேவை இரண்டில்லை. பகல் பத்துத் திருநாளைப் போல திருப்பணி யாரம் வழங்குதல், திருவாராதனம், வேதவிண்ணப்பம், கடதீபம், வெள்ளிச் சம்பா நிவேதனம், தீர்த்த விநியோகம், ஆழ்வாராசாரியர்களுக்கும், இரண்டாம் திருநாளன்று பெருமாள் திருவாசல் திறந்து வெளிவந்து, உபயங்கள் அமுது செய்து வரும்வரை, மணல்வெளியில் 'ஸ்ரீரங்கராஜஸ்தவ கோஷ்டி' நம்மாழ்வார், திருமங்கை மன்னன், உடையவர் திருமுன்னர் பராசர பட்டரின் 'ஸ்ரீரங்கராஜஸ்தவத்தைக்' கானம் பண்ணிக்கொண்டு பெருமாளை எதிர்பார்த்துக் கொண்டிருப்பர்.

பெருமாள் மணல்வெளி வந்ததும், நம்மாழ்வாரைப் பெருமாள் முன் எழுந்தருளப் பண்ண, இருவரும் ஒருவரை ஒருவர் காண கின்றனர். திருவாசல் திறந்து வந்ததும், பெருமாள் ஆழ்வாரைக் காணாநின்றார் என்னும் ஐதீகம் இக்காட்சி மூலம் வெளிப்படும். இந்நிகழ்ச்சி இவ்விழாவில் (இராப்பத்து) நாள்தோறும் நடந்தேறும்.

## ஆறாம் திருநாள்

ஆறாம் திருநாளன்று அஹோபிலமடத்திலிருந்து பெருமா ளுக்குச் சீர்வரிசைகள் செல்லும். அஹோபிலமடம் 'வைணவத்தின்

வடகலையைச்' சார்ந்தது. அன்றைக்கு ஒருநாள் மட்டும் மடத்தி லிருக்கும் ஸ்ரீகாரியம் சுவாமி பெருமாளுக்குச் சீர் கொடுக்கும் பேற்றிற் காகத் தம் மடத்தில் மட்டும் தென்னாசாரிய (தென்கலை) முறைகளைப் பின்பற்றிச் செயல்களை நடத்துகிறார். மடத்தின் ஊழியர்களுக்கு அன்றைய நாளில் மரியாதைகள் செய்யப்படும்.

## ஏழாம் திருநாள்

இன்று திருவாய்மொழி ஏழாம்பத்தின் 'கங்குலும் பகலும்' என்ற பாட்டு. இது நாயகன் நாயகி பாவத்தில் அமைந்துள்ளது. நம்மாழ்வார் தமக்குப் பெருமாளிடம் உண்டாகும் அன்பை நாயகியாக தன்னையும், பெருமாளை நாயகனாகவும் பாவித்துப் பாடுவதாக உள்ளது. அது குறித்து இன்றைக்கு நம்மாழ்வார் நாச்சியார் திருக் கோலம் பூண்டிருப்பார்.

மணல்வெளியில் இன்று ஸ்ரீரங்கராஜஸ்வத்துக்குப் பதிலாக பராசரபட்டரால் நாச்சியார் பொருட்டு அருளிச்செய்த 'ஸ்ரீ குணரத்ந கோசம்' சேவிக்கப்படும்.

பெருமாள், அர்ச்சகர் மூவரின் கைத்தலத்தில் திருமாமணி மண்டபத்தின் மேல் குறட்டில் எழுந்தருளுவார். நாச்சியார் கோலத்தி லிருக்கும் நம்மாழ்வாருக்குப் பெருமாள் கைத்தலத்தில் சேவை காட்டுவ தாகச் சொல்லப்படும். அரையர் 'கங்குலும் பகலும்' தொடங்கிப் பத்துப் பாடல்களையும் பாடுவார். அலங்காரம் அமுது செய்த பிறகு, இரண்யவதத்துக்கு அருளப்பாடாகும். இரண்ய வதத்துக்காக அரையர் தீர்த்தமும் சடகோபமும் சாதிப்பார்.

## எட்டாம் திருநாள்

இன்றைய விழாவை வேடுபரி என்பர். இது திருமங்கை மன்னர் வாழ்வில் நடந்த ஒரு நிகழ்ச்சியைக் காட்சியாக்குகிறது. "திருமணமாகிச் செல்லும் பிராமணத் தம்பதியர்போல் பெருமாளும் தாயாரும் செல்லும்போது திருமங்கை மன்னர் அவர்களை வழிமறித்துப்

பொருள்களைக் கவர்ந்து கொண்டார். அந்நிலையில் பெருமாள் திருமங்கை மன்னர் செவியில் மந்திரோபதேசம் செய்யவும், அவர் மெய்ப்பொருளுணர்ந்து பெருமாளை வழிபட்டார். இந்நிகழ்ச்சியே இன்றைய விழாவின் முற்பகுதிக் காட்சியாகிறது. பெருமாள் அவர் காதில் மந்திரத்தை ஓதியதால் வழிப்பறியாளரான அவர் தம் திருட்டுத் தொழிலை விடுத்துப் பெருமாளின் பக்தரானார்.[20]

எட்டாம் நாளான இன்று பெருமாள் குதிரை வாகனத்தில் எழுந்தருளுவார். அழகியமணவாளன் மண்டபத்திலிருந்து வழக்க மாகச் செல்லும் வைகுண்டத் திருவாசல் வழியாகச் செல்லாது. ஆர்யபட்டாள் வாசல் வழியாக மணல்வெளியை அடைவார். வைகுண்ட திருவாசல் மண்டபத்தில் நடைபெற வேண்டிய வேத விண்ணப்பம் அழகிய மணவாளன் மண்டப வாசலிலேயே நடந்தேறும். மணல்வெளியில் பிரவேசித்ததும், அங்கு வையாளி, கோணல் வையாளி முதலானவைகளைச் செய்தருளுவார்.

திருமங்கை ஆழ்வார், கத்தி, கேடயம் உடைவாள்களுடனும், தனது பரிவாரங்களுடனும் வந்து, பெருமாளின் வெள்ளித்தடி, தங்கக் குடை, பெட்டி முதலியவைகளைக் கொள்ளையடித்துக்கொண்டு ஓடுவார்.

பெருமாள் தனது பொருள்கள் திருடப்படுவதை உணர்ந்து ஓடிப்போய் அவரைப் பிடிக்க முடியாமல் திரும்பி வருவார். பறிமுதல் செய்யப்பட்ட கணக்கினைக் கோயில் கணக்குப்பிள்ளை பெருமாள் முன்பு வாசிப்பார். திருமங்கை ஆழ்வாரைப் பிடித்துவரக் காவல் காரர்களைப் பெருமாள் அனுப்புவார். அவர்கள் திருடன் போன பாதையிலேயே காலடி பார்த்துப்போய், வழியில் அகப்பட்ட வெள்ளித் தடியை 'வெள்ளித்தடி மச்சம்' என்று சொல்லிக்கொண்டு எடுத்து வருவர். தானீகர் வெள்ளித் தடியை வாங்கி உயரப் பிடித்துப் பெருமாளுக்குக் காட்டுவார்.

இதற்குள் திருமங்கை ஆழ்வாரும் காவல்காரர்கள் கையிலகப்பட்டு, வணங்கிய தோற்றத்தோடு பெருமாளிடம் வருவார்.

பெருமாள், தம்முடைய அணிவகையான கோரா, குல்லாய் முதலிய வற்றை ஆழ்வாருக்குச் சாதிப்பார். அரையரும் அருளப்பாடு கண்டு, தாளத்தோடு பெருமாளிடம் வந்து பெரிய திருமொழியின் 'வாடினேன் வாடி' என்ற பாடலைச் சேவிப்பர். பெருமாளின் அருளினைத் திருமங்கை ஆழ்வார் பெறும் இந்நிகழ்ச்சி, ஒரு நாடகம்போல் நடைபெறுகிறது.

### ஒன்பதாம் திருநாள்

எல்லாச் செயல்களும் வழக்கம்போல் நிகழ்வுற்று, அன்று இரவு வீணை ஏகாந்தம் முடிவுற்றதும், வீணை வாசித்தவர்களுக்குப் பட்டுத் துண்டு, மாலை முதலியன பெருமாள் திருமுன்னர் அளிக்கப்படும். மறுநாள் பத்தாம் திருநாளன்று திருமாமணி மண்டபம் எழுந்தருளும் பெருமாள், அன்றைய இரவு முழுவதும் அங்கேயே எழுந்தருளியிருப்பதால் ஒன்பதாம் நாள் அன்றே வீணை ஏகாந்தம் முடிவுறும். ஏகாந்தம் முடிந்ததும், பெருமாள் உள்ளே எழுந்தருளுவார். பின் சயனபேரருக்குச் சயனம் நடைபெறும்.

### பத்தாம் திருநாள்

**தீர்த்தவாரி** : வழக்கம்போல் பெருமாள் வைகுண்டத் திருவாசல் தாண்டிச் சந்திரபுட்கரணி எழுந்தருளுவார். பல்லக்கில் சின்னப்பெருமாளும் உடன் எழுந்தருளிச் சந்திரபுட்கரணியில் தீர்த்தவாரி காண்பார். சின்னப்பெருமாள் திருமேனி சம்பந்தப்பட்ட தீர்த்தம் கோஷ்டிக்கு வழங்கப்படும். சின்னப்பெருமாள் வைகுண்டத் திருவாசல் வழியாக உள்ளே எழுந்தருள, பெருமாள் ஆயிரக்கால் மண்டபம் எழுந்தருளுவார். பெருமாள் ஆயிரங்கால் மண்டபத்தில் உள்ள திருமாமணி மண்டபத்தில் வீற்றிருந்து அன்று இரவு திருமஞ்சனம் கண்டருளுவார். வைகுண்டத் திருவாசல் திறந்து இவ்விழாக்காலப் பட்டருக்கு பிரம்மரத மரியாதை நடைபெறும். தானீகர் மூலமாகப் பெருமாள் 'நம்பட்டரை வீட்டில் விட்டு வா' என்பார். வைகுண்டத் திருவாசலைத் திறந்ததற்காவும் வேத விண்ணப்பம் சாற்றியதற்காகவும், பட்டருக்கு இச்சிறப்பு மரியாதை அளிக்கப்படுகிறது.

பெருமாள் பலரும் காணத் திருமஞ்சனம் கண்டருளிப் பஞ்சக் கச்சமும், யோக வேட்டியும் தரித்து மண்டபத்தில் வீற்றிருப்பார் அன்றைய தினம் பெருமாளுக்குப் பன்னீராயிரம் திருப்பணியாரங்கள் அமுது செய்விக்கப்படும். அரையர் திருவாய்மொழியில் 10ஆம் பத்தில் 8ஆம் பாடல் முடிய சேவித்து நிறுத்துவார்.

## ஆழ்வார் திருவடி தொழுதல்

11ஆம் நாள் காலை இரண்டு அர்ச்சகர்கள் நம்மாழ்வாரைத் தம் கரங்களில் ஏந்திக் கொண்டு பெருமாள் முன்னர் எடுத்துச் செல்வார்கள். அரையர்கள் 9ஆம் பாடலான 'சூழ் விசும் பணி முகில்' சேவித்தவாறு உடன் செல்வார்கள்.

ஆழ்வாரைப் பெருமாள் திருவடியில் சமர்ப்பித்து, 'முனியே நான்முகனே' என்னும் கடைசித் திருவாய் மொழியைச் சேவிப்பர். பாசுரம் முடிந்ததும் பெருமாள் ஆழ்வாருக்குத் தம்முடைய திருமண்காப்பையும், மாலையையும் அளிப்பார்.

ஆழ்வார் பெருமாளிடமிருந்து முன்போலத் தன் இருப்பிடத்திற்கு எழுந்தருளுவார். இப்பொழுது அரையர் 'கண்ணி நுண் சிறுத்தாம்பு' சேவித்துக் கொண்டு வருவார்.

ஆழ்வாரைப் பெருமாள் திருவடியில் சமர்ப்பித்தவுடன், திருத்துழாய்களால் அர்ச்சகர், ஆழ்வாரைப் பெருமாள் திருவடியில் மூழ்கச் செய்வார்.

இந்நிகழ்ச்சியின் போது பாடப்படும் திருவாய்மொழிப் பாடல்கள் 'உயிரைப் பரம்பொருளிடத்து அழைத்துச் செல்வதாக அமையும்' பாடல்களாகும். இறைவனின் திருவடிப்பேற்றை, உயிரினங்கள் அடைவதை, 'நம்மாழ்வார் பெருமாளின் திருவடியில் தொழுத' நிலையைக் கொண்டு விளக்குகிறார்கள்.

## பெருமாள் புறப்பாடு

மோகினி அலங்காரத்தன்று ஆழ்வாராசாரியர்களுக்குத் திருப்பரிவட்டச் சன்மானம் செய்ததுபோல, இன்றும் மரியாதை செய்யப்படும். மரியாதை ஆகிப் புறப்படுகையில், தானீகர் 'நாயிந்தே ரகுநாதா'; என்று வேண்ட, பெருமாள் அர்ச்சகர் மூலமாக

*'கோவணவா, கோவணவா, சேவா பலம் தந்தோம் தீர்த்த பலம் தந்தோம், மேலே நம்திருக்கல்யாண உத்சவத்தை நன்றாய் நடத்தி வை'*

என்று அருளிச் செய்வர். மணியாரர் 'நாயிந்தே' 'நாயிந்தே' என்று சொல்லி பெருமாளின் ஆணையைத் தலைமேல் தாங்குவார். மங்கள இசைக் கருவிகள் முழங்கப் பெருமாள் புறப்பட்டுக் கோயிலுள் மூலத்தானம் எழுந்தருளுவார்.

அரையரைப் பார்த்துத் தானீகர் மூலமாகப் பெருமாள் 'நம்பாடுவானை வீட்டில் விட்டு வா' என்று கூறி அருள் பாலிப்பார். அரையருக்குப் பிரம்மரதச் சிறப்பு நடைபெறும். இருபது நாள்களும் 'நாலாயிரத்தை' இசைபாடி அபிநயம் செய்தமையால் அரையருக்கு இச்சிறப்பு செய்யப்படுகிறது.

## 8:3:4 இயற்பா சாற்றுமுறை

அரையர்களால் மூவயிரம் பாடல்களைக் கேட்டு மகிழ்ந்த பெருமாள், இயற்பாவை (1000 பாடல்களை) திருவரங்கத்து அமுதனார் மூலம், திருநெடுந்தாண்டகத்தன்று இரவு செவிமடுத்தது போல், கோயில் மூலத்தானத்தில் வீற்றிருந்தவாறே செவிமடுப்பார்.

இந்நிகழ்ச்சியில் எல்லா ஆழ்வாராசாரியர்களும் பங்கு பெறுவதில்லை. இயற்பாவுக்கு உரியவர்களான நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், திருமழிசையாழ்வார், முதலாழ்வார் மூவர், ஆக அறுவருடன், பெரியாழ்வார், உடையவர், கூரத்தாழ்வான் ஆக ஒன்பது

பேருக்கு மட்டும் அருளப்பாடு இல்லாமல் பரிவட்டம் முதலிய மரியாதைகள் நடைபெறும்.

"இவ்வியற்பாவையும், இராமானுசர் காலத்திற்கு முன்னர் அரையர்களே சேவித்து வந்தனர். இராமாநுசர் தம் காலத்தில் அரையரிடம் இவ்வியற்பாவைத் திருவரங்கத்து அமுதனார் சேவிக்கட்டும் என்று வேண்ட, அன்றிலிருந்து ஏகாதசிப் பெருவிழாவில் இயற்பாவைச் சேவிப்பது அமுதனாரின் திருத்தொண்டாக மாறியது" என்று கோயில் ஒழுகு குறிப்பிடும்.[21]

இயற்பா சாற்றியதால் அன்று திருவரங்கத்தமுதனாருக்குப் பிரம்மரதச் சிறப்பு உண்டு. "என் அமுதனை வீட்டில் விட்டு வா" என்று பெருமாள் பணிக்க, அவரும் பிரம்மரதச் சிறப்பைப் பெறுகின்றார் இவ்வாறு அத்தியயனத் திருநாள் என்றழைக்கப்படும் முத்தமிழ் விழாவாகிய வைகுண்ட ஏகாதசித் திருவிழா இக்கோயிலில் நடைபெறும்.

## 8:4 அரையர் சேவை

ஆண்டுதோறும் நடைபெறும் மார்கழி மாதம் திருவிழாவான அத்தியயனத் திருநாளில் நாலாயிரம் சேவிப்பது, மற்றைய திருநாள் காலங்களில் படியேற்றம், கொண்டாட்டம் சேவிப்பது, திருப்பாவை, நாள்பாட்டைச் சேவிப்பது, இராமநவமி, ஸ்ரீஜெயந்தி நாள்களில் தாலாட்டுப்பாடுவது, பங்குனி உத்திரத்தில் பெருமாளுக்கும் நாச்சியாருக்கும் ஊடல் தீர்ப்பது, ஊஞ்சல் திருநாளில் பிள்ளைப் பெருமாள் ஐயங்காரின் அஷ்டப்பிரபந்தத்தில் சில பாட்டுக்களும், பெருமாள் திருமொழியும் சேவிப்பது, அதயயன உத்சவத்தில் பகல் பத்து, இரவுப் பத்தில் மூவாயிரம் சேவிப்பதோடு (இயற்பா நீங்கலாக) மற்றும் ஹம்சவதை, வாமன அவதாரம், முத்துக் குறி, இராவணவதம் போன்றவைகளை நாடகமாக நடித்துக் காட்டுவது, திருவூறல் உத்சவத்தில் பள்ளுப் பாடுவது, நாள்தோறும் காலையில் பெருமாள் திருமுன் நாலாயிரத்தில் சிலவற்றைப் பாடுவது போன்ற இசைத் தொண்டினை அரையர் என்பார் இக்கோயிலில் மேற்கொண்டுள்ளனர்

வைகுண்ட ஏகாதசியான அத்தியயன உத்சவத்தில் இவர்களது பங்கு மிகச் சிறப்பான ஒன்றாக, இக்கோயிலில் அமைகின்றது. நாதமுனிகள் காலம் தொடங்கிய அரையர் பணி இராமானுசர் காலத்தில் சிலமாற்றம் பெற்றது. அன்றுமுதல் இன்று வரை அரையர் தம் இறைப்பணி பக்தர்களால் வரவேற்கப்படும் நிலையில் உள்ளது.

'அரையர்' என்ற சொல் நாலாயிரத் திவ்யப்பிரபந்தத்தைப் பாடுவதில் 'அரசன்' என்ற பொருளைத் தரும். 'அறையர்' என்றால் நாலாயிர திவ்யப்பிரபந்தத்தைச் 'சொல்லுபவர்' என்று பொருள் படும். இக்கோயிலில் நாலாயிரம் பாடுவோர் அரையர் என்ற பெயரினைப் பூண்டுள்ளனர். இவர்களது பரம்பரை நாதமுனிகளிடமிருந்து தொடங்குவதாகச் சொல்கிறார்கள். 1400 வருடங்களாக இத்தொண்டை இவர்கள் செய்து வருவதாகத் தெரிகிறது.

முதன் முதலில் திருவரங்கம் கோயிலில் மட்டும் தொடங்கிய இவர்களது திருத்தொண்டு காலப்போக்கில், இவர்கள் (அரையர்) வழியினர் பெருகியமையால் காஞ்சிபுரம், திருவல்லிக்கேணி, திருப்பதி, திருவில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி, நாச்சியார் கோயில், திருநாராயணபுரம் முதலிய 108 திவ்யதேசங்களிலும் நடைபெற்று வந்தது. பல கோயில்களிலும் பெருகிய அரையர் சேவை வர வரக் குறைந்து இன்றைய நாளில் திருவரங்கம், திருவில்லிபுத்தூர், ஆழ்வார் திருநகரி ஆகிய மூன்று இடங்களில் மட்டும் நடந்து வருகிறது.

நாதமுனிகள் குமாரர் ஈசுவரமுனிவரைத் தொடர்ந்து, ஆளவந்தார் திருவரங்கப் பெருமாளரையர் என்று வழித் தொடர் அமைகிறது. நாதமுனிகள் தனது மருமக்களான கீழையகத்தாழ் வான், மேலையகத்தாழ்வான் இருவரையும் தாம் கற்ற திவ்யப் பிரபந்தத்தின் மூவாயிரம் பாடல்களை (இயல் நீங்கலாக) பண்ணும் தாளமும் வகுத்து இசையோடு பாடச் செய்தார். இந்த இசையே 'தேவகானம் திவ்ய இசை' ஆகும்.

'கீழையகத்து ஆழ்வானும், மேலையகத்து ஆழ்வானும் நாதமுனிகள் கட்டளைப்படி சேவித்து வரும் நாளில், ஒரு நாள் "அழகிய மணவாளப் பெருமாளும் பாடுவார்க்கு அரையர் என்ற திருநாமமும், குல்லாயும், தொங்கல் பட்டும் வழங்கினர். திருமொழி, திருவாய் மொழித் திருநாளில் நன்றாகச் சேவித்து அழகிய மணவாளப் பெருமானை மிகவும் உகப்பிக்க பெருமாளும் உகந்தருள, ஒருத்தருக்கு (கீழையகத்தாழ்வான்) 'மதியாத தெய்வங்கள் மறைவாளப்பெருமாள் அரையர்' என்றும், ஒருத்தருக்கு (மேலையகத்தாழ்வான்) 'நாத வினோத அரையர்' என்றும் திருநாமம் சாதித்துக் குல்லாயும், தொங்கு பரிவட்டமும் பருத்தியும் சாதிக்க, மற்றும் சுகந்த மாலைகள் பிரசாதங்கள் சாதித்து, நம்மாழ்வாருக்கு விடை சாதித்தவுடன் விடை வழங்குதல் நிமித்தமாகத் தம் வரிசைகளையெல்லாம் சாதித்தது போல (வரிசைகளாவன: குடை, சாமரம்,விசிறி,மேளதாளத்தோடு) அரையர்களுக்குத்தம் வரிசைகளைச் சாற்றி "நம்பாடுவானை வீட்டில் விட்டு வா' என்று தனது சேனாதிபதியை நியமித்து, நியமித்தபடியே எல்லாப் பரிவாரங்களுடன் அரையரை வீட்டில் விட்டு வந்தார்" என்று கோயில் ஒழுகு கூறும்.[22]

இன்றும் இவ்வாறு வைகுண்ட ஏகாதசி சாற்றுமுறையன்று, அரையரை எல்லாச் சிறப்புகளுடனும் வீட்டில் விட்டு வருகிறார்கள்.

## திருவரங்கம் கோயில் அரையர்கள்

திருவரங்கத்தில் இரு குடும்பத்து அரையர்கள் உள்ளனர். முதல் குடும்பத்தில் அறுவரும், இரண்டாவது குடும்பத்தில் மூவரும் இன்றைக்கு இப்பணி புரிகின்றனர். இருவரும் வேறுவேறு குலத்தினர். ஒருவர் சொட்டைக்குலம், ஷடமர்த்தன பாரத்துவாஜம் மற்றவர் வாதூல கோத்திரம். இவர்களுக்குள் உறவின்முறை தொடர்பில்லை. விழாக் காலங்களில் ஏதேனும் தீண்டல் நேர்ந்தால், முறைவிட்டுப் போகாமலிருக்க மற்றொருவர் அப்பணியைத் தொடர்வர். இவர்கள் தங்களுக்குள் மாறி மாறி முதல்நாள் ஒருவரும், இரண்டாம் நாள் ஒருவருமாக இப்பணியைப் புரிகின்றனர்.

இவர்கள் இசைக்குத் துணையாக 'தாளம்' என்னும் இசைக் கருவியைத் தவிர வேறெதும் வைத்துக்கொள்வது இல்லை. மேல் தாளத்தை நாதமுனிகள் என்றும், கீழ்த்தாளத்தை நம்மாழ்வார் என்றும் பெயரிட்டு அழைக்கின்றனர். சங்கு சக்கரம் தாளத்தில் பொறிக்கப் பட்டிருக்கின்றன. இவர்களிடத்தில்இத்தாளம் பரம்பரையாக உள்ளது என்றும் கூறுகிறார்கள்.

இராமானுசர் என்னும் உடையவரைத் திருவரங்கம் கோயிலுக்கு அழைத்து வந்தவர் திருவரங்கப் பெருமாளரையர் என்று கூறப்படுகிறது. காஞ்சிபுரம் சென்று தேவகானத்தில் வரதராஜப் பெருமாளிடம் பாட, அவரும் உகந்து, முத்துமாலை, பரிவட்டம், தீர்த்தம், சடாரி சாதித்து, நீர் வேண்டுவது யாது? என்று கூறி, 'நாமும் நம் பெண்டுகள் நீங்கலாகத் தருவோம்' என்று கூற, அரையர் 'நம்பி இராமானுசனே வேண்டும்' என்ன, பெருமாளும் இராமானுசரை மகிழ்வோடு மேளதாளம் முதலிய கருவிகளுடன் திருவரங்கத்துக்கு அனுப்பினார். ஒரு மேளத்தோடு அவரைத் திருவரங்கத்துக்கு அனுப்பியதால், இன்றும் காஞ்சிபுரம் வரதராஜர் கோயிலில் ஒரு மேளம்தான் இருக்கிறது. தென்னரங்கர் செல்வமுற்றும் திருத்தி வைக்க இராமானுசருக்குக் காரணமாகவும், குருவாகவும் இருந்தவர் திருவரங்கப் பெருமாள் அரையர். இவரே 'சரமோபாயநிஷ்டை' என்கிற இரகசியத்தையும், நாலாயிர திவ்யப் பிரபந்த அருளிச்செயலையும் இராமானுசருக்கு உபதேசம் செய்தவர்.[23]

## அத்தியயனத் திருநாளில் அவர்கள் வழிபடும் பிரபந்தங்கள்

### நாதமுனிகள் கட்டளை

திருப்பல்லாண்டு முதல் திருநெடுந்தாண்டகம் வரை பகல் பத்து நாள்களிலும், திருவாய்மொழியை இராப்பத்து நாள்களிலும் சேவிக்கின்றனர். மற்றைய நாள்களில் இயற்பாவை இயலாகச் சேவித்து வருவது நாதமுனிகள் வகுத்த கட்டளையாகும்.

திவ்வியப்பிரபந்தங்களின் அடைவு அழிந்து போகாமலிருக்க ஆண்டுதோறும் அவற்றை அவர்களைக்கொண்டு ஓதச் செய்தார். நம்மாழ்வாரை ஆண்டுதோறும் திருக்குருகையிலிருந்து கண்ணிநுண் சிறுத்தாம்பு வரை உள்ள பன்னிரண்டு பிரபந்தங்களை இசையாக வளர்பிறை முதல் தசமி வரை உள்ள பத்து நாள்கள் பகலிலும் திருவாய்மொழியை ஏகாதசி தொடங்கித் தேய்பிறை பஞ்சமி வரை உள்ள பத்து நாள்கள் இரவிலும், மறுநாள் சாற்றுமுறையன்று இயற்பா எனப்படும் முதல் திருவந்தாதி முதல் பெரிய திருமொழி வரை உள்ள பத்துப் பிரபந்தங்களை இயலாகவும் சேவிக்க வேண்டும் என்று அறுதியிட்டார். [24] இந்த மூளும் தவநெறி முட்டிய வள்ளலை ஸ்ரீவேதாந்த தேசிகர் 'காளம் வலம்புரி அன் நற் காதல் அடியவர்க்குத் தாளம் வழங்கித் தமிழ்மறை இன்னிசை தந்த வள்ளல் எனப போற்றுகின்றார்.[25]

நாதமுனிக்குப்பின், ஓர் அரையர் இத்திருநாளில் பாசுரங் களுக்கு ஒப்பத் திருக்கோலம் கொண்டு நாடகமாக நடித்தும், அபிநயம் பற்றியும் காட்டினார். பெருமாள் அவருக்குக் 'கோயில் உடைய பெருமாள் அரையர்' என்ற பட்டப்பெயர் தந்தார்.

அரையர் பாசுரங்களை உணர்ச்சியோடு சேவிப்பர். அப்போது அவர் தம்மை ஆழ்வாராகவேக் கருதுவர் தாய் வாக்காகவோ, சேய் வாக்காகவோ, தோழி வாக்காகவோ மற்றும ஏனையோர் வாக்காகவோ வரும் துறைகளில் அரையரே தாய, சேய, தோழி மற்றும ஏனையோர் பாத்திரங்களோடும், கூறப்படும நிகழ்ச்சிகளோடும் ஒன்றிவிடுவர். அரையர் சேவையைக் காணும பொது மக்களும் அரையரை ஆழ்வாராகவும், தாயாகவும், தோழியாகவும், பிற ஆண் பெண் பாத்திரங்களாகவும கருதுவர்

நாச்சியார் சன்னிதியில் அரையர் ஒரு பாட்டை இசையோடு சேவிக்க மற்ற பாட்டுகளை அங்குள்ளோர் (வேத விண்ணப்பம் செய்வார்) இயலாகச் சேவிப்பது வழக்கம்

இம்முறை இராமானுசர் காலத்தில் சற்று மாறுபட்டது. திருமங்கையாழ்வார் இவ்விழாவைத் தொடங்கி வைத்தார். அதனால் அவர் பாடிய திருநெடுந்தாண்டகத்திலிருந்து விழா தொடங்குகிறது. இராமானுசருடைய சீடர் கூரத்தாழ்வான் குமாரர் பராசரபட்டர். பராசரபட்டரை இராமானுசரே தம் சிஷ்யராக ஏற்றுக் கொண்டார். அக்காலத்தில் வேதாந்தியாக இருந்து பெரும் புகழ் கொண்ட மேலை நாட்டார் ஒருவரைத் திருத்திப் பணி கொள்ள வேண்டி, இராமானுசர் பட்டரை மேலை நாடு சென்று, அவரோடு வாதிட்டு வென்று வரப்பணித்தார். பட்டர்அவ்வாறே சென்று அவரை வென்று திரும்பிய நாள், அத்தியயனத் திருநாளுக்கு முதல்நாள் ஆகும். பெருமாள் சன்னிதியிலிருந்த இராமானுசர் பட்டரை நீர் வேதாந்தியை வென்றது எவ்வாறு? என, பட்டர் அதற்கு "திருநெடுந்தாண்டகம் முதல் பதிகத்தின் பொருளை விளக்கி இவ்வாறு வென்றேன்" என்றார். அப்போதிருந்து ஆண்டுதோறும் திருவரங்கத்தில் மட்டும் மார்கழித் திங்கள் அமாவாசை நாளன்று இவ்விழா திருநெடுந்தாண்டகத்துடன் தொடங்குகிறது.[26] இதை முன்னரும் குறித்துள்ளோம்.

அவ்வாறு திருத்திப்பணி கொள்ளப்பட்ட வேதாந்தியே, பிற்காலத்தில் ஆசாரியர்களுள் புகழ்பெற்று விளங்கிய நஞ்சீயர் ஆவர். இராமானுசருடைய மற்றொரு சீடர் திருவரங்கத்தமுதனார். ஏதோ ஒரு காரணத்திற்காக, இராமானுசர் அப்போது அரையரா யிருந்த திருவரங்கப் பெருமாளரையர் திருமாளிகைக்குப் 'பிட்சைக்குச்' சென்று இயற்பா ஸ்ரீகோசத்தைப் 'பிட்சை' கேட்டு வாங்கிக் கொண்டு, இனி நீர் இதைச் சேவிக்க வேண்டாம், அமுதனார் சேவிக்கட்டும் என்றாராம். அன்று முதல், அத்தியயனத் திருநாளில் மூவாயிரத்தை அரையரும், இயற்பாவை அமுதனாரும் சேவிக்கின்றனர்.[27] இதை முன்னரும் குறித்துள்ளோம்.

அமுதனார், இராமானுசர் காலத்திலேயே 'இராமானுச நூற்றந்தாதி'யை இயற்றி இருந்தார். ஒரு திருநாளில் பெருமாள், உடையவரைத் தம்முடன் வருமாறு பணித்து, அவருடைய மடத்திலேயே எல்லா இசைக்கருவிகளையும் நிறுத்தி, நூற்றந்தாதியை அமுதனார்

பாடக் கேட்டு மகிழ்ந்தார். நம்மாழ்வார் பற்றிக் கண்ணிநுண் சிறுத்தாம்பு போல, எம்பெருமானார் பற்றி இராமானுச நூற்றந்தாதியும் நாலாயிர திவ்யப்பிரபந்தத்தின் இருபத்தி நான்காவது பிரபந்தமாகச் சேர்த்துக் கொண்டனர். விழாவில் அதையும் இயற்பாவுடன் சேர்த்து அமுதனார் சேவிப்பார். அரையரைப் போலவே, அமுதனாருக்கும் வரிசைகளைச் சாற்றி பிரம்மரதம் ஏற்றுவித்து அவர் திருமாளிகையில் விட்டுவரும் வழக்கம் அன்று முதல் தொடங்கியது.[28]

அமுதனார் குடும்பத்தினர் இன்றைய நடைமுறையில் இங்கிருந்து இயற்பாவைச் சேவிப்பதில்லை. அதையும் அரையரே இப்போது செய்து வருகிறார். ஆயின் அரையருக்குப் பிரம்மரத மரியாதை இல்லை.

அரையர் சில பாட்டுக்களை வியாக்கியானத்துடன் சேவிப் பது வழக்கம். அவ்வழக்கம் எப்போது உண்டாயிற்று என்று தெரிய வில்லை. சேவிக்கும் வியாக்கியானம் 'தம்பிரான்படி' என்பதாகும். ஒவ்வொரு நாளும் இவ்விழாவில் பாசுரங்கள் சேவிக்கும் போதும், அபிநயம், நாடகம் முதலான நடைபெறும் போதும், பெருமாளுடன் ஆழ்வார் களும், ஆசாரியர்களும் எழுந்தருளியிருப்பர்.

விழா நாள்களில் பெருமாளிடமிருந்து ஆழ்வார்கள் ஸ்ரீசட கோபனையும், நம்மாழ்வாரிடமிருந்து ஆசாரியர்கள் யதிராஜனையும் தம் முடியில் ஏற்றிக் கொள்வது வழக்கம். இவ்விலக்கிய விழா திருமொழித் திருநாள், திருவாய்மொழித் திருநாள் என்று இரண்டு பகுதியாக வழங்கப்படுகிறது.

## 8:4:4 திருநெடுந்தாண்டகம்

மார்கழி மாதம் அமாவாசையன்று அரையர்கள் பெருமாளுடைய மூலத்தானத்திற்கு எழுந்தருளிப் பெருமாளுடைய அருளப் பாடும் வரிசைகளும் பெற்று தேவகானத்தில் திருநெடுந்தாண்டகம் முதல்பாசுரத்தைத் தாளத்துடன் பாடி, விடைபெற்று வெளிப்போந்து

அணியரங்கன் திருமுற்றத்தில் பெருமாளைப் பார்த்தவண்ணம் அப்பாட்டிற்கு அபிநயம் பிடித்துத் தம்பிரான்படி வியாக்கியானம் சேவிப்பார்கள். அப்பாசுரம் 'மின் உருவாய் முன் உருவில்'[29] என்பதாகும்.

இப்பிரபந்தம் முப்பது பாசுரங்களால் ஆனது. முதல் பத்துப் பாசுரங்கள் தன்னையே நோக்கிக் கூறுவன; அடுத்த பதினெட்டு பாடல்கள் அகப்பொருள் கருத்துள்ளன; இறுதி இரு பாடல்களும் பிரபந்தப்பொருளை விளக்குவன.

திருநெடுந்தாண்டகத்தின் முதல் பத்துப் பாசுரங்களையும் தம்பிரான்படியையும் சேவிப்பதுடன் அன்றைய நிகழ்ச்சிகள் முடிவுறும்.

## 8:4:5 திருமொழி

பத்துநாள் விழாவில் முதல் ஐந்து நாள்களில் முதலாயிரத் தையும் பின் ஐந்து நாள்களில் பெரிய திருமொழியையும், அரையர்கள் சேவிக்கின்றனர்.

பகல் பத்து முதல் திருநாளன்று அரையர் சேவிப்பன, 'திருப் பல்லாண்டு தொடங்கி, வெண்ணெய் விழுங்கி' என்று 2ஆம் பத்து 9ஆம் பத்து திருமொழி முடிய 212 பாசுரங்கள் எம்பெருமானுக்குக் காப்பிட்டு ஆழ்வார், கண்ணன், திரு அவதாரம் தொடங்கி அடி முதல் முடிகாறும் அவனுடைய அழகை அனுபவித்துத் தாலாட்டி, அம்புலி காட்டி, அவன் ஒரு கையை ஊன்றி மற்றொரு கையைத் தூக்கித் தவழ்வது, சப்பாணி கொட்டுவது; தளர் நடையிடுவது; தாயின் முதுகைக் கட்டிக்கொள்வது; பூச்சிகாட்டுவது: முலை உண்ணல்; காதுகுத்துதல்; நீராட்டம்; குழல் வாரல்; கோல் கொண்டு வா எனல் ; பூச்சூட்டல், காப்பிடல் ஆகிய யாவும் பாடி அவனுடைய சிறு பிள்ளைக் குறும்புகளை ஆய்ச்சியர் யசோதையிடம் முறையிடுவதாக இவ்விழா நிறைவுறும்.

இவற்றுள் திருப்பல்லாண்டின் முதல் இரண்டு பாசுரங்களுக்கு மட்டும் அரையர் அபிநயம் பிடிப்பர். வியாக்கியானம் செய்வர்.

"பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு . . . . . ."[30]

ஆழ்வார் பக்திப் பரவசராய்த் தன் கண்ணுக்குப் புலப்படும் அழகுக்கு என்ன தீங்குவரப் போகிறதோ என்று அஞ்சி அவன் திருவடி அழகுக்குக் காப்பு இடுகிறார்.

"அடியோமோடும் நின்னோடும் பிரிவின்றி ஆயிரம் பல்லாண்டு"[31] என்ற இப்பாசுரத்தால் பெருமாளிடமிருந்து நீங்காத அடியார் குழாம், திருமகள், ஆழிப்படை, சங்கம் இவற்றிற்குப பல்லாண்டு வாழ்த்து கூறுகிறார்.

இரண்டாம் நாளன்று, அரையர் சேவிப்பன, "ஆற்றிலிருந்து விளையாடுவோங்களை"[32] எனத் தொடங்கும் பாசுரம் முதல் "துக்கச் சூழலைச் சூழ்ந்து கிடந்தவலையை"[33] எனத் தொடங்கும் பதிகம் ஈறாக உள்ள 250 பாசுரங்களாகும். கண்ணன் சிறு குறும்புகளை யசோதைக்கு ஆய்ச்சியர் முறையிடுவது, யசோதை அப்பம் தாரேன் என்னல், கன்று பின் சென்ற கண்ணன் குழல் ஊதல், ஆயர் மங்கையர் கண்ணன் மேல் காதலுறல், வைதேகிக்கு அனுமன் தெரிந்துரைத்த அடையாளம், திருமாலிருஞ்சோலையின் மாட்சி, திருக்கோட்டியூர், கங்கைக்கரைக் கண்டம், திருவரங்கம் பற்றிய பாசுரங்கள் யாவும் இவற்றுள் அடங்கும்.

இவற்றுள் அரையர் அபிநயம் பிடிப்பதும், வியாக்கியானம் செய்வதும், பின்வரும் இரண்டு பாசுரங்களாகும்

"ஆற்றிலிருந்து விளையாடு வோங்களை . . . .[34]

"தன் நேர் ஆயிரம் பிள்ளைகளோடு தளர்நடை இட்டு வருவான்"[35]

மூன்றாம் திருநாள் : இன்று அரையர் சேவிப்பன பெரியாழ்வார் திருமொழியில் "சென்னி ஓங்குதான் திருவேங்கடம் உடையாய்"[36] எனத் தொடங்கும் பதிகமும், திருப்பாவை முப்பதும், நாச்சியார் திருமொழியில் 'தையொரு திங்களும்' தொடங்கி 'மற்றிருந்தீர்கட்கு அறியலாகா மாதவன்' என்ற 12ஆம் பதிகம் முடிய 164 பாசுரங்கள்

இப்பாசுரங்கள் எம்பெருமான், ஆழ்வாருடைய இதயத்துள் நிறைந்து பொறி ஒற்றி அடிமைகொண்டது. பாவை நோன்பு, ஆண்டாளுடைய காம நோன்பு, கன்னியர் துகிலைக் கண்ணன் கொண்டது. கூடல் இழைத்தல், கனா உரைத்தல், சங்கொடு கூறல், மேகவிடுதூது, திருமாலிருஞ்சோலை, திருவரங்கம், காதல் நோய் ஆகியவற்றைக் கூறுவன ஆகும். இவற்றுள், அரையர் அபிநயமும் வியாக்கியானமும் செய்யும் பாடல்

"சென்னி ஓங்கு தண் திருவேங்கடமுடையாய்"[37] என்பதாகும். இப்பாசுரத்திற்கு அபிநயமும் வியாக்கியானமும் முடிந்ததும் அத்திருமொழியின் மேல் பாசுரங்களான

1. "பறவை ஏறு பரம்புருடா, நீ என்னைக் கைக்கொண்ட பின்"
2. "எம்மனா, என் குல தெய்வமே, என்னுடைய நாயகனே"
3. "கடல் அடைந்து, அமுதம் கொண்டு கலசத்தை நிறைத்தாற் போல"
4. "பொன்னைக் கொண்டு உரைகல் மீதே"
5. "உன்னுடைய விக்கிரமம் ஒன்று ஒழியாமல் எல்லாம்"
6. "பருப்பதத்துக் கயல் பொறித்த பாண்டியர் குலபதி போல் திருப்பொலிந்த சேவடி என் சென்னியின் மேல் பொறித்தாய்"[38]

என்பது வரை அபிநயத்தோடு பாசுரங்களைச் சேவிப்பார். அங்கு நிறுத்திக் கெண்டு 'திருப்பொலிந்த சேவடி' ஆகிய பெருமாளுடைய ஸ்ரீசடகோபனைத் தமது திருமடியில் அரையர் ஏற்றிக் கொள்வார். அங்குள்ள ஆழ்வார் ஆசார்யர்களுக்குத் தமது திருக்கையாலேயே ஸ்ரீசடகோபம் சாதிப்பார். சாதித்தபின் பெரியாழ்வார் திருமொழியில் எஞ்சிய 4½ பாசுரங்களைச் சேவித்துத் திருமொழியை நிறைவு செய்வர்.

அதன்பின் திருப்பாவை தொடங்கி, முதல் பாசுரம் அபிநயத் தோடும் வியாக்கியானத்தோடும், அரையர் சேவிப்பர். "மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளால்"[39] என்ற பாடல் ஆயர்பாடிப் பெண்களை மார்கழி நீராட அழைப்பது ஆகும்.

**நாலாம் திருநாள்** அன்று காலையில் அரையர் பாசுரம் சேவித்தல், அபிநயம் காட்டுதல், வியாக்கியானம் சேவித்தல் ஆகியவற்றோடு பிற்பகலில் கம்சவத நாடகமும் நடித்துக் காட்டுவார்.

நாச்சியார் திருமொழி 13ஆம் பதிகத்தின் தொடக்கச் செய்யுளான "கண்ணன் என்னும் கருந்தெய்வம் காட்சி பழகிக் கிடப்பேனை" என்ற பாசுரத்திற்கு அரையர் அபிநயம் பிடித்து, வியாக்கியானம் செய்வார்.

அடுத்து "பால் ஆல் அலையில் துயில்கொண்ட பரமன்"[40] என்ற பாசுரத்தைச் சேவித்துவிட்டு, அதற்கு அடுத்து மணவாளப் பெருமாள் கம்சனைக் கொன்றதைப் பிற்பகலில் காட்ட எண்ணி, அப்பதிகத்தின் எஞ்சிய பாடல்களைச் சேவிக்காமல் அடுத்த 14ஆம் பதிகத்தின் "பட்டி மேய்ந்தோர் கார் ஏறு" சேவித்துப் பெருமாள் திருமொழியைப் பாடத் தொடங்குவார். அத்திருமொழியின் முதல் பாசுரம்

"இருள் இரியச் சுடர் மணிகள் இமைக்கும் நெற்றி"[41] என்பதாகும். இப்பாசுரத்திற்கு அபிநயம் செயது, வியாக்கியானம் கூறி எஞ்சிய பெருமாள் திருமொழி முழுதும், திருச்சந்தவிருத்தம் முழுவதும் அரையர் சேவிப்பர். நான்காம் நாளில் பாசுரத் தொகை 243 ஆகும்.

பிற்பகலில் முன் நிறுத்திய 'கஞ்சனைக் காய்ந்த கருவில்லி' என்ற நாச்சியார் திருமொழி (13, 3) 39 பாசுரத்தை எடுத்துக்கொண்டு, அரையர், தம்பிரான்படி வியாக்கியானம் சேவித்து, கிருஷ்ணாவதாரம் தொடங்கிக் கம்சவதம் வரை நாடகமாக நடித்துக் காட்டுவார். பின் அப்பதிகத்தின் எஞ்சிய பாசுரங்களைச் சேவித்து நிறைவு செய்வார்

**ஐந்தாம் நாள்:** இன்று அரையர் 'திருமாலை' தொடங்குவர். முதல் பாசுரம் "காவலில் புனலை வைத்துக் கலிதன்னைக் கடக்கப் பாய்ந்து" என்பதாகும். இப்பாசுரத்திற்கு அரையர் அபிநயமும் வியாக்கியானமும் செய்வார்.

மேலும் சில பாட்டுகளுக்கு அபிநயம் மட்டும் செய்வார்

1) பச்சை மாமலைபோல் மேனி பவளவாய்க் கமலச் செங்கண் . . .[42]

2) வேத நூல் பிராயம் நூறு மனிசர் தாம் புகுவரேனும் . . . .[43]

3) மொய்த்தவல் வினையுள் நின்று மூன்றெழுத்து உடைய பேரால்...[44]

4) பெண்டிரால் சுகங்கள் உய்ப்பான் பெரியதோர் இரும்பை பூண்டு...[45]

5) மறம் சுவர் மதில் எடுத்து, மறுமைக்கே வெறுமை பூண்டு . . .[46]

இப்பாட்டுகள் அனைத்துக்கும் 'அரங்கனார்க்கு ஆள் செய்யாரே,[47]

என்னும் பாசுரம் வரை, அரையர் அபிநயம் பற்றுவார். அரங்கனார்க்கு ஆட்செய்வதில், இக்கோயிலில் நம்பெருமாள் புறப்பாடு, திருவாராதனம், வேத விண்ணப்பம், அருளிப்பாடு, நடை, படியேற்றம், தாசநம்பி கட்டியம் முதலிய இக்கோயில் நடைமுறைகளை அபிநயித்துக் காட்டுவார். இது காண்போர்க்கு மகிழ்ச்சி தரும்.

எஞ்சிய திருமாலைப் பாசுரங்களையும், திருப்பள்ளி எழுச்சி, 'அமலனாதிபிரான்' ஆகிய பாடல்களையும் சேவிப்பார்.

ஆறாம் திருநாள்: இன்று தொடக்கப் பாசுரம்.

'கண்ணிநுண் சிறுத்தாம்பினால் கட்டுண்ணப் பண்ணிய பெருமாயன்'[48] என்பதாகும்.

இப்பாட்டிற்கு அபிநயம் பிடித்து, வியாக்கியானம் செய்தபின் அப்பதிகத்தில் எஞ்சிய பாடல்களை அரையர் சேவிப்பார். அடுத்து திருமங்கை ஆழ்வாருடைய பெரிய திருமொழி தொடங்கும். தொடக்கப் பாசுரத்திற்கு அபிநயமும், வியாக்கியானமும் செய்வார்.

"வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்" . . . [49] என்பது முதல் பாடலாகும்.

அபிநய வியாக்கியானத்திற்குப் பிறகு, அரையர், பெரிய திருமொழியில் மூன்றாம் பத்து, ஐந்தாம் திருமொழியாகிய 'வந்து உனது அடியேன் மனம் புகுந்தாய்"[50] என்ற 106 பதிகம் வரை 250 பாசுரங்களைச் சேவிப்பார். அவை திருப்பிரிதி, வதரி ஆச்ரமம், சாளக்கிராமம், நைமிசாரண்யம், சிங்கவேழ் குன்றம், திருவேங்கடம், திருஎவ்வுள், திருவல்லிக்கேணி திருநீர்மலை, திருக்கடல்மலை, திருஇடவெந்தை, அட்டபுயகரம், பரமேச்சுவர விண்ணகரம், திருக்கோவலூர், திருஅயிந்திரபுரம், திருச்சித்திரகூடம், காழிச்சீராம விண்ணகரம் ஆகிய திருப்பதிகளைக் கூறுவன. ஆழ்வார் பிறந்த திரு ஆலி முடிய இன்றைய பாசுரங்கள் நிறைவு பெறும் 250 பாசுரங்கள்.

**ஏழாம் திருநாள் :** இன்று பெரிய திருமொழி மூன்றாம் பத்து, ஆறாம் திருமொழி தொடங்கி ஐந்தாம் பத்து ஆறாம் திருமொழி வரையான பாசுரங்கள்.

தூவிரிய மலர் உழக்கித் துணையோடும் பிரியாதே.

இப்பாசுர அபிநய வியாக்கியானங்கள் ஆனதும், மேல் மூன்று பாசுரங்களைச் சேவித்து, ஐந்தாம் பாசுரமாகிய,

"வாளனாகிய கண்பனிப்ப மென் முலைகள் பொன் அரும்ப [51]

"நாள் நாளும் நின் நினைந்து நைவேற்கு, ஓ மண் அளைந்த தாளாள"[52] என்பதோடு நிறுத்திக் கொள்வார். "மண் அளந்த தாளாளன்" என்ற கதை வாமன அவதாரமாகப் பிற்பகலில் நாடகமாக நடிக்கப படும்

அடுத்து திருமொழி 'கள்வன் கொல்யான் அறியேன்' எனத் தொடங்கிக் 'கைம்மான மதக்களிற்றைக் கடல் கிடந்த கருமணியை'[53] என்ற 5ஆம் பத்து 6ஆம் திருமொழி முடிய 240 பாசுரங்கள் இன்று

சேவையாகும். சோழ நாட்டுத் திருப்பதிகள் பல இவற்றுள் பாடப் பட்டுள்ளன.

**சோழ நாட்டுத் திருப்பதிகள் :** வைகுந்த விண்ணகரம், மணிமாடக் கோயில், அரிமேய விண்ணகரம், திருத்தேவனார் தொகை, திருப்பார்த்தன் பள்ளி, திருத்தெற்றி அம்பலம், திருவல்லிக்குளம், திருஇந்தளூர், மயிலாடுதுறை திருவில் வியங்குடி, புள்ளம் பூதங்குடி, திருக்கூடலூர், திருவெள்ளறை, பின் திருவரங்கத்தில் முடிவு.

பிற்பகலில், முன்பு விட்ட 'மண் அளந்த தாளாளா' என்ற சொல் தொடரைக் கொண்டு வாமன அவதாரத்தைத் தம்பிரான் படியில் சேவித்து அவ்வவதாரத்தை நடித்துக் காட்டுவார். மேலே 'வரை எடுத்த தோளாளார்' பதிக இறுதி வரை சேவிப்பார்.

எட்டாம் திருநாள் 'பண்டை நான் மறையும், வேள்வியும், கேள்விப் பதங்களும்[54] பதங்களின் பொருளும்' என்னும் பாசுரத் துடன் தொடங்குகின்றது.

இப்பாட்டுக்கு அபிநயமும், வியாக்கியானமும் முடிந்து பின் அரையர் 'அரங்கர்' என்ற சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பயிலும் இடங்களை எல்லாம் கோத்துச் சேவிப்பார்.

அடுத்த இரண்டு பாசுரங்களைச் சேவித்து 4ஆம் பாசுரத்தில் 'ஆயிரம் தோளால் அலைகடல் கடந்தான்'[55] என்ற இடத்தில் நிறுத்தி, அலைகடல் கடைந்ததைப் பிற்பகலில் நடித்துக் காட்டுவார். அதனோடு இப்பகுதித் தம்பிரான்படி வியாக்கியானமும் சேவிக்கப்படும். இப்பதிகத்தின் எஞ்சிய பகுதியையும் சேவித்து நிறைவு செய்வார்.

இன்று பெரிய திருமொழி எட்டாம் பத்து, முதல் திருமொழி "சிலை இலங்கு பொன்னாழி"[56] பதிகம் முடிய 250 பாசுரங்கள் பாடப்பெறும்.

**ஒன்பதாம் திருநாள்** பெரிய திருமொழி, எட்டாம் பத்து, இரண்டாம் திருமொழி "தெள்ளியீர், தேவர்க்கும் தேவர், திருத்தக்கீர்"[57] எனத் தொடங்கும்.

இனி பத்தாம்பத்து, முதல் திருமொழி, "ஒரு நல் சுற்றம் எனக்கு உயிர், ஒண்பொருள்"[58] என்ற பதிகம் முடிய 200 பாசுரங்களை அரையர் சேவிப்பார். இதனோடு காலை நிகழ்ச்சி முடிவுறும்.

பிற்பகல் திருநெடுந்தாண்டகம் சிறப்பு நிகழ்ச்சி ஆகும். முதல் பாசுரமான 'மின் உருவாய்' முன் உருவில் வேதம் நான்காய்[59] பாசுரத்திற்கு அபிநயம் பிடித்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கி யானமும் சேவிப்பார். இப்பாட்டிலிருந்து 'பட்டு உடுக்கும், அயர்ந்து இரங்கும்'[60] என்ற 11ஆம் பாட்டு வரை தம்பிரான்படி சேவிப்பார்.

'தளிர்புரையும் திருவடி என்தலைமேலவே'[61] எனத் தொடங்கும் பாசுரத்தைச் சேவிக்கும் பொழுது, நாலாயிரத்தில் வரும் திருவடிப் பெருமைகளைத் தொகுத்துக் கூறுகிறார். அவ்வாறு தொகுத்துக் கூறும்பொழுது கண்ணீர் மல்க வியாக்கியானம் அருள்வார்.

பின்னர் 'முத்துக்குறி' என்னும் நாடகத்தை நடத்திக் காட்டுவார்.

குறத்தி குறி பார்ப்பதாக முத்துக்களைப் பரப்பி, அரையர் குறி பார்ப்பார். இதை 'முத்துக் குறி' என்பர். அக்குறி பார்க்க அரையா பெருமாளிடம் தீர்த்தமும், திருவடி நிலையான ஸ்ரீசடகோபமும் பெற்று, அங்கு குழுமி உள்ள ஆழ்வார் ஆசார்யர்களுக்கும் கோஷ்டிக்கும் அவற்றைச் சாதிப்பார். ஆழ்வார் திருநகரித் திருக்கோயிலில் பத்தாம் நாளில்தான் முத்துக்குறி நடைபெறுகிறது.

**பத்தாம் திருநாள்** இன்று அரையர் மீண்டும் பெரிய திருமொழியைப் பாட 'இரக்கம் இன்றி எம்கோன் செய்த தீமை' பதிகம் தொடங்கிப் பெரிய திருமொழி இறுதிவரை சேவித்து நிறைவு,

திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் இரண்டையும் சேவித்து முடிப்பார். இந்நாளில் நடைபெறும் பாசுரத்தொகை 224.

இன்றைய அபிநய வியாக்கியான பாசுரம்: "இரக்கம் இன்றி எம்கோன் செய்தமை"[62] என்பதாகும்.

## அரையர் இரண்டு சேவை :

| | |
|---|---|
| நான்காம் திருநாளில் | அரையர் சேவை இரண்டு, பிற்பகலில் கிருஷ்ணாவதாரம் |
| ஏழாம் திருநாளில் | பிற்பகலில் வாமனாவதாரம் |
| எட்டாம் திருநாளில் | பிற்பகலில் திருப்பாற்கடல் கடைதல் |
| பத்தாம் திருநாளில் | பிற்பகலில் இராவண வதம் |

## 8:4:6 இராப்பத்து; திருவாய்மொழித் திருநாள்

**முதல் திருநாள்** ஏகாதசி நாள், பெருமாள் வைகறைப் போதில் கருவறையிலிருந்து புறப்பட்டுப் பரமபத வாசல் வழியாகத் திருமாமணி மண்டபத்தை நோக்கி எழுந்தருளுவார். கீழ்க்கோபுர வாசலுக்கு எதிரில் உள்ள மண்டபத்தில் நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், இராமானுசர் ஆகிய மூவரும் பெருமாளை எதிர்கொள்வர். அவர்களுக்கு எதிரில் அரையர் "உயர்வற உயர்நலம் உடையவன் எவனவன்"[63] எனத் திருவாய்மொழியைத் தொடங்குவார். பெருமாள் பக்கல் எழுந்தருள அனைவரும் திருமாமணி மண்டபம் அடைவர். ஒவ்வொரு நாளும் இவ்வாறே அன்றைய பத்தின் முதல் பாட்டை நம்மாழ்வார் முன் அரையர் சேவித்து, நம்மாழ்வாரைப் பெருமாள் பக்கம் எழுந்தருள் விப்பது வழக்கம்.

அன்று மாலை, அரையர் அபிநயம் பிடித்துத் தம்பிரான்படி வியாக்கியானம் சேவிப்பர். அதனோடு நம்பிள்ளை அருளிய ஈடு என்னும் திருவாய்மொழி வியாக்கியானத்தில் மஹாப்பிரவேசம் என்னும் தோற்றுவாய்ப் பகுதியும் முதல்பாட்டின் வியாக்கியானத் தையும் சேவிப்பார்.

அரையர் இப்பாசுரத்தை திருமாமணி மண்டபத்தில் சேவித்து, அபிநயம் பற்றி, ஈடு வியாக்கியானமும் சேவித்த பின், முதல் பத்து முழுவதையும் இசையோடு கூறுவார்.

**இரண்டாம் திருநாள்:** அரையர் சேவிக்கும் பாசுரங்கள் திருவாய்மொழி இரண்டாம் பத்து, அபிநய வியாக்கியானம்.

"கிளர் ஒளி இளமை கெடுவதன் முன்னம்"[64] என்ற பாடலுக்காகும்.

**மூன்றாம் திருநாள்** அன்று அரையர் சேவிக்கும் பாசுரங்கள் திருவாய்மொழியின் மூன்றாம் பத்து.

"ஒழிவு இல் காலம் எல்லாம் உடனாய் மன்னி"[65] என்ற பாடலுக்கு அபிநயமும், வியாக்கியானமும் நடைபெறும்.

**நான்காம் திருநாள்** : அரையர் சேவிக்கும் பாசுரங்கள் திருவாய்மொழி நான்காம் பத்து

"ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதும் இல்லா"[66] என்ற பாடலுக்கு அபிநயமும் வியாக்கியானமும் நடைபெறும்.

**ஐந்தாம் திருநாள்** அரையர் சேவிக்கும் பாசுரங்கள், திருவாய்மொழியில் ஐந்தாம் பத்து, அபிநய வியாக்கியானம்,

"எங்ஙனேயோ அன்னை மீர்காள்! என்னை முனிவது நீர்?"[67] என்ற திருவாய்மொழிப் பாசுரத்திற்கு அபிநய வியாக்கியானம் நிகழும இதுவே முதல் அகப்பொருள் பாசுரம்.

**ஆறாம் திருநாள்** அரையர் சேவிக்கும் பாசுரங்கள், திருவாய் மொழியின் ஆறாம் பத்து, அபிநய வியாக்கியானம்.

'உலகம் உண்ட பெருவாயா' உலப்பு இல் கீர்த்தி அம்மானே'[68] என்ற பாடலுக்காகும்.

**ஏழாம் திருநாளில்** அரையர் சேவிக்கும் பாசுரங்கள், திருவாய் மொழியில் ஏழாம் பத்து ஆகும். அபிநய வியாக்யானம்.

'கங்குலும் பகலும் கண்துயில் அறியாள்'[69] என்ற பாடலுக்கு நிகழ்த்தப்பெறும்.

இந்நாளில் ஆழ்வார் பெண்கோலம் கொண்டிருப்பார். அரையர் தம்மை தாயாகப் பாவித்து இருப்பார்.

**எட்டாம் திருநாள்** அரையர் சேவிக்கும் பாசுரங்கள், திருவாய்மொழியில் எட்டாம் பத்து ஆகும். அபிநய வியாக்யானம்.

"நெடுமாற்கு அடிமை செய்வேன் போல் அவனைக் கருதவஞ்சித்து"[70] என்ற பாடலுக்கு நிகழ்த்தப்பெறும்.

**ஒன்பதாம் திருநாளில்** அரையர் சேவிக்கும் பாசுரங்கள், திருவாய்மொழியின் ஒன்பதாம் பத்து ஆகும்.

"மாலை நண்ணித்தொழுது எழுமினோ . . . ."[71] என்ற பாடலுக்கு அபிநயமும், வியாக்கியானமும் நிகழ்த்தப்பெறும்.

**பத்தாம் திருநாளில்** அரையர் சேவிக்கும் பாசுரங்கள், திருவாய் மொழியின் பத்தாம் பத்து ஆகும். அரையர் அபிநயம்

"தாள தாமரைத் தடமணி வயல் சூழ்திருமோகூர்"[72] என்ற பாடலுக்கு அமையும்.

பிற்பகலில் பெரிய திருமொழியின் சாற்றுப் பாட்டுக்களான "மாற்றமுள ஆகிலும் சொல்லுவன்"[73] என்ற பதிகத்தின் இறுதிப் பாசுரம் சேவிப்பார். பின்னர் திருநெடுந்தாண்டகத்தின் கூற்றுப் பாசுரங்களான

"அன்றாயர் குலமகளுக்கு அரையன் தன்னை. . . ."[74] என்னும்போது பெருமாள் அரையருக்குத் தானீகர் மூலம் அருளிப்பாடு இட, இப்பாடலில் கூறப்பட்டுள்ள "இராவண வதத்தை" அரையர்

நடித்துக்காட்டுவார். இராவணவதை நாடகம் முடிந்ததும் சாற்று முறையை,

'மின்னுமா மழை தவழும் மேக வண்ணா! விண்ணவர்தம் பெருமானே! என்ற பாட்டுடன் நிறைவு செய்ததும் இலக்கியத் திருவிழாவின் முதல் பகுதியான திருமொழித் திருவிழா பகல்பத்து உத்சவம் முடிவுறும்.

1. திருநெடுந்தாண்டகத்தன்று ஆழ்வார் திருநகரி, திருவில்லிப் புத்தூர் ஆகிய ஊர்களில் அரையர் நிகழ்ச்சி ஏதும் இல்லை.

2. நான்காம் திருநாளில் சில திருப்பதிகளில் 'இருள்இரிய'[75] என்ற பாசுரத்திற்கு பதிலாக 'ஊனேறு செல்வம்'[76] என்ற நான்காம் திருமொழி முதல் பசுரத்திற்கு அபிநய வியாக்கியானம் செய்கின்றனர்.

3. ஒன்பதாம் திருநாளில் ஆழ்வார் திருநகரியில் 'அக்கும் புலியின் அதனாம் உடையார்'[77] 'முந்துற உரைக்கேன்' என்னும் இரண்டு பாசுரங்களுக்கு அபிநய வியாக்கியானம் செய்வர், மறுநாளில் 'முத்துக்குறி' நிகழ்ச்சி நடைபெறும்.

4) பத்தாம் திருநாளில், 'இரக்கம் இன்றி எம்கோன் செய்த தீமை' என்ற பதிகம் தொடங்குவது, ஆழ்வார் திருநகரியிலும், திருவில்லிபுத்தூரிலும் இப்பதிக வியாக்கியானம் இல்லை.

பத்தாம் பத்தில், முதல் எட்டு பதிகங்களையும் அரையர் சேவித்தவுடன், ஆழ்வாரைக் கைத்தலத்தில் ஏந்திக் கொண்டு, 'சூழ் விசும்பு அணி முகில்'[78] என்ற ஒன்பதாம் பதிகத்தின் ஒவ்வொரு பாட்டையும், இருமுறை சேவிக்கப் பெருமாளிடம் கொண்டு விடுவார். ஆழ்வாரைப் பெருமாள் திருவடியிலே கிடத்தி "முனியே, நான்முகனே, முக்கண்ணப்பா"[79] என்ற பத்தாம் பதிகத்தின் ஒவ்வொரு பாட்டையும் இருமுறை சேவிப்பார்.

இன்றோடு அத்தியயன உத்சவத்தில் அரையர் விழா முடிவு பெறும். பிரபந்தம் நிறைவு பெற்றதும், பெருமாள், அரையரைப்

பிரம்மரதம் ஏற்றி வரிசைகளுடன் அவருடைய திருமாளிகை சேர விடுவார். அதன் பிறகே தம் மூலத்தானம் எழுந்தருளுவார்.

## 8:4:7 இயற்பா சாற்றுமுறை

நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் இயற்பாவாகத் தொகுக்கப் பட்ட, பொய்கையாழ்வாரின் முதல் திருவந்தாதி, பூதத்தாழ்வாரின் இரண்டாம் திருவந்தாதி, பேயாழ்வாரின் மூன்றாந் திருவந்தாதி, திருமழிசையாழ்வாரின் நான்முகன் திருவந்தாதி, திருமங்கை யாழ்வாரின் திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் போன்றவைகளையும் மற்றும் திருவரங்கத்தமுதனாரின், இராமனுச நூற்றந்தாதியையும் திருவரங்கத்தமுதனார் வழிவந்த அமுதனார் குடும்பத்தைச் சார்ந்தவரால் திருநெடுந்தாண்டகத்தன்று நடை பெற்றதைப் போல் கோயில் மூலத்தானத்திலிருந்து இயலாக மட்டும் சேவிக்கப்படும்.

இன்றைய நடைமுறையில் அக்குடும்பத்தார் தம் முறையைத் துறந்தமையால், அரையரே இயற்பாவன்று இப்பாசுரங்களைச் சேவிக்கின்றார்.

## 8:4:8 அரையரின் சிறப்பு

நாதமுனிகள் நாலாயிரம் பாடல்களையும், ஆழ்வார் திருநகரி சென்று சேகரித்து, அவை மக்கள் நடுவில் உலவி வரவேண்டும் என்ற பெருநோக்குடன் தன் மருமக்கள் கீழையகத்தாழ்வான், மேலையகத் தாழ்வான் மூலமாக அவர்களுக்கு உபதேசம் செய்வித்தார். மேலும் இசையோடு அவற்றைப் பாடச் செய்வித்து மக்கள் இடையே ஆழமாகப் பதியச் செய்தார்.

"தம்பிரான்" என்னும் அரையர் வழிவந்தோர் எழுதிய வியாக்கியானங்கள் நாளடைவில் இவர்களது சேவையில் இடம் பெறலாயிற்று. கோயில்ஒழுகு என்ற நூலில்

'மதியாத தெய்வங்கள் மனமுறை வருணப் பெருமாளரையர்[80]
'நாதவினோத அரையர்' [81]

'கோயில் உடைய பெருமாள் அரையர், திருவரங்கப் பெருமாள் அரையர்'[82]
'நம்பாடுவான்'[83]
'விண்ணப்பம் செய்வார்'[84]
'இசையறியும் பெருமாள் கூட்டத்தார், 'வரம் தரும் பெருமாள் அரையர்'[85]
என்று இவர்களுக்கு பல சிறப்புப் பெயர்கள் உள்ளன.

நாலாயிரம் சேவிக்கும்போது, நாலாயிரம் தனியன்களைத் தங்கள் சேவையில் பாடுவது இல்லை. மாறாக இவர்களால் அமைக்கப் பட்ட பெருமாள், தாயார் பற்றிய பெருமைகளில் சில வரிகளைப் பாடி, நாலாயிரத்தைச் சேவிப்பார்.

விழாக்காலங்களில், பெருமாளின் ஸ்ரீசடகோபத்தையும், தீர்த்தத்தையும் பொதுமக்களுக்குச் சாதிக்கின்ற உரிமை இவர்களுக்கு உண்டு.

ஈரவாடை தீர்த்தம் சாதிக்கும் உரிமையையும் விழாக் காலங்களில் இவர்கள் பெற்றுள்ளனர்.

பிரம்மரத மரியாதை அத்தியயனத் திருநாளின்போது இவர்களுக்குண்டு.

இவர்கள் பெருமாள் திருமுன்னர் நாலாயிரத்தைச் சேவிக்கும் போது, தாமே ஆழ்வாராகி, அவர் அடைந்த இறையுணர்வுடன் ஒன்றி மெய் மறந்து விடுகின்றனர். ஆழ்வார் பாடிய உணர்வினை இந் நிகழ்ச்சியில் இவர்கள் வெளிப்படுத்துகின்றனர்



## இயல் — 8

## அடிக்குறிப்புகள்

1. பகவத்கீதை அத்தியாயம் வரிகள் 35 'தி ஹோலி கீதா' பாம்பே
2. தமிழ் அகராதி சென்னை 1982, பாகம் 1 பகுதி 1 பக்கம் 139
3. கோயில் ஒழுகு பக்கம் 6, மற்றும் 22 - 23
4. சீனிவாசாச்சாரியார், தி பிலாசபி ஆப் விசிஷ்டாதுவைதா, சென்னை 1946 பக்கம் 513
5. ஈசுவரசம்மிதை அத்தியாயம் 13, 46 6088
6. ஸ்ரீபிரசன்ன சம்மிதை அத்தியாயம் 46 6088
7. புருஷோத்தம சம்மிதை அத்தியாயம் 27 பக்கம் 47 - 50
8. மேலது
9. ஸ்ரீபிரசன்ன சம்மிதை அத்தியாயம் 46 6088
10. அநிருத்த சம்மிதை அத்தியாயம் 26 பக்கங்கள் 18 - 24
11. புருஷோத்தம சம்மிதை அத்தியாயம் 27 பக்கங்கள் 47 - 50
12. கோயில் ஒழுகு பக்கம் 43
13. திருநெடுந்தாண்டகம் பாடல் எண் 1
14. மேலது 2
15. மேலது 11
16. மேலது 11
17. திருவாய்மொழி 3:7:9
18. இலட்சுமி காவியம் மற்றும் வைகுண்ட ஏகாதசி - நூல் 16ஆம் பக்கம்
19. திருவாய்மொழி 1:1:1
20. பின்பழகிய பெருமாள் ஜீயர் - ஆறாயிரப்படி, குருபரம்பரை
21. கோயில் ஒழுகு 5 - 4
22. மேலது பக்கம் 24
23. ஸ்ரீரங்கம் அரையர் நாதமுனி அவர்களிடம் நேரில் கேட்டது
24. கோயில் ஒழுகு பக்கம் 23
25. வேதாந்த தேசிகர் மற்றும் முத்தமிழ் விழா
26. கோயில் ஒழுகு பக்கங்கள் 6 - 7
27. மேலது பக்கங்கள் 5 - 4
28. மேலது பக்கம் 54
29. திருநெடுந்ததாண்டகம் பாடல் எண் 1

30. பெரிய திருமொழி 1:1:1
31. மேலது 1:1:2
32. மேலது 2:10:1
33. மேலது 5:3:1
34. மேலது 2:10:1
35. மேலது 3:1:1
36. மேலது 5:4:1
37. மேலது
38. 1) 5:4:2 2) 5:4:3 3) 5:4:3 4) 5:4:4 5) 5:4:6 6) 5:4:7
39. திருப்பாவை பாடல் எண் 1
40. நாச்சியார் திருமொழி 13:2
41. பெருமாள் திருமொழி 1:1
42. திருமாலை 2ஆம் பாடல்
43. மேலது 3ஆம் பாடல்
44. மேலது 4ஆம் பாடல்
45. மேலது 5ஆம் பாடல்
46. மேலது 6ஆம் பாடல்
47. மேலது 27ஆம் பாடல்
48. கண்ணிநுண் சிறுத்தாம்பு 1ஆம் பாடல்
49. பெரியதிருமொழி 1:1:1
50. பெரியதிருமொழி 3:5:1
51. மேலது 3:6:5
52. மேலது 6:2:5
53. மேலது 5:6:1
54. மேலது 5:7:1
55. மேலது 5:7:1
56. மேலது 8:1:1
57. மேலது 8:2:1
58. மேலது 10:1:1
59. திருநெடுந்தாண்டகம் 1
60. மேலது 11
61. திருநெடுந்தாண்டகம் 1
62. பெரியதிருமொழி 10:2:1

63. திருவாய்மொழி 1:1:1
64. மேலது 2:10:1
65. மேலது 3:3:1
66. மேலது 4:10:1
67. மேலது 5:5:1
68. மேலது 6:10:1
69. மேலது 7:2:1
70. மேலது 8:10:1
71. மேலது 9:10:1
72. மேலது 10:1:1
73. மேலது 11:8:1
74. திருநெடுந்தாண்டகம் 29
75. பெருமாள் திருமொழி 1:1
76. பெருமாள் திருமொழி 1:4
77. பெரியதிருமொழி 9:6:1, 9:8:1
78. திருவாய்மொழி 10:9:1
79. மேலது
80. கோயில் ஒழுகு பக்கம் 24 (1888)
81. மேலது பகக்ம் 24 (1888)
82. மேலது பக்கம் 25 (1888)
83. மேலது பக்கம் 109 (1888)
84. மேலது பக்கம் 30 (1888)
85. மேலது பக்கம் 44 (1888)



# இயல் - 9




## 9:1 சிறப்பு விழாக்கள்

இவ்விழாக்கள் ஒன்பது நாள்கள் நடைபெறும்.

### 9:1:1 வசந்தத் திருநாள்

வசந்தத் திருநாள் என்பது வசந்த காலத்தில் பலவகை மலர்களால் உற்சவப் பெருமாளை அலங்கரித்து, அவரை ஒரு சோலையில் எழுந்தருளச் செய்து, அங்கமைந்துள்ள மண்டபத்தில் விழாவினை நடத்துவதாகும்.

இவ்விழாவைத் திருவரங்கப் பெருமாளுக்கு ராமரும், சீதையும் அயோத்தியில் நடத்தியதாக வால்மீகி இராமாயணத்தின் உரையான கோவிந்த ராஜீதயத்தில் கூறப்படுகிறது.[1]

திருவரங்கம் கோயிலில் ஐந்தாம் திருச்சுற்றில் அமைந்துள்ள வசந்த மண்டபத்தில் ஒன்பது நாள்கள் இவ்விழா நடைபெறும். வைகாசித் திங்களில் இவ்விழா நிகழ்வுறும். வைணவ, சைவக் கோயில்களில் இவ்வசந்தத் திருவிழா இன்றும் நடைபெற்று வருகிறது

### 9:1:2 இவ்விழா பற்றி ஆகமங்கள் கூறுவது

**பிரசன்ன சம்ஹிதை**

இவ்விழா ஆனி, ஆடித் திங்களில் ஏழு நாட்களுக்கு நடைபெறும். விழாவின்போது திருமுளை சாத்துதல், பலிதானம்

ஆகியவை நிகழும். பலவகையான பழங்கள் படைக்கப் பெறும். பானகம், தயிர் அன்னம் போன்ற அமுதினை இறைவனுக்குப் படைப்பர். ஏழாம் நாள் மாலை உற்சவரை எழுந்தருளச் செய்து கோயிலைச் சுற்றி வருவர். பின்பு ஆற்றங்கரைக்குச் சென்று திருமஞ்சனம் செய்யப்பெறும்.[2]

### பாத்ம சம்ஹிதை

வசந்த மண்டபத்தைப் பலவகை மலர்களால் அலங்கரிப்பர். உற்சவரை மூலத்தானத்திினின்று புறப்பாடு செய்து, வசந்த மண்டபத்தில் தெற்குப்புறம் பார்த்தவண்ணம் எழுந்தருளச் செய்வர்.[3]

### ஈசுவர சம்ஹிதை

சித்திரை, வைகாசித் திங்கள்களில் இவ்விழா நிகழ்வதைக் குறிக்கும். மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது நாள்களும் இவ்விழாவை நடத்துவர். விழா நாளன்று மாலை நேரத்தில் திருமுளை, காப்பு நாண் அணிவித்தல் போன்றவைகள் நடைபெறும். விழாவில் நாள்தோறும் பலிதானம் செய்யப்படும். பகல் நேரத்தில் உத்ஸவ பேரரை ஸ்ரீதேவி, பூதேவியுடன் எழுந்தருளச் செய்து மகா மண்டபத்தில் வைப்பர். ஸ்நான பேரரை, உற்சவருக்கு முன் வைத்து சூர்ணாபிடேகம் செய்வர். ஸ்ரீஸூக்த மந்திரங்களை அவர் முன்னர் ஓதுவர். உற்சவரை அலங்கரித்து, ஊரைச்சுற்றி வலம் வரச் செய்து, ஜலக்கிரீடையும் செய்விப்பர்.[4] வசந்த மண்டபம், கோயிலின் மூன்றாவது திருச்சுற்றிலே, மூலத்தானத்திற்கு வெளியிலோ இருக்க வேண்டும். வசந்தமண்டபம் நீரால் சூழப்பட்டு தெப்பம்போல் அமைந்திருக்கும்.[5]

## 9:13 திருவரங்கம் கோயிலில் இவ்விழா நடைபெறும் முறை

பெருமாள் இவ்விழாவின் பொருட்டு திருக்காப்பு அணிந்தருளு வார். முதல் திருநாளன்று அரங்கநாதர் உபயநாச்சிமார்களுடன் திருச்சி(விகை) என்னும் கேடயத்தில் எழுந்தருளி, அகளங்கன் திருவீதி

வழியாகச் சக்கரத்தாழ்வார் சன்னிதிக்கு வந்து அவருக்கு அருள் பாலித்து, அங்குள்ள மண்டபத்தில் நிற்பார்.

திருச்சுற்றுக்கார முதலியின் உபயமாக, பானகம் வடைப் பருப்பு முதலானவை பெருமாளுக்கு அமுது செய்விக்கப்படும். அவருக்கு அதன் பொருட்டு பெருமாள் மரியாதைகள் செய்வார். பின்னர் வசந்தமண்டபம் எழுந்தருளுவார். அங்கு உத்தமநம்பிக்குச் சேவை மரியாதை செய்வார். "உத்தமநம்பியின் முன்னோர் இவ்விடத்தில் மண்டபம் கட்டி இவ்விழாவைக் 'கேடாக்குழி உற்சவம்' என்ற பெயரில் நடத்தினர்" என்று கோயில் ஒழுகு கூறும்.[6] இம்மண்டபத்தில் பெருமாள் சூர்ணாபிடேகம் கண்டருளுவார். ஒரு காலத்தில் தாசிகள் கோலாட்டம் நடைபெற்றதாகத் தெரிகிறது. அந்நிகழ்ச்சி தற்பொழுதில்லை.

பின் அம்மண்டபத்திலிருந்து பெருமாள் உபயநாச்சிமாருடன் புறப்பட்டு, அகளங்கன் திருவீதி வலம் வந்து, தாயார் கோயில் எதிரில் உள்ள நான்கு கால் மண்டபத்தில் நின்று, தாயாருக்குச் சூர்ணாபிடேக மஞ்சள் பொடியைப் பண்டாரி மூலமாகக் கொடுத்து அனுப்புவார்.

அங்கிருந்து புறப்பட்டு, மூலத்தானம் எழுந்தருளுவார். இயல கோஷ்டியினர், இவ்விழாவில் பெருமாள் வசந்தமண்டபத்தி லிருந்து புறப்பட்டு அகளங்கன் திருவீதி வலம் வரும்போது, இயல் தொடங்கி சேவித்து வருவர். பெருமாள் ஐந்து குழி மூன்று வாசல் வழியாக ஆலிநாடன் திருவீதி எழுந்தருளியதும், அங்கு அவர்களுக்கு மரியாதை செய்யப்படும்.

வசந்த மண்டபத்தின் படியில் பெருமாள், கஜகதியில் படியேற்றம் கண்டு, ஆஸ்தான மண்டபத்திற்கு எழுந்தருளுவார். அரையர் அருளப்பாடு கண்டு பெருமாள் பற்றிய கொண்டாட்டத்தை அப்போது பாடுவார்.

இரண்டாம் திருநாளிலிருந்து ஆறாம் திருநாள் வரையிலும் மற்றும் எட்டாம் திருநாளிலும் பெருமாள் மட்டும் தோளுக்கினியானில்

புறப்பட்டு வசந்த மண்டபம் எழுந்தருளி, அங்கு திருவாராதனம், அமுது வகைகள் கண்டு, பின் அங்கிருந்து புறப்பட்டு அகளங்கன் திருவீதி வலம் வந்து, கார்த்திகை கோபுரத்தின் வழியாக மூலத்தானம் எழுந்தருளுவார்.

ஏழாம் திருநாள் அன்று பிரம்மோற்சவத் திருநாள் போன்றே, பெருமாள் உபயநாச்சிமார்களுடன் திருச்சி(விகை) என்னும் கேடயத்தில் புறப்பாடு கண்டு, கோயில் வாசலில் புறப்பாட்டிற்கு முன் சூர்ணாபி டேகம் செய்துகொண்டு, கொட்டாரத்தில் நெல் அளவு காண்பார்.

ஒன்பதாம் திருநாள் 'ஏகவசந்தம்' எனப்பெறும். மூலத்தானத் திலிருந்து பெருமாள் குதிரை வாகனத்தில் புறப்பட்டு, ஏழாம் நாள் கண்டவாறு சூர்ணாபிடேகம் கண்டு, நாழி(கை)கேட்டான் வாசல் வந்ததும், வேதபாராயணம் தொடங்கிச் சேவித்துவர, அவ்வாசல் வழியாக ஏழாம் திருச்சுற்று சித்திரை வீதி (கலியுகராமன் திருவீதி) அடைந்து, அங்கிருந்து இயல்கோஷ்டி முன் செல்ல, திருவீதி வலம்வந்து வடக்கு வாசல்வழியாகப் பெருமாள், தாயார் கோயிலுக்கு எழுந்தருளி, அங்கு திருவந்திக் காப்பு கண்டருளுவார்.

அங்கிருந்தவாறே சந்திரபுட்கரணி எழுந்தருளி, தீர்த்தவாரி கண்டு, வசந்த மண்டபத்திற்கு எழுந்தருளுவார். இந்நாளில் அவருக்கு ஏகாந்தத்தில் நாதசுரம் வாசிக்கப்படும். குதிரை வாகனத்திலிருந்து ஆஸ்தான மண்டபத்தில் எழுந்தருளி, அங்கு ஸ்நபன ஓமம் நடைபெற்று, அரையர் இசைக்கும் தாளத்தோடு, அகளங்கன் திருவீதி இடப்புறமாக எழுந்தருளி கருட மண்டபம் வழியாக ஆர்யபட்டாள் வாசல், நான்கு கால் மண்டபத்தில் நிற்பார். அங்கு பெருமாளுக்குத் திருவடி விளக்கப்பெறும். அரையருக்குத் தீர்த்தம், ஸ்ரீசடகோபம் முதலியவை சாதிக்கப்படும். விழாக்களின் இறுதி நாளில் வழக்கமாக நடைபெறும் வேதமோதுதலைக் கொடிக் கம்பத்தருகில் கேட்டவாறு பெருமாள் மூலத்தானம் சென்றடைவார்.

இவ்விழாவின் ஒன்பது நாள்களிலும் தேவதாசிகள் கோலாட்டம் நடத்தி வந்ததாகத் தெரிகிறது. தேவதாசிகள் ஒழிப்பு சட்டத்தின்

காரணமாக இந்நிகழ்ச்சி இன்றைய நடைமுறையில் இல்லை. கோயிலின் ஒழுகு 'எம்பெருமானாதியர் கோலாட்டம் அடித்து வருவர்' என்று குறிக்கிறது.[7]

இவ்விழாவில் "சூர்ணாபிடேகத்தின் போது அரையர் திருப் பல்லாண்டு (பெரியாழ்வார் திருமொழி) இசைத்தார்" என்று கோயில் ஒழுகு கூறுகிறது.[8] இன்றைய நடைமுறையில் முதல் திருநாள் சூர்ணாபிடேகத்தின் போது அரையர் திருப்பல்லாண்டு இசைக்கிறார். இவ்விழா ஒரு சமுதாய விழாவாகவும், சமயச் சடங்கினை மேற்கொண்ட விழாவாகவும் அமைவுறும்.

"இவ்விழா வசந்த காலத் தொடக்கத்தில் பெருமகிழ்வுடன் கொண்டாடப்பெறும்" என்று காளிதாசரின் *இரகுவம்சம்* கூறுகிறது.[9]

இவ்விழாவில் "மக்கள் பெருமகிழ்வுடன் பங்குகொண்டு குழாய் மூலம் ஒருவருக்கொருவர் வண்ணப்பொடி கலந்த நீரினைத் தெளித்து மகிழ்வர்" என்று *இரத்தினாவலி* என்னும் நூல் கூறும்.[10]

*தசகுமாரசரிதம்* என்னும் நூலில் "முழு நிலவன்று காதல் தெய்வம் ஒரு தோட்டத்தில் அசோக மரத்தின் கீழ் நிறுவப்பட்டு அதைச் சூழ்ந்து பலவகையான நிலையில் அழகுபடுத்தப்பெறும்" என்று தெரிவிக்கிறது.[11]

"காமதேவனைத் தோட்டத்தில் எழுந்தருளச் செய்து தங்கள் உள்ளத்து வேண்டுதலை நிறைவேற்றித்தர அவரிடம் வேண்டுவர் என்றும், திருமணமாகாத பெண்கள், தங்களுக்கு நல்ல கணவன் கிடைக்க வேண்டுமென்றும், திருமணமான பெண்கள் தங்கள் கணவனுக்கு நல்வாழ்க்கையும் நீண்ட ஆயுளும் வேண்டுமென்றும் வேண்டுவதாகக் குறிக்கப்படுகிறது.

காமனையும், ரதியையும் உருவமாக வைத்துப் பெண்கள் இவ்விழாவில் வழிபடுவர். இன்றும் தமிழ்நாட்டில் 'காமன் பண்டிகை' என்னும் விழா வசந்த காலத்தில் சிற்றூர்களில் நடைபெற்று வருதலைக் காண்கிறோம்.

திருவரங்கம் கோயிலில் இவ்விழா கோலாட்டம் போன்ற மகிழ்வு தரும் நிகழ்ச்சியுடன் நடத்திருப்பது கொண்டு, இவ்விழாவில் பெண்கள் தங்களை ஈடுபடுத்திக் கொண்டமை விளங்கும்.

## 9:2 நவராத்திரித் திருநாள்

**9:2:1** நவராத்திரி என்பதற்கு ஒன்பது இரவு என்று பொருள். புரட்டாசித் திங்கள் மறைமதி (அமாவாசை) நாளுக்குப் பிறகு வரும் ஒன்பது நாள்களிலும் இரவில் பராசக்தியைப் பல வடிவில் வழிபட்டு விழா நடத்துவர். முதல் மூன்று நாள்களில் மலைமகளையும், நடு மூன்று நாள்களில் திருமகளையும், இறுதி மூன்று நாள்களில் கலைமகளையும் வழிபட்டு, இவ்விழாவினை நிகழ்த்துவர். விழா முடிவுறும் பத்தாம் நாள் 'விஜயதசமி' என்னும் வெற்றித் திருநாள் கொண்டாடப்படும். வடநாட்டிலும், தென்னாட்டிலும் உள்ள எல்லா வைணவ, சைவக் கோயில்களிலும் இவ்விழா இன்றும் சிறப்பாக நடைபெற்று வருகிறது. திருவரங்கம் கோயிலில், இவ்விழா தாயார் சன்னிதியில் ஒன்பது நாள்கள் கொண்டாடப்படும். தாயார் அரங்க நாச்சியார் ஒன்பது நாள்களும் புறப்பாடு கண்டு, கோயிலிலுள்ள கொலு மண்டபத்தில் வீற்றிருந்து விழாவைக் காண்பார்.

### 9:2:2 இவ்விழாவின் தொன்மை

மகிடாசுரன் என்னும் கொடியவன் ஒருவன் நல்லோர்களுக்கு நலிவு செய்து வந்தான். அவன் கொடுமையைப் பொறுக்கலாற்றாத தேவர்கள், நாரதமுனிவரின் உபதேசத்தால் பார்வதி தேவியை நோக்கித் தவமியற்றினர்.

தவச்சாலையில் உள்ள யாக குண்டத்தில் தேவி,லலிதை என்னும் காமேசுவரியாகத் தோன்றி, தேவர்களது துன்பங்களை அகற்றுவதாகக் கூறி அருள்புரிந்தார். இந்த லலிதையைக் காமேசுவரனாகிய பரமேசுவரன் திருமணம் செய்து கொண்டார். அவரது அனுமதியோடு அவள் படைக்கருவிகள் பெற்றுப் போருக்குப்

புறப்பட்டார். அசுரனின் தம்பிகள் 'விசுக்ரன், விஷங்கன்' என்பவர்கள் தேவியை எதிர்த்தனர். தேவி தன்னிடத்தில் தோன்றிய துர்க்கையை அனுப்பி, அவர்கள் இருவரையும் விழுங்கச் செய்தார் அதன்பின் தேவி, மகிடாசுரனையும் அழித்து தேவர்களது துன்பங்களை அகற்றினார்.[12] இந்த நிகழ்ச்சியே நவராத்திரித் திருநாளாகக் கொண்டாடப்பட்டு வருகிறது.

## 9:2:3 இவ்விழா பற்றி ஆகமங்கள் குறிப்பிடுவதாவது

*பாஞ்சராத்திரம்* 'அந்தாக்யோத்தர' பாகத்தில் நவராத்திரித் திருநாள் பற்றிய குறிப்புள்ளது.

"அர்ச்சகர் நல் நேரத்தில் சாத்திர முறைப்படி விழாத தொடக்கத்தின் முதல் நாள் குதிரையை ஆற்றுக்கு அழைத்துச் சென்று நீராட்டுவர். அக்குதிரையை நன்கு அலங்கரித்து மாலை அணிவித்து, கைப்பந்தம், பூங்குடை முதலியவைகள் சூழ கிராமத்தை வலம் வரச் செய்வர். குதிரையைக் கோயிலுள் அழைத்துச் சென்று அதைக் கீழே இறக்கி, அர்க்கியம், பாத்தியம் முதலியன நடப்பித்து நன்கு வழிபாடு செய்து, குதிரைக்குச் சுண்டல் கடலையை அமுது செய்விபபர்.
குதிரைக்குக் கருட மந்திரத்தால் வழிபாடு செய்து, அமுது வகைகளைப பக்தர்கள், பாகவதர்கள், துறவியர் ஆகியோர்க்கு வழங்குவர்

மாலை நேரத்தில் இவ்விழாவிற்காக மண் எடுத்து திருமுளை நடத்துவர். அதன்பின் காப்பு நாண் நடததி, இலக்குமிதேவியை மந்திரத்தால் வழிபட்டு, ஹோமமும் செய்வர்.

இலக்குமிதேவியின் அருள் வழிபாட்டை முன்னிட்டு முறைப்படி தாயாருக்குத் திருமஞ்சனம் நடத்தித் தாயாருக்கும், குதிரைக்கும காப்புநாண் அணிவிப்பர். குதிரையின் கழுத்தில் புதிய ஆடையினைக் கட்டுவர்.

மண்டபம் தூய்மை செய்யப்பெற்று மலர்களாலும், பழ வகையாலும் அழகுபடுத்தப்படும். ஆடல், பாடல், நாடகங்கள், வேத

முழக்கம், கைப்பந்தங்கள், பெரிய தீபங்கள், தீப வரிசைகள் முதலியவற்றால் இலக்குமிதேவியை மகிழ்வுறச் செய்வர்.

தாயாரை அலங்கரித்து, அரியணையில் எழுந்தருளச் செய்து, வழிபாடுகளும், அமுதும் படைக்கப்பெறும். வெண்பொங்கல், அக்காரவடிசில், எள்ளன்னம், சர்க்கரைப் பொங்கல் போன்ற அமுது வகைகளோடு பானகம், கடலை, அவல் முதலியவைகளும் சேர்த்துப் படைத்து, ஒன்பது நாள்கள் இத்திருநாளினை நடத்துவர்.

விழா முடிவில் தாயாருக்கு முறைப்படி திருமஞ்சனம் நடப்பித்து, காப்புநாண் களையப்பெறும். அர்ச்சகருக்குத் தக்க வெகுமதி வழங்கப்படும். ஆசாரியனுக்குத் தீர்த்தப்பிரசாதங்கள் கொடுத்து மரியாதை செய்யப்படும். துறவிகள், முனிவர்கள், வைணவ அடியார்கள் முதலானோருக்கும் தீர்த்தப் பிரசாதங்கள் அளிக்கப் பெறும்.

''விழாவை முறை தவறிச் செய்தால் தீமை விளையும்'' என்றும் இந்நூலில் சொல்லப்படுகிறது.[13]

**ஈசுவர சம்மிதை**

இவ்விழா, புரட்டாசித் திங்கள் வளர்பிறையில் நடைபெறும். இவ்விழாவிற்குச் சிறந்த நாள் அட்டமி, நவமி நாள்களாகும். இவ்விழா மறைமதி (அமாவாசை) நாளில் தொடங்கி ஒன்பது நாள்கள் நடைபெறும். கோயில்களுக்கு ஏற்றவாறு ஒன்பது நாள்களுக்குக் குறைந்த நாள்களிலும் இவ்விழா நடத்தப்பெறலாம். திருமுளை, காப்பு நாண் கட்டுதல் இவ்விழாவிற்குண்டு.

கும்பம், மண்டலம், பிம்பம், அக்னி போன்ற வழிபாடுகள் இவ்விழாவில் நடைபெறும். விழா முதல் நாளும், கடைசி நாளும் தாயாருக்குத் திருமஞ்சனம் செய்யப்படும்.[14]

## 9.24 திருவரங்கம் கோயிலில் இவ்விழா நடைபெறும் முறை

### காப்புநாண் அணிவித்தல்

முதலில் தாயாருக்குத் திருமஞ்சனம் நடைபெறும். யாக சாலையில் ஓமம் நடந்து, திருநாளுக்கான காப்புநாண் அணிவிக்கப் பெறும். அப்பொழுது குதிரை காவிரியில் நீராடி, தாயார் கோயில் (சன்னிதியில்) வந்து கொலு மண்டபத்தின் எதிரில் நிற்கும். இங்கு குதிரை என்பது குதிரை வாகனமாகும். தாயாருக்குத் திருமஞ்சனம் நடத்திக் காப்புநாணும் அணிவித்து, மொச்சை சுண்டலும், அமுதும் படைக்கப்பெறும். பின்னர், குதிரைக்கும் காப்பு நாண் அணிவித்து, மொச்சை சுண்டல் படைப்பர்.

### முதல் திருநாள்

தாயார் அரங்கநாச்சியார் தன் வழக்கம் போலக் காலை திருவாராதனமாகப் பொங்கல் அமுது செய்தருளுவார். கோயில் தலத்தார் பட்டர் எழுந்தருளித் தாயார் திருமுன் வேத விண்ணப்பம் செய்வார். கடந்த மார்கழித் திருநாளின் ஏகாதசி அன்று பெருமாள் திருமுன்னர் வேதம் தொடங்கிய பட்டரே அடுத்த புரட்டாசி நவராத்திரி விழாவில் தாயார் கோயிலில் வேதம் தொடங்கும் உரிமை யினைப் பெற்றவராவார்.

பட்டருக்கு அருளப்பாடு சொன்னவுடன் பட்டர் முறைப்படி எழுந்தருளி யஜூர் வேதத்தின் முதல் பஞ்சாதியைச் சொல்வார் பட்டருக்கு மாலையும், தொங்குபரிவட்டமும் சூட்டப்பெறும். பட்டரைத் தொடர்ந்து ருக், யஜூர், சாம, அதர்வணம் முதலான வேதங்களையும் தனித்தனி அருளப்பாடிட்டு அழைக்க, அந்தந்த வேதங்களுக்குரிய ஆசாரியப்பெருமக்கள் தாயார் முன் விண்ணப்பம் செய்வர்.

### தாயார் கொலு

தாயார் தோளுக்கினியானில் எழுந்தருளிப் புறப்பட்டு, வலம் வந்து, தாயார் கோயிலுள் உள்ள நான்குகால் மண்டபத்தில் திருவடி

விளக்கிப் பானகம், வடைபருப்பு அமுது செய்ததும், கோயில் தலத்தார்கள், ஆசாரியர்களுக்குத் தீர்த்த வினியோகம் நடைபெறும்.

தாயார், நான்குகால் மண்டபத்தினின்று புறப்பட்டு, படியேற்றம் கண்டு, கொலு மண்டபத்தில் வீற்றிருப்பார். தாயார் படியேற்றத்தில் அரையர் 'தாயார் பற்றிய பெருமைகளைப் பாடுவார்.'

கோயில் அதிகாரிகள், மணியாரர் முதலானோர் தாயாரிடம் வந்து, மரியாதை பெற்று, கொலுவிற்காக அருகில் உள்ள மண்டபத்தில் அமர்ந்திருப்பர்.

இவ்விழாவிற்கென்று சிறப்புடன் அமையப்பட்ட இசைக் கச்சேரிகள், நாதஸ்வர இசை போன்றவை முழங்கும். யானை, சாமரம் வீசிக்கொண்டிருக்கும். இடைவிடாது மத்தாப்பு, வெடிகள், தீபங்கள் கொளுத்தப்படும். ஏறத்தாழ ஒரு மணி நேரம் இக்கொலுக் காட்சி நடைபெற்று தாயார் கும்பாலத்தி கண்டு, தோளுக்கினியானில் கொலு மண்டபத்தினின்று புறப்பட்டுத் தன் மூலத்தானம் எழுந்தருளுவார்.

இதுபோன்றே எட்டு நாள்களும் தாயார் திருநாள் காண்பார். ஏழாம் திருநாள் மட்டும் தாயார் திருவடி சேவையுடன் எழுந்தருளுவார். இத்திருவடிச் சேவை ஆண்டில் ஒருமுறை இந்நாளில்தான் நிகழ்வுறும்.

### ஒன்பதாம் திருநாள்

இன்று 'சரசுவதி' வழிபாடானதால் மூலத்தானத்தில் உள்ள மூலவர் ஸ்ரீதேவி, பூதேவி, உத்சவர் அரங்கநாச்சியார் மற்றும் கோயிலில் உள்ள அரவிந்தநாச்சியார், சரஸ்வதி, குருகூர் நாச்சியார், ஹயக்ரீவர் முதலானோர்களுக்குத் திருவாராதனம், கடதீபம், அமுது படைத்தல் முதலிய நிகழ்ச்சிகள் நடைபெறும்.

### தாயாருக்குப் பெருமாள் மாலை அனுப்புதல்

தாயார் கடந்த நாள்களில் புறப்பாடு கண்டவாறே ஒன்பதாம் நாளும் கொலு மண்டபம் அடைவார். கொலு மண்டபத்தில்

தாயாருக்குப் பொதுமக்கள் காணத் திருமஞ்சனம் நடைபெறும். பெருமாளிடமிருந்து தாயாருக்கு மாலை வரும். பெருமாளின் மாலையை இசை முழக்கத்துடன் பெரியகோயில் தானீகர் சகசரதாரத் தட்டில் வைத்து, தன் தலையில் சுமந்தவாறு தாசநம்பி பந்தத்துடன் தாயார் கோயிலுக்குக் கொண்டு வருவார்.

அந்நேரத்தில் குதிரையும் திருமஞ்சனக் காவிரியில் நீராடி, பெருமாள் மாலையைப் பின்தொடர்ந்து தாயார் கோயில் வந்தடையும்.

மாலையைத் தானீகர் தம் தலையினின்று இறக்கி அர்ச்சகரிடம் கொடுத்தவுடன், அர்ச்சகர் அதைத் தாயாருக்குச் சாற்றி, தாயார் சாற்றியிருக்கும் மாலையைக் களைந்து தானீகருக்கு சாதித்து, அவருக்குச் சேவை மரியாதை செய்து வைப்பார்.

தாயாருக்கும், குதிரைக்கும் திருவாராதனம் நடந்து மொச்சை சுண்டல் அமுது செய்விக்கப்பெறும்.

விழா முடிவுற்றதும் தாயார் புறப்பட்டு பெருமாள் கோயிலில் நடப்பது போன்றே இங்கும் திருத்தாழ்வரைதாசன் சொல்லும் 'படிப்பு' கேட்டு மூலத்தானம் அடைவார்.

தாயார் உள்ளே எழுந்தருளியதும் காப்புநாண் களையப் பெறும். குதிரைக்கும் திருவாராதனமாகிக் காப்புநாண் களைந்து மொச்சை சுண்டல் படைக்கப்பெறும். பிறகு குதிரை நேராகப் பெருமாள் கோயிலுக்குச் சென்று அவர் எதிரில் நிற்க, அங்கே குதிரைக்கு விசயதசமித் திருநாள் பொருட்டுக் காப்புநாண் அணிவிக்கப்பெறும். இவ்வாறு தாயார் கோயிலில் நவராத்திரி விழா நிகழ்வுறுவதைக் காண்கின்றோம்.

சரசுவதி வழிபாட்டின் மறுநாள் பத்தாம் திருநாளாக விஜயதசமித் திருநாள் அரங்கநாதருக்கு நடைபெறும். நவராத்திரி ஒன்பது நாள் களில் கடைசி மூன்று நாள்கள் சரசுவதி வழிபாட்டிற்கு ஏற்பட்ட தாகையால் புரட்டாசித் திங்கள் மூல நட்சத்திரத்திலிருந்து இறைவன்

திருமுன்னர் நூல்களை வைத்து வழிபாடு செய்வர். நவமி அன்று ஓமம் செய்ய வேண்டும்.

அரசர்கள் தங்கள் அரச விருதுகளுடன் வில் முதலிய ஆயுதங்களுக்கும், துந்துபி முதலிய இசைக்கருவிகளுக்கும் யானை மற்றும் குதிரைகளுக்கும் வழிபாடும், ஓமமும் செய்ய வேண்டும்.

நவமியன்று இந்திரனின் குதிரைக்கு வழிபாடு செய்ய வேண்டு மாகையால் அரசர்கள், அவற்றின் உருவங்களை வைத்தாவது வழிபாடு செய்ய வேண்டும்.

## 9:3 விஜயதசமி

**9:3:1** விஜயதசமி நாளில் ஊரின் எல்லையில் உள்ள வன்னி மரத்தடியில் வழிபாடும், பாராயணமும் செய்ய வேண்டும். மாலை நேரத்தில் ஊர் மக்கள் எல்லோரும் ஊருக்கு வெளியே வடகிழக்குத் திசைக்குச் சென்று வன்னிமரம் பாவத்தை நீக்கிப் புண்ணியத்தைத் தரும் மரமாதலால் அதற்கு வழிபாடு நடத்தி, எல்லையைத் தாண்டிச் சற்றுதூரம் வரை சென்று வரவேண்டும்.

அரசன் குதிரை மீதேறிப் புறப்பட்டு தனது ஆசானுடனும், அமைச்சர்களுடனும், வன்னிமரத்தடிக்குச் சென்று, மரத்துக்கு வழிபாடு செய்து அமைச்சர்களுடன் கலந்துரையாடி, மரத்தை வலம் வந்து மண்ணால் செய்யப்பட்ட எதிரிகளின் உருவத்தை அம்பெய்து வீழ்த்த வேண்டும்.

### 9:3:2 ஆகமம் கூட்டும் முறை

புரட்டாசித் திங்கள் தசமி அன்று வேட்டைத் திருநாள். அதாவது குதிரை வாகனத் திருநாள் செய்யப்பெறும். நவமி அன்று இரவு வாகனத்தையும், ஆயுதங்களையும் மேளவாத்தியங்களோடு நதிக்குக் கொண்டு சென்று தூய்மை செய்து, அவைகளைப் பட்டாடைகளால் அலங்காரம் செய்து, கோயிலைச் சுற்றி வலம் வரச்செய்வார்.

தசமி அன்று, பெருமாளைக் குதிரை வாகனத்தில் எழுந் தருளச் செய்து, காட்டுக்குச் சென்று, வன்னிமரத்தடியில் வேட்டைத் திருநாள் நடத்தி, வன்னி மரத்தடியில் நான்கு திசைகளிலும் அம்பு எய்து வன்னித் தழையைப் பெருமாளுடைய தலையில் வைத்து விழாக் காண்பர். பிறகு, திருவீதிகளில் பெருமாளை உலாக் காணச் செய்து கோயிலுக்குள் சென்று திருமஞ்சனம் செய்வர்.[15]

## 9.3.3 திருவரங்கம் கோயிலில் இவ்விழா நடைபெறும் முறை

பெருமாள் காலை நேரத்தில் பல்லக்கில் எழுந்தருளி இவ்வூரின் கீழ்க்கோடியில் உள்ள 'காட்டழகிய சிங்கப்பெருமாள்' சன்னிதியிலுள்ள வெளி மண்டபத்தில் எழுந்தருளுவார். மண்டபத்தில் திருவாராதனம், தளிகை அமுது, தீர்த்த வினியோகம் போன்ற செயல்கள் நடைபெறும்.

மாலையில் பெருமாள் குதிரை வாகனத்தில் எழுந்தருளுவார். அவர் முன்னர் தட்டுக்காரன் என்னும் பணியாளர், இவ்விழாவிற் கென்று தனி ஆடை உடுத்தி, வில்லையும், அம்பையும் எடுத்துக் கொண்டு யானை மீதேறி, தம் இல்லத்திலிருந்து சிங்கர் கோயிலை அடைந்து பெருமாள் முன் நிற்பார்.

### பெருமாள் அம்பு போடுதல்

அர்ச்சகரும், கோயில் புரோகிதரும் பெருமாள் முன்னிற்பர். பெருமாளுக்காக, அர்ச்சகர் அம்பு விடும் அப்பணியைச் செய்வார்.

பின்னர், அங்கிருந்து புறப்பட்டு கீழ்வாசல் வழியாகத் தெற்கு வாசல் சென்று இராயகோபுரம் வரை வேட்டையாடிக் கோயிலுள் எழுந்தருளுவார்.

### திருமஞ்சனம்

பெருமாள் குதிரை வாகனத்தை விட்டிறங்கி, மூலத்தானத்தில் உள்ள அமுது பாறையில் எழுந்தருளி, உபய நாச்சிமார்களுடன் திருமஞ்சனம் காண்பார்.

விஜயதசமி விழா இவ்வாறு நிகழ்வுறும்.

**நவராத்திரி வழிபாட்டு விதிகளைப் பற்றி நிர்ணயச் சிந்து, தர்ம சிந்து முதலிய தர்மசாத்திர கிரந்தங்களில் கூறியிருப்பதாவது**

புரட்டாசித் திங்கள் வளர்பிறை பிரதமையிலிருந்து ஒன்பது நாள் இலட்சுமி வழிபாட்டிற்கு உகந்ததாகும். இந்த நாள்களில் வழிபாடு, செபம், உபவாசம், வேதபாராயணம் முதலிய அங்கங்கள் நடைபெறும். அதன்பின் கடதாபனம், இலட்சுமி வழிபாடு அகண்ட தீபம், மாலை கட்டுதல், சுமங்கலிகளை வழிபடுதல், கன்னியர்க்கு உணவளித்தல் போன்ற செயல்கள் செய்யப்பெறும்.

## 9:4 ஊஞ்சல் திருநாள்

**9:4:1** இவ்விழாவை 'டோலோத்சவம்' என்ற பெயரில் அழைப்பர்.[16] இவ்விழாவைப் பிரம்மோத்சவத்தில் இணைத்துக் கொண்டாடுவர். தனி விழாவாகவும் கொண்டாடப்படும். இவ்விழா ஒன்பது நாள்கள் நடைபெறும். உத்சவரை ஊஞ்சலில் எழுந்தருளச்செய்து ஊஞ்சலாடச் செய்வர். இவ்விழா எல்லா வைணவ, சைவக் கோயில்களிலும் நடைபெற்று வருகிறது. திருவரங்கம் கோயிலில் பெருமாள் இவ்விழா விற்காகத் திருக்காப்பு அணிந்து கொள்வர். ஒன்பது நாள்கள் இவ்விழா நிகழ்வுறும். ஐப்பசி மாதம் தேய்பிறை ஏகாதசியில் இவ்விழா முடிவு பெற வேண்டும். அதனால் திருதீயையன்று இவ்விழா தொடங்கப்படும்.

### 9:4:2 ஆகமம் சுட்டும் முறை

ஸ்ரீபிரசன்ன சம்மிதை அத்தியாயம் 45இலும் ஈசுவர சம்மிதை அத்தியாயம் 12, வரிகள் 161 - 205லும் இவ்விழாவைப் பற்றிய செய்திகள் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன.

இவ்விழாவை ஐப்பசி, கும்ப மாதங்களில் உத்திராயணத்திலோ, தட்சிணாயணத்திலோ, வளர்பிறையிலோ அன்றித் தேய்பிறையிலோ நடத்துவர். விழாவின் இறுதி நாளான அவபிருதம் தசமி, ஏகாதசி, துவாதசி, சப்தமி, பௌர்ணமி நாள்கள் ஒன்றில் நடைபெறுமாறு விழாத் தொடங்கப்பெறும்.

இவ்விழாவை மூன்று, ஐந்து, ஏழு, ஒன்பது நாள்கள் நடத்துவர். ஊஞ்சல் மண்டபம் கோயில் முதல் சுற்றிலோ, இரண்டாம் சுற்றிலோ, கோபுரத்தின் வெளியிலோ அழகுற அமைந்திருக்க வேண்டும். அம்மண்டபம் 32, 24, 16 தூண்களுள் ஓர் அமைப்பினைக் கொண்டு மரத்தாலோ, கல்லாலோ அமைக்கப்பட்டிருக்க வேண்டும். அம்மண்டபத்தின் நான்குபுறமும் வாயில் அமைந்திருக்க வேண்டும். விதானம் பலவகையான வண்ணங்கள் பூசப்பெற்று அழகுற அமைந்திருக்கும்.

ஊஞ்சல், பொன், வெள்ளி, தாமிரம், மரம் இவற்றுள் ஒன்றால் அமைக்கப்பட்டு இருக்கும். இவ்விழாவில் மண் எடுத்தல், திருமுளை போன்ற சடங்குகள் நடைபெறும். காப்பு கட்டுதலும் இவ்விழாவில் உண்டு.

ஊஞ்சலின் முன் தானியத்தைப் பரப்பிக் கும்பத்தாபனம் செய்வர். ஒரு மகாகும்பமும், அதைச் சுற்றி எட்டு உபகும்பமும் வைக்கப்படும். இறைவனை மகாகும்பத்திலும், இந்திரன் முதலானவர் களை உபகும்பத்திலும் இருக்க வேண்டுவர். குண்டம் வைத்து அதில் தீ எழச் செய்து யாகம் செய்யப்படும். மாலை நேரத்தில் சங்க நாதத்துடன் உற்சவரை ஸ்ரீதேவி, பூதேவியுடன் மண்டபத்தில் எழுந்தருளச்செய்வர். இறைவனை நல்லநேரத்தில் ஊஞ்சலில் அமர்த்துவர். பலவகை அமுது வகைகளைத் தாம்பூலத்துடன் படைப்பர்.

அவிசு, பலித்தானம் முதலியன முடிந்தவுடன் ஊஞ்சலை ஆட்டுவிப்பர். அது சமயம் 'புருஷசூக்தம்' சொல்லப்படும். ஊஞ்சல் ஆடிக்கொண்டிருக்கும்போதே தீர்த்தத்தால் (நீரால்) பெருமாளின் முகத்தை அர்ச்சகர் துடைப்பார்.

தேவதாசிகள் நடனமாடுவர். ஆயின் அந்நடனம் இன்றில்லை. வீணை போன்ற இசைக் கருவிகள் இசைக்கப்படும். இறுதியாகப் பக்தர்களுக்குப் பிரசாதம் வழங்கப்படும்.

அவபிரதம் வரை நாள்தோறும் இவ்வாறே நடைபெறும். இவ்விழாவை மாலை நேரத்தில்தான் நடத்துவர். இவ்விழாவைக் காண்போர் இறைப்பேற்றினைப் பெறுவர் என்று சொல்லப்படுகிறது.[17]

## 9:4:3 திருவரங்கம் கோயிலில் இவ்விழா நடைமுறை

பெருமாள் இவ்விழாவின் பொருட்டுத் திருக்காப்பு அணிந் தருளுவார்.

**முதல் திருநாள்**

மாலைப்பொழுதில் பெருமாள் இரு நாச்சிமார்களுடன் திருச்சி(விகை) என்னும் கேடயத்தில் புறப்பாடு கண்டு கோயிலின் குலசேகரன் திருச்சுற்றில் அமைந்துள்ள ஊஞ்சல் மண்டபத்தில் எழுந் தருளுவார்.

இவ்விழாவில் நாள்தோறும் புறப்பாட்டில் பெருமாள் சட்டைப்பாளம், கபாய் என்ற ஆடைகள் தரித்துக் கொண்டு அதன் மேல் திருவாபரணங்களை அணிந்து கொள்வார்.

இத்திருநாளின் ஒன்பது நாள்களும் ஊஞ்சல் மண்டபத்தின் எதிரே உள்ள நான்கு கால் மண்டபத்தில் திருவந்திக்காப்பு கண்டருளிக் கந்தாடை ராமானுசருக்குச் சேவை சாதித்து, ஊஞ்சல் மண்டபம் சேர்வார்.

திரைபோட்டு, ஊஞ்சலில் தனிமையாக எழுந்தருளி தோசை, வடை அமுது செய்து, பிறகு வெளிப்பட்டு எல்லோருக்கும் சேவை சாதிப்பார். ஊஞ்சலாடிக் கொண்டே மங்களார்த்தி கண்டருளுவார். ஆண்டாளின் திருப்பாவையோடு, பெரியாழ்வாரின் 'மாணிக்கங் கட்டி' குலசேகரரின் 'மன்னுபுகழ்' ஆகிய பாசுரங்களை அரையர் பாட பெருமாள் ஊஞ்சலாடிக் கொண்டே அப்பாசுரங்களைக் கேட்பார்.[18]

அத்துடன் திருவரங்கத்தமுதனாரின் பேரன், பிள்ளைப் பெருமாள் அய்யங்கார் அருளிச்செய்த 'திருவரங்கநாதன் ஊஞ்சல்'

பாடல்களையும் அரையர் மூலம் செவி மடுப்பார். (தற்போது இந்தப் பாடல்கள் இசைக்கப்படுவதில்லை)

ஊஞ்சலை அர்ச்சகர் ஆட்டிக் கொண்டே தாம்பூலத்தை மடித்துச் சுருட்டி, பெருமாளுக்குக் கண்டருளப் பண்ணுவார். ஏறத்தாழ ஒருமணி நேரம் இவ்வூஞ்சல் சிறப்பு நிகழ்ச்சி நடந்தபின் பெருமாள் புறப்பட்டு கருவறையை அடைவார்.

### இரண்டாம் திருநாள்

அரங்கநாதப் பெருமாள் தோளுக்கினியானில் புறப்பட்டு ஊஞ்சல் மண்டபம் அடைந்தவுடன் முதல்நாள் போன்றே நிகழ்ச்சிகள் நடைபெறும். இரண்டாம் நாளிலிருந்து ஆறாம் திருநாள் வரையிலும் மற்றும் எட்டாம் திருநாளிலும், முதல் திருநாள் போன்றே நிகழ்ச்சிகள் நடைபெறும்.

### ஏழாம் திருநாள்

அரங்கநாதர் சந்தன மண்டபத்தில் இரு நாச்சிமாரோடு எழுந்தருளிச் சூர்ணாபிடேகம் செய்து கொள்வார். பின்பு அங்கிருந்து திருச்சி(விகை) என்னும் கேடயத்தில் இரு நாச்சிமார்களுடன் எழுந்தருளி மற்ற நாள்களைப் போல் நேராக ஊஞ்சல் மண்டபம் அடையாமல் ஆர்யபட்டாள் வாசலுக்கு வெளியே வந்து, கொட்டார வாசலில் நெல் அளவு கண்டருளித் தாயார் கோயில் முன் மண்டபத்தில் தாயார் செய்து வைக்கும் திருவந்திக்காப்பைப் பெற்றுக் கொண்டு வலம் வந்து ஊஞ்சல் மண்டபம் சேர்வார். மற்றைய செயல்கள் முன் நாள்களில் நடந்தது போன்றே நிகழ்வுறும்.

இந்த ஏழாம் திருநாள் விழா மதுரகவி ஆழ்வாரின் நந்தவனத் தாரால் உபயமாக நடத்தி வைக்கப்படுகிறது. இன்றைய நாளில் பலவகை மலர்களாலும், மலர்த்தட்டிகளாலும், ஊஞ்சல் மண்டபமும், ஊஞ்சலும், சுற்றுப்புறங்களும், அழகுற அமைக்கப்பெறும்.

எட்டாம் திருநாள் ஊஞ்சல் விழாவைக் கண்டு, பெருமாள் மூலத்தானம் அடைந்ததும் சயன மூர்த்திக்குச் சயனம் நடைபெறும்.

**ஒன்பதாம் திருநாள்**

இன்று சாற்றுமுறை. காலையில் பெருமாள் சின்னப் பெருமாளோடு புறப்பாடு கண்டு சந்திரபுட்கரணி அடைந்து தீர்த்தவாரி கண்டருளுவார். பின்பு பெருமாள் ஊஞ்சல் மண்டபம் சென்றடைந்து, மண்டபத்தின் கீழ் திருமஞ்சன வேதியில் திருமஞ்சனம் காண்பார். வேதவிண்ணப்பமும், கடதீபத்தினால் கும்பாலத்தியும் நடைபெறும். ஊஞ்சலில் எழுந்து இதுநாள்வரை ஊஞ்சலாடியதைவிட அதிக நேரம் இன்று ஊஞ்சலில் ஆடி மகிழ்வுறுவார்.

மண்டபத்திலிருந்து புறப்பட்டு, கொடிமரத்து அருகில் படிப்பு என்னும் திருப்பணிப்பு மாலை கேட்டு மூலத்தானம் எழுந்தருளுவார். விழாவுக்கான காப்புநாண் களையப்பெறும்.

இவ்வாறு ஊஞ்சல் திருநாள் ஒன்பது நாள்கள் நடைபெறும். 'கந்தாடை இராமானுசர்' என்பவர் இக்கோயில் ஊஞ்சல் மண்டபத்தைக் கட்டி, விழா நடத்தினார் என்று கோயில் ஒழுகு கூறும். அது குறித்தே இவ்விழாவில் அவருக்குச் சேவை மரியாதை நடத்தப் பட்டு, விட்டவன் விழுக்காடு அவர் மடத்துக்கு அனுப்பப்படுகிறது.

இன்றைய நடைமுறையில் கந்தாடை இராமானுசரின் பட்டத்தில் யாரும் இல்லை. அவருடைய மண்டபம் கந்தாடை ராமானுச மண்டபம் என்ற பெயரில் ஆறாம் திருச்சுற்றில் தெற்கு வீதியில் உள்ளது. விட்டவன் விழுக்காட்டையும் அவர் மடத்திற்கு அனுப்பி வைக்கப்படுகிறது.

## பிற விழாக்கள்

இக்கோயிலில் ஒருநாள் நடைபெறும் விழாக்கள் தனித்து விளக்கப்பட்டுள்ளன.

## 1. ஜேஷ்டாபிஷேகம் ஆயிரங் குடம் பெரிய திருமஞ்சனம்

**விளக்கம்**

ஆனித் திங்கள் கேட்டை நன்னாளில் இவ்விழா நடைபெறும். பெருமாளுக்கு அமுது படைப்பதிலும், திருமஞ்சனம் செய்வதிலும் ஏதேனும் குறைகள் ஏற்பட்டிருக்குமாயின் பரிகாரமாக இவ்விழா நடைபெறும் என்று தெரிகிறது. ஆயிரங் குடங்களில் நீர் கொண்டு வந்து, பெருமாளுக்குப் பெரிய திருமஞ்சனம் நடத்தி, மறுநாள் பெரிய திருப்பாவாடை என்று பெரிய படையல் படைக்கின்றனர். இவ்வாறு விழா நடத்துவது, எல்லா வைணவக் கோயில்களிலும் சைவக் கோயில்களிலும் உண்டு.

சிதம்பரம் நடராசர் திருக்கோயிலில் தைப்பூசத்தன்று இப்பெரிய திருவமுது படைக்கப்படுகிறது. இந்நிகழ்ச்சி மக்களின் மனவளத்தைக் காட்டுவதாக அமைந்துள்ளது. ஆயிரம் குடங்களில் நீர் கொண்டு வந்து இறைவனை நீராட்டுவர். 1690 படி அரிசியை சமையல் செய்து அதில் முக்கனிகளைச் சேர்த்து இறைவனுக்கு அமுது செய்வர். மக்கள் இம்மண்ணின் நீர்வளத்தையும், நில வளத்தையும் இவ்விழா மூலம் வெளிப்படுத்துகின்றனர் என்றே கூற வேண்டும்.

இன்று இந்நிகழ்ச்சி சிறப்புற நடைபெற்றாலும், ஆயிரம் குடம் என்பதற்குப் பதிலாக நாற்பது குடத்தளவில் குறைந்து, அமுது படைக்கும் அரிசியின் அளவும் மிகவும் குறைந்தே உள்ளது.

## ஆகமம் சுட்டும் முறை

இவ்விழாவைச் 'சகஸ்ர கலசாபிஷேகம்' என்ற சொல்லால் ஆகமம் சுட்டும். இவ்விழா நடத்தப்படும் காரணத்தை கூறும் முறையாவது. "**இறைவனால் சகசரகலசாபிடேகம் செய்ய ஆணை இடப்பட்டது.**" பிரும்மாவை நோக்கி இறைவன் ஆணையிடுவதாக அமைந்துள்ளது. பிரம்மஹத்தி தோஷத்தினால் தேவபதவியை இழந்த இந்திரன் முறைப்படி திருமாலை வழிபட்டுத் தன்னுடைய தேவ

பதவியை மீண்டும் அடைந்தான். இவ்வண்ணம் மற்ற அரசர்களும், இவ்வழிபாட்டைச் செய்து தங்களுடைய பாவங்களைப் போக்கிக் கொண்டு, மற்றவர் அடையமுடியா உலகத்தை அடைந்தனர்.

தூய்மையான ஆயிரத்தோரு கலசங்களால் என்னை ஆராதிப்பவர் அந்நிலையினைப் பெறுவர். இது குறித்தே கோயில்களில் இவ்விழா மக்களின் நன்மையின் பொருட்டும், அவர்கள் எல்லா நலன்களும் எய்தவேண்டியும் இன்றும் நடந்து வருகிறது.[19]

## திருவரங்கம் கோயிலில் இவ்விழா நடைபெறும் முறை

"ஜேஷ்டாபிஷேகத்தன்று, சகஸ்ரகலசாபிஷேகமும் சேர்ந்ததால் இன்றைக்கும் '*ஆயிரங்குடத் திருமஞ்சனம்*' என்று பெண்கள் இதனைத் தமிழில் வழங்குகின்றார்கள்"

இவ்விழா ஒரு காலத்தில் கோயிலின் ஸ்ரீபண்டாரத் திருமண்டபத்தில் எல்லோரும் கண்ணுறும் வகையில் ஆயிரம் குடத்தில் திருமஞ்சனம் பெருமாளுக்கு நடந்தேறியது.[20] ஆயின், இன்று அன்றுபோலின்றிக் கோயிலின் திரு உள் நாழிச்சுற்றின் (தர்மவர்மா திருவீதி) கீழ்ப்புறத்தில் தனித்து நடைபெறுகிறது.

கருவறையிலுள்ள பெருமாள், உபயநாச்சிமார் மற்றும் மூர்த்திகளையும் திருஉள்நாழிக்கு எழுந்தருளச் செய்து, அவர்களின் கவசங்கள் களையப்பெற்று தனிமையில் திருமஞ்சனம் நடக்கும்.

அன்று காவிரியில் உள்ள அம்மாமண்டபத் துறையிலிருந்து யானையின்மேல் தங்கக்குடமும் மற்றப் பணியாளர்கள் தங்கள் தலை மீது வெள்ளிக்குடமும், தாமிரக் குடமுமாக ஏந்தி, உடன் வேத பாராயணம் முழங்க நீர் கொண்டு வருவர்.

அன்று கருவறையின் எல்லா இடங்களும் தூய்மை செய்யப் படும். அரங்கநாதருக்குப் பயன்படுத்தப்படும் பொருள்களான மேல்

விதானம், திரை, அணை, மெத்தை முதலியன புதியதாகத் தைக்கப் படும். அரங்கநாதரின் கவசங்களில் ஏதேனும் பழுதடைந் திருப்பின் அது செப்பனிடப்படும். அன்று மூலவருக்குச் சாந்துக் காப்புத் தைலம் சாற்றப்படும். மறுநாள் பெரிய திருப்பாவாடை அன்று 1325 படி சமையல் செய்து பழங்கள், தேங்காய், நெய் முதலியவைகளும் சேர்ந்து படையல் செய்யப்படும். அந்தப் படையல், உரிய முறையில் உரிமையுடையோர்களுக்கும், பொதுமக்களுக்கு அளிக்கப்படும்.

அன்றைய தினம் பெரிய பெருமாளுக்கு (மூலவர்) திருமேனி முழுவதும் தைலம் சாத்தப்படும். அன்றிலிருந்து 40 நாள்களுக்கு மூலவர் திருவடி சேவையை நாம் கண்ணுறுதல் இயலாது. மூலவரின் திருமுகத்தை மட்டும் காணலாம். அவர் திருமேனி முழுவதும் தைலக் காப்பிட்டிருப்பதால் அவரது திருமுகம் தவிர மற்றவை திரையால் மறைக்கப்படும்.

## பெருமாள் திருஉள்நாழிக்கு எழுந்தருளும் நிகழ்ச்சி

மூலத்தானத்திலுள்ள பெருமாள், உபயநாச்சிமார்கள், திருவரங்க மாளிகையார், சின்னப்பெருமாள் முதலிய எல்லா மூர்த்திகளும் திருஉள்நாழியின் கீழ்ப்புறத்தில் எழுந்தருளப்பண்ணப் படுவார்கள். மூலத்தானத்திலுள்ள பெருமாளின் பூபாலராயன் சிம்மாசனம் முதலிய பொருள்கள் யாவும் வெளியே கொண்டு வரப்பட்டு நன்றாகத் தூய்மை செய்யப்படும். மூலத்தானம், அர்த்த மண்டபம், காயத்திரி மண்டபம் முதலிய இடங்களில் கட்டியுள்ள மேல்விதானத் துணி, திரை, திண்டுகள் ஆகியவற்றைப் புதுப்பித்து ஆங்காங்குள்ள விளக்குகளைத் துடைத்தும், சுத்தம் செய்வதுமான செயல்கள் நடந்து கொண்டிருக்கும்.

அரங்கநாதரும், உபயநாச்சிமார்களும் தங்கள் திருமேனி களில் சாற்றிக்கொண்டிருக்கும் 'அங்கி' எனப்படும் கவசங்களை, அர்ச்சகர் ஏகாந்தமாகக் களைவார். இந்தக் கவசத்தினுள், உபயநாச்சி மார்களின் உண்மைத் திருமேனியின் திருமார்பிலும், முதுகிலும் உள்ளங்கை அகலமுள்ள பச்சைக் கற்பூரப் பரளைகள் சாற்றப்

பட்டிருக்கும். பெருமாள் உபயநாச்சிமார் ஆக மூவர் திருமேனியிலும் சென்ற ஆண்டு ஜேஷ்டாபிஷேகத்தன்று சாற்றப்பட்ட இந்த ஆறு பச்சைக் கற்பூரப் பரளைகளையும் அர்ச்சகர் களைந்து கோயில் அதிகாரிகள் முன் வைப்பார்.

## குடம் புறப்பட்டு வரும் நிகழ்ச்சி

தங்கக்குடம், தங்கச் சாமரம், குடை முதலியவைகளை அந்தந்த ஊழியர்கள் எடுத்துக்கொண்டு, தலத்தார், மணியாரர், அதிகாரிகள் சூழக் காவிரிக்குச் செல்வர்.

கோயில் யானை இன்று சிறப்பாக அலங்கரிக்கப்படும். முகத்தில் புதுப்பிக்கப்பட்ட திருமண் காப்பு; காதுகளில் வரையப்பட்ட சங்கநிதி, பதுமநிதி, துதிக்கை, முன்னங்கால்கள், கழுத்து ஆகியவற்றில் எழுதப்பட்ட நான்கு வகை வண்ணத்தாலான சித்திரங்கள் கழுத்திலும், காலிலும் கட்டப்பட்டிருக்கும் மணி, வெள்ளிச் சலங்கை, தண்டை முதலிய ஆபரணங்களோடும் திருவரங்கநாதனின் பட்டத்து யானையாகத் தோன்றி, காவிரிக் கரைக்கு வந்து சித்தமாயிருக்கும்.

தலத்தார்கள், கொல்லைச் சேவகன், சாத்தாத வைணவன் முதலிய யாவரும் வந்த பிறகு, குடம் புறப்படுவதற்காகக் குறிக்கப் பட்டிருந்த நல்ல நேரத்தில் மணியாரர், தலத்தார் அனுமதியோடு குடங்களைப் பணியாளர்கள் எடுத்துச் செல்வர். காவிரி நீர் நிரம்பிய தங்கக் குடத்தை ஊழியர் ஒருவர் யானையின்மேல் அமர்ந்து பிடித்துக் கொள்வார். அந்தக் குடத்திற்கு உபசாரமாகப் பின்னால் சாமரங்களும், குடையையும் பிடித்தவாறு இரு ஊழியர்கள் அமர்ந்து கொள்வர். யானைக்கு முன்னால் மற்ற வெள்ளிக் குடங்கள், தாமிரக் குடங்களைத் தலையில் சுமந்து ஊழியர்கள் வருவர்.

சாத்தாத வைணவர்கள் வீசும் ஆலவட்டச் சேலைகளுடனும், பின்புறம் வேதபாராயணம் செல்லும் 'ஸ்வஸ்தி' வாசகத்துடனும், பெருமாளின் எல்லா விருதுகளுடனும், எட்டுவகை இசைக்கருவிகள்

முழுங்கத் திருமஞ்சனம் பெருஞ்சிறப்புடன் கோயிலின் சந்தன மண்டபத்தின் கீழ்ப்படியருகில்இறக்கி வைக்கப்படும்.

## ஏகாந்த திருமஞ்சனம்

குடம் வந்திறங்கியதும், அர்ச்சகர் கவசங்களையும், ஆறு பச்சைக் கற்பூரப் பரல்களையும் எடுத்து வந்து சேனை முதலியார் சன்னிதிக்கருகில் உள்ள தொண்டைமான் மேட்டிலிருக்கும் அறங் காவலர்களிடமும், தலத்தார்களிடமும் ஒப்பிப்பார்.

பின்னர்க் கவசங்கள் எடைபோட்டு நிறுக்கப்பட்டு அங்கு வந்தது சித்தமாயிருக்கும் பொற்கொல்லர்கள் அவற்றைப் பழுது பார்த்துச் செப்பம் செய்வதற்காக அறங்காவலர்கள் மூலம் ஒப்படைக்கப்படும்

திருஉள்நாழிக்குள் தனிமையில் எல்லா மூர்த்திகளுக்கும் பலவிதப் பழச்சாறுகள் கொண்டு நெடுநேரம் திருமஞ்சனம் நடக்கும். இவ்வாறு திருமஞ்சனம் முடிந்தபின் எல்லா மூர்த்திகளுக்கும் திருஉள்நாழியிலே ஏகாந்தப் பொங்கலும், ஏகாந்த வடையும் அமுது செய்வார்கள். இச்செயல்கள் முடிவுற ஏறத்தாழ இரவு ஏழு மணி ஆகிவிடும். இதற்குள், மேல்கட்டி, திரை, அணை போன்றவை புதிதாய் ஆங்காங்கே கட்டப்படும்.

'கோயிலாழ்வார் திருமஞ்சனம்' என்று விமானத்தின் உட்புறத்தில் பச்சைக்கற்பூரம், குங்குமப்பூ சேர்த்தரைத்த சந்தனம் பூசப்படும். உள்ளூரார், ஊழியக்காரர், மூலத்தானம் முதல் நான்முகன் கோபுரவாசல் வரைக்கும் உள்ள வாசறபடிகளிலும், சுவர்களிலும் சந்தனத்தை வாரி இறைப்பர்.

## சாந்துத்தைல அலங்காரம்

ஜேஷ்டாபிஷேகத்தன்று மூலவருக்குத் திருமேனி முழுவதும் சாத்தப்படுவதற்காகக் புனுகுத் தைலம் கொண்டுவரப்படும். இந்தத் தைலம் கோயிலாரால் ஆண்டுதோறும் தயாரிக்கப்படுகிறது. பெருமாளுக்கும் உபயநாச்சிமார்களுக்கும் பச்சைக் கற்பூரப் பரளை

சாத்தப்படும். இப்பரளை 197 வீசை எடையுள்ள பச்சைக் கற்பூரத்தை நன்றாக 'மை' போல அரைத்துத் தயாரித்ததாகும். இப்பச்சைக் கற்பூரத்திற்கு 'உள்காப்பு' என்று பெயர்.

ஸ்ரீரங்க நாராயண ஜீயர் எழுந்தருளியதும் அவர் திருமுன்னர் இத்தைலத்தையும், உள்காப்பையும், ஊழியர்கள் மேளதாளத்துடன் எடுத்துவந்து, தைலத்தை மூலத்தானத்திற்கும், உள்காப்பை திரு உள்நாழிக்கும் எடுத்துச் செல்வர். ஸ்ரீரங்கநாராயண ஜீயர் மூலத்தானம் எழுந்தருளித் திருவனந்தாழ்வாருக்கும் (ஆதி சேஷன்), மூலவருக்கும் ஏகாந்தமாய்த் தைலத்தை அணிவிப்பர்.

திருஉள்நாழியில் பெருமாளுக்கும், உபயநாச்சிமாருக்கும் உள்காப்பைப் பரளையாகத் தட்டி மார்பிலும், முதுகுப்புறத்திலு மாய்ச் சாற்றி மெல்லிய துணியால் மறைத்து, அதன்மேல் கவசங்களும் நன்றாக அணிவிப்பர். திருக்காப்புச் சேர்த்து எல்லா மூர்த்திகளையும் திருஉள்நாழியிலிருந்து மூலத்தானத்தில் எப்போதும் வீற்றிருப்பது போல் எழுந்தருளப் பண்ணி, மங்கள ஆரத்தி நடைபெறும்.

## பெரிய திருப்பாவாடை

மறுநாள் காலை வைகறைப் பொழுதில் பெரிய திருப் பாவாடை சேர்ப்பதற்காக, அழகிய மணவாளன் மண்டபத்தைத் 'திருச்சுற்றுக்கார முதலி' நீரால் கழுவித் தூய்மைப்படுத்துவார். கோயில் முறைகாரச் சலவைத் தொழிலாளர் திருப்பாவாடைத் துணியைச் சுத்தம் செய்து கொண்டு வந்து மண்டபத்தில் விரித்து வைப்பார். சர்தார், திருப்பாவாடைக்கு ஏற்பட்ட முக்கனிகளையும் வாங்கி வந்து சித்தமாயிருப்பார். திருச்சுற்றுக்கார முதலி, காய்கறிகளை திருத்திக் (அரிந்துக்) கொடுப்பார். திருப்பாவாடைப் பெருவமுதினை மண்டபத்தில் விரிக்கப்பட்டுள்ள துணியில் கொட்டி வைப்பார்கள். அதன்மேல் நெய், தயிர், முக்கனி மூன்றினையும் முறையே பால்காரர், தானீகர், சர்தார் மூவரும் கோயில் மடைப் பள்ளியிலிருந்து வாங்கி வந்து சேர்ப்பர். சாத்தாதவைணவர் திருப் பாவாடைக்கு வேண்டிய தேங்காயை உடைத்துத் தருவார். அந்தத்

தேங்காய்த் துறுவலை, சர்தார் வாங்கி வந்து திருப்பாவாடையில் சேர்ப்பார். பச்சடி அறைக்காரர் கறியமுதினைத் திருப்பாவாடையில் சேர்ப்பார்.

உத்தமநம்பி, மூலத்தானத்துள் எழுந்தருளியதும் அவர் முன், அனைத்து இசைக் கருவிகளுடன், பெரிய திருப்பாவாடை பெருமாளுக்கு அமுது செய்விக்கப்பெறும். பின் உத்தமநம்பிக்குத் தீர்த்தம், சாத்துப்படி மாலை முதலியவைகள் வழங்கி அவருக்கு உரிய அபயஹஸ்தம், திருவடி ஜோடி சாதித்து ஸ்ரீசடகோபம் சாதிக்கப்படும்.

திருப்பாவாடையைப் பகிர்ந்து, கணக்கில் கண்டவாறு முறைக்காரர்களுக்கும், அதிகாரிகளுக்கும் செலவு செய்து, பொதுமக்களுக்கும் கொடுப்பார். இக்கோயிலில் இவ்வாறு ஜேஷ்டாபிஷேகமும், திருப்பாவாடையும் இம்முறையிலேயே இன்று வரை நடைபெறுகின்றன.

## 2. ஆடிப்பதினெட்டு (ஆடிப்பெருக்கு)

**விளக்கம்**

ஆடி 18ஆம் நாள் விழா தமிழ்நாட்டில் சிறப்பாகக் கொண்டாடப் பெறும். அதிலும் குறிப்பாகப் பொன்னி நதி பாயும் சோழ வளநாட்டில் (திருச்சி, தஞ்சை மாவட்டங்கள்) இவ்விழாவைப் பெருமகிழ்வோடு மக்கள் தங்கள் இல்லங்களிலும் காவிரிக் கரையிலும் கொண்டாடி வருகின்றனர்.

இந்நாளில், புதிதாகத் திருமணம் ஆன மணமக்கள் காவிரிக்குச் சென்று காவிரி அம்மனை வணங்கி வரும் மரபானது தொன்றுதொட்டு இன்றுவரை நடந்துவரும் ஒன்றாகும். தங்கள் திருமண நாளின் மலர் மாலைகளைக் காவிரியாற்றின் நீர் ஓட்டத்தில் விடுத்து மகிழ்வர். சிலர் தங்கள் குடும்பம் சூழக் காவிரிக்குச் சென்று, காவிரியில் மண் எடுத்து, அதைக் கரையில் வைத்து மலர் சூட்டி அரிசி, வெல்லம் கலந்த மாவினைப் படைத்து மகிழ்வர். இன்னும் சிலர்

பலவகைகளான கலவைச் சாதங்கள் அதாவது பொங்கல், புளியோதரை, தயிர்சாதம் போன்றவைகளைக் கட்டிக் கொண்டு சென்று காவிரிக்கரையில் அமர்ந்து தாங்களும் உண்டு, பிறர்க்கும் அளித்து மகிழ்வர். இவ்விழா புதுவெள்ளத்தை வரவேற்கும் உழவரின் மகிழ்வோடு இணையும். மக்கள் இவ்விழாவில் பெருமளவில் தங்களை ஈடுபடுத்திக்கொள்வர்.

## ஆகமம் கூட்டும் முறை

ஸ்ரீபிரசன்ன சம்மிதையில் இவ்விழாவின் தோற்றம், நடை முறை ஆகிய குறிப்புகளைக் காணலாம். இவ்விழா நடத்துவதன் காரணத்தை இறைவன் இலக்குமிக்குச் சொல்வதாக இப்பிரசன்ன சம்மிதை விளக்கும். ஆண்டுதோறும் ஆடி மாதம் பதினெட்டாம் நாளில் அரசனும், அவ்வரசும் சிறப்படைவதற்காகக் 'கங்கோத்பத்தி' விழா நடத்த வேண்டும்.

"மகாபலியினுடைய யாகத்தில் நான் வாமன அவதாரம் எடுத்து மூன்றடி மண் யாசித்தேன். ஓர் அடியால் மண்ணையும், மற்றொரு அடியால் விண்ணையும் அளந்துவிட்டு, அண்டத்தைப் பிளந்தேன். அப்போது ஒரு துளையின் வழியாக உள்ளே நுழைந்த நீர் முழுவதும் நதிபோல் ஓடிற்று. என் திருவடியிலிருந்து உண்டான அந்த நதியைப் பிரமன் கங்கை என்று கூறினார். பிரமன் அக்கங்கையை நறுமண மலர்களால் வழிபட்டார்.

கைலாசம்வரை அக்கங்கையாறு ஓடிற்று. அதைச் சிவன் தன் தலையில் தரித்தார். பிறகு அக்கங்கையை வெளியே விட்டார். அக்கங்கை 'கங்கை, கோதாவரி, யமுனை, சரஸ்வதி, நர்மதை, சிந்து, காவிரி" என்ற பெயர்களோடு ஏழு பிரிவுகளாய் ஓடிற்று. தேவர்களும், முனிவர்களும் ஏழு பிரிவாய் உள்ள அந்நதிகளைப் புண்ணிய நதியாக வணங்கி வழிபட்டனர். அன்று முதல் அந்நதிகளைத் தெய்வமாக வழிபட விழா எடுத்தனர்."[21]

## இவ்விழா நடத்தப்படும் முறை

ஆடி மாதம் 18ஆம் நாளில் மாலை நேரத்தில் அர்ச்சகர் 'திருவிக்கிரம அவதாரம்' எடுத்த திருமாலை, உலக நன்மையின பொருட்டு ஒரு அலங்கரிக்கப்பட்ட பல்லக்கில் எழுந்தருளச் செய்து நதிக்கரைக்கு எடுத்துச் சென்று அங்கு ஒரு சிம்மாசனத்தில் வீற்றிருக்கச் செய்து அர்க்கிய பாத்தியங்களால் உபசரிப்பர்.

இறைவனுக்கு எதிரில் தானியத்தினால் ஆசனம் அமைத்து அலங்கரிக்கப்பட்ட ஒன்பது கும்பங்களையும், கரகத்தையும் தூய நீர் தெளித்துத் தூய்மை செய்து அவற்றில் நீரை நிரப்புவர்.

திருமாலின் திருவடி இந்தக் கும்பங்களில் இருந்தருள வேண்டும் என்று வேண்டுவர். திருமாலின் திருவடியினின்று வரும் கங்கையைக் கும்பத்தில் இருத்தி அர்ச்சிப்பர். மற்ற கும்பங்களில் இந்திரன் முதலிய தேவர்களையும், கரகத்தில் சுதர்சனத்தையும் எழுந்தருளச் செய்து, வழிபடுவர். கும்பத்தில் உள்ள திருமாலின் திருவடிப்புனித நீராகிய கங்கையை பூ, பழம், ஆடைகளால் வழிபடுவர். "திருவிக்கிரமனுடைய திருவடியிலிருந்து உண்டாகித் தேவர்களால் வணங்கப்பட்ட கங்கையே நீ இந்த நதியில் எழுந்தருளி இதில் நீராடுபவர்களின் துன்பங்களைத் தீர்ப்பாயாக" என்றும் வேண்டுவர்.

பிறகு இறைவனைக் (உத்சவரை) கோயிலுக்குள் எழுந்தருளச் செய்து மூலவரிடத்தில் சக்தியைச் சேர்த்துவிட்டு, இன்றைய 18ஆம் நாளில் இந்த விழாவைச் செய்து வைத்தேன் 'அன்பான என்னை ஏற்றருள்க' என்று வேண்டி, இரவு சயனம் வரையிலுள்ள ஏனைய வழிபாடுகளையும் இறைவனுக்குச் செய்விப்பர்.[22]

## திருவரங்கம் கோயிலில் இவ்விழா நடைபெறும் முறை

பெருமாள் அன்று காலை மூலத்தானத்தின் தங்கப் பல்லக்கில் புறப்பட்டு, நிறைய அணிகலன்கள் அணிந்து அழகுதரும் ஆடைகளுடன் மணமகன் தோற்றம் கொண்டு காவிரிக் கரையில்

உள்ள அம்மா மண்டபத்திற்கு எழுந்தருளுவார். அங்கு பெருமாளுக்குத் துறைப் பொங்கல் அமுது செய்யப்படும். காவிரிப் பெண், பெருமாளுக்கு அம்மா மண்டபப் படித்துறையில் அமுது படைப்பதைத் 'துறைப் பொங்கல்' என்று குறிப்பர்.

காவிரிக்கரையில் பெருமாள் தீர்த்தவாரி கண்டருளுவார். காவிரிப் படித்துறையில் பெருமாள் திருமுன்னர், ஸ்ரீசடகோபத்திற்குச் செய்யும் திருமஞ்சனமே தீர்த்தவாரியாகும். பெருமாளுக்குத் திருமஞ்சனம் நிகழ்வுற்று, திருவாராதனம் நடந்து, தீர்த்தப் பிரசாதங்கள் வழங்கப்பெறும். மாலை நேரத்தில் பெருமாள் முன்னர் அரையரால் திருப்பாவை இசைக்கப்பெறும்.

## திருக்காவிரித் திருமண நிகழ்ச்சி

திருக்காவிரியின் திருமணத்தின் பொருட்டுப் பெருமாள் திருவடியிலிருந்து மலர்மாலை, தாலி, சரடு, மஞ்சள், குங்குமம், தங்கப் பொட்டு, புடவை, மிக்கோலை, கருகமணி ஆகியவை உரிய மரியாதையுடன் வெள்ளித் தட்டில் எடுத்துச் செல்லப்பட்டுக் காவிரி நீரில் விடப்படும். அப்போது பெருமாள் மணக்கோல ஆடை, அணிகலன்களுடன் காட்சி தருவார். இக்காட்சி புது மணமகன் திருக் கோலத்தைக் குறிக்கும்.

அம்மா மண்டபத்திலிருந்து புறப்பட்டுத் திரும்புங்கால் மலர்ப் பந்தலுடன் மணக்கோலம் முடித்து, ஊர்வலம் வருவது போன்று கோயிலுள் எழுந்தருளுவார். வரும் வழியில் வெளியாண்டாள் சன்னிதி யில் ஆண்டாளுடன் மாலை மாற்றிக் கொண்டும், கோயிலிலுள்ள உள்ஆண்டாள் சன்னிதியில் ஆண்டாளுடன் மாலை மாற்றிக் கொண்டும் மூலத்தானம் வந்தடைவார்.

இவ்விழாவினைப் பற்றிப் பாரமேசுவர சம்மிதையில் ஏதும் சொல்லப்படவில்லை. ஸ்ரீபிரசன்ன சம்மிதையில், சொல்லப்பட்ட முறையிலும் இங்கு நடைபெறவில்லை. எனினும் உலக வழக்கத்தின்

படிப் புதுமணமகன் தோற்றம் தாங்கிப் பெருமாள் காவிரிக் கரைக்கு எழுந்தருளுவதும், சீர் கொண்டு வந்து காவிரி ஆற்றில் அலைகளை விடுவதும் போன்ற நிகழ்ச்சிகள்யாவும் தமிழர்களின் பழக்க வழக்கங்களின் அடிப்படையில் அமைந்திருப்பது கொண்டு இவ்விழா தமிழகச் சமுதாய அமைப்பினை ஒத்துக் கொண்டாடப்படுவதாகக் கொள்ளலாம்.

அன்றைய நாளில் காவிரியில் பெருமளவில் மக்கள் சூழ்ந்திருந்து இந்நிகழ்ச்சியில் பங்கேற்பர். ஜேஷ்டாபிஷேகத் திருநாள் கணக்குப்படி இந்த விழா ஆடி 18 அல்லது ஆடி 28 ஆகிய நாட்களில் நடைபெறும்.

## 3. கிருஷ்ணஜெயந்தி (கண்ணன் பிறந்த நாள்)

இவ்விழாவை, வைணவப் பெருமக்கள் தங்கள் இல்லங்களில் கொண்டாடுவர். ஆயின், பொதுவாக ஜெயந்தி உத்சவம் என்பது கண்ணன், இராமன், நரசிம்மன், வாமனன் போன்ற திருமாலின் அவதார நாள்களைச் சுட்டும். இருப்பினும் வழக்கமாக ஸ்ரீஜெயந்தி திருநாள் என்பது கண்ணன் பிறந்த நாளையே சிறப்பாகக் குறிப்பிடுவ தாகக் கொள்ளலாம்.

## ஆகமம் சுட்டும் நிலை:

## ஆகமங்களில் இவ்விழா நடைபெறும் முறை

ஸ்ரீபிரசன்ன சம்மிதை, இவ்விழாவை வைணவக் கோயில்களில் அவசியம் நடைபெற வேண்டிய ஐந்து விழாக்களுள் ஒன்றாகக் குறிக்கின்றது. திருநாளின் மாலை நேரத்தில் அர்ச்சகர் பெருமாளிடம் சென்று, "இறைவா, நீ முன்பு கிருஷ்ணனாக அவதாரம் செய்ததை உத்சவமாக நடத்துகின்றேன். அந்த உத்சவம் முடியும்வரை நீ கிருஷ்ண விக்கிரகத்தில் எழுந்தருள வேண்டும்" என்று வேண்டுவர்

கோயிலுக்கு வெளியில் மண்டபத்தில் கிருஷ்ண விக்ரகத்தினை எழுந்தருளப் பண்ணித் துவார வழிபாடு நடத்துவர். கிருஷ்ணனுக்கெதிரில் தான்ய பீடத்தில் கும்பம், கரகம் முதலியவற்றை வைத்து கிருஷ்ணனுக்குத் திருமஞ்சனம் செய்விப்பர்.

சங்கில் பசும்பாலை எடுத்துக் கொண்டு கிருஷ்ணனுக்கு அமுது படைப்பர். பலவிதமான பலகாரங்களையும் அமுது செய்விப்பர். ஊஞ்சலில் ஆதிசேடனை எழுந்தருளச் செய்து அதன் மேல் கிருஷ்ணனைப் படுக்க வைத்து ஊஞ்சல் பாட்டு மற்றும் வைணவப் பாடல்கள் முதலானவற்றைப் பாஞ்சராத்திரத்திரமறிந்த பெரியோர்கள் பாடுவர்.[23]

## உறியடி

மறுநாள் காலையில் உறியடி நடைபெறும். கோபுரத்திற்குப் பின்புறமுள்ள மண்டபத்தில் தயிர்ச்சட்டி, பாற்சட்டி, மஞ்சள் நீர்ச் சட்டி ஆகியவைகளைக் கயிற்றில் கட்டித் தொங்கவிடுவர். இறைவனை மேளதாளங்களுடன் எல்லா வீதிகளிலும் எழுந்தருளப் பண்ணுகையில் இடையர்களிடம் கோல் (கம்புத் தடி) கொடுத்துத் தயிர்ச்சட்டி, பால் சட்டி, மஞ்சள் நீர்ச் சட்டிகளைக் கீழே தள்ளிவிடச் செய்வர். அந்தத் தயிர், பால் ஆகியவற்றை உண்டு, உடம்பிலும் பூசிக்கொள்வர். மஞ்சள் நீரைக் குழாய் மூலம் வீதிகளில் தெளிப்பர். இடைக்குலப் பெண்கள், கண்ணன் திருவுருவத்தின் மேல் வெண்ணையை வீசி எறிவர். இச்செயல்கள் நடந்த பின்னர் இறைவன் கோயில் உள்ளே எழுந்தருளுவர்.

## திருவரங்கம் கோயிலில் இவ்விழா நடைபெறும் முறை

கண்ணன் பிறந்த நாளன்று காலையில் பெருமாள் புறப்பட்டு கோயிலின் நான்காம் திருச்சுற்றிலுள்ள ஸ்ரீபண்டார மண்டபத்தில் எழுந்தருளுவார். இந்த மண்டபத்தைக் கட்டி உத்சவத்தையும், நடத்தி வைத்த உத்தமநம்பிக்குச் சேவை மரியாதை செய்து வைப்பார். பிறகு பெருமாள் அம்மண்டபத்தில் திருமஞ்சனம் கண்டருளுவார்.

கிருஷ்ணனுடைய அவதார நிமித்தமாகத் திருவாராதனத்தில் பெருமாளுக்கு எண்ணெய் கண்டருளப்படும். அந்த எண்ணெயை அரையர் கூடியுள்ள கோஷ்டிக்கு வழங்குவார். அரையரால், கண்ணன் தொடர்பான பெரியாழ்வாரின் 'வண்ண மாடங்கள்', 'சீதக் கடல்', 'மாணிக்கம் கட்டி' என்ற பாசுரங்கள் தாளத்தோடு பாடப்பெறும்.[24]

பெருமாள், மண்டபத்திலிருந்து மூலத்தானம் எழுந்தருளி திருவாராதனம் கண்டபின் பலவகைத் திருப்பணியாரங்கள் அமுது செய்விக்கப்படும்.

கண்ணன் திருவுருவிற்கும் திருமஞ்சனம் நடத்தப்பெற்று திருப்பணியாரங்களுடன் அமுது செய்விக்கப்படும்.

## உறியடி

மறுநாள் காலையில் கண்ணன் திருவுருவை, எண்ணெய் விளையாட்டுடன் திருவீதி எழுந்தருளச் செய்வர். வீதியில் எண்ணெய்க் காப்பும், மொச்சைச் சுண்டலும், பக்தர்களுக்கு வழங்கியவாறு தன் சன்னிதிக்கு எழுந்தருளுவார்.

உச்சி வேளைக்குப் பின் பெருமாள் தன் இரு உபயநாச்சிமாருடன் புறப்பட்டு, உடன் கிருஷ்ணனையும் அழைத்துக் கொண்டு திருமஞ்சனக் காவிரியிலுள்ள உறியடி மண்டபத்துக்கு எழுந்தருளுவார். அங்கு திருவாராதனம் கண்டு, தெற்கு வீதி மேல் புறத்தில் வழுக்கு மரம் நாட்டி, கிருஷ்ணன் வழுக்குமரம் ஏறுவதாகத் திருச்சுற்றுக்காரன் வழுக்கு மரம் ஏறுவான்.

வழுக்கு மரத்தின் அருகில் உள்ள மண்டபத்தின் மேல் வைத்திருக்கும் பால் சட்டி, தயிர்ச் சட்டிகளையும், மஞ்சள் நீரையும் கிருஷ்ணன் பொருட்டு திருச்சுற்றுக்காரன் கீழே தள்ளி உடைப்பான். பெருமாள் இவ்வுறியடித் திருநாளின் பொருட்டு கிளிமாலை அணிந்து கொள்வார். கிளிமாலை கட்டும் வைணவனுக்கு யானையேற்ற மரியாதை உண்டு.

## 4. இராமஜெயந்தி (இராமநவமி) நரசிம்மஜெயந்தி விளக்கம்

இராமநவமியும் நரசிம்ம ஜெயந்தியும் இக்கோயிலில் நடைபெற்று வருகின்றன. சித்திரை மாதம் வளர்பிறை நவமியில் இராமநவமியும், வைகாசி மாதம் வளர்பிறை சதுர்தசியில் நரசிம்ம ஜெயந்தியும் நடைபெறும்.

### ஆகமம் கூட்டும் முறை

பாத்ம சம்மிதை கூறுவதாவது சித்திரை மாதம் புனர்பூச நட்சத்திரமும், நவமி திதியும் சேர்ந்த கடக லக்னமே இராமபிரான் பிறந்த வேளையாகும். அன்றைய நாளில் சீதையோடு இராமபிரானை வழிபட்டு முறையோடு விழா நடத்த வேண்டும்.[25] இவ்வாறே சித்திரை மாதத்தில் திருவோண நாளில் மாலைப்போதில் அரியுருவாகி இரண்யனை அழித்தவனான நரசிம்மரை வழிபடலாம். மேலும், அதே மாதத்தில் வளர்பிறை திரயோதசியிலாவது, புனர்பூசத்திலாவது, முழுநிலவன்றாவது வழிபடலாம் என்று தெரிகிறது.[26]

### திருவரங்கம் கோயிலில் இவ்விழாக்கள் நடைபெறும் முறை

இராம நவமி:- அன்றைய நாளில் நம்பெருமாள் புறப்பட்டு அர்ச்சுன மண்டபத்தில் எழுந்தருளுவார். சீதைக்குப் பதிலாகப் பெருமாளின் தேவியர் எண்மருள் ஒருவரான சேரகுலவல்லி நாச்சிமார் பெருமாளுடன் எழுந்தருளி இவ்விழாக்காண்பர்.[27]

குலசேகராழ்வாரின் பெருமாள் திருமொழியில் இராமன் பற்றி உள்ள மன்னுபுகழ், வன்தாளினிணை, அங்கணெடு மதிள் பதிகங்களை அரையர் தாளத்தோடு இசைப்பார்.[28]

## 5. தீபாவளித் திருநாள்

இத்திருநாள் பாரதத் திருநாடு முழுவதும் கொண்டாடப்படும். இத் திருநாளை மக்கள் மகிழ்வோடு தங்கள் இல்லங்களில் கொண்டாடுவர்.

பெரியவர் முதல் சிறியவர் வரை அனைவரும் தங்களை இவ்விழாவில் இணைத்துக் கொண்டு புத்தாடை உடுத்தி, மத்தாப்பு, போன்றவை களைக் கொளுத்தி வாணவேடிக்கை கண்டு மகிழ்வர். கோயில்களிலும் இவ்விழா நடத்தப் பெறுகின்றது. திருவரங்கம் கோயிலில் இவ்விழா சிறப்புடன் நடைபெறுகின்றது. இத்திருக்கோயிலில் பாஞ்சராத்திரம் வகுத்த வழியில் இவ்விழா நடைபெறும்.

## ஆகமம் சுட்டும் நிலை

ஸ்ரீபிரசன்னசம்மிதை கூறுவதாவது: பூமிதேவியின் மகனான நரகாசுரன் உலகத்தை மிகவும் துன்பப்படுத்திக் கொண்டிருந்தான். கண்ணன் அவனை அழித்து, உலகில் வாழும் மக்களை அவனிட மிருந்து காத்தார். இறைவன் திருக்கரத்தால் அழிக்கப்பட்ட நரகா சுரன் மேலுலகப் பேறு எய்தினான். அதனால் அவன் மகிழ்ச்சி பெற்றான். "தன் பெயரைக் கூவிக் கொண்டே கோயில்களிலும், வீடுகளிலும் விழாவாக நடத்தி மகிழ வேண்டும்" என்று இறைவனிடம் வேண்டினான்.

அவ்வாறே கோயில்களில், இறைவனுக்கு நீராட்டல் செய்வித்துப் புத்தாடை தந்தும், மக்கள் தங்கள் இல்லங்களில் காலை நீராடிப் புத்தாடை அணிந்தும் விழா கொண்டாட வேண்டுமென்று இறைவன் ஆணையிட்டார். ஐப்பசித் திங்கள் தேய்பிறை சதுர்தசியன்று நிலா உதயமாகும் நேரத்தில் இறைவனுக்குத் தைலத்தால் நீராட்டுச் செய்விப்பர். இறைவனுக்குப் பயன்படுத்தியது போக எஞ்சியுள்ள தைலத்தை அங்கு கூடியிருக்கும் எல்லோரும் தம் தலையில தடவிக் கொள்வர்.

இறைவனை வெளி மண்டபத்தில் எழுந்தருளச செய்து பலவிதமான பணியாரங்களைப் படைக்க வேண்டும். அவர் திருமுன் தானியங்களைப் பரப்பி அதன்மேல் தங்கத் தட்டில் விலையுயர்ந்த ஆடைகளையும் வெற்றிலை, பாக்கு, தேங்காய் முதலியவைகளையும் வைத்துப் புண்ணிய நீரால் அவைகளைப் பூசித்து ஆடைகளில் 'சந்திரனை' எழுந்தருளச் செய்து, யானையின் மீதாவது, பணியாளர் தலையிலாவது அவற்றை வைத்துக் கோயிலைச் சுற்றி வந்து

பெருமாளுக்குச் சாத்திப் பின்னர் மூலத்தானம் சென்று மூவருக்கும் அணிவிப்பர்.[29]

## திருவரங்கம் கோயிலில் இவ்விழா நடைபெறும் முறை

### எண்ணெய் அலங்காரம்

ஐப்பசி சதுர்தசியன்று மாலைநேரம் மேளதாளத்தோடு எண்ணெய் எடுத்து கோயிலைச் சுற்றி வந்து கோயிலுக்குள் சென்று பெருமாளுக்குக் கண்டருளப் பண்ணுவர். பின் தாயார் கோயிலுக்கு எண்ணெய் அலங்காரம் எடுத்துச் செல்லப்பட்டுத் தாயாருக்குக் கண்டருளப் பண்ணப்படும்.

கோயில் தலத்தார் வாதூலதேசிகர் வழிவந்த அண்ணங்கார், அப்பன் இருவருள் ஒருவருக்குப் பெருமாளின் எண்ணெய் அலங்காரம் அனுப்பப்படும்.

### தீபாவளித் திருநாள்

மறுநாள், தீபாவளி அன்று ஆழ்வாராசாரியர்கள் சூழ பெருமாள் சந்தன மண்டபம் எழுந்தருளித் திருமஞ்சனம் கண்டருளு வார். பெருமாள் இன்று பல்வகைத் திருவாபரணங்கள் அணிந்து கொண்டு திருவாராதனம் கண்டு தோசை, வடை அமுது செய்வார். தலத்தார், பட்டர் எழுந்தருளி வேத விண்ணப்பம் செய்வார். உடன் சாளி அலங்காரம் நடைபெறும்.

### ஜாலி (சாளி) அலங்காரம்

'சாளி' என்றால் தெலுங்கு மொழியில் தோல்பையைக் குறிக்கும். 'ஜாலி' என்றால் துருக்கி மொழியில் பணப்பை என்று பொருள்.[30] கோயில் காசாளரிடமிருந்து ஐநூறு பணமும், விழா முறைக்காரர்கள் ஐநூறு பணமும் ஆக ஆயிரம் பணத்தை ஒரு பையில் கட்டி அதை வெள்ளித் தட்டில் வைத்து மேளதாளத்தோடு எடுத்துவந்து அர்ச்சகரிடம் கொடுக்க, அவர் அதைப் பெருமாளின் திருவடிகளில் சமர்ப்பிப்பார்.

கோயில் காசாளருக்கும், முறைக்காரருக்கும் ஜாலி அலங்காரம் செய்வித்ததற்காகப் பெருமாள், சேவை மரியாதை செய்வார். ஆழ்வாராசாரியர்களுக்கு விலையுயர்ந்த ஆடைகள் அணிவிக்கப்படும். தாயாருக்கு மேளதாளத்துடன் பெருமாளிடமிருந்து போர்வை அனுப்பப்படும். பெருமாள் மண்டபத்திலிருந்து புறப்பட்டு மூலத்தானம் அடைவர்.

## 6. கார்த்திகை தீபத் திருநாள்

### முன்னுரை

இவ்விழாவை தீபத்திருநாள் என்பர். கோயில்களிலும், இல்லங்களிலும் விளக்கேற்றி வைத்து இவ்விழாவைக் கொண்டாடுவர். கார்த்திகைத் திங்கள் முழுநிலவன்று இவ்விழா நடைபெறும். வைணவக் கோயில்களிலும், சைவக் கோயில்களிலும் இவ்விழா இன்று சிறப்புற நடந்து வருகிறது.

இக்கோயிலில் கார்த்திகைத் திங்கள் முழுநிலவன்று மாலை நேரத்தில் பெருமாள் திருமுன்னர் முறைக்காரர்கள் உத்தமநம்பி உள்ளிட்டவர்கள் திருவிளக்கேற்றுவர். பெருமாள் மூலத்தானத்திலிருந்து புறப்பட்டு ஐந்தாம் திருச்சுற்றில் கார்த்திகை கோபுரவாசல எதிரில் தீபத்திருநாள் காண்பர்.

### ஆகமம் கட்டும் முறை

'பாத்ம சம்மிதை' கூறுவதாவது :- கார்த்திகை மாதம் முழு நிலவன்று கார்த்திகை நட்சத்திரத்தில் தீபோற்சவத்தை நடத்துவர். அந்நாளில் கோயில்களில் தீபங்களால் ஒளி செய்வர். கோயிலிலுள்ள எல்லாத் திசைகளிலும், கம்பங்களிலும், பிறைகளிலும் தீபங்களை ஏற்றுவர். தீபத் திருநாளின் முந்திய நாள் இரவில் எல்லா மங்களங்களோடும் உத்சவருக்குக் காப்புகட்டுவர். மூலவருக்கும் வழிபாடு நடத்தப்படும். அக்னி மந்திரம் கூறி, இசைக்கருவி முழங்க எல்லாத் திசைகளிலும், வாயில்களிலும் விளக்குகளை ஏற்றுவர்.[31]

உத்சவரை அலங்கரித்து வாகனத்தில் எழுந்தருளச்செய்து, திருவீதிகளில் உலா வரச்செய்வர். அன்றைய நாளில் கோயில்களில் நாடகங்கள் நடத்துவர்.

## ஸ்ரீபிரசன்ன சம்மிதை கூறுவதாவது

இவ்விழாவில் கோபுர வாசலின் முன் ஒரு கம்பத்தில் ஓலைகள், துணிகள் கட்டி வைத்து அதில் நெய் சேர்த்து, அதைத் தீபமாக எரியச் செய்வர். அக்கம்பத்திற்குப் புண்ணியாகவாசனம் செய்வர். நான்கு திசைகளிலும் தீபத்தை வீசிவிட்டு அக்கம்பத்தை எரியூட்டுவர்.

ஒளி வடிவிலான இறைவனை வேள்வித் தீயால் வழிபட்ட மாபலி சக்ரவர்த்தி தான் செய்த யாகம் இறைவனால் தடையுண்டது பற்றி "உம்மை எல்லோரும் தீபத்தாலும், அக்கினியாலும் வழிபட வேண்டும்" என்று வேண்டினான். மகாபலிக்கு அனுக்கிரகம் செய்த, இறைவனது கட்டளைக்கிணங்க நம் நாட்டில் வீடுகளிலும், கோயில்களிலும் தீபத்திருநாள் நடைபெறுகிறது.[32]

## திருவரங்கம் கோயிலில் இவ்விழா நடைபெறும் முறை

கார்த்திகைத் திங்கள் கார்த்திகை அன்று காலையில் காப்பு கட்டுதல் நடந்து, பெருமாள் புறப்பட்டு சந்தனமண்டபத்தில் திருமஞ்சனம் மேற்கொண்டு உள்ளே எழுந்தருளுவார். கோயில் மடைப்பள்ளியில் அக்னி பிரதிஷ்டை நடைபெறும். இவ்விழாவில் தலத்தார் உத்தமநம்பி இக்கோயிலில் திருவிளக்கு ஏற்றும் உரிமையினைப் பெற்றுள்ளார். உத்தமநம்பி, பெரியாழ்வார் வழி வந்தவராகையால் ஆண்டாள் நாச்சியார் சம்பந்தத்தால், பெருமாளுக்கு மைத்துனராகிய, புகுந்த வீட்டில் ஆண்டாள் ஏற்றி வைக்கவேண்டிய விளக்கை அவருடைய உடன் பிறந்தார் எடுத்து வரும் வரிசையில் தம் குடும்பத்தாரோடு பெருமாள் திருமுன் தீபத்தைக் கொண்டு வந்து வைக்கும் வைபவம் இங்கு இவ்வாறு நடைபெறுகிறது.

கார்த்திகை அன்று மாலை, உத்தமநம்பி பெருமாளின் காப்பந்தம் பரிவாரங்களுடன் தம் திருமாளிகையினின்றும், புறப் பட்டு, கோயிலைச் சென்றடைவார். கோயில் மடைப்பள்ளியில் ஓம குண்டத்துக்குக் கீழ் நெல் பரப்பி, அதன்மேல் வெள்ளி விளக்கும், பக்கங்களில் எட்டு அகல் விளக்குகளும் எரிந்து கொண்டிருக்கும்.

இந்த ஒன்பது விளக்குகளில் வெள்ளி விளக்குட்பட்ட ஐந்து விளக்குகள் உத்தமநம்பிக்கும், மற்றவை வேதவியாசபட்டர், ரங்காச்சார், திருவரங்கத்து அமுதனார், அழகிய மணவாளன் திருச்சபையார் ஆகிய நால்வருக்கும் உரிமையுடையன.

உத்தமநம்பி வெள்ளி விளக்கினையும், அவர் குடும்பத்தினர் மற்ற நான்கு அகல் விளக்குகளையும் மற்ற நால்வர் மற்ற நான்கு அகல் விளக்குகளையும், பெருமாள் திருமுன்னர் நெல் கொட்டப் பட்டுள்ள இடத்தில் வைப்பர். எல்லா விளக்குகளையும் பெருமாள் கண்டருளப்பண்ணுவர். கார்த்திகை விளக்கேற்றியதால் ஒன்பது பேருக்கும் சேவை, மரியாதை செய்யப்படும். உத்தமநம்பி இத்திரு நாளில் கோயிலுள் திருவிளக்கேற்றியதற்காகப் பிரம்மரத மரியாதை யைப் பெறுகிறார். அம்மரியாதையோடு கோயிலிலிருந்து தம் திருமாளிகைக்குச் செல்வார்.

## தீபம் கொளுத்துதல்

'திருச்சுற்றுக்கார முதலி' என்பவரால் இக்கோயிலில் சொக்க(தீபம்)ப்பனை கொளுத்தப்படும். இன்று மதியத்தில் பெருமாள் திருமஞ்சனம் கண்டதும், அவரது ஈரக் கைலியை உலர்த்தாமல், ஈரமாகவே திருச்சுற்றுக்காரன் தலையில் கட்டுவது வழக்கம்.

அன்று இரவு பெருமாள் புறப்பட்டு, நான்காம் திருச்சுற்று கார்த்திகை கோபுரத்தின் எதிரில் அமைந்துள்ள சொக்க(தீப)ப் பனையை (தென்னங்கால் நட்டு, அதைச்சுற்றி கூடுபோல் அமைந்த மூங்கில்களில் பனையோலைகள் கட்டப்பட்டிருக்கும்) வலம் வந்து,

மேற்குப் புறத்திலுள்ள சக்கரத்தாழ்வார் சன்னிதி மண்டபத்தில் நின்ற வண்ணமிருப்பார்.

தானிகர் தீபக்கோலை வாங்கித் தீபப்படுத்திப் பெருமாள் முன் மூன்று முறை தீபக்கோலைச் சுற்றிக் காட்டி, திருச்சுற்றுக்காரன் தலையில் வைப்பார். அவன் அதைக் கொண்டுவந்து, சொக்கப்பனை உச்சியில் ஏறி, நான்கு திக்கிலும் தீபப்படுத்தித் தீபக் கோலை வீசி எறிந்து பின்னர் சொக்கப்பனையைக் கொளுத்துவார்.

சொக்கப்பனை நன்கு எரிந்து கொண்டிருக்கும்போது, பெருமாள் சக்கரத்தாழ்வார் திருச்சுற்றின் வழியாகப் புறப்பட்டு, தாயார் சன்னிதிக்கெதிரில் திருவந்திக்காப்பு கண்டு, பெரியகோயில் வந்தடைந்து சந்தன மண்டபத்திற்கு எழுந்தருளுவார்.

## கலியன் பாட்டு

அரையர் அருளப்பாடு கண்டு, பெருமாள் முன்னர் திருமங்கை யாழ்வாரின் 'வாடினேன் வாடி' என்ற பாசுரத்தை அபிநயம் செய்து இசைப்பார்.[33]

## திருமுகம் எழுதுதல்

கார்த்திகைத் தீபத் திருநாளன்று, மார்கழி வைகுண்ட ஏகாதசித் திருநாளுக்காக, ஆழ்வார் திருநகரியிலிருந்து நம்மாழ் வாரை அழைத்துவர கணக்கப்பிள்ளை மூலமாகத் திருமுகம் எழுதப்படும்.

அரையர் கானம் முடிந்ததும், தானிகர் 'நாயிந்தே ரகுநாதா' என்று பெருமாள் திருவுள்ளம் கேட்பார். அர்ச்சகர் 'ஏதத் த்ரைலோக்ய நிர்மாணத்ரான ஸம்ஹார காரணம்! ஸ்ரீமத்ச்ரீரங்கநாதஸ்ய சாசனம் சாச்வதம் பரம்!!' என்று சொல்வார் (இது மூவுலகையும் படைத்தும், காத்தும், அழித்தும் விடக் காரணமான ஸ்ரீரங்கநாதனின் நிலையான சிறந்ததோர் கட்டளை எனப் பொருள்படும்.)

"கார்த்திகைக்குக் கார்த்திகை, திருக்கார்த்திகைத் திருநாளுக்கு நாம் புறப்பட்டெழுந்தருளி, அழகியமணவாளன் திருமண்டபத்தில் (சந்தன மண்டபம்) சேர பாண்டியன் சிம்மாசனத்தில், சுந்தர பாண்டியன் திருமுத்துப்பந்தலின் கீழ், ஹரிஹரராயன் திருப்பள்ளிக் கட்டிலின்மேல் வீற்றிருந்து கலியன் பாட்டுக்கேளாநிற்கையில், கோவணவர், கொடவர், கொடுவாள் எடுப்பார், பாடுவார், தலையிடுவார் மற்றுமுள்ள நம்மிராமானுச முடையார்களும் வந்து "நம் சடகோபனுக்கு முன் பெற்ற பெரும்பேறு தரவேண்டுமென்று விண்ணப்பம் செய்ய, நாம் சாற்றிக் கழித்த சந்தனமும், சூடிக்கொடுத்த சுகந்தமும், உடுத்துக் களைந்த ஒலியனும் நம் தழையிடுவான் கையில் கொடுத்தனுப்பி னோம்" என்று அர்ச்சகர் சொல்ல, தானீகர் "எழுது" என்று கணக்குப்பிள்ளைக்கு ஆணையிடுவார்.

உடன் கணக்குப் பிள்ளை 'நாயிந்தே நாயிந்தே' என்று எழுத்தாணி பிடித்து எழுதுவார். பின்னர் 'அதை அவ்வருட, மாத, நாள் முதலியவை கூட்டி வாசித்து, பெரியபெருமாள் திருவாய் மலர்ந்தருளு கிறார்' என்று முடிப்பார். இந்நிகழ்ச்சியைக் கல்வெட்டும் தெரிவிக் கின்றது.[34] அர்ச்சகர், அந்த ஓலையைப் பெருமாளின் திருவடியில் வைப்பார். பெருமாள் திருக்கைத்தலத்தில் புறப்பட்டு மூலத்தானம் எழுந்தருளுவார். இத்திருமுகப் பட்டயத்தைக் கோயில் தலத்தார் வாதூலதேசிகர் பெற்று, ஆழ்வார் திருநகரியிலிருக்கும் நம்மாழ்வாருக்கு அனுப்புவதாக மரபு.

இராமானுசர் காலத்திற்கு முன்பு இத்திருமுகப் பட்டயம் எழுதும் நிகழ்ச்சி நடைபெற்றது. இக்கோயிலார் ஆழ்வார் திருநகரி சென்று நம்மாழ்வாரை அத்தியயனத்திருநாளுக்கு அழைத்து வந்தனர். ஒரு காலத்தில் அவர் அங்கிருந்து விழாவிற்கு எழுந்தருள முடியாது போயிற்று. பின்பு இராமானுசர் தம் காலத்தில் இக்கோயிலுள் திருமங்கையாழ்வார் தவிர நம்மாழ்வார் உள்ளிட்ட ஆழ்வார்களது திருவுருவத்தைப் பிரதிஷ்டை செய்து சன்னிதிகள் நிறுவினார் என்று தெரிகிறது.[35]

ஆயினும், ஆழ்வார் திருநகரியினின்று நம்மாழ்வாரை அழைத்துவரத் திருமுகம் அனுப்பும் நிகழ்ச்சி மட்டும் இராமானுசர் காலத்திற்கு முன்பு நிகழ்ந்தவாறே இன்றும் நடத்தப்படுகிறது. திருமுகப் பட்டயம் பெற்றமையால் வாதூலதேசிகருக்குப் பிரம்மரத மரியாதை அன்றைய நாளில் உண்டு.

## 7. கைசிக ஏகாதசி

பெருமாள், கைசிக புராணம் கேட்டுப் பராசரபட்டருக்கு 'வீடு பேறு' தந்த விழா கைசிகத் திருநாளாகும். இவ்விழா இன்றும் இக்கோயிலில் சிறப்புற நடந்து வருகிறது. இவ்விழா பட்டருக்கு முன்பே ஆகம விதிப்படி 'உத்தானோத்சவம்' என்ற பெயரில் நடைபெற் றிருக்க வேண்டும் என்று தெரிகிறது.

கார்த்திகைத் திங்கள் வளர்பிறை ஏகாதசி இரவு பெருமாள் புறப்பட்டு அர்ச்சுன மண்டபம் அடைவார். அங்கு அவர் முந்நூற்றறுபது பட்டாடைகள் போர்த்தப்பெற்று முந்நூற்றறுபது (360) தாம்பூலம் அமுது செய்தும், முந்நூற்றறுபது கற்பூர வழிபாடு கண்டும் திருவுள்ளம் உவப்பார்.

## ஆகமங்கள் கூட்டும் முறை

**பாத்மசம்மிதை** இவ்விழா நடைமுறை பற்றி விளக்குகிறது.

கார்த்திகை மாதம் வளர்பிறை ஏகாதசியன்று, பெருமாளை ஏற்றவாறு ஆராதித்து, அவருக்குத் திருப்பள்ளி எழுச்சி செய்விப்பர். உத்சவரை மண்டபத்தில் எழுந்தருளச் செய்து எல்லா மங்களங்களுடன் விழாவை நடத்துவர்.[36]

நான்கு மாதங்கள் பெருமாள் யோக நித்திரை செய்வதாகப் **பௌஷ்கரத்திலும்** அதன் விளக்கமான **பாரமேசுவர சம்மிதையிலும்** சொல்லப்படுகின்றது.[37]

ஆனி வளர்பிறை ஏகாதசியிலிருந்து ஐப்பசி ஏகாதசி முடிய உள்ள நான்கு மாதங்க ளாகும். இது கோயிலுக்கு என்று ஏற்பட்ட சதுர்மாதம். தர்மசாத்திரப்படி ஆனி முழுநிலவிலிருந்து ஐப்பசி முழுநிலவு வரை சதுர்மாதமாகும். சூரிய, சந்திரர்களின் இயக்கநிலை வேறுபாடு கருதி நான்கு மாதங்கள் ஆடி மாதம் ஆரம்பத்திலிருந்து கார்த்திகை மாதம் கடைசி வரையிலும் இருப்பதுண்டு. இந்த நான்கு மாதங்களில் பெருமாள் யோக நித்திரை செய்கிறார். ஆனி வளர்பிறை ஏகாதசியில் யோக நித்திரை தொடங்கும். அதனால் அந்த ஏகாதசிக்குச் 'சயன ஏகாதசி' என்று பெயர். ஆவணி வளர்பிறை ஏகாதசியில் பெருமாள் வலப்பக்கம் திரும்பிக் கொள்கிறார். அதற்குப் பரிவர்த்தன ஏகாதசி என்று பெயர். கார்த்திகை வளர்பிறை ஏகாதசியில் இறைவன் கண் விழிக்கிறார். அதற்கு 'உத்தான ஏகாதசி' என்று பெயர். 'ப்ரபோத ஏகாதசி' என்றும் கூறுவர்.

**சயன ஏகாதசி** : சயனோத்சவம் திருவரங்கம் கோயிலில் நடைபெறுவதில்லை. ஏனைய வைணவக கோயில்களிலும் நடப்பதாகத் தெரியவில்லை. இக்கோயிலில் சயனோத்சவம் என்று தனியாக நடைபெறாவிடினும், வசந்தத் திருநாளின் கடைசி நாளிலும் ஏகாதசி, அமாவாசை முதலிய ஏகதினோற்சவ நேரத்திலும் நடைபெறும் நிகழ்ச்சியினைச் சயனோத்சவம் என்று ஊகிக்க இடமிருக்கிறது.

**பரிவர்த்தன ஏகாதசி** : ஆவணி வளர்பிறை ஏகாதசியான பரிவர்த்தன ஏகாதசியன்று இக்கோயிலில் திருப்பவித்திரத் திருநாள் நடைபெறுகிறது. வேறு சில வைணவக் கோயில்களில் ஆவணி வளர்பிறை ஏகாதசிக்குப் பிறகு பவித்திரத் திருநாள் நடைபெறுகிறது

**உத்தான ஏகாதசி** : கார்த்திகை வளர்பிறை ஏகாதசியில் நடைபெற வேண்டிய உத்தானோத்ஸவம் மட்டும் எல்லா வைணவக் கோயிலிலும் நடைபெறுகிறது. திருமாலைப் போன்றே சிவனுக்கும் நான்கு மாத உறக்கம் உண்டென்று தெரிகிறது. ஆயின், சிவாலயங் களில் சயனோத்சவமாவது, உத்தானோத்சவமாவது நடைபெறுவதாகத் தெரியவில்லை.

தமிழ்ப் பஞ்சாங்கம், உத்தான ஏகாதசியைக் கைசிக ஏகாதசி என்று குறிக்கின்றது.[38] தமிழ் அல்லாத பஞ்சாங்கங்களில் உத்தான ஏகாதசியைப் ப்ரபோத ஏகாதசி, போதனா ஏகாதசி என்று குறிக்கக் காண்கின்றோம். மேலும் இந்நாள் க்ஷீராப்திநாதன் பூஜை, துளசி விவாகம் என்றும் குறிக்கப்படுவதாகும்.[39] ஆயின் தமிழ்ப் பஞ்சாங்கம் க்ஷீராப்திநாதன் பூஜை என்று மட்டும் குறிப்பிடுகிறது. துளசி விவாகம் பற்றிக் குறிப்பிடவில்லை.

தமிழ்ப் பஞ்சாங்கத்தில் மட்டும் 'கைசிகம்' என்று எழுதப்பட்டிருப்பதால் இது தமிழ் நாட்டின் வழக்கமுறை என்று தெரிகிறது.

தமிழ்நாட்டில், முறையோடு வழிபடும் திருக்கோயில்கள் அதிகமிருப்பதால், கோயில் பழக்கத்திற்கு 'கைசிகம்' தேவை என்பதால் தமிழ்ப் பஞ்சாங்கம் இது பற்றிக் குறித்துள்ளது.

கைசிக ஏகாதசியன்று கைசிக கானம் இசைக்க வேண்டுமென்று தெரிகிறது. கைசிக கானத்தோடு கைசிக புராணமும் பட்டரால் படிக்கப்படுவது சேர்க்கப்பட்டதால் எல்லா வைணவக் கோயில்களிலும் உத்தானோத்சவத்திற்குக் கைசிகத் திருநாள் என்ற பெயரே பின்னர் ஏற்பட்டது.

உத்தானோத்சவத்தில் கைசிகத் திருநாள் ஒரு பகுதியே யாகும். மேலும் நடைமுறையில் கைசிக கானம் செய்வது நின்றுபோய், கைசிக புராணம் படிப்பது மட்டும் நடைபெறுகிறது.

## உத்தானோத்சவம் நடைபெறும் முறை

பனிக்காலம் தொடங்கும்போது துயிலிலிருந்து கண்விழிக்கும் பெருமாளை வழிபட வேண்டும். இந்த வழிபாடு 'ப்ரபோத உத்சவம்' என்படும். இந்த உத்தான ஏகாதசியில் கைசிக புராணம் தோன்றிமையாலும், அந்தப் புராணத்திற்குப் பராசரபட்டர் வியாக்கியானம் அருளிச்

செய்து, திருவரங்கப் பெருமாளிடம் விண்ணப்பம் செய்தமையாலும் பராசரபட்டர் காலம் முதலாக கைசிக புராணம் எல்லா வைணவக் கோயில்களிலும் படிக்கப்படுகின்றது.

கார்த்திகை தசமியன்று மாலையில் திருமாலை நடப்பித்து, ஏகாதசி அன்று காப்பு நாண் கட்டச் செய்வர். பெருமாளுக்கு, அன்று இரவு பனிக் காலத்தின் பொருட்டுப் போர்வை சாற்றிப் பச்சைக் கற்பூரம் கலந்த தாம்பூல நிவேதனமும், கற்பூர ஆரத்தியும் செய்வர்.

அர்ச்சகர், அன்று பிராமணர்களோடு உடன் உபவாசமிருந்து புண்ணிய கதைகள், தோத்திரப் பாடல்கள், நடனம், தாளம் முதலியவற்றோடு கூடிய தெய்வீக ஒலி எழுப்பி இரவு முழுவதும் கண் விழித்திருப்பர். துவாதசியின் உதய காலத்தில் புராணம் படிக்கப் படும். அப்புராணத்தைப் படிக்கின்றவரும், கேட்பவர்களும் புண்ணியத்தை அடைவர்.

## இக் கோயிலில் இவ்விழா நடைபெறும் முறை

கார்த்திகை வளர்பிறை தசமியன்று மாலையில் விழாவிற்கான திருமுளை நடைபெறும். ஏகாதசியன்று காலையில் முறைப்படி பெருமாளுக்கு நடைபெறும் நிகழ்ச்சிகள் யாவும் நடைபெறும். ஏகாதசியன்று பெருமாளுக்குச் சந்தன மண்டபத்தில் திருமஞ்சனம் நிகழ்வுறும்.

அன்று இரவு பத்து மணிக்கு மேல் பெருமாள் கைசிகத் திருநாள் காணும் வகையில் புறப்பாடு கண்டு அர்ச்சுன மண்டபத்திற்கு எழுந்தருளுவார். "ஸுப்தேஜநே கதே யாமே விணாமாதாய நிர்யயௌ" என்னும் வசனப்படி, பெருமாளைப் பாடுவதற்காகத் 'தாழ்ந்தான்' (தாழ்ந்த குலத்தில் பிறந்த நம்பாடுவான்) புறப்பட்டது இந்த நேரத்தில் என்பதால் பெருமாளும் அந்நேரத்தில் புறப்படுகின்றார்.

அன்று பெருமாள் தன்மேனியில் 'நீலநாயகம்' என்னும் அணியை மட்டும் அணிந்து கொள்வர். வேறு ஆபரணங்களை

அணிந்து கொள்வதில்லை. திருமேனியில் சாதரா (பட்டுத் துண்டு) போர்த்திக் கொண்டு குல்லாய் மட்டும் அணிந்து கொள்வார். எல்லாப் புறப்பாட்டிற்கும் ஏற்பட்ட இசைக் கருவிகளைவிட இன்று கொட்டு, மத்தளம், டொக்கை, கௌரீ, சங்கு, எக்காளம் முதலியவை மிகுதியாக முழங்கும்.

பெருமாள் அர்ச்சுன மண்டபத்தில் துலக்க நாச்சியாருக்கு ஒய்யார நடையழகையும், படியேற்றத்தையும் காண்பித்து மண்டபத் தினுள் எழுந்தருளுவார். திருப்பாதம் தாங்குவோர் பச்சைவடப் பெட்டியை எடுத்து வருவார்கள். பெருமாளுக்குப் பச்சை சாற்றப்படும்.

## பச்சை வடம்

பச்சை வடம் என்று முறுக்கின துண்டுக்குப் பெயர். இன்று சிலர் பட்டுத் துணியை முறுக்கி சட்டைமேல் அணிந்து கொள்ளும் வழக்கமுண்டு.

பச்சை வடம் "மேல் போர்வை, விரிப்பு, திரை முதலிய வற்றிற்குப் பயன்படும் நீண்ட சேலை, திருத்திரைப் பச்சைவடம்" என்று தமிழ் அகராதி விளக்கும்.[40] இவ்விழாவில் பெருமாளுக்குச் சாற்றும் பச்சைவடங்கள் பல்வேறு நிறத்தில் அமைந்த பட்டுகளா யிருக்கும்.

## பச்சை வடம் சாற்றும் விதம்

பச்சை வடம் மொத்தம் முந்நூற்று அறுபது. இவையத்தனை யையும் பெருமாள் திருமேனியில் சாற்ற முடியாதாகையால் பெருமாளுக்குப் பின்னால் அமைந்துள்ள அணையின் (திண்டு) மேல் சாற்றுவது வழக்கம்.

ஒரு பச்சை வடம் சாற்றினவுடன் பச்சைக் கற்பூரம் கலந்த தாம் பூலம் பெருமாளுக்கு அமுது செய்வித்து, கற்பூர ஆரத்தி செய்யப்படும். இவ்வாறு ஒரு பச்சை வடம், ஒரு அடைக்காயமுது, ஒரு கற்பூரார்த்தி என்று இந்த வகையில் முந்நூற்று அறுபது முறை நடைபெறும்.

ஒவ்வொரு முறையும் தானிகர் 'திருவடி விளக்குவதேல்', 'அடைக்காயமுது நீட்டுவதேல்', 'திருவிளக்கு தூண்டுவதேல்' என்று அருளப்பாடு சொல்ல அந்தந்த பணியாளர்களால் 'நாயிந்தே நாயிந்தே' என்று சொல்லிக் கொண்டு வெள்ளித் தட்டில் பச்சை வடத்தையும், வெள்ளிக் கிண்ணத்தில் தாம்பூலத்தையும், வெள்ளித் தட்டில் தூண்டின கற்பூரத்தையும் அர்ச்சகரிடத்தில் கொடுப்பார்கள்

பச்சைவடம் சாற்ற ஆரம்பித்த உடன் அரையர் பெருமாளிடம் வருவார். அரையருக்கு மரியாதை நடந்து, பெருமாள் திருமுன்னர்த் 'திருக்குறுங்குடி' பற்றித் திருமங்கையாழ்வார் அருளிச்செய்த 'அக்கும் புலியினதளும்' திருமொழியின் பத்துப் பாசுரங்களையும் நம்மழ்வார் அருளிச்செய்த 'எங்ஙனேயோ' திருவாய்மொழியின் பத்துப் பாசுரங்களையும் தாளத்தோடு விண்ணப்பம் செய்வார்.[41]

திருமொழியில் 'அக்கும் புலியினதளும்' என்ற முதல் பாட்டிற்கு மட்டும் அரையர் அபிநயம், வியாக்யானம் செய்வார் பெரிய வாச்சான் பிள்ளையின் வியாக்யானமே அரையரால் நிகழ்த்தப்படும் திருவாய்மொழியில் 'எங்ஙனேயோ' என்ற முதல் பாட்டிற்கு மட்டும் அபிநயம் வியாக்கியானம் செய்வார். திருவாய்மொழிக்கு 'ஈடு' வியாக்கியானத்தை நிகழ்த்துவார்.

திருக்குறுங்குடி பற்றிய திருமொழி 'அக்கும்புலியினதளும்' திருவாய் மொழி 'எங்ஙனேயோ' இவ்விரண்டும் தவிர, 'தவள விளம்பிறை' திருமொழியும் மற்ற ஆழ்வார்கள் பாசுரங்களும் உண்டு ஆயின் அவை இன்று கைசிகத் திருநாளில் இக்கோயிலில் சேவிப்பதில்லை. திருக்குறுங்குடி பற்றிய எல்லாப பாசுரங்களையும் இங்கு விண்ணப்பம் செய்யாத காரணம் யாது என்று தெரியவில்லை. அரையர் பாசுரம் விண்ணப்பிக்கும்போது இடையே பத்துமுறை விண்ணப்பத்தை நிறுத்திப் பெருமாள் அருகில் வந்து வேளையம் பெறுவர்.

கைசிக கானம் பண்ணிய நம்பாடுவானுடைய சரித்திரம் கேட்கும் இவ்விழாவில் திருக்குறுங்குடி பற்றிய பாசுரங்களை

விண்ணப்பம் செய்வது மரபாகும். நம்பாடுவான் திருக்குறுங்குடியில் அவதரித்து நடத்தினார் என்று தெரிய வருகிறது.

## பட்டர் கைசிக புராணம் வாசித்தல்

அரையர் பாசுர விண்ணப்பம் செய்து கொண்டிருக்கும் போதே பட்டரைத் திருமாளிகையிலிருந்து கோயில் பணியாளர்கள் அழைத்து வருவர். பட்டர் பெருமாளுடைய காப்பந்தம், இசைக் கருவிகள் முதலிய பரிவாரங்களுடன், தம் தொண்டர் குழாம் சூழ கோயிலுள் வருவார்.

அரையர் பதிக விண்ணப்பம் முடிந்ததும் பட்டர், பெருமாளிடம் சென்று மரியாதை பெற்றுக் கொண்டு, பெருமாள் திருமுன்னர் கைசிகபுராணம் வாசிப்பார். அரையரைப் போலவே பட்டரும் இடையிடையே பத்துமுறை பெருமாளிடம் வந்து வேளையம் வாங்கிச் செல்வார்.

பட்டர், புராணம் வாசித்து முடிந்தவுடன் பெருமாள் மண்டபத்தி லிருந்து புறப்பட்டு மூலத்தானம் அடைவார். பெருமாள் மூலத்தானம் செல்லும் வழியில் மேலப்படியில் பச்சைக் கற்பூரம் தூவ படியேற்றம் காண்பார். அப்பொழுது அரையர் பெருமாள் பற்றிய கொண்டாட்டங் களைப் பாடுவார்.

படியேற்றம் கண்டு பெருமாள் மேலப்படியில் ஏறித் திரும்பி நின்று, "எனக்குக் கைசிகபுராணம் திருச்செவி சாற்றிய பட்டருக்குப் "பிரம்மரத மரியாதை செய்க" என்று ஆணை செய்வார்.

பட்டர் பிரம்மரத மரியாதை கண்டு, திருவீதி ஊர்வலம் வந்து, அவர் தம் திருமாளிகைக்கு எழுந்தருளுவார். இவ்வாறு இவ்விழா ஈண்டு நிகழ்வுறும்.

இவ்விழா இன்றும் நம்பாடுவான் அவதரித்த திருக்குறுங் குடியில் சிறப்புற நடந்து வருகிறது. ஈண்டு ஒப்புகை நோக்கி அவ்வூரில் நடைபெறும் முறைமையை நோக்குவோம்.

திருநெல்வேலி நகரிலிருந்து இருபத்து நான்கு கல் தொலைவில் திருக்குறுங்குடி அமைந்துள்ளது. மகேந்திர மலையின் அடியில், அம்மலையினின்று பெருகும் பாலாறு, இந்து நதி, நம்பியாறு என்று பல பெயர்களைக் கொண்ட சிறு நதி திருக்குறுங்குடிக்கருகில் ஓடுகிறது.

கோயிலுள், நின்ற நம்பி, இருந்த நம்பி, கிடந்த நம்பி என்று மூன்று பெருமாள்களும் முறையே நின்றவண்ணம், அமர்ந்த வண்ணம், கிடந்தவண்ணம் காட்சி தருகின்றனர். இவ்வூரில் திரு மங்கையாழ்வார் தம் பூத உடலை நீத்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

## திருக்குறுங்குடியில் கைசிகத் திருநாள்

இங்கு கைசிகத் திருநாளன்று நம்பாடுவான சரித்திர நாடகமும், கைசிக புராணம் வாசித்தலும் நடைபெறுகின்றன. நம்பாடுவான் சரித்திர நாடகப் பாத்திரங்களான நம்பாடுவான், பிரம்மராட்சசன், நம்பிக்கிழவன் ஆகியோர் வேடத்தில் நடிக்கும் நடிகர்கள் முறைப்படி விரதம் இருந்து நாடகத்தில் நடிப்பர்.

கார்த்திகை வளர்பிறை ஏகாதசி இரவு கைசிக மண்டபத்தில் பெருமாள் கிழக்கு முகமாய் எழுந்தருளுவார். மண்டபத்திற்கு எதிரில் வெளியே பெரிய மண்டபம் உள்ளது. அவ்வெளியில் அமைந்த நாடக மேடையில் இந்நாடகம் நடைபெறும்.

பிரம்மராட்சசனின் தலை மரத்தினால் செய்யப்பட்டுக் கோயிலிலே இருக்கிறது. இதற்கு வழிபாடு செய்து, அதைத் தலையில தரித்தவுடன் அந்த வேடம் கொண்டவர் ஆவேசம் கொண்டு, பலரால் சூழப்பட்டு பின்னர் சமாதானம் செய்யப்பெற்று நாடமேடைக்கு வருகிறார். அவர் வந்தபின் நாடகம் தொடங்குகிறது. நாடகம் முடிந்த வுடன் நடத்தியவர்களுக்குப் பெருமாளிடம் சேவை மரியாதை நடக் கின்றது.

## திருக்குறுங்குடி பாசுரம்

திருவில்லிபுத்தூர் அரையர் இங்கு வந்து, பாசுர விண்ணப்பம் செய்கிறார். திருமொழி, 'அக்கும் புலியினதளும்' பாசுரத்திற்கு அபிநய வியாக்கியானம் செய்து, பிற பாடல்களைச் சேவிக்கின்றார்.

பட்டரால் அங்கு கைசிக புராணம் வாசிக்கப்படுவதில்லை. திருவரங்கம் கோயில் பெரியநம்பி அங்குச் சென்று புராணம் வாசித்து வருகிறார். அவர் அங்கு செல்லாது போயின், திருக்குறுங்குடி தானிகரே கைசிக புராணத்தை வாசிப்பார். நாடகமும், பாசுரமும், புராணமும் நடைபெற்றுமுடிய விடியற்காலை ஆகிவிடும். மறுநாள் கைசிக துவாதசியன்று பெருமாள் கருடவாகனத்தில் திருவீதி எழுந்தருளுவார்.

திருவரங்கத்தில் இன்று சேவிக்கும் 'அக்கும்புலியினதளும்' 'எங்ஙனயோ' என்ற திருமொழி, திருவாய்மொழியைத் தவிர திருக்குறுங்குடிக் கோயிலில் 'தவள விளம்பிறை' திருமொழி அதிகமாகச் சேவிக்கப்படுகிறது.[42] திருக்குறுங்குடி பற்றிய பத்துக்கணக்காக உள்ள பாட்டுகளில் 'தவள விளம்பிறை' 'அக்கும் புலியினதளும்' உள்ளன. 'தவள விளம்பிறை' கோயில் திருமொழியில் குறிக்கப்படவில்லை. அது குறித்தே 'தவள விளம்பிறை' விடப்பட்டிருக்க வேண்டுமென்று ஊகிக்கலாம்.

நம்பாடுவான் அவதரித்த இடம் திருக்குறுங்குடியாகையால் இவ்விழாவில் அங்கு நாடகம் இடம் பெற்றிருக்க வேண்டும். திருவரங்கத்தில் அந்நாடகம் இடம் பெற வாய்ப்பில்லையாதலால் விடுபட்டிருக்கிறது.

## 8. தைப்பொங்கல் திருநாள்

இப்பொங்கல் திருநாள், தைத்திங்கள் முதல்நாள் நடைபெறும். இவ்விழாவைத் தமிழர்கள் பெரும் சிறப்புடன் கொண்டாடுவர். அறுவடையான புதுநெல்லை, அரிசியாக்கிப் பொங்கல் செய்து

மகிழ்வுடன் உண்பர். 'மகர சங்கராந்தி' என்று இத்திருநாளை அழைப்பர்.

தை முதல் நாளை உத்தராயண புண்ணிய காலம் என்று குறிப்பர். இந்நாளில் சூரியன் வடதிசை நோக்கிச் செல்வதாகக் கருதுவர். பொங்கலன்று திருவரங்கம் கோயிலில் 'திருப்பாவை சாற்றுமுறை' நிகழ்ச்சி நடைபெறும்.

## திருவரங்கம் கோயிலில் இவ்விழா நடைபெறும் முறை

மார்கழி மாதம் முப்பது நாளும் நடந்தது போன்றே, தைத் திங்கள் முதல் நாள் அன்றும் விடியலில் திருப்பள்ளியெழுச்சி நடைபெறும். அன்று பெருமாள் உபயநாச்சியாரோடு திருச்சி(விகை) என்னும் கேடயத்தில் புறப்பாடு கண்டு, பல திருவாபரணங்கள் அணிந்து, சர்க்கரைப் பொங்கல் அமுது செய்வார்.

இன்று பொங்கல் திருநாளை முன்னிட்டுப் பெருமாள் கிளி மாலை சாற்றிக்கொண்டு புறப்படுவார். நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், பொய்கையார், பெரியாழ்வார், உடையவர், கூரத்தாழ்வான் ஆகிய ஆழ்வாராசாரியர்கள் அறுவர் மட்டும் பெருமாளுடன் புறப்பாடு காண்பர்.

பெருமாள் ஐந்தாம் திருச்சுற்றில் அமைந்துள்ள ஆயிரக்கால் மண்டபத்தின் வடபகுதியில் உள்ள சங்கராந்தி மண்டபத்தில் எழுந் தருளுவார். ஆழ்வார்களும், ஆசாரியர்களும் பெருமாளுக்குப் பின்புறத்தில் எழுந்தருளியிருப்பர். பெருமாளுக்குக் திருமஞ்சனம் நடைபெற்று, அலங்காரம் செய்த பின்னர் அரையரால் திருப்பாவை முப்பது பாட்டுகளும் சேவிக்கப்பெற்று சாற்றுமுறை நடைபெறும்.

சாற்றுமுறையாகும் வரையில் பெருமாள் திருவடியில் அர்ச்சகர் திருத்துழாயைச் சமர்ப்பித்துக் கொண்டிருப்பார். சாற்று முறை ஆனதும் கோஷ்டிக்குத் திருத்துழாய், தீர்த்தம் முதலியன

அளிக்கப்படும். பெருமாள் சங்கராந்தி மண்டபத்தி லிருந்து புறப்பட்டு உள்ளே எழுந்தருளுவார்.

கிளிமாலை சமர்ப்பித்ததற்காக சாத்தாத வைணவனுக்கு யானை யேற்றப் பிரம்மரத மரியாதை உண்டு. பொங்கலுக்கு மறுநாள் கனு (மாட்டுப் பொங்கல்) அன்று பெருமாள் இதே போன்று புறப்பாடு காண்பார்.

## 8 அ) கனு (மாட்டுப் பொங்கல்)

சங்கராந்தி அன்று போலவே ஆழ்வாராசாரியர்களுடன் ஆயிரக்கால் மண்டபத்தின் தென்புறத்திலுள்ள 'முத்தரசன் குறடு' என்னும் கனு மண்டபத்துக்கு எழுந்தருளுவார்.

இன்று ஐந்துவிதத் தளிகை அமுது செய்விக்கப்படும். கோஷ்டி வினியோகம் ஆனதும், பெருமாள் குதிரை வாகனத்தில் புறப்படுவார். சேஷராயர் மண்டபத்துக்கு எழுந்தருளியதும், மார்கழித் திருநாளுக்குக் (அத்தியயனத் திருநாள்) கொட்டகை (கீற்றால் பெரிய பந்தல்) அமைத்ததற்காக அப்பணியாளர்களுக்கு அம்மண்டபத்தில் சேவை மரியாதை செய்வித்துப் பிரசாதங்கள் வழங்குவார்.

கனுத் திருநாள், மாட்டுப் பொங்கல் திருநாளாகையால், 'மாடு' விடுவதற்கு பதிலாக குதிரை வாகனத்தில் தெற்கு வாசல் இராய கோபுரம் வரையில் சென்று திரும்புவார். இதைப் 'பாரிவேட்டை' என்ற பெயரில் அழைப்பர். பரிவேட்டை என்ற சொல்லே வழக்கத்தில் பாரி வேட்டை என்று ஆகியிருக்க வேண்டும்.

இன்றைய திருநாளில் பெருமாளின் திருவாபரணங்கள், அணை, 'எடுபிடி'ப் பொருள்கள் அனைத்தும் முத்துக்களால் செய்யப் பட்டவையாக இருக்கும். அரையர் தன் கொண்டாட்டத்தில் 'முத்தால் பரவும் பெருமாள்' என்று கூறுவதும் ஈண்டு நோக்கத் தக்கது. பொங்கல் புறப்பாட்டிலும், கனுப்புறப்பாட்டிலும், எல்லா ஆழ்வாராசாரியர்களும்,

மார்கழித் திருநாள் போல் எழுந்தருளாமல் அறுவர் மட்டும் எழுந் தருளுவது ஈண்டு நோக்கத் தக்கது.

திருப்பாவை, இருப்பத்தாறாம் பாடலில்[43] 'பாலன்ன வண்ணத்து உன் பாஞ்சசன்னியமே, போல்வன சங்கங்கள் போய்ப் பாடுடையனவே, சாலப் பெரும்பறையே, பல்லாண்டிசைப்பாரே, கோலவிளக்கே, கொடியே, விதானமே, ஆலினிலையாய் என்ற பகுதிக்கு

| | | |
|---|---|---|
| பாஞ்சசன்னியம் (சங்கு) | - | நம்மாழ்வார் |
| சாலப்பெரும்பறை | - | திருமங்கையாழ்வார் |
| பல்லாண்டிசைப்பார் | - | பெரியாழ்வார் |
| கொடி | - | உடையவர் இராமானுசர் |
| கோல விளக்கு | - | பொய்கையார் |
| விதானம் | - | கூரத்தாழ்வான் |

என்று பொருள்கொண்டு இத்திருப்பாவைச் சாற்றுமுறை நாளிலும், மறுநாளிலும் பெருமாளுடன் இவ்வறுவர் மட்டுமே எழுந்தருளுகின்ற னர் என்று ஊகிக்கலாம். (இது ஒரு செவி வழிச் செய்தி.)

## 9. கோடைத் திருநாள்

இவ்விழாவைப் பூச்சாத்துத் திருநாள் என்று அழைக்கினறனர் இக்கோடைத் திருநாள் சித்திரைத் திங்கள் முழுநிலவின் முன், பத்து நாள்கள் நடைபெறும். வெளிக்கோடைத் திருநாள் ஐந்து நாள்களும், உட்கோடைத் திருநாள் ஐந்து நாள்களுமாகப் பத்து நாள்கள் நடைபெறும்.

### வெளிக்கோடைத் திருநாள்

பெருமாள் மாலை நேரத்தில் புறப்பாடு கண்டு, நான்காம் திருச்சுற்று வழியாக சந்திரபுட்கரணியின் அருகிலுள்ள மணல்வெளி

நான்குகால் மண்டபத்தில் எழுந்தருளுவார். பெருமாள், திருப்பாதம் தாங்குவார் தோள்களில் வீற்றிருந்தவாறே இவ் விழாவைக் காண்பார். மண்டபத்தில் திரை போட்டு ஆஸ்தானத்தில் எழுந்தருளுவது, திருவாராதனம், தளிகை நிவேதனம் முதலிய செயல்கள் இவ்விழாவில் இல்லை.

மற்ற திருநாள்களைப் போன்று முதல் திருநாள், ஏழாம் திருநாள்களில் உபயநாச்சியார் பெருமாளோடு எழுந்தருளுவ தில்லை. ஏழாம் திருநாளில் சூர்ணாபிடேகமும், நெல் அளவும் கிடையாது.

பெருமாளுக்குப் பல்வகை மலர் மாலைகள் அணிவிக்கப் பெறும். மலர்ப் போர்வை, மலர் அங்கி, மலர்க்கிரீடம் முதலியவை கள் பெருமாளுக்கு அணிவிக்கப்பட்டு, முழு மலராகவே பெருமாள் காட்சி தருவார்.

பானகம், வடைப்பருப்பு, தாம்பூலம் முதலியன படைத்துப் பின் கோஷ்டிக்கு அவை வழங்கப்பெறும்.

## உள்கோடைத் திருநாள்

மூன்றாம் திருச்சுற்றில் அமைந்துள்ள துரை மண்டபத்தில் இவ்விழா நிகழ்வுறும். இம்மண்டபத்தில் பெருமாள் வீற்றிருந்து அரையர் கானத்தோடு சேவிக்கும் பெருமாள் திருமொழியை செவி மடுத்துக் கொண்டே திருவாராதனம் கண்டருளுவார். தோசை, வடை அமுது செய்வித்த பின் அவை கோஷ்டிக்கு வழங்கப்பெறும்.

ஆறாம் திருநாளிலிருந்து ஒன்பதாம் திருநாள்வரை, மார்கழித் திங்களில் திருவாய்மொழித் திருநாளில் வீணை ஏகாந்தம் காண்பது போன்று நாழி(கை)கேட்டான் வாசல் உள்ளிருந்து வீணை இசையோடு ஏகாந்தம் கண்டும் பெருமாள் உள்ளே எழுந்தருளுவார்.

## 10. சித்திரை முழுநிலவு, திருவூறல் திருநாள்

பெருமாள் காலை நேரத்தில் புறப்பாடு கண்டு வழியில் வழிநடை உபயங்கள் கண்டருளிக் காவிரிக்கரை அம்மாமண்டபம் எழுந்தருளுவார். இவ்விழாவைக் கஜேந்திர மோட்சத் திருநாளாகக் கொண்டாடுவர். புராணங்கள் கூறியவாறு முதலையின் வாயில் அகப்பட்ட யானையைத் திருமால் காப்பாற்றுவதாக இவ்விழா நிகழ்வுறும்.

ஆழ்வார்கள் இந்நிகழ்ச்சியைத் தங்கள் பாசுரங்களில் போற்றிக் குறிப்பிட்டுள்ளனர். காவிரியில் நீர் ஊற்றுகட்டி அதில் கூர்மாசனப் பலகை வைக்கப்பட்டிருக்கும். கோயில் யானை இவ் விழாவில் கஜேந்திரனாகக் கருதப்படும். யானையை முதலை தன் வாயால் கவ்விப்பிடிப்பதாகவும், அதனால் முதலையை அழித்து, யானையைக் காப்பதாகவும் நிகழ்ச்சிகள் நடைபெறும். பெருமாள் தம முடைய ஸ்ரீசடகோபம் மூலமாகத் தீர்த்தம் சாதிப்பார். கோஷ்டிக்கும் தீர்த்தம் வழங்கப்பெறும்.

பெருமாள் ஒரு காலத்தில் காவிரி ஆற்றின் நடுவில் மணலிலே பந்தல் போட்டு இவ்விழாவைத் திருவூறல் திருநாளாகக் கண்டார் என்று தெரிகிறது. தற்பொழுது காவிரிக் கரையின் அம்மா மண்டபத்தில் பெருமாள் வீற்றிருந்து திருவாராதனம், தளிகை அமுது செய்தல் முதலியவற்றைக் கண்டருளிப் புறப்பட்டு, அரையரது பள்ளுப்பாடும் இசையோடு கோயிலின் உள்ளே எழுந்தருளுவார்.

'ஒரு காலத்தில் அரையர் ஒருவர் கூடா ஒழுக்கத்தில் ஈடுபட்டு ஊரிலிருந்து வெளியேற்றப்பட்டுப் பறைச்சேரியில் வாழ்ந்து கொண்டிருந்தார். அங்கிருந்தே அவர் பள்ளும் பறையும் சூழ இசையுடன் பாடுவதைப் பெருமாள் கேட்டு, உகந்து, அவரை வரவழைத்து 'வரம் தரும் பெருமாள் அரையர்' என்று பட்டப் பெயர் சாதித்து, ஆண்டுதோறும் திருவூறல் உத்சவத்தில் அவர் பாடினவாறே பள்ளுப் பாட்டைக் கேட்டருளுகிறார்' என்று கோயில் ஒழுகு கூறும்.[44]

## 11. ஆழ்வார்கள், ஆசாரியர்களுக்குத் திருநாள்

ஆழ்வார்கள் பிறந்த திருநாள்களில் அவர்களுக்கு விழாக் கொண்டாடப்படும். ஆசார்யர்களது பிறந்த நாளிலும் அதுபோன்றே விழா நடைபெறும். இவ்விழாக்கள் திருவரங்கம் கோயிலில் இராமானுசர் காலத்திற்குப் பின்னர் நடைமுறைக்கு வந்திருக்கலாம் என்றறிகிறோம். ஏனெனில் அவர் தன் காலத்தில் இக்கோயிலில் எல்லா ஆழ்வார்களையும் பிரதிஷ்டை செய்தார் என்றுகோயில் ஒழுகு குறிப்பிடுகிறது. அவர் காலத்திற்குப் முன்பு இவ்விழா ஆழ்வார்கள் புறப்பாடின்றி நடந்திருக்க வேண்டும். பின் அவரால் ஆழ்வார்கள் பிரதிஷ்டையானபின் ஆழ்வார்கள் புறப்பாடு கண்டு, இவ்விழா பெருமளவில் நடைமுறைக்கு வந்திருக்க வேண்டும். அவ்வாறே ஆசாரியர்களுக்கும் விழா நடந்திருக்க வேண்டும் என்று ஊகிக்கலாம்.

இவ்விழாக்கள் சைவக் கோயில்களில் நாயன்மார்களது பிறந்த நட்சத்திரங்களில் இன்றும் நடைபெற்றுவருவது கண்கூடு. காரைக்காலில், காரைக்காலம்மையார் மாம்பழத்திருநாளும், சீர்காழியில், முலைப்பால் திருநாளும் நடைபெறுவது ஈண்டு நோக்கத் தக்கது.

ஆழ்வார் ஆசாரியர் மட்டுமன்றி, வீடணனும் ஆழ்வார் எனக் கருதப்படுவதால் அவருடைய திருநட்சத்திர நாளில், இக்கோயிலில் மாங்காய்ப் பச்சடி செய்து, அதை அவருக்கு அமுது செய்வதாக ஒரு நிகழ்ச்சி நடைபெறுகிறது.

இவ்வாறு கோயில் மூர்த்திகளுக்கு மட்டுமின்றி, கோயில் உறை பெருமாளைப் பாடிப் போந்தவர்களுக்கும், கோயில் தொண்டாற்றி வைணவத்தை இம்மண்ணில் வளர்த்த பெருமக்களுக்கும் விழாக் கண்டனர். இச்சிறப்பானது தமிழ் மக்கள் இறைவனை நமக்குக் காட்டியருளிய பெருமக்களுக்குக் காட்டும் நன்றிப்பெருக்காகும்.

**இக்கோயிலில் பன்னிரு ஆழ்வார்களுக்கும், ஆசாரியர்கள் கூரத்தாழ்வானிலிருந்து, மணவாளமுனிகள் வரை உள்ள ஆசாரியர் களுக்கும் விழா எடுக்கின்றனர்.**

## இக்கோயிலில் இவ்விழா நடைபெறும் முறை

ஆழ்வாரை முதல் நாள் இரவு திருமஞ்சனம் கண்டருளச் செய்கின்றனர். மறுநாள் வைகறையில் அவரைக் கேடயத்தில் எழுந்தருளச் செய்து மூலத்தானத்தின் முன்புள்ள அழகிய மணவாளன் திருமண்டபத்தில் பெருமாள் திருமுன்னர் எழுந்தருளப் பண்ணுவர். ஆழ்வாருக்குப் பெருமாள் அமுது செய்விப்பார். பெருமாளது திருமாலை ஒன்றினை ஆழ்வார் திருமேனியில் தானீகர் சாத்துவார். மற்றும் பரிவட்டம், சாத்துப்படி, துப்பட்டி முதலியவை களும் உள்ளூராரால் சாத்தப்படும். பெருமாள் மரியாதைகளை ஆழ்வார் பெற்றவுடன், அர்ச்சகர் ஸ்ரீசடகோபன் சாதிப்பர்.

கோஷ்டி முதலியவைகளுடன் ஆழ்வார்க்கு மங்களாசாசனம் செய்யப்பட்டு, ஆழ்வார், பெருமாள் திருமுன்னிருந்து புறப்பட்டு சித்திரைத் திருவீதி வலம் வருவார். பெருமாள் தம் புறப்பாட்டில் திருவீதி வலம் வருவதைப் போன்றே ஆழ்வாரும் திருவீதி வலம் வருவார்.

தாயார் கோயிலுக்குச் சென்று, தாயார் அமுது செய்ததை ஆழ்வார் அமுது செய்வார். தாயார் மரியாதைகளான மாலை, சாத்துப்படி முதலானவை தானீகரால் ஆழ்வாருக்குச் சாற்றப்படும். அர்ச்சகர் தாயாரின் ஸ்ரீசடகோபத்தை ஆழ்வாருக்குச் சாதிப்பார். பின் தாயார் கோயிலிலிருந்து ஆழ்வார்கள் புறப்பட்டு தம் சன்னிதிக்கு எழுந்தருளுவார். ஆழ்வார் சன்னிதியில் நாலாயிரம் சாற்றுமுறை செய்வர். ஆழ்வார்கள் நம்மாழ்வார் சன்னிதிக்கும், ஆண்டாள் சன்னிதிக்கும் எழுந்தருள அங்கும் மங்களாசாசனம் நடைபெறும்.

பெருமாளிடமிருந்து ஆழ்வாருக்கு அலங்காரம் வந்து, ஆழ்வார் அவற்றினை அமுது செய்து, அவர் குழாத்திற்கு அளிப்பார். எந்த ஆழ்வார் பிறந்த நாளோ, அந்த ஆழ்வாரது பாசுரங்கள் அன்றைய நாளில் அத்யாபகர்களால் பாடப்படும். ஆழ்வார்கள் பதின்மருக்கும், ஆசாரியர்களில் ஐவருக்கும் இவ்வாறு அவரவர் பிறந்த நட்சத்திரத் தன்று இக்கோயிலில் விழா நடைபெறுகிறது.

பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் புறப்பாடு களின் போது, முதல், இரண்டு, மூன்றாம் திருவந்தாதிகள் சேவிக்கப் படும். திருமழிசையாழ்வார் புறப்பாட்டில் நான்முகன் திருவந்தாதி சேவிக்கப்படும். பெரியாழ்வார் புறப்பாட்டில் இராமானுச நூற்றந்தாதி சேவிக்கப்படும். நம்மாழ்வார் புறப்பாட்டில் திருவிருத்தம், பெரிய திருவந்தாதி, திருவாசிரியம் சேவிக்கப்படும்.

திருமங்கையாழ்வார், ஆலிநாடன் திருவீதி எழுந்தருளும் போது சிறிய திருமடல் தொடங்கி பெரிய திருமடல் சேவித்து, சன்னிதியில் திருவெழு கூற்றிருக்கையுடன் சாற்றுமுறை செய்யப்படும். மதுரகவி ஆழ்வார் குலசேகராழ்வார், திருப்பாணாழ்வார் புறப்பாடு களின் போது இராமானுச நூற்றந்தாதி சேவிக்கப்படும்.

பிள்ளைலோகாசார்யர், கூரத்தாழ்வான், திருக்கச்சி நம்பி புறப்பாடுகளின் போது இராமானுச நூற்றந்தாதி சேவிக்கப்பட்டு உடையவர் சன்னிதி வந்து, நட்சத்திர மாலிகை முடிவுற்று ஆளவந்தார் தோத்திரம் சேவித்துச் சாற்றுமுறை செய்யப்படும். இம்முறை 'மேலையார் செய்வனகள்' என்றாற்போல, இராமானுசர் காலத்திலிருந்து தொடர்ந்து நடைபெற்று வருகின்றது.

## 12. நாள் வழிபாடு

நாள் வழிபாடு மூன்றிலிருந்து பன்னிரண்டு முறை வரை நடத்தலாம்.[45] பொதுவாகக் கோயில்களில் ஆறுமுறை வழிபாடு நடைபெறும் என்றறிகின்றோம். திருவரங்கம் கோயிலில் ஆறுமுறை வழிபாடு இன்றும் நடைபெற்று வருகிறது.

### 12:1 ஆறுமுறை வழிபாடு

**உதயகால வழிபாடு, காலை வழிபாடு, மத்தியான வழிபாடு, அந்தி வழிபாடு, சயன கால வழிபாடு, அர்த்த ராத்திரி வழிபாடு என வழிபாடு ஆறாகும்.**

இவ்வாறு வழிபாட்டு முறைகள் ஆறும் ஆசனங்கள் என்ற பெயரில் அழைக்கப்படும். முதலில் 'மந்திராசனம்'. இதில் பெருமாளை மந்திரங்கள், தோத்திரங்கள் சொல்லி எழுப்புகிறார்கள். இரண்டாவது நிலை ஸ்நானாசனம். இதில் அபிடேகம் நடைபெறும். மூன்றாவது நிலை 'அலங்காராசனம்'. இதில் ஆடைகள் அணிகலன்கள் அணிவிக்கப்படும். நான்காவது நிலை 'போஜ்யாசனம்' இதில் அமுது படைக்கப்படும். ஐந்தாவது நிலை மீண்டும் 'மந்திராசனம்' இதில் அர்ச்சனை நிகழ்வுறும். கடைசி நிலை 'சயனாசனம்'. இதில் பெருமாள் ஓய்வுகொண்டு படுக்கிறார்.

இந்த ஆசனங்கள், உபசாரம் என்பதோடு தொடர்பு கொண்டது. அவை ஆவாகனம், ஆசமனம், அர்க்கியம், பாத்யம், ஸ்நானம், வஸ்திரம், யஜ்ஞோபவீதம், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம், நமஸ்காரம், பிரதக்ஷிணம், விசர்ஜனம் எனப்படும்.

சில நேரத்தில் இவ்வுபசாரங்கள் ஒவ்வொரு நிலையிலும் வழிபாட்டில் நூற்றெட்டாகவும் விரியும். நாள் வழிபாடுகளில் 'பலி சாதித்தல்' என்பது முக்கியமான செயல்பாடாகும்.

## 12:2 நாள் வழிபாட்டின் குறிக்கோள்

கோயில் வழிபாடுகள் சில குறிக்கோள்களை அடிப்படையாகக் கொண்டு மேற்கொள்ளப்பட்டதாகும். உதயகால வழிபாடு, மக்கள் பெருக்கத்தையும், பசு போன்றவைகளின் விருத்தியையும் நலல செல்வத்தையும் தரும். காலை வழிபாடு, ஜபங்களையும் ஹோமங் களையும் வலியுறுத்தும். மத்தியான வழிபாடு, நல்ல நிர்வாகத்தை விரிவுபடுத்தும். அந்தி வழிபாடு அசுரர்களின் கெடுதல், தீய ஆவேசங்களை அழிக்கும். சயனகால வழிபாடு நீர்வள, நிலவளத்தைப் பெருக்கிச் செல்வத்தையும், தானியங்களையும் பெருக்கும். அர்த்தராத்திரி வழிபாடு, நீர்வாழ் இனங்களையும், கண்ணுக்குப் புலனாகாத உயிரினங்களையும் வாழவைக்கும்.[46]

## 12:3 திருவரங்கம் கோயிலில் நாள்தோறும் நடைபெறும் வழிபாடு

### 12:3:1 திருமஞ்சனம் கொண்டு வருதல்

வைகறைப் பொழுதில் பெரியகோயில் திருமஞ்சன ஊழியக் காரரும், தாயார் கோயில் திருமஞ்சனக்காரரும், சக்கரத்தாழ்வார் சன்னிதி பரிசாரகரும், அந்தந்தக் கோயிலுக்கு ஏற்பட்ட வெள்ளிக் குடத்தை எடுத்துக்கொண்டு, உள்ளூரார் ஊழியக்காரர் திருவெண் சாமரத்தையும், பால் ஊழியக்காரர் வெள்ளிக் குடையையும் எடுத்துக் கொண்டு காவிரிக்குச் செல்வர்.

காவிரியில் குடங்களில் நீர் எடுத்துக் கைலித் துணிகளால் மூடுவர். குடங்களில் நீர் நிரம்பும்போது திருச்சங்கு ஊதப்படும். யானையின் மேல் பெரிய கோயில் குடத்துடன் அக்கோயிலார் அமர்ந்து குடத்திற்கு மாலையால் அலங்காரம் செய்வார். அவருக்குப் பின் உள்ளூரார் ஊழியக்காரர் யானையின் மீதமர்ந்து சாமரம் சேவிப்பார். மூன்றாவதாகப் பால் ஊழியக்காரர் அமர்ந்து குடை சமர்ப்பிப்பார்.

தாயார் கோயில், சக்கரத்தாழ்வார் சன்னிதி ஊழியக்காரர்கள் குடங்களைத் தலையில் வைத்துக்கொண்டு யானைக்கு முன்னே நடந்து வருவார்கள். இசைக்கருவிகள் முழங்க அந்தந்தக் கோயில் திருமஞ்சனக் குடம் அந்தந்தக் கோயிலைச் சென்றடையும்.

பெரியகோயில் திருமஞ்சனம் சேனை முதலியாரை வலம் வந்து கோயில் கீழ்ப்படியில் யானையுடன் வந்து இறங்கும். குடத்தைத் தலையில் வைத்துக்கொண்டு சங்க நாதத்துடன் காயத்திரி மண்டபம் அமுதுபாறையில் இறக்கி வைக்கப்படும். சந்தன மண்டபத்தில் பெருமாள் திருமுன்னர் வீணை வாத்தியமும், திருப்பள்ளி எழுச்சியும் நடைபெறும்.

### 12:3:2 விச்வரூப தரிசனம்

இக்கோயிலில் விச்வரூப தரிசனம் சூரிய உதயத்திற்குப் பின்னரே நிகழ்வுறும். திருமலை திருப்பதியில் விச்வரூப தரிசனம்

உதயத்திற்கு முன்னே நடைபெறும். 'சூரியன் இங்குறைந்துள்ள பெருமாளைச் சத்திய உலகத்தில் வழிபட்டிருந்தார்' என்று புராண வரலாறு கூறுவது கொண்டு, இக்கோயிலில் சூரிய உதயத்திற்குப் பின்னரே அவர் வந்து வழிபடுவதாகக் கொண்டு விச்வரூப தரிசனம் நடைபெறுகிறது.

அர்ச்சகர் ஆகம விதிப்படி மூலத்தானத்துக் கதவினைத் திறப்பார். திருமஞ்சனக்காரர் ஒரு வட்டிலில் திருமஞ்சன நீரை நிரப்பி அர்ச்சகரிடம் கொடுப்பார். அர்ச்சகர் அதைச் சன்னிதிக்குள் எடுத்துச் சென்று பெருமாளை திருவடி விளக்கித் திருமணி ஒலியினை எழுப்பிடுவார்.

சந்தன மண்டபத்தில் காராம்பசு பின்னோக்கி (மூல த்தானத்தை) நிற்கும். யானை முன்னோக்கி நிற்கும். பசுவின் பின் பகுதியிலும் யானையின் முன் நெற்றியிலும் இலக்குமி இருப்பதாகக் கூறுவர். மக்கள் பெருமளவில் சந்தன மண்டபத்தில் குழுமி இருப்பர். மூலத்தானத்திலுள்ள உள் திரையைப் பரிசாரகர் ஒரு குறிப்பிட்ட அடையாளம் கண்டு நீக்குவார். விச்வரூப தரிசனம் நடைபெறும். உடன் திரை போடப்படும்.

உள்ளூரார் ஊழியக்காரர் காராம்பசுவுக்குச் சந்தனத்தை நெற்றியில் தடவி, மாலையைக் கழுத்தில் போடுவார். யானைக்கும் அவ்வாறே மரியாதை செய்யப்படும். பின் மூலத்தானத்திலுள் பெருமாளுக்குக் கோயில் வாத்தியாரால் பஞ்சாங்கம் வாசிக்கப்படும. அன்றைய நாளின் திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம முதலியவைகளையும் விண்ணப்பம் செய்வார் அதன் பிறகு கோயில் தலத்தார், அதிகாரிகள், பொதுமக்கள் அனைவரும் பெருமாளை வழிபடுவர்.

## 12:3:3 திருவாராதனம்

பரிசாரகர் ஐந்து வெள்ளி வட்டில்களைக் காயத்திரி மண்டபத்தின் கீழ்ப்பகுதியில் வைப்பார். காவிரியிலிருந்து குடத்தில் வந்த நீரை அவ்வெள்ளிப் பாத்திரங்களில் நிரப்பி வைப்பார். அர்ச்சகர்

அந்த ஐந்து வெள்ளிக் கிண்ணங்களில் நிரப்பப்பட்ட நீரை உத்சவப் பெருமாள் திருவடிகளில் வைப்பார். நான்கு மூலைகளில் நான்கும், நடுவில் ஒன்றுமாக வைக்கப்படுகின்றது.

அர்க்ய பாத்திரம் தென்கிழக்கு மூலையிலும் (ஆக்னேய), அது பெருமாளின் கரத்தைச் சுத்திப்படுத்துவதற்கும், பாத்ய பாத்திரம் தென்மேற்கு மூலையிலும் (நிர்ருதி), அது பெருமாளின் திருவடிகளைச் சுத்திப்படுத்தவும், ஆகமனீய பாத்திரம் வடமேற்கு மூலையிலும் (வாயு), அது பெருமாளின் திருவாயினைச் சுத்திப் படுத்துவதற்கும், ஸ்நாநீய பாத்திரம் வடகிழக்குப் பகுதியில் (ஈசான்ய), புனித நீராடுதற்கும் மற்றும் சர்வார்த்ததோய பாத்திரம் (மத்தியில் வைக்கப்பட்டிருப்பது) பொதுவான செயல்களுக்குமாக வைக்கப்படும்.

அர்ச்சகர் பெருமாளுக்குப் பாவனையாகப் பல் துலக்கிவிட்டு, முகத்தைத் துடைத்தும் விடுகிறார். அவைகளுக்குண்டான மந்திரங்களைச் சொல்லி இவ்வாறு பாவிக்கிறார். சின்ன கரண்டியில் நீரை எடுத்து, திருவாயைத் தூய்மைப்படுத்துகிறார் (ஆசமனம்). திருக்கரங்களைத் துடைத்து விடுகிறார் (அர்க்யம்). திருவடியைத் தூய்மை செய்கிறார் (பாத்யம்).

இவ்வாறு அர்ச்சகர் பெருமாளது திருவாய், திருமுகம், திருவடி, திருக்கரங்களைத் தூய்மை செய்வதாகப் பாவித்து, பின் பெருமாளின் முகத்திற்கு நேராகக் கண்ணாடியைக் காட்டுகிறார்.

திருப்பதியார் ஊழியம் மங்களார்த்திக்கு வேண்டிய மாவைப் பல உருண்டைகளாகச் செய்து வைப்பார். அறக்கட்டளையிலிருந்து பெருமாள் மற்றும் உபயநாச்சிமார்களுக்கு உட்சாத்து ஆடைகளை உள்ளூரார் ஊழியக்காரர் வாங்கி வந்து அர்ச்சகரிடம் கொடுப்பார். அர்ச்சகர் பெருமாளுக்கும், உபயநாச்சிமார்களுக்கும் அவைகளைச் சாத்துவார்.

ஸ்ரீரங்க நாராயண ஜீயர் பச்சைக் கற்பூரமும், திருமண் காப்பும் கொண்டு வந்து அதைச் சாத்துப்படியுடன் சேர்த்து காழஞ்சி பண்ணி சுக்ரவாரப் பண்டாரியிடத்தில் கொடுப்பார். பரிசாரகர் மடைப்பள்ளியி

லிருந்து தணல் கொண்டு வருவார். ஏலக்காயையும், காழஞ்சியையும் சேர்த்து சாத்தாத வைணவனிடம் திருத்துழாய் வாங்கி, அர்ச்சகர் திருவாராதனத்தைத் தொடங்குவார்.

திருவாராதன மணியின் ஓசை கேட்டதும், சந்தன மண்டபத தில் தென்கலை வேதபாராயண கோஷ்டியார பாராயணம் செய்ய ஆரம்பித்து விடுவர். பரிசாரகர் திருப்புகை நீட்டவும், திருபபதியார திருவிளக்குத் தூண்டவும், சந்தன மண்டபத்தின் கீழ்ப்புறம மத்தளம முழங்க, சங்கநாதம் செய்ய திருவாராதனம் நடந்தேறும்

சாளக்கிராமத்தினைத் திருப்படிகத்தின் வெள்ளித் தட்டில வைத்துத் திருமஞ்சனம் நடைபெறும். அர்சசகர் பெருமாளுக்கு திருமண் சார்த்த, பரிசாரகர் கண்ணாடி சமர்பபிபபார் சாததுப்படி அறைக்காரன் கொடுக்கும் பூணூலையும பெருமாளுககு அணிவிப பார். சாத்தாத வைணவன் கொடுக்கும மாலைகள பெருமாளுககு இரண்டும், உபயநாச்சிமார்களுககு இரணடும், திருவரங்க மாளிகையாருக்கு ஒன்றுமாகச் சாற்றப்படும பிறகு கருவறையிலுள்ள இராமானுசன் என்னும் திருவிளக்கைத் தூணடுவார்கள.

அதன் பின்னர் பச்சைப் பாலும், வெண்ணெயும, ரொட்டியும, பருப்பும் பெருமாளுக்கு அமுது செய்யபபடும் ரொட்டி, வெணணெய அமுது செய்வது இஸ்லாமியர் படையெடுப்பு காலத்திற்குப் பின ஏற்பட்டிருக்க வேண்டும் என்று கருதப்படுகிறது அது போனறே வெற்றிலையின் பின்புறத்தில் சந்தனம வைததுத் தருகினறாாகள இதுவும் இஸ்லாமியர் படையெடுப்பிற்குப பிறகு இக்கோயிலை வழக்கமாயிற்று என்று அறிகின்றோம.

## 12:3:4 பொங்கல் தளிகை அமுதுசெய்தல்

குடத்தில் திரியை வைத்து, அதைத் திருப்பதியார் என்னும் ஊழியர் எரியூட்டி அர்ச்சகரிடம் தீபப் பிரதிஷ்டை செய்து, குட தீபத்தால் பெரிய பெருமாள் (மூலவர்), பெருமாள் முதலானவர்ககு மஙகளார்த்தி செய்வார். அது சமயம் இசைக்கருவிகள் திருச்சின்னம், எக்காளம்

முழங்கும். மங்களார்த்தி முடிந்ததும் வீரவண்டி வாத்தியத்துடன் சுற்றுக் கோயில்களான சேரகுலவல்லி நாச்சியார், துலுக்க நாச்சியார், சேனை முதலியார் சன்னிதிகளுக்குச் சென்று அர்ச்சகர் குட தீபாரத்தி செய்வார்.

மூலத்தானத்தின் மணிக்கதவு திருக்காப்பு சேர்த்து, மேலப் படியின் கீழ் பெரிய மேளம் முதலான இசைக்கருவிகள் ஒலிக்க குலசேகரன் திருவீதியில் நகரா கைத்தாளம் ஒலிக்கப் பெருமாளுக்குப் பொங்கல் அமுது செய்விக்கப்படும். உடன் மணியாரருக்கும், உத்தமநம்பிக்கும் பெருமாள் சேவை செய்விக்கப் பெறும்.

முன்பு எடுத்து வைத்திருந்த மாவு உருண்டையில் திரி இட்டு அவைகளை ஒன்பது வெள்ளித் தட்டில் வைத்து, திருப்பதியார் ஒவ்வொன்றாய்த் திருமுத்து விளக்கில் தூண்டி, அர்ச்சகரிடத்தில் கொடுப்பார். மணிக்கதவு திருக்காப்பு நீக்கப்பட்டு எக்காளம் திருச்சின்னம் ஊத ஆறு மங்களார்த்தியும், மூன்று கற்பூரார்த்தியுமாக ஒன்பது மங்களார்த்தி நடைபெறும்.

பின்னர், பொங்கல் தளிகை மணிக்கதவுக்கு வெளியில் வந்தவுடன் பெரியமேளம் முதலான இசைக்கருவிகளுடன் சேனை முதலியார் சன்னிதியில் இறக்கப்படும். அர்ச்சகர், சன்னிதிக் கருடன், சேரகுலவல்லி சன்னிதிகளில் அமுது செய்விப்பர்.

## 12:3:5 *பெரிய அவசரம்*

மணிக்கதவு திருக்காப்பு செய்து, சின்னப்பெருமாளைப் பாத்திர வேதியில் எழுந்தருளச்செய்து, ஸ்நபனத் திருவாராதனம் நடந்து நெய், வெல்லம், வேளையம், அமுது செய்வித்துச் சின்னப் பெருமாளுக்கு ஏகாந்தத் திருமஞ்சனம் செய்யப்படும்.

பின் பெரிய அவசரம் பெருமாளுக்கு அமுது செய்யப்படும். முன் நடந்ததைப் போன்று மங்களார்த்தி நடந்து, மணிக்கதவு திருக்காப்பு நீக்கியவுடன் திருச்சின்னம் முதலியவை சேவிக்கப்படும்.

தளிகை, சேனை முதலியார் சன்னிதிக்கு எடுத்துச் சென்றவுடன் மேளம் நிறுத்தப்படும்.

அர்ச்சகர் வட்டிலையும், திருப்பதியார் ஊழியக்காரர் திருமணியும், பந்தமும் பிடித்துக்கொண்டு திருமடைப்பள்ளிக்குச் சென்று அங்கு ஓமம் செய்வர். பலிப்பிரதானமும் செய்யப்படும்.

## 12:3:6 பால் அன்னம் அமுது செய்தல்

மாலை நேரத்தில் குலசேகரன் திருவீதி நாழி(கை)கேட்டான் வாசலில் மாலைக்கால மேளம் வாசிக்கப்படும். கோயில் மேலப்படியில் மேளம் வாசிக்கப்படும். பால் அன்னத் தளிகை, மடப்பள்ளியிலிருந்து எடுத்து வந்து மூலத்தானத்தினுள் வைக்கப்படும். மணிக்கதவு திருக்காப்பு சேர்த்து பெருமாளுக்கு அமுது படைத்த பின்னர், மங்களார்த்தி நடைபெறும்.

சேனை முதலியாருக்கு மேலப்படி வழியாகச் சென்று அவருக்கு அமுது செய்வித்தவுடன், சந்தன மண்டபத்தில் நட்டுமுட்டு வாத்தியங்கள் சேவிக்கப்படும். திருக்காப்பு நீக்கப்பட்ட பின் பொது மக்கள் பெருமாளை வழிபடுவர்.

## 12:3:7 செலசம்பா (செல்வர் சம்பா) அரவணை அமுது செய்தல்

செலசம்பா (செல்வர் சம்பா) திருவாராதனத்திற்குப் பணியாளர்கள் செய்ய வேண்டியதைச் செய்து கொடுக்க, மதுவர்க்கப்பால அமுது செய்து பின்னர் அரவணைத் தளிகை அமுது செய்யப்படும்

## 12:3:8 பால் அமுது செய்தல்

பாலைப் பாலமுதுப் பாறையில் வைத்து அமுது செய்விப்பார். இப்பாலமுது பெருமாள் துயிலும் பாம்பிற்கு (ஆதிசேடன்) அமுது செய்விப்பதாகும். எல்லா அமுதுகளையும் பெருமாளின் எதிரில் உள்ள

அமுது பாறையில் வைத்துப் பெருமாளுக்கு அமுது செய்விப்பார். ஆயின் இரவு கடைசியாக அமுது செய்யும் இப்பாலை மட்டும், பெருமாளின் திருமுடி மீது இருக்கும் ஆதிசேடனுக்கு அமுது செய்வதற்காக அப்பாம்பின் கண்களில் படும்படியாக பாலமுதுப் பாறையில் வைத்து அமுது செய்விப்பர்.

பாலமுது ஆனவுடன் சந்தன மண்டபத்தில் வீணை வாசிக்கப் படும். அர்ச்சகர் பெருமாளைத் துயிலச் செய்து வெளியில் வருவார். பெருமாளின் திருக்கால்களையும், கரங்களையும் அர்ச்சகர் தம் கரத்தால் பிடித்துவிடுதல் அவரைத் தூங்கச் செய்வதாக அமையும்.

பால்அமுது சேனைமுதலியார் சன்னிதிக்குச் சென்றவுடன் வீணைவாத்யம் நிறுத்தப்படும். மூலத்தானத்தின் கதவு அர்ச்சகர் முத்திரையோடு திருக்காப்புச் செய்யப்படும். பின் அனைத்து வாசல் கதவுகளும் பூட்டப்பட்டு, பாரிமேளம் ஆலிநாடன் திருவீதி வலம் வந்து, சித்திரை வீதி வலம் வரும்.



## இயல் — 9

# அடிக்குறிப்புகள்

1. கோவிந்தராஜீதயம் (வால்மீகி இராமாயண வியாக்யானிகை) அயோத்தியா காண்டம் 17
2. ஸ்ரீபிரசன்ன சம்மிதை அத்தியாயம் 38 வரிகள் 1 - 32
3. பாத்ம சம்மிதை, சாயா பாதா அத் 14 வரிகள 12 20
4. ஈசுவர சம்மிதை, அத். 12 வரிகள 24 - 40
5. மேலது அத் 14 வரி 40
6. கோயில் ஒழுகு பக்கம் 119 (1909)
7. மேலது பக்கம் 95 (1909)
8. மேலது பக்கம 95 (1909)
9. பி.என். சாமா, டில்லி - 'பெஸ்டிவல ஆப் இந்தியா' 1978 பக்கம 14
10. மேலது பக்கம 14
11. மேலது பக்கம் 15
12. கே. ஆறுமுகம நாவலா இந்து மத இணைபபு விளககம பககம 1[illegible]
13. பாஞ்சராத்திரம், அநந்தாகயோததிர பாகததில 'மஹாநவம்யுத்ஸவம்' அத் 44 சுலோகம 1 - 45
14. ஈசுவர் சம்மிதை அத். 13 வரிகள் 88
15. பாஞ்சராத்திரம் அநந்தாகயோத்திர பாகததில மஹாநவம்யுத்ஸவம் அத். 44, சுலோகம 1 - 45
16. 'ஸ்ரீரங்கதேவஸ்தானம்' பததிரிகை மாத வெளியீடு
17. ஸ்ரீபிரசன்னசம்மிதை அத்தியாயம 45 ஈசுவர சமமிதை அத 12 வரிகள் 161 - 205
18. பெரியாழ்வாா திருமொழி 1.4 குலசேகராழவாா திருமொழி 1.8
19. பாத். சம்மிதை அத். 9, சுலோகம 2 - 11
20. கோயில் ஒழுகு, உத்தமநம்பி சரித்திரம ஸ்ரீரஙகம கோயில் சரிததிரம பக்கம் 32
21. ஸ்ரீபிரசன்ன சம்மிதை அத். 45, அத். 42 வரிகள் 1 - 21
22. மேலது 43வது அத்தியாயம்

23. ஸ்ரீபிரசன்ன சம்மிதை அத். 42 & 41 வரிகள் 1 - 77
24. பெரியாழ்வார் திருமொழி 1 : 2, 1:3, 1:4
25. பாத்மசம்மிதை அத். 14, சுலோகம் 1 - 2
26. மேலது அத். 14, சுலோகம் 9 - 11
27. பெருமாளின் எட்டு தேவியார், ஸ்ரீரங்கநாச்சியார் அண்டாள் நாச்சி யார், ஸ்ரீதேவி, பூதேவி, கமலவல்லிநாச்சியார், சேரகுல வல்லி நாசசியார், துலுக்கநாச்சியார்
28. குலசேகராழ்வார் மன்னுபுகழ் 8, வன்தாளினிணை 9 அங்கணெடுமதிள் 10
29. ஸ்ரீபிரசன்ன சம்மிதை அத். 44 சுலோகம் எண்ணிக்கை 47½
30. கோயில் தமிழ் அகராதி, தானீகம் பார்த்தசாரதி அய்யங்கார்
31. பாத்ம சம்மிதை அத். 15 சுலோகம் 8 - 24
32. ஸ்ரீபிரசன்ன சம்மிதை அத். 44 சுலோகம் 1 - 56
33. திருமங்கையாழ்வாரின் பெரியதிருமொழி 1:1
34. கல்வெட்டு எண் 212, ஏ.ஆர்.நெ. 49, ஆப் 1936 - 37
35. கோயில் ஒழுகு பக்கம் 32
36. பாத்ம சம்மிதை சர்யாபாதா அத். 14, சுலோகம் 2488
37. தானீகம் பார்த்தசாரதி அய்யங்கார், கைசிக மகாத்மியம் பக்கம் 12
38. ஸ்ரீரங்கம் கோயில் வாக்கிய பஞ்சாங்கம் சோமயாஜியாண்டான் ஜோஸ்யர் குட்டி சாஸ்திரிகள் 1988 - 1989 பக்கம் 16
39. தமிழ்ப்பஞ்சாங்கம் பக்கம் 16
40. தமிழ் அகராதி தொகுதி IV பகுதி I பக்கம் 2391 - 2392
41. பெரியதிருமொழி 9:6:1
திருவாய்மொழி 5:5:1
42. பெரியதிருமொழி 9:6:1, 9:5:1
43. திருப்பாவை 26,ஆம் பாடல் வியாக்யானம்
44. கோயில் ஒழுகு பக்கம் 44
45. பாரமேசுவர சம்மிதை அத்.9 வரிகள் 1 - 4
46. திருப்பதிகோயில் வரலாறு (திருப்பதி 1953) வால்யூம் 1 பக்கம் 505 எழுதியவர் : திரு. டி.கே.டி வீரராகவாச்சாரியார்

# முடிவுரை

## இக்கோயிலின் வரலாறு

திருவரங்கம் கோயில் என்ற ஒன்று எக்காலத்தில் உண்டாயிற்று என்பதை அறுதியிட்டுக் கூறுவதற்கு நமக்கு இராமாயணம் என்ற இதிகாசமே துணையாக நிற்கின்றது. அத்துடன் புராணங்களி லிருந்து கிடைக்கப்பெற்ற ஸ்ரீரங்கம் மகாத்மியம, பாஞ்சராத்திர ஆகமத்தின பாரமேச்வர சம்மிதை, கோயில் ஒழுகு போன்ற நூலகள் இக் கோயிலின் தொன்மை பற்றிச் சுட்ட அறிகின்றோம. (கூறுகிறது)

இராமாயண நிகழ்ச்சி என்று நிகழ்ந்தது? என்று ஆராய்ந்தால் அது இற்றையோர் கணிக்கும் வரலாற்றுக் காலத்துக்கு உடபடாது வரலாற்றுக்கும் முற்பட்ட இதிகாச, புராண காலங்களுக்குச் செல்கின்றது.

இவ்வுலகத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கால அளவிற்கு உட்படுத்திய சான்றோர்கள் நான்கு பெரிய கால அளவுகளைச் சுட்டியுள்ளனர். அவற்றைக் கிருதயுகம், திரேதாயுகம், துவாபர யுகம், கலியுகம் என்று நான்கு பெயர்களால் அழைபபர்.

இன்று நடைபெறும் யுகம் கலியுகம் எனப்படும. இதற்கு முன் நடந்த யுகம் துவாபரயுகம் என்பர். அதுவே பாரத காலமாகும் அதற்கு முன் திரேதாயுகமே இராமாயண நிகழ்ச்சி இடம் பெற்ற காலமாகும். இவற்றைக் கொண்டு இராமாயணப் பழமையை ஒருவாறு ஊகிக்கலாம்.

இராமனுக்கு முடிசூடுதல் தடையுற்று பதினான்கு ஆண்டுகள் கானக வாழ்க்கையில் கலந்தபோது, அவன் மனைவி சீதை இராவணனால் சிறைபிடிக்கப்பட அவளை மீட்பான் வேண்டி இலங்கை புகுந்து, இராவணன் உள்ளிட்ட அரக்கர்களை அழித்து மீண்டும்

அயோத்தி புகுந்து, முடி புனைந்தபின் நன்றிக்கடனாகப் பலருக்குப் பல கொடைப்பொருள்கள் கொடுத்தபோது இராவணன் தம்பி வீடணனுக்குத் தன் குலதெய்வமாகிய அஃதாவது சத்திய உலகத்தில் பிரம்மாவால் வழிபடப்பட்டு பின்னர் இட்சுவாகுவின் தவநலத்தால் மண்ணுலகத்திற்கு கொண்டுவரப்பட்டு, அயோத்தியில் இட்சுவாகு காலம்தொட்டு வணங்கி வரப்பட்ட இட்சுவாகு குலதனமான திருமாலைக் கொடுக்க, அதை அவன் கொண்டு போந்த வழியில் காவிரிக் கரையில் அது இடம்பெற, அங்கு கோயில் கொண்ட தொன்மைக்குரியதாகும். இதுவே திருவரங்கப் பெருமாளுக்கு அமைந்த முதற்கோயிலாகும். அது அக்காலத்தில் ஒரு சுற்றுடைய கோயிலாக அமைந்திருக்கக்கூடும். அதன் பின்னர் அக்கோயில் பல இயற்கை மாறுபாடுகளுக்கு உட்பட, வேந்தர்களால் மறந்தும், பின் அது நினைவுறுத்தப் பெற்றும் வழிபாட்டிற்காக மேலும் திருச்சுற்றுகள் விரிவடைவதற்கும், விழாக்கள் எடுப்பதற்கும் வாய்ப்புள்ளதாகி வளர்ந்து வந்துள்ளது.

## இக்கோயிலின் சிறப்பு

ஒரு கோயிலின் சிறப்பு, அக்கோயிலின் மூர்த்தி, தலம், தீர்த்தம் பற்றியே விளங்குமாதலால், இங்கு கோயில் கொண்டுள்ள மூர்த்தி பிரம்மா, சூரியன், இட்சுவாகு, அவன் வழிவழி வந்த இராமனால் வழிபடப்பட்ட பெருமாள் என்பதை அறிகின்றோம். இத்தலத்தின் பெருமைதனைச் சங்க நூலான ***அகநானூறு, சிலப்பதிகாரம், நாலாயிர திவ்வியப்பிரபந்தம்*** முதலிய நூல்கள் மூலம் அறிகின்றோம். அத்துடன் தீர்த்தச் சிறப்பினை இக்கோயிலில் உள்ள தீர்த்தங்கள், சந்திரபுஷ்கரணி உட்பட ஒன்பது தீர்த்தங்கள் கொண்டு அறிகின்றோம். மேற்கூறியவற்றை இவ்வாராய்ச்சி விளக்கமாகக் குறிப்பிடுகிறது.

மேலும் 'வைணவத் திருப்பதி நூற்றெட்டினுள்' இக்கோயில் முதன்மைப் பேறுபெற்று விளங்கும் சிறப்பும் ஈண்டு விளக்கப் பட்டுள்ளது.

## கோயில் அமைப்பு

இக்கோயிலின் அமைப்பை இவ்வாராய்ச்சியில் விளக்க முயன்று, ஏழு திருச்சுற்றுகளுக்குள் அமைந்துள்ள சுற்றுக் கோயில்கள், மண்டபங்கள் போன்றவை விளக்கப்பட்டுள்ளன. மன்னர் விழாக்கள் பேசப்படுவதால் இக்கோயிலுள் அமைந்துள்ள ஏழு திருச்சுற்றுக் களையும் சுட்டி, விழாக்களுக்கு எழுந்தருளும் மண்டபங்கள் மற்றும் சுற்றுப்புறக் கோயில்கள் போன்றவைகள் விரிவஞ்சி (விரிவாக) குறிக்கப்பெறவில்லை.

## சங்ககாலத்தில் விழாக்கள்

விழாக்கள் சங்ககாலப் பழமை உடையன என்பதும், அதன் வழி இன்றுவரை வளர்ந்து, தொடர்பு குன்றாது வருவன என்பதும் நோக்கத்தக்கது. சங்ககாலத்து இலக்கியத்தில சுட்டிய விழாவன்றிச் சுட்டப்பெறாத விழாக்களும் இருந்திருத்தல் கூடும். சங்க காலத்தில சுட்டப்பெற்ற விழாக்கள் திடீரென்று அனறு தோன்றிய விழாககளாக இருந்திருக்க முடியாது. அவறறிற்கும் ஒரு தொன்மை சுட்ட வாய்ப்புண்டு. சில விழாக்கள் தொடர்ந்து வளர்ந்திருக்கலாம். சில விழாக்கள் தொடர்ந்து, விடுபட்டு, மீண்டும் தொடர்ந்திருக்கலாம். இவ்வகையில் இன்றும் இக்கோயிலில் 365 நாளகளுக்கும் நித்திய விழாவாக இருப்பதுபோல, நைமித்திக விழாக்கள் பல இருந்து மறைந்திருக்கவும் மற்றும் மாற்றம் பெறறிருக்கவும் கூடும். இச் செய்திகளைப் பாஞ்சராத்திர ஆகமம், கோயில ஒழுகு, மறறும் தமிழ் நூல்கள், வடமொழி நூல்கள், தியாகராச சுவாமிகள கீர்த்தனைகள, மாத்வர்கள் பாடல்கள், நாடோடிப் பாடலகள் உணர்த்துகின்றன அச்செய்திகள் இவ்வாராய்ச்சியில் ஆராயப் பெற்றுள்ளன.

## இக்கோயில் கல்வெட்டுகள் குறிக்கும் விழாக்கள்

இக்கோயிலில் கிடைத்துள்ள கல்வெட்டுகள் 644. அக்கல் வெட்டுகளில் குறிக்கப்பெற்ற விழாக்களில் இன்று சில அது போன்றே

நடைபெறாமையும் இன்று நடக்கும் விழாக்கள் சில கல்வெட்டுகளில் இல்லாமையும் மேல்சொன்ன கருத்தை அரண் செய்வதாகும்.

## அரசப்பெருமக்களின் தெய்வப்பணி

அரசர்களும், மன்னர்களும் தெய்வத்தைத் தமதாக்கி, விழா எடுத்தது போக, வேந்தர்களும், மன்னர்களும் அழிந்த பின்னர் செல்வர்களும், பக்தர்களும், விழாக்களைத் தமதாக்கி, நடத்தத் தலைப்பட்டு, அவை, அந்த முறையில் நடைபெற்று வருகின்றன. அம்முறையில் காலமாறுபாடு காரணமாக விழாக்கள் அவர்களால் விடுபட்டவை. புதிய செல்வர்களால் எடுத்துக்கொள்ளப்பெற்றும், மாறிமாறி இயங்கி வரும் செய்திகளையும், கல்வெட்டுகள் துணை கொண்டு இவ்வாராய்ச்சி சுட்டுகிறது.

## இராமானுசரின் கோயில் பணி

இத்திருக்கோயில் திருச்சுற்றாலும், மாளிகைகளாலும், மண்டபங்களாலும், தெய்வங்களாலும், விழாக்களாலும் பெருகியது போல இவ்விழாக்கள் நடத்துவதற்கு உரியோரும், பலதரப்பட்ட வகையில் பெருகியுள்ளனர். இவர்கள் பெருகப்பெருக நடைமுறை நிர்வாகத்தில் குழப்பம் நிகழாதிருக்க வேண்டியும், குறித்த பருவத்தில், குறித்த நாளில், குறித்த போதில், குறித்தவாறு குறித்த நிவேதனங்களோடும், அவற்றின் பாதீடுகளும் நிகழ்வுறுவதற்கு உரிய வரையறுத்த நெறிமுறைகள் தேவைப்பட்டதால் அதனை இராமானுசர் வரையறை செய்து நிலைபொறுத்திய செய்தி இங்கு விரிவாகப் பேசப்பெற்றுள்ளது.

## இன்று நடைமுறையில் உள்ள விழாக்கள்

இன்று நடைபெறும் அனைத்து விழாக்களையும், விவரிக்க முயன்று, விழாக்களில் நடைமுறைபற்றி ஆகமங்கள் சுட்டும் முறைகளைக் கூறி, இக்கோயிலில் அவ்விழாக்களில் நடைபெறும் முறை பற்றிய விளக்கம் கூறப்பட்டுள்ளது.

பிரம்மோத்சவம் முறையே பங்குனி, சித்திரை, தைத் திங்களில் நடைபெறும் விழாக்கள் என்னும்போது ஆண்டுத் திருநாள் என்ற முறையில் கொடியேற்றத் திருநாள் நடைபெறுவதை முதற்கண் கூறி, அதைத் தொடர்ந்து தெப்பத் திருநாள், திருப்பவித்திரத் திருநாள்கள் விவரிக்கப்பட்டுள்ளன.

பிரும்மோத்சவத் திருநாள்களில் கொடியேற்றம், திருமண் எடுத்தல், திருமுளை, யாகம் செய்தல், ஓமம் செய்தல், பேரி முழங்குதல் போன்ற தொடர்புடைய செயற்பாடுகள் சமுதாயம் தழுவிய சடங்காகக் கொள்ள இடமிருக்கிறது. இச்செயல்கள் ஒரு இல்லத்தில் நடைபெறும் திருமணச் சடங்குகளோடு ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கதாக மனித வாழ்வியலோடு இணைந்த ஒன்றாகத் திருக்கோயில்களில் இன்றும் நடந்தேறி வருவதாகக் கொள்ள இடமிருக்கிறது. இதில் நடைபெறும் பிரணயகலகத் திருநாள் கணவன் மனைவியின் ஊடல் நிகழ்ச்சியாகிறது.

## தெப்பத் திருநாள்

இறைவனைக் குளிர்ந்த தெப்பக்குளத்தில் எழச் செய்து, மக்கள் அவரைத் தெப்பம் நீரினில் சுற்றிவர வழிபடும் நிலையைக் கோயில் வழிபாட்டில் ஒன்றாகச் சேர்த்திருக்க வேண்டும் என்றறிகின்றோம்.

திருப்பவித்திரத் திருநாள் என்பது பிராயச்சித்த (பரிகாரத்) திருநாளாகிறது. இது வழிபாட்டு முறையில் ஏதேனும் குறை நேர்ந்திருக்குமாயின் அவைகளை நிவர்த்தி செய்யும் என்று நம்பப்படுகிறது.

ஆழ்வார்கள் அழகு தமிழுக்கு ஒரு விழாவாக அத்தியயனத் திருநாள் கொண்டாடப்படுகிறது. இவ்விழாவில தமிழின் இயல், இசை, நாடகம் மூன்றும் அரையர்களால் இறைவன் முன் இசைக்கப் படுவதை அறிகின்றோம். தமிழுக்கு எடுக்கும் விழாவாக இவ்விழாவைக் கொள்ளலாம்.

அதைத் தொடர்ந்து பிற விழாக்களைத் தொகுத்துக் காண்கின்றோம்.

## வழிபாடு

இக்கோயிலின் பழக்கவழக்கங்களை அறிய, தினப்படி இக்கோயிலில்நடைபெறும் வழிபாடுகளையும், விழா நாயகர்களாகிய தெய்வ உருவங்களைப் போற்றும் முறைகளையும், அஞ்சனமாட்டி ஆடை அணிவித்து, அணிகலன் பூட்டி, மாலை சாற்றி மக்களை வழிபட வைத்து, ஊர்வலம் செய்து, அவற்றிற்குப் பூசனை புரிந்து படையல் அமைத்தபின் அவற்றைப் பாதீடு செய்யுங்கால் கொள்வோர் இன்னார், கொள்வன இன்னவை, கொள்ளும் அளவு இன்னது என்பன போன்ற பல நுண்ணிய நடைமுறைச் செய்திகளையும் இவ்வாராய்ச்சி சுட்டுகிறது.

## வேதபாராயணம்

யுகக் கணக்கில் கோயில் கொண்ட திருவரங்கத் தெய்வத்திற்கு நிகழ்வுற்று வந்த விழாக்கள் கலியுகத்தில் அரசியல் மாறுபாட்டாலும், சமயப் பிணக்குகளாலும், மாற்றங்கள் பல பெற்றன. வேதகாலம் வந்த பிறகு, வேதம் இக்கோயிலில் இடம் பெற்றதா? அன்றி, பின்னே எக்காலத்தில் இது இடம் பெற்றது என்பது ஆராய்தற் குரியது. வடமொழி தென்னாட்டில் பெருமளவில் செல்வாக்குப் பெற்ற பல்லவர் காலத்திலும், பிற்காலச் சோழர் காலத்திலும் வடமொழி வேதங்கள், பாராயணம் என்கின்ற முறையில் உள்ளே புகுந்திருக்க வேண்டும். காரணம் வேதாகம சம்மிதைகளில் குறிப்பாக பாஞ்ச ராத்திர ஆகமப் பாரமேச்வர சம்மிதையில் திருவரங்கம் கோயில் குறிக்கப்பெறுவதால், அக்குறிப்பின் துணைகொண்டு வடமொழி வேதங்கள் கோயிலுள் இடம் பெற்றிருக்கலாம் என்று ஊகிக்க முடிகின்றது.

## நாலாயிர திவ்யப்பிரபந்தம்

முதலாழ்வார் மூவர் பேயாழ்வார், பொய்கையாழவார், பூதத்தாழ்வார் என்ற அம்மூவரும், சங்ககாலச் சார்புடையவராதல கூடும் என்று வரலாற்று உணர்புடை யோர் எண்ணுவது கொண்டு பார்த்தல் அவர்கள் பாடிய நாலாயிர திவ்வியப் பிரபந்தத்தின் ஒரு பகுதி எத்துணைப் பழமையுடையது என்பதை அறிய முடிகின்றது. அதன்பின மற்றைய ஆழ்வார்கள் பாடிய பிரபந்தங்கள் 8ஆம் நூற்றாண்டு தொடர்ந்து வந்துள்ள செய்தி வரலாறு கண்டதாகும். இவவளவு காலமாக நாட்டில் பக்திப் பனுவல்களாக இருந்து வந்த நாலாயிர திவ்யப்பிரபந்தம் நாதமுனிகள் (கி.பி. 823) காலத்தில் பரிந்துரை முறையில் உட்புகுந்து அது இன்று விழாக்களோடு கலந்து தமிழையும், அது வழி பக்தியையும், தத்துவத் தையும் அறிஞர்களுக்கு அலலாமல் எளிய மக்கட்கும் பரப்பி வருவதை இன்றும் இககோயில் நடைமுறையில் காணலாம். இவ்வாறு பிரபந்தம் விழாக்களில் கலந்த பெற்றியும் அது நிகழ்வுறும் இயல்பும் பரக்க (பற்றி) இவ்வாராய்ச்சி பேசுகின்றது.

பின்னர் ஆழ்வார்கள், ஆசாரியர்கள், திருநட்சத்திரத்தில் இக்கோயிலில் நடைபெறும் விழா முறை பற்றியும், பெருமாள் திருநட்சத்திரமான ரேவதி அன்றும் மற்றும் ஏகாதசி, அமாவாசை போன்ற நாள்களிலும், தமிழ்வருடப் பிறப்பு, தெலுங்கு வருடப்பிறப்பு, மாதப்பிறப்பு போன்ற நாள்களிலும் பெருமாள் புறப்பாடு கண்டு திருமஞ்சனம் காணும் நடைமுறைகள் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன தினப்படி இக்கோயிலில் நடைபெறும் வழிமுறையும் அத்துடன் கூறப்பட்டுள்ளது.

இக்கோயிலில் அனைத்துச் சாதியினரும் விழாவிலும், வழிபாட்டிலும் பங்கேற்கின்ற ஒரு பொதுத்தன்மை இராமானுசர் காலத்திலிருந்து இன்றுவரை நடைபெற்று வருகிறது. இது ஒருமைப் பாட்டுணர்வை வளர்க்கும். அவரவர்களுக்கு உரிய மரியாதை அவர்கள் செய்யும் தொழில் அடிப்படையில் அளிக்கப்படுகிறது.

வண்ணாரை 'ஈரங்கொல்லி' என்று அருளப்பாடிட்டு அழைக்கின்றனர்.

இக்கோயிலில் இந்துக்கள் பழக்க வழக்கத்துடன் முஸ்லீம்கள் பழக்கமான வெற்றிலையில் முன் பக்கம் சுண்ணம் தடவுதல் பெருமாளுக்குக் கைலி (வேட்டி) கட்டுதல் போன்றவைகள் நடைபெறுகின்றன.

யுகாதித் திருநாளாகிய தெலுங்கு வருடப்பிறப்பு இக்கோயிலில் சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. கொடியேற்று விழாக்களில் விசய நகர மன்னர்களான விருப்பண்ண உடையார், பூபதி உடையார் பெயர்களில் விழாக்கள் நடைபெறுகின்றன. இவ்வமைப்பு ஒருமைப்பாட்டுணர்ச்சியை விளக்குகின்ற ஒன்றாகக் கொள்ளலாம்.

## அரங்கராசன்

இவ்விழாக்களின் மூலம் இப்பெருமாள், ஒரு அரசனுக்கு நடைபெறும் சிறப்புகளைப் பெற்றுத் திகழ்கின்றார். நாட்டை ஆளும் மன்னனுக்கு உரிய சிறப்புகள் போன்றே, பெருமாளின் தினப்படி நிகழ்ச்சிகளும், விழாக்களும் இன்றும் நடைபெற்று வருவது கண்கூடு.

'திருவுடை மன்னனைக் காணின் திருமாலைக் கண்டேன்' என்று நம் ஆழ்வார் குறிப்பிட்டதுபோல, திருவரங்கப் பெருமாள் திருமாலாகவும், திருவரங்கத்து அரசனாகவும் விளங்குவதால் ஒரு அரசனுக்குரிய குடிபடைகள் அரங்கநாதருக்கு அமைந்திருப்பது இயற்கை. கோயிலில் அன்றாட பூசனை, சிறப்பு விழாக்கள் போன்றவற்றிற்குரியார் இருப்பதைப் போல அன்றாடம் அரங்கத்து அரசன் அமுதுண்ண அமையும் அடிசில் அதற்குரிய துணைப்பொருள் கள், பணியாரம் போன்ற பல தின்பண்டங்கள், உறங்கச் செல்லும் முன் பருகும் பால், அவைகள் செரிப்பதற்குக் கசாயம் முதலியவற்றை இட்டுத் தரும் மடைத்தொழில் வல்லார் (சமையல்காரர்கள்) பலரும் இக்கோயிலோடு உண்டு.

அரசனுக்கு முடிதிருத்தும் (வகுளம்) தொழிலாளர், ஆடை ஒலிப்போர் (சலவைத் தொழில்) தன்னகரன் (தையல் தொழிலாளர்), நகை செய்யும் தட்டார், இயங்கள் (மேளக்காரர்) முழங்குவோர்கள இருப்பது போல் இக்கோயிலிலும் அத்தொழிலாளர்கள் இருந்து வருகின்றனர்.

அரசனுக்குக் கிணைப்பறை முழங்கித் துயில் எழுப்பித்தல் போல, திருவரங்க ராசனுக்கும் யாழ் (வீணை) மிழற்றித் துயில் எழுப்புவோரும், நாள் கிழமைகளின் நேரங்கால நன்மை உணர்த்தும் கணியனும் உண்டு.

அரசன் ஊர்வலம் வரும்வழி சிவிகை பொறுப்போரும், அரணிடத்தும், திருவீதியிடத்தும் அரசன் நாடகம் நயகக ஆடிக்களிப் பூட்டும் ஆடு மகளிரும் (ஆடுமகளிர் தற்பொழுதில்லை) தொண்டு புரிகின்றனர். அன்றாடம் ஆடுதொழிலுக்குரிய கலன் களைப் (பானை, சட்டி) புதிதுபுதிதாகத் தருதற்குரிய குலாளரும் (குயவர்), தொடுதோல் அமைப்போரும் (செருப்பு தைக்கும் தொழிலாளி) கோயிலூடு அலகிடுவோரும் போன்ற எண்ணிறந்த தொழில் புரிவோர்களும், இன்னும் இக்கோயிலில் திருவரங்க ராசனுக்குத் தொண்டு புரிந்து வருகின்றனர்.

அரசன் எவ்வாறு தனக்குத் தொண்டு மேற்கொள்ளும் இத்துணையினர்க்கு அணுக்கமாய் இருந்து அவரவர்க்குரிய பொருள உண்டு வகை முதலியன வழங்கலும், அவரவர்களுக்கு நலலது அல்லது நிகழும் காலத்து மாலை முதலியன தருதலும், இறபபுச சூழின் அன்று அவர்களை எடுத்து எரித்துக் கடமை புரிதல் போல அரங்கராசன் உணவு படைத்தல் முதலியன கொள்ளாது அவர்கட்கு சட்டியில் தீ உதவுவது, எரிக்கட்டை தருவது போன்ற அனைத்து கடமைகளிலும் பங்கு கொள்கிறார். அரசனுக்குப் பல குடியினர் சூழ்ந்து தொழில் பரிந்து வாழ்வது போல இங்கும் பல குடியினர் சூழ்ந்து தொழில் புரிந்து இயங்குவதைக் காணலாம்.

அன்றாட அரசாங்க நிகழ்ச்சிக்கும், இக்கோயிலில் அன்றாட நிகழ்ச்சிக்கும் வேறுபாடில்லை எனலாம். அரங்கத்துத் திருமால் அரசோச்சும் முறையில் "பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் சிறப்பொல்வா செய்தொழில் வேற்றுமையான்" என்ற குறளுக்கு இயைய அவரவர்கள் புரியும் தொழில்களுக்கு ஏற்ப சிறப்புகளைப் பெற்று, நிலைகுலையாது, தொழில் வழாது நடந்து வரும் நடப்பை இன்றும் கண்டு மகிழலாம்.

மேற்குறித்த அனைத்துக் கூறுகளின் விரிவுகள் இவ்வாராய்ச்சி யில் பரந்துபடப் பேசப்பட்டுள்ளன.

இவ்வாராய்ச்சியில் திருவரங்கக் கோயில் வந்த வரலாறும், அது வளர்ந்த முறையும், நிகழும் விழாக்கள், அதைத் தொடர்ந்த ஒழுகலாறுகள் முதலிய செய்திகள் சுட்டப்பட்டுள்ளன. இக்கோயிலின் கட்டிட அமைப்பு, கலைத்திறன், கல்வெட்டுகள் விரிந்த நிலை, விழாக்களின் தத்துவங்கள், இக்கோயிலில் தலைப்பட்ட சான்றோர்கள் தாம் அருளிச்செய்த செயல்கள் போன்ற செய்திகளில் இவ்வாராய்ச்சியாளர் தம் ஆராய்ச்சியில் தலைப்படவில்லை. இவ்வாராய்ச்சியாளர் விழவு என்ற தலைப்பிலும் அதற்குத் தொடர்புடைய செய்திகளிலும் ஈடுபட்டனரேயன்றிப் பிறவற்றை வழிமுறையனார்க்கு விடுத்துள்ளார்.

# பின்னிணைப்பு – 1

## திருவரங்கம் கோயிலில் அருளிச்செயல்

### 16:1 முன்னுரை

வைணவக் கோயில்களில் காலையில் திருவாராதனத்தின் போது திருப்பாவையும், மாலையில் நித்யானுசந்தானத்தையும் பாடுவது தொன்றுதொட்டு நடைபெற்று வருகிறது.

## 16:2 காஞ்சீபுரம்

காஞ்சீபுரம் வரதராஜப் பெருமாள் கோயிலில் மட்டும் காலையில் திருவாராதனத்தின்போது நாலாயிர திவ்யபிரபந்தம் சேவிப்பது நீண்ட காலமாக நடைபெற்று வருகிறது

திருமங்கையாழ்வார், பெரியாழ்வார், நம்மாழ்வார் இவர்கள் அருளிய திவ்யப்பிரபந்தங்கள் ஒரு நாளில் சேவித்து முடிக்க முடியாதவை. ஏனைய ஆழ்வார்கள் அருளிச் செயல்களை ஒரே நாளில் சேவித்து முடிக்கும்படி அமைந்துள்ளதைப் பயன்படுத்தியும், அம்மூவர் அருளிச்செயல்களை மட்டும் பாட்டுகளின் தொகைக்குத் தக்கபடி முன் நாள்களில் தொடங்கி அவர்களின் திருநட்சத்திர நாளில முடிக்கும்படி வகுத்து அடைவுபடுத்தி இருக்கிறார்கள்.

திருவரங்கம் கோயிலில் ஆண்டு முழுவதும் (பெருமாள் விழாக் காலங்கள் தவிர) நாள்தோறும் காலை, மாலையில் இராமானுசர் சன்னிதியில் அருளிச்செயல் நடைபெறும்.

## 16:3 நித்திய அனுசந்தானம்

காலையில் திருப்பல்லாண்டு, திருப்பாவை, அமலனாதி பிரான், கண்ணிநுண்சிறுத்தாம்பு, இராமானுச நூற்றந்தாதி என்பன ஓதப்பெறும். பின் மூன்று பிரபந்தங்களும நேரமின்மையினால் முதலடி ஒரு பதம் மூன்றாவது அடி ஒரு பதம் என்றவாறு ஓதப்பெறும

மாலை, பெரியாழ்வாரின் 'திருப்பல்லாண்டு', 'பூச்சூடல்', 'காப்பிடல்', 'சென்னியோங்கு', 'திருப்பாணாழ்வாரின் 'அமலனாதி பிரான்' மதுரகவியாழ்வாரின் 'கண்ணிநுண்சிறுத்தாம்பு' (முதல அடி முழுவதும் மூன்றாம் அடி முழுவதும்) பிறகு நமமாழ்வாரின திருவாய்மொழியில் 'ஏழை ஏதலன்', 'கங்குலும் பகலும்', 'ஆழிஎழ' முழுப்பாசுரமும் சேவிக்கப்படும்.

ஒவ்வொரு திங்களும் இராமானுசர் திருநட்சத்திரமான திருவாதிரையில் காலையில் இராமானுச நூற்றந்தாதி முழுவதும்

சேவித்து, மாலையில் இராமானுசர் புறப்பாடு கண்டு யதிராஜவிம்சதி, தேவராஜாஷ்டகம் என்னும் வடமொழி தோத்திரங்கள் சேவிக்கப்படும்.

## பிரம்மோத்சவம், தெப்பத் திருநாள்

தை, பங்குனி, சித்திரை பிரம்மோத்சவங்களிலும், மாசித் தெப்பத்திருநாளின்போதும், பெருமாள் திருவீதி வலம் வரும் பொழுது, முதல் திருநாள் முதல் நான்காம் திருநாள் வரை முறையே முதல், இரண்டு, மூன்று, நான்கு திருவந்தாதிகளும் ஐந்தாம் நாள் திருவிருத்தமும், ஆறாம் திருநாள் பெரிய திருவந்தாதியும் ஏழாம் திருநாள் திருச்சந்தவிருத்தமும், எட்டாம் திருநாள் பெரிய திருமொழியும் ஒன்பதாம் திருநாள் தேருக்கு எழுந்தருளும்போது சிறிய திருமடல், பெரிய திருமடல், திருவெழுகூற்றிருக்கையும், தேரில் திருவாசிரியமும், திருவீதி வலம் வரும்போது பெரியதிருமொழியும், தேர் நிலைக்கு வந்தவுடன் பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகமும் சேவித்துப் பின்னர் சாற்றுமுறை செய்யப் படும். அன்று தேரைவிட்டுக் கோயிலுக்குத் திரும்புகையில், திருநெடுந்தாண்டகம் உள்ளே மூலத்தானம் எழுந்தருளும்வரை சேவிப்பர். மறுநாள் (பத்தாம் நாள்) இராமானுச நூற்றந்தாதி சேவிக்கப்படும்.

இவ்விழாக்களில் தமிழ் முன் செல்ல, தமிழைப் பின் தொடர்ந்து பெருமாள் பின் செல்வார் என்பார் பிள்ளைப் பெரும்மா ளய்யங்கார். தமிழ் முன் செல்ல பெருமாள் பின்தொடர, அவரைத் தொடர்ந்து வேதம் ஓதும் வேதபாராயண அத்யாபககோஷ்டியினர் வேதம் ஓதிக் கொண்டு பின்செல்வர்.

## வசந்தத் திருநாள்

வசந்தத் திருநாளின்போது, பெருமாள் கேடாக்குழி (வசந்த) மண்டபத்திலிருந்து மூலத்தானத்திற்குத் திரும்பும்போது முறையே 1, 2, 3, திருநாள்களில் 1, 2, 3, 4 திருவந்தாதிகளும் ஐந்தாம் திருநாள் திருவிருத்தமும் ஆறாம் திருநாள் பெரிய திருவந்தாதியும் ஏழாம்

திருநாள் திருவீதி புறப்படும்போது திருச்சந்தவிருத்தமும் சேவிக்கப் படும்.

எட்டாம் திருநாள் (அதாவது கடைசி நாள் சாற்றுமுறை) அன்று தீர்த்தவாரிக்காகச் சந்திர புட்கரணிக்கு எழுந்தருளும்போது 'இராமானுச நூற்றந்தாதி' சேவிப்பர்.

## அத்தியயனத் திருநாள்

மார்கழி மாதம் பகல்பத்து, இராப்பத்துக்களில் நம்மாழ்வார், பெரியாழ்வார், இராமானுசர், பிள்ளைலோகாசாரியர் முதலானோர் விழா மண்டபத்திலிருந்து திரும்பி எழுந்தருளும்போது பராங்குச பஞ்சவிம்சதி, ரவுத்ரமாலிகா, நட்சத்திர மாலிகா, ஸ்தோத்திர ரத்னம் என்னும் வடமொழித் ஸ்தோத்திரங்கள் பாடப்படும்.

## இராப்பத்து

இராப்பத்துப் புறப்பாட்டில் பத்துநாள்களும் மூலத்தானத்தி லிருந்து பெருமாள் புறப்பாட்டில் பிள்ளைப் பெருமாளையங்கார் பாடல்களைச் சேவித்து வருவர். பெருமாள் சுவர்க்கவாசல் கதவு திறந்து எழுந்தருளும் இராப்பத்து நாள்களில் கொட்டகையில் 'ஸ்ரீரங்க ராஜஸ்தவம்' என்னும் பட்டர் ஸ்தோத்திரம பாடப்படும்.

## ஆழ்வாராசாரியர் திருநட்சத்திரங்கள்

ஆழ்வார் ஆசார்யர்கள் திருநட்சத்திரங்களில் அந்தந்த ஆழ்வார்களுடைய அருளிச்செயல்கள் பாடப்படும்.

இராமானுசர், நம்மாழ்வார், மணவாளமாமுனிகள், பிள்ளை லோகாச்சார்யர் நால்வருக்கும் நடைபெறும் விழாககளில் உத்சவ காலங்களில் அதாவது ஏழு அல்லது பத்து நாள்கள் நடைபெறும் விழாவின்போது முதல் மூவாயிரமும், திருநட்சத்திரத்துக்கு மறுநாள் இயற்பாவும், அதாவது திருவந்தாதிகள், திருவிருத்தம், திருமடல் பாடப்படும்.

ஆழ்வார், ஆசாரியர்கள், திருவீதி புறப்படும் நாள்களில் இராமானுச நூற்றந்தாதி பாடப்படும். முதலாழ்வார்கள் எழுந் தருளும் கடைசிதினம் மூன்றாம் திருவந்தாதி சேவிக்கப்படும். திருப்பா ணாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார் திருநட்சத்திரத்தின் போது அத்தியயனத் திருநாள் நடந்து கொண்டிருப்பதால் திருவீதியில் நாலாயிரத் தனியன் மட்டும் பாடப்படும். இராமானுசர் சன்னிதியில் தினசரி நாலாயிரத் தனியன், உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி பாடப்படும்.

## வேதபாராயணம்

(மார்கழித் திங்கள் தவிர மற்ற நாள்களில்) காலை, நேரத்தில் பெருமாள் திருமுன்னர் மூலத்தானத்தில் 'தைத்திரீய உபநிடத்து' (1,3,5 ஒற்றைப்படைத் தேதிகளில் முதலிரு பாகங்களும் 2, 4, 6 . . . . இரட்டைப்படைத் தேதிகளில் மூன்றாம் நான்காம் பாகங்களும் பாடப்படும். திருவாராதன நேரத்தில் புருஷசூக்தம், ஸ்ரீசூக்தம், பூசூக்தம், நீளாசூக்தம் காலத்திற்கு தக்கவாறு பாடப்படும்.

| | | |
|---|---|---|
| சித்திரை - | சித்திரா பௌர்ணமி | இந்தத் திருநாள்களில் பெருமாள் உள்ளிருந்து புறப்பட்டு இவ்விழாக்களுக்குரிய மண்டபம் சேரும் வரையில் பின்னர் அம்மண்டபத்திலிருந்து புறப்பட்டுக் கோயில் கொடிமரம் வந்தடையும் வரையில் கிருஷ்ண யஜுர்வேதம் சாகையில் ஏழு காண்டமும், எட்டு அஷ்டகமும் உள்ள பாகங்களில் சாம வேதமும் முடிந்த வரையில் சேவிக்கப்படும். |
| வைகாசி - | வசந்தத் திருநாள் | |
| ஆடி - | 18ஆம் பெருக்கு | |
| ஆவணி - | பவித்ரோத்சவம் | |
| ஐப்பசி - | ஊஞ்சல் திருநாள் | |

## மார்கழித் திங்கள்

அத்தியயன உத்சவத்தில் உள்ளே மூலத்தானத்திலிருந்து புறப்படுதல் தொடங்கிப் பெருமாள் விழாக் கொட்டகை அடையும் வரையிலும், பின்பு கொட்டகையிலிருந்து புறப்பட்டு உள்ளே எழுந்தருளும் வரையில் கிருஷ்ண யஜுஸ்சாகையும் சாமவேதமும் சேவித்தல் நடைபெறும்.

நம்பெருமாள் அத்தியயன மண்டபத்தில் எழுந்தருளித் திருவாராதன முடிவில் தளிகை அமுது செய்வதற்கு முன்பாக பட்டர்புராணம் முன்னும், பின்னும் சேவிக்கப்படும் நடுவில் நான்கு வேதங்களான ருக், யஜுர், சாம, அதர்வண வேதங்களும் சேவிக்கப் படும்.

மேலும் இராப்பத்து நாள்களில் சொர்க்கவாசல அருகில் உள்ள விரஜா மண்டபத்தில் இதே மாதிரி சேவித்தலும் உண்டு, தை, பங்குனி, சித்திரை பிரம்மோத்சவங்களிலும, மாசித் தெப்பத திரு நாளின் போதும், பெருமாள் காலையும், மாலையும் திருவீதி புறப்படும் நேரங்களில் கிருஷ்ணயஜுஸ்சாகையும், சாமவேதமும் சேவித்தல் நடைபெறும்.

ஆழ்வார் ஆசார்யர்கள் திருநட்சத்திரத்தில், அவர்கள் திருவீதி புறப்படும் போது தைத்திரீய உபநிடதத்தில் 1, 2, 3, 4 பிரச்னங்கள சேவிக்கப்படும்.

இவ்வாறு திருவரங்கம் திருக்கோயிலில தெனமொழியும், வடமொழியும், விழாக்காலங்களிலும், நிதயபபடியும், ஓதபபட்டு வருகின்றன. பெரியாழ்வார் தென்னாடும், வடநாடும் தொழுகின்ற திருவரங்கத் திருப்பதி என்றாற்போல தென்மொழியும், வடமொழி யும் பெருமாள் முன்னர் பாடப்படுதல் பண்டுதொட்டு வரும் ஒன்றாகும்.

இக்கோயிலில் அத்யாபக கோஷ்டி என்றும், வேதபாராயண கோஷ்டி என்றும் இரு பகுதியினர் உள்ளனர். அத்யாபகர் நாலாயிரம்

ஓதும் உரிமையினையும் வேதபாராயண கோஷ்டி வேதங்களையும் உபநிடதங்களை ஓதும் உரிமையினையும் பெற்றுள்ளனர்.

இவர்கள் தங்களுக்குள் 'சபை' அமைத்து அதில் உறுப்பினராக உள்ளவர்களையே இதில் ஈடுபடுத்துகின்றனர். மேலும் பிராமணச் சிறுவர்களுக்கு நாலாயிரம் ஓதுவித்தலும் வேத உபநிடதங்கள் ஓதுவித்தலுக்குமாக பல பள்ளிகள் பல அறக் கட்டளைகளது நிதி உதவியுடன் செயல்பட்டு வந்தன. தற்பொழுது இல்லை.

## பின்னிணைப்பு – 2

### திருமஞ்சனம்

இக்கோயிலில் திங்கள்தோறும் அமாவாசை, ஏகாதசிக்குப் பெருமாள் மூலத்தானத்தினின்றும் புறப்பட்டு, சந்தன மண்டபத்தில் திருமஞ்சனம் காண்பார். திங்கள்தோறும் ரேவதி நட்சத்திரத்தன்று, மூலத்தானத்தினின்றும் புறப்பட்டு இரண்டாம் திருச்சுற்றிலுள்ள ரேவதி மண்டபத்தில் திருமஞ்சனம் காண்பார்.

மற்றும் சித்திரை, தை போன்ற வருடப் பிறப்புகள், மாதப் பிறப்புகளில் முறையே சித்திரையில் சந்தன மண்டபத்திலும், தையில் திருப்பாவை சாற்றுமுறை என்கின்ற முறையில் ஆயிரக்கால் மண்டபம் திருப்பாவை மண்டபத்திலும் உபயநாச்சிமாரோடு திருமஞ்சனம் நடைபெறும்.

பிரம்மோத்சவங்களில் கொடியேற்றத்தன்று யாக சாலையில் திருமஞ்சனம் நடைபெறும். பிரம்மோத்சவங்களில் ஏழாம் திரு நாளன்று தாயார் கோயிலில் நவராத்திரி மண்டபத்தில் பெருமாள் உபயநாச்சிமார்களுடன் திருமஞ்சனம் காண்பார். மேலும் பிரம்மோத்சவங்களில் தேர்த்திருநாளன்று தேரை விட்டிறங்கியவுடன் பெருமாள் திருமஞ்சனம் காண்பார். சப்தாவரணத்தன்று, சந்தன மண்டபத்தில் திருமஞ்சனம் நடைபெறும்.

பிரம்மோத்சவ திருநாள்களிலும், தெப்பத் திருநாள்களிலும், வாகனங்களில் எழுந்து திருவீதி கண்டு அருளியதற்காக உத்சவருக்கு ஏகாந்தத் திருமஞ்சனம் நடைபெறும்.

அத்தியயனத் திருநாளில் திருவாய்மொழித் திருநாள் (இராப் பத்து) 10ஆம் நாள் இரவு திருமாமணி மண்டபத்தில் திருமஞ்சனம் நடைபெறும். ஸ்ரீஜெயந்தி, ஸ்ரீராமநவமி நாள்களில் முறையே ஸ்ரீபண்டாரத்திலும் அர்ஜுன மண்டபத்திலும் திருமஞ்சனம் நடைபெறும். வசந்தத்திருநாள், பவித்திரத் திருநாள், ஊஞ்சல் திருநாள்களின் சாற்றுமுறை அன்று அந்தந்த மண்டபங்களில் திருமஞ்சனம் காண்பார்.

திருக்கார்த்திகை அன்றும், ஐப்பசி தீபாவளி அன்றும் யுகாதி (தெலுங்கு வருடப் பிறப்பன்றும்) சந்தன மண்டபத்தில் திருமஞ்சனம் நடைபெறும். கல்வெட்டுகள் குறிப்பிட்டவாறே 81 கலசங்களில் திருமஞ்சனம் நடைபெறுகிறது. இவ்வாறு நடைபெறும் திருமஞ்சனக் காலங்களில் பெருமாள் திருமுன் அரையர், பட்டர் முதலானோர் முறையே நாலாயிரத்தில் சில பாடல்களையும், திருமஞ்சன ச்லோகங்களையும் சேவிப்பர்.

## பட்டர் சேவிப்பது

பட்டர் தம் முன்னோரான பராசரபட்டரால் பெருமாள் மீது இயற்றப்பட்ட திருமஞ்சன ச்லோகங்களைப் (கடியங்களைப்) பாடுவார். பராசரபட்டர் 64 திருமஞ்சன கட்டியம் செயததாகச் சொல்கின்றனர். ஆயின் அவர் வழிவந்த இவர்கள் 30 திருமஞ்சனக் கட்டியங்கள் மட்டுமே தற்சமயம் சேவித்து வருகின்றனர்.

ஒவ்வொரு விழாவிற்கென்று தனித்தனியே கட்டியம் இருந்தும் இன்றைய நடைமுறையில் ஒரு சில பாடல்களையே திரும்பத் திரும்ப எல்லாத் திருமஞ்சனங்களுக்கும் சேவித்து வருவதாகத் தெரிகிறது.

இச்சுலோகங்கள் மணிப்பிரவாள நடையில் தமிழும் வடமொழியும் கலந்து அமைந்துள்ளன.

## அரையர்

ஏகாதசி, அமாவாசை மற்றும் சில மாதப்பிறப்புக்கும் திருமஞ்சனத்தின்போது பெரியாழ்வார் திருமொழி 2ஆம் பத்தின் 4க்கு திருமொழி 'வெண்ணெயளைந்த' பாசுரம் பத்துப் பாடல்களையும் சேவிக்கின்றனர்.

ரேவதியின்போது தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருமாலை 'காவலில் புலனை சுவைத்து' தொடர்ந்து 45 பாடல்களைச் சேவிக்கின்றனர். ஸ்ரீராம நவமியில் 'இராமர் பற்றிய பாசுரங்கள்' குறிப்பாகப் பெருமாள் திருமொழி 'மன்னுபுகழ்' வன்தாளினிணை, அங்கணெடு மதிள்' 30 பாடல்களையும் சேவிக் கின்றனர். மற்ற பாசுரங்களையும் ஸ்ரீஜெயந்தி அன்று 'கண்ணன் பற்றி வரும் பாசுரங்கள்' குறிப்பாகப் பெரியாழ்வார் 'வண்ண மாடங்கள், சீதக்கடல்' 20 பாடல்களையும் சேவிக்கின்றனர்.

ஊஞ்சல் விழாவின்போது பெரியாழ்வாரின் 'மாணிக்கம் கட்டி'ப் பாசுரம் முழுவதும் சேவிக்கின்றனர். வசந்தத்திருநாள் சூர்ணாபிடேகத்தின்போது திருப்பல்லாண்டில் பல்லாண்டும் 'அடியோமோடு' இரண்டு பாசுரங்களைச் சேவிக்கின்றனர்.

திருப்பவித்திரத்தின்போது தங்கள் முன்னோர்களால் இயற்றப்பட்டு வழி வழியாக வரும் இசைப் பாடல்களைச் சேவிக் கின்றனர். எல்லாப் புறப்பாடுகளிலும் பெருமாள் முன் இவர்கள் இன்னிசைப் பாடல்களைப் பாடியவாறு செல்கின்றனர். இவரது இசைப் பாடல்களைக் கேட்டவாறே பெருமாள் உடன் வருகிறார் என்றும் சொல்கின்றனர்.

# பின்னிணைப்பு - 3

## பிரம்மோத்சவத் திருவிழாவின்போதும் மற்ற விழா, நாள் புறப்பாடுகளின் போதும் கடைபிடிக்கப்படும் நெறிமுறைகள்

விழாவின் தொடக்கத்தின் முன்னர் சமயம் சொல்லி வருதல் என்னும் பழக்கம் இக்கோயிலில் உண்டு. அதாவது மணியாரர், சன்னிதி மகாஜனத்தை அழைத்து அறங்காவலர்களுக்குச் சமயம் சொல்லிவரப் பணித்தல். அதுபோன்றே கோயில் விழாக்களில் தொடர்புடைய தலத்தார், அரையர் போன்றோர்க்கும் சமயம் சொல்லி வரச் செய்தல். 'சமயம்' என்பது கோயில் விழா இன்று இந்த நேரத்தில் தொடங்க இருக்கிறது என்பதனைச் சொல்லி விழாவோடு தொடர்புடையவர்களுக்கு நினைவூட்டுவதும் அவர்களை அழைத்து வருதலுமாகும்.

இக்கோயிலில் நடைபெறும் அத்தனை விழாக்களுக்கும் சடங்குகளுக்கும் இது பொருந்தும். பெருமாள் மூலத்தானத்திலிருந்து புறப்படும்போது சில நெறிமுறைகள் பின்பற்றப்பட்டு வருகின்றது

கோயில் மகாஜனம் ம(ப)ட்டை அடித்துக்கொண்டு மணியாரரை அழைத்து வருவார். அவர் இராசமகேந்திரன் திருவீதியில் உள்ள மேலப்படியின் அருகில் நிற்பார். பெருமாள் புறப்பாட்டிற்கான எல்லா ஏற்பாடுகளும் ஆகிவிட்டதையும், உரியவர்கள் எல்லோரும் வந்து விட்டனரா என்று பார்த்துக் கொண்டும் புறப்பாட்டு மேளத்தை வாசிக்கச் சொல்வார். சேர்வைக்காரன் புறப்பாட்டு மேளம், வீரவண்டி, சேமக்களம் போன்ற இசைக் கருவிகளைச் சேவிப்பார்

பின்பு, மணியாரர் திருப்பாதம் தாங்குவோர்க்கு (ஸ்ரீபாதம் தாங்கிகள்) அருளப்பாடு சாதிக்குமாறு தானிகரிடத்தில் கூறுவார் தானிகர் அர்ச்சகரைப் பார்க்க, அர்ச்சகர் பெருமாளின் நியமனம் பெற்றுக்கொண்ட பின்னர் திருவணுக்கன் திருவாசல் திருக்காப்பு நீக்கி திருப்பாதம் தாங்குவோர்க்கு அருளப்பாடு நடைபெறும் அவர்கள் 'நாயிந்தே' என்று சொல்லிக்கொண்டு திருவணுக்கன் திருவாசலுக்குள்

காயத்திரி மண்டபத்தின் அமுது பலகையில் தோளுக்கினியானில் எழுந்தருளியிருக்கும் பெருமாளின் நான்கு மூலையிலும் நான்கு தேங்காய் உடைத்து அவருக்குக் கண்டருளப் பண்ணுவர். பின்பு பெருமாளை வலம் வந்து வணங்கித் தங்கள் தோள்களில் எழுந்தருளப் பண்ணுவர். திருக்காப்பு நீக்கப்பட்டுப் புறப்பாட்டு மேளம் வீரவண்டி வாத்தியம் வாசித்து நிற்க, கௌளி எக்காளையும் சுத்து மத்தளமும் வாசிக்கப்படும். திருவணுக்கன் திருவாசல் திருக்காப்பு நீக்கப்பட்டு பெருமாள் 'மாரி மலை முழைஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும், சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து, வேரி மயிர் பொங்க எப்பாடும் பேர்ந்துதறி மூரி நிமிர்ந்து' முழங்கிப் புறப்படுவார். இதையே சிம்மகதி என்பர்.

தாசநம்பி சாத்தாதவர், தாசநம்பிப் பந்தத்தைத் தீப்படுத்திக் கையில் ஏந்தியவாறு திருவணுக்கன் வாயிலில் நிற்பார். வேத்ரபாணி சாத்தாதவர், கருவூலத்திலிருந்து வெள்ளித் தடி ஏந்தியவண்ணம் நிற்பார்.

பெருமாள் திருவணுக்கன் திருவாசல் தாண்டிச் சிம்மகதியில் புறப்பட்டானவுடன் தலத்தார்கள், ஆசாரிய பெருமக்கள் தண்டமிட்டு வணங்குவர். சாத்தாத வைணவர் இருவரில் ஒருவர் தமிழிலும், மற்றொருவர் வடமொழியிலும் கட்டியம் கூறுவர்.

*'மன்னிய சீர்மணவாள மாமுனி ஈடுவுரைப்பது கேட்டு பின்னொரு ஸ்ரீசைலேசா எனப் பேசும் அரங்கா..எச்சரிக்கை* என்பது தமிழ்க்கட்டியம்

நம்பெருமாளுக்கு மேலப்படியில் திருவனந்தாழ்வான் சமர்ப்பிக்க, உள்ளூரார் ஊழியக்காரர் திருமுத்துக்குடை சமர்ப்பித்து வர பெருமாள் மேலப்படி வழியாகப் புறப்பாடு காண்பார்.

மேலப்படியில் ஆசாரிய பெருமக்களுக்கு மரியாதை; இக்கோயிலில் பெருமாள் புறப்பாட்டில் இராசமகேந்திரன் திருவீதி மேலப்படியில் பெருமாள் திருமுன்னர் வைணவாச்சாரியர்களுக்குப்

பரிவட்ட மரியாதை நடைபெறும். இராமானுசர் மரியாதைக் குரியவர்களை நியமித்தார். பின்பு அரசின் பல்வேறு ஆட்சிக் காலத்தில் சிலர் முன்னும், சிலர் பின்புமாக மாற்றப்பட்டதையும் அறிகின்றோம். மரியாதைக்குரிய சிலர் இன்று வராமலும், துறந்தும் இருப்பதையும் காண்கின்றோம்.

ஜீயர், அன்றைய முறைக்கார தலத்தார் பட்டர் (பராசரபட்டர்/ வேதவியாசபட்டர்), கோயில் கந்தாடையார் (அண்ணன் சுவாமி / அப்பன் ரங்காச்சாரியர்), மூவரும் பெருமாள் திருமுன்னர் வரிசையாக நிற்பர். தானிகர் மூவர், மூவருக்கும் சமமாகத் தீர்த்தம் சாதிப்பர். அர்ச்சகர் ஜீயருக்கும், பட்டருக்கும், கந்தாடையாருக்கும் வரிசைப்படி ஸ்ரீசடகோபம் சாதிப்பார். அதைத் தொடர்ந்து `பெரியநம்பி இராமானுசனுடையார் திருக்கூட்டத்தார்' என்றழைக்கப் படும் பெரியநம்பி, எம்பார், பாலூர் அய்யங்கார், பிரதிவாதி பயங்கரம் அண்ணன், இளையவில்லி, பாவனாச்சார், மடத்தம்மாள், மார்த்தாண்டன், கிடாம்பி, ஆயனார், ஜோஸ்யர் ஆகிய இவர்களுக்கு அர்ச்சகர் ஸ்ரீசடகோபம் சாதிப்பார். பிறகு மணியாருக்கு, தானிகர் பரிவட்டம் சாதித்து, இரண்டுபிடி சாத்துப்படி சாதிக்க, அர்ச்சகர் ஸ்ரீசடகோபம் சாதிப்பார்.

இவர்கள் அனைவருக்கும் பஞ்சமுத்திரையோடு ஸ்ரீசடகோபம் சாதிக்கப்படும். பெருமாள் மேலப்படியினின்று கீழே எழுந்தருளியதும் ஸ்தலத்தார் உத்தமநம்பிக்கு இரண்டுபிடி சாத்துப்படி சாதித்து அவருக்கு மரியாதை செய்யப்படும்.

அரையர் பெருமாளிடம் வந்து தனது நாதமுனியால் தாளம் சேர்ப்பார். பின் அவ்விடத்தினின்று ரிஷபகதியில் ராசமகேந்திரன் திருவீதியில் புறப்பட்டுச் சேனை முதலியார் சன்னிதி வாசலில் அவரைப் பார்த்தவாறு பெருமாள் நிற்பார். வேத்ரபாணி சாத்தாதவர் தன் கையிலுள்ள மாலையை அர்ச்சகரிடம் கொடுக்க, அவர் பெருமாள் திருவடியில் அதைச் சாற்றி சேனை முதலியாருக்கு அளிக்க, சேனை முதலியார் அணிந்திருந்த மாலையைக் களைந்து மணியாருக்குச்

சாதிப்பார். அவர் கண்களில் ஒற்றிக்கொண்டு வேத்ர பாணியினிடம் கொடுப்பார். பெருமாள் மாலையைச் சேனைமுதலியாரும், அவர் அணிந்திருந்த மாலையை விழாப் பொறுப்பாளராக மணியாரரும் பெற்றுக்கொள்வதன் மூலம் பெருமாள் புறப்பாட்டில் சேனாதிபதி உடன் இருக்கிறார்கள் என்பது அறியப் படுகிறது.

சேனை முதலியார் சன்னிதியிலிருந்து பெருமாள் சார்தூல கதியில் கிளிமண்டபத்தின் படிக்கட்டுவரை செல்வார். நாழி(கை) கேட்டான் வாசலிலிருந்து தென்கலை வேதபாராயண கோஷ்டியர் வேதம் தொடங்கிப் பெருமாளைப் பின்தொடர்ந்து வருவார்கள். பெருமாள் கார்த்திகை கோபுர வாசல் வழியாக வெளியே திருவீதி செல்வார். திருவீதியின் மேற்குப்புறம் திரும்பியதும் அத்யாபக குழுவினர் நாலாயிரத்தில் தனியனை வழிபட்டு, பெருமாள் முன்செல்வர்.

விழாக்களுக்கு உரிய திருவீதிகளில் பெருமாள் வலம் வந்து, நான்கு மூலைகளிலும் பலிசாதித்து, நான்முகன் கோபுரவாசல் வழியாக உள்நுழைந்து திருவந்திக்காப்பு மண்டபத்தில் கண்ணேறு கழித்துக்கொண்டு, வடைப்பருப்பு, பானகம் அமுதுண்டு, கார்த்திகை கோபுர வாசலருகில் இயல் கோஷ்டியான அத்யாபகர்களுக்குத் தீர்த்தம் சடாரி சாதிக்கப்படும்.

பெருமாள் மேலப்படி வழியாக அரையர் சேவிக்கும் கொண்டாட்டத்துடன் சாத்தாதவன் வாரியிறைக்கும் பச்சைக் கற்பூரத்துடன் படியேற்றம் காண்பார். படியேற்றத்தின்போது பெருமாள் கஜகதியில் எழுந்தருளுவார். முதல்படியில் சுத்துமத்தளம் வாசிக்க, இரண்டாம் படியில் தவண்டை வாசிக்க, மூன்றாம் படியில் மிருதங்கம் வாசிக்க பெருமாள் சந்தன மண்டபத்தில் ஏறி, அதே வேகத்தில் திரும்பி இராசமகேந்திரன் திருவீதியில் குழுமியிருக்கும் பொதுமக்கள் பக்கம் நிற்பார்.

பெருமாளுக்கு அங்கு கடதீப ஆராதனை நடந்தபின் மூலத்தானம் உள் செல்வார். மூலத்தானத்துள் நுழையும்போது

சர்ப்பகதியில் பெருமாள் பாம்பு வளைந்து வளைந்து செல்வதுபோல் உள் நுழைவார். திருக்கதவு காப்பிடபடும். பெருமாளைத் தோளுக் கினியானிலிருந்து பூபாலராயன் சிம்மாசனத்தில் எழுந்தருளச் செய்வர். பெருமாளின் அணிமணிகள், திண்டு, மலர்மாலைகள் களையப் பெற்று, பெருமாள் ஒற்றை வெள்ளைச் சரமாலையுடன் பஞ்சகச்ச வேட்டி தரித்துக் காட்சி தருவார். திருக்காப்பு நீக்கி கற்பூரார்த்தி நடைபெறும். களைந்த மலர் மாலைகளை மணியாரர் தன்மீது அணிந்து, அன்றையப் பணியைச் செவ்வனே செய்த மகிழ்வுடன் காப்பந்தம் முன் செல்ல மூலத்தானத்திலிருந்து வெளி வருவார்.

உத்தமநம்பிகள் தலையில் பெருமாள் சரத்தைத் தலைப் பாகை மாதிரி கட்டி மூலத்தானத்திலிருந்து வெளி வருவார். பின்னர்த் திருக்காப்பிட்ட பீக முத்திரை வைக்கப்பட்டு பாரிமேளம் திருவீதிகள வலம் வரும்.

## பின்னிணைப்பு – 4

### நாலாயிரம் அன்றி இக்கோயிலில் சேவிக்கப்படும் நூல்கள்

வைகுண்ட ஏகாதசியின் முதற்பத்து நாள்கள் ஆளவந்தாரின் ஸ்தோத்திரங்கள், வாதூல வரதரின் ஸ்ரீமத் பராங்குச பஞ்சவிம்சதி, அபிராம வரததேசிகரின் ஸ்ரீபராங்குச நட்சத்திரமாலிகா, மணவாள மாமுனிகளின் யதிராசவிம்சதி போன்றவைகள உடையவர் சன்னிதி யில் விழாக்காலங்களில் ஓதப்படுகின்றன

பின் பத்து நாள்களில் இரண்டாம நாளிலிருந்து, பத்தாம் நாள வரை புறப்பாட்டின்போது பிள்ளைப் பெருமாளையங்காரின பாட லகள ஓதப்படுகின்றன. பெருமாளுடன் இப்பாடலைப் பாடிக கொண்டு வைகுண்டத் திருவாசல்வரை வருகின்றனர். மேலும் இரண்டாம் நாளிலிருந்து ஆறாம்நாள் வரை பராசரபட்டரின் ஸ்ரீரங்க ராஜஸ்தவம வைகுண்டவாசல் அடுத்துள்ள மணல்வெளியில் ஓதப்படுகிறது. ஏழாம்நாள் பூர்வசதகம், ஸ்ரீகுணரத்ன கோசத்துடன் முடிவுறும். கூரத்தாழ்வானின் ஸ்ரீஸ்தவம் எட்டாம் நாளும், ஒன்பதாம் நாளும்

ஓதப்படும். ஸ்ரீரங்கராஜஸ்தவத்தின் உத்திரசதகம் சந்திரபுஷ்கரணியின் அருகில் காலை நேரத்தில் ஓதப்படுகிறது.

## பின்னிணைப்பு – 5

### *பிரம்மரத மரியாதை*

பிரம்மரத மரியாதை என்பது பெருமாளின் எடுபிடிகளுடன் (குடை, சாமரம், யானை) மரியாதைக்குரியவரை ஒரு பல்லக்கில் வைத்து (முன்பகுதியில் திருப்பாதம் தாங்குபவர்களும், பின்பகுதியில் சாத்தாத வைணவர்களும்) எழுந்தருளப் பண்ணி, பெருமாள் அனுக்கிரகம் பெற்று, அவரிடமிருந்து புறப்பட்டுக் கோயிலுள்ள சுற்றுக்கோயில்களில் மாலை மரியாதைகள் பெற்றுத் திருவிக்கிரமன் திருச்சுற்றாகிய உத்திர வீதி வலம் வந்து அவரது திருமாளிகையில் சேர்ப்பிப்பர்.

கோயில் ஒழுகு பட்டர், அரையருக்கான பிரம்மரத மரியாதை பற்றிக் குறிக்கிறது. உத்தமநம்பிக்கு நடந்தவாறு பிரம்மரத மரியாதையும், சாத்தாத வைணவனுக்கு யானையேற்ற மரியாதையும், கணக்கப்பிள்ளைக்கு யானையேற்ற மரியாதையும் உடையவர் காலதிலிருந்து தொடங்கி இருக்க வேண்டுமென்று தெரிகிறது.

இக்கோயிலில் கைங்கர்யபரர்களுக்கு இம்மரியாதை அளிக்கப் படும். தலத்தாரில் பராசரபட்டர் வேதவியாசபட்டருக்கும், அரையருக்கும் இப்பிரம்மரத மரியாதை உண்டு.

கைசிக ஏகாதசியின் போது கைசிக புராணம் வாசித்ததற் காகப் பெருமாள் பட்டரை பிரம்மரத மரியாதையுடன் கோயிலிலிருந்து அவரது இல்லத்திற்கு அனுப்புகிறார்.

வைகுண்ட ஏகாதசியின்போது இராப்பத்தின் பத்தாம் நாள் திருமஞ்சன ச்லோகம் (கட்டியம்) சொல்லியானவுடன், இவ்விழாவின்

போது வைகுண்டவாசலைத் திறந்துவைக்கும் பொறுப்பேற்ற பட்டருக்கு பிரம்மரத மரியாதை செய்யப்படுகிறது.

உத்தமநம்பி அவர்களுக்கு கார்த்திகை தீபத்தின்போது நடந்தவாறு பிரம்மரத மரியாதை உண்டு. சாத்தாத வைணவர் களுக்கு பெருமாளுக்குக் கிளிமாலை சாற்றியதன் பொருட்டு கிருஷ்ணன பிறப்பு, மாசித் தெப்பத் திருநாள், தைப்பொங்கல் திருநாள்களில் யானையேற்ற மரியாதை உண்டு.

கணக்குப்பிள்ளைக்குக் கோயில் கணக்கு வாசிப்பதற்காக பிராமணரில் ஒருவருக்கும், பிராமணர் அல்லாதார் ஒருவருக்கும் யானையேற்ற மரியாதை நடைபெறும்.

## சக்கிலியர்

சக்கிலியர்கள், சித்திரைத் திருநாளின்போது கரூர் பகுதியி லிருந்து ஒருவர், பெரியபெருமாளுக்கு (மூலவருக்கு) வலதுத் திருவடிக்கு ஒரு காலணியும், பெரம்பலூர் பகுதியிலிருந்து ஒருவர் இடது திருவடிக்கு ஒரு காலணியுமாகப் பலர் சூழ மேளதாள முழக்கத்துடன் கோயிலுக்கு கொண்டு வருவர். இரண்டு காலணியும் ஒன்றை ஒன்று ஒத்து பெருமாளின் கால் அளவிற்குச் சரியாக அமையும். அவர்கள் பலநாள் விரதமிருந்து ஆற்றங்கரையில் பெருமாள் அருள்வந்து ஆவேசத்துடன் அவரவா ஊர்களிலிருந்து சித்திரைத் தேரன்று இங்கு வந்தடைவர். அவர்களுக்குக் கோயிலில் தீர்த்தப் பிரசாத மரியாதை செய்யப்படும்.

## சவரத் தொழிலாளர்

சவரத் தொழிலாளர்கள் கோயிலில் மிராசு கைங்கர்யபரர்களாக இருக்கின்றனர். பங்குனித் திருநாளின் மூன்றாம் நாளன்று பெருமாள் ஜீயபுரம் புறப்படும்போது, கோயில் கருமண்டபத்தில் பெருமாளுக்கு முடிதிருத்தி அழகு செய்வதாக ஒரு வழக்காறு கொண்டு, பெருமாள் முன் கண்ணாடியைக் காட்டி அவர் அழகினை இவர் சரிசெய்தபின் பெருமாள் புறப்பாடு காண்பார்.

## சலவைத் தொழிலாளர்

சலவைத் தொழிலாளிக்கு இக்கோயிலில் ஈரங்கொல்லி என்ற அருளப்பாடு உண்டு. இக்கோயிலின் உத்சவப் பெருமாள் 48 வருடங்கள் திருவரங்கத்தை விட்டுச்சென்று, பின்னர் திரும்ப வந்தார். அப்பொழுது இவர்தான் பெருமாளா? என்று சரியாகக் கூற யாருமில்லை. கோயிலார் இக்கோயிலில் பெருமாளின் உடைகளைத் துவைத்துக் கொடுக்கும் சலவைத் தொழிலாளியை அணுகினர். அவர் 90 வயதுப் பெரியவர். கண் சரிவரத் தெரியவில்லை. அவர் பெருமாள் அணிந்திருந்த ஆடையின் திருமஞ்சன நீரைப் பருகினார். பெருமாளின் ஈர ஆடைத் தீர்த்தத்தை அருந்தியது கொண்டு, "இவரே நம் பெருமாள்" என்று உறுதி செய்தார். அதிலிருந்து சலவைத் தொழிலாளிக்கு 'ஈரங்கொல்லி' என்ற அருளப்பாடு இக்கோயிலில் உண்டாயிற்று.

# பின்னிணைப்பு – 6

## கோயில் தமிழ்

| | |
|---|---|
| அங்கில் | : பெருமாள் நாச்சியார் முதலானோர்க்கு சாத்தும் கவசம். |
| அஞ்சனக் காப்பு | : மையிடல் |
| அடைக்காயமுது | : வெற்றிலை, பாக்கு |
| அடைப்பாக்காரன் | : வெற்றிலை மடித்துத் தருபவன் |
| அணுக்கன் | : குடை |
| அணுக்கன் வாசல் | : கருவறைக்கு அருகில் உள்ள வாசல் (பெருமாள் வெளிச் செல்லும்போது இந்த வாசலிலிருந்தும் உள்ளே வரும்போது இந்த வாசல் வரையிலும் குடைபிடிப்பர்) |
| அணை | : படுக்கையென்று பொதுவான பொருளானாலும் பெருமாளுக்குப் பின்னாலுள்ள திண்டு. |

| | | |
|---|---|---|
| அத்தாளத்தளிகை | : | இரவு வழிபாட்டுக்கு அமுது செய்விக்கப படும் தளிகை (அத்தாளம்-இரவுச் சாப்பாடு) |
| அத்யயன உத்ஸவம் | : | பாசுரம் ஓதும் விழா. பாற்கடல் கடைந்து அமுதம் எடுத்து வழங்கிய புராண நிகழ்ச்சி |
| அமிர்தமதனம் | : | பாற்கடல் வழங்கிய புராண நிகழசசி |
| அரவணை | : | அர்த்தசாமப் பூசை |
| அரையர் | : | ஆழ்வாரின் பாசுரங்களைப் பண்ணுடன பாடி, அபிநயித்து உரை கூறும் கலைஞர் (அறை - சொல்; அறையர் எனவும் எழுதும் பழக்கம் உண்டு) |
| அலங்காரம் | : | மௌதாளத்தோடு பொருள்களை கொண்டு வருவதற்குப் பெயர் எண்ணெய் அலங் காரம், கதிர் அலங்காரம், சாளி அலங் காரம், அலங்காரத் தளிகை போன்றவை |
| அளவுக்காரன் | : | கொட்டாரத்தில் நெல் அளப்பவன் இவனுக்கு 'காரளப்பான்' என்ற மரியாதைச் சொல்லால் பெருமாளிடம் அழைப்புண்டு |
| இராமானுசன் | : | தீபாராதனத் தட்டுக்கு வைத்த பெயர் 'இராமானுசன் பிடித்தான்' என்று தீபத்தை ஏற்றிக் கொடுப்பதற்கு அருளப்பாடு |
| இராமானுசனுடையார் | : | கோஷ்டியிலுள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் யாவருக்கும் தீர்த்த வினியோகத்தின் போது அருளப்பாடு |
| இராப்பத்து | : | பத்துநாட்கள் இரவில் நடைபெறும் விழா - திருவாய்மொழித் திருநாள் |
| இளகல் உபயம் | : | பெருமாள் வெளிமண்டபத்திற்கு எழுந் தருளும்போது பல்லாக்குடன் கீழே இறங்கி பிரசாதம் பணியாரம் அமுது செய்வது. சாதாரணமாக ஏற்பட்ட பானம் வடைப்பருப்பு உபயமாயிருந்தால் வழி |

நடை உபயம் என்று பெயர். உபயம் என்று தனியாகச் சொன்னாலும் இளகல் உபயம் என்பதற்குப் பொருந்தும்.

ஈரங்கொல்லி : வண்ணான்

ஈரவாடைத்தளிகை : நீராடிய இறைவனைத் துடைத்தும், ஈர ஆடை மீது தட்டை வைத்து அமுது செய்யப் படும், ஈர ஆடையுடன் விநியோகிக்கப்படும்.

ஈரவாடைத் தீர்த்தம் : இறைவனுக்கு திருமஞ்சனம் ஆனதும் அவன் அணிந்திருந்த உள்சாத்து ஆடையைப் பிழிந்து, அந்த தீர்த்தத்தைக் கொடுப்பது.

உப்புச்சாறு : இரவில் நாச்சியார் அமுது செய்யும் மிளகுக் குழம்பு

உபயம் : வழிபடுபவர்கள் தங்கள் செலவில் சமர்ப்பிக்கும் வஸ்து, உபசாரம் முதலியவை

உருப்படி : மார்கழித் திருவாய்மொழி, சாத்து முறையில் அமுது செய்யும் ஒருவிதமான பணியாரம். கல்லைப் போலக் கெட்டியாயிருக்கும். ஸ்ரீஜயந்தியன்றும் இந்தப் பணியாரம் உண்டு. அப்போது கேளிச்சீடை என்று பெயர்.

உலாப்பாட்டு : பெருமாள் வீதி எழுந்தருளும்போது பாடும் பாட்டு

உள்சாத்து : பெருமாளுக்கு சாற்றும் சிறு வஸ்திரம்

ஊழியம் : கைங்கர்யம் - வேலை, திருப்பதியார் ஊழியம் உள்ளூர்க்காரர் ஊழியம், பாலூழியம், திருமஞ்சன ஊழியம் என்று சில வேலைகளுக்குப் பெயர்.

எண்ணெய்க் காப்பு : எண்ணெய் சாற்றுதல், தைலக்காப்பு எனவும் கூறுவர்.

ஏகாந்தம் : தனித்திருப்பது (வெளியாரின்றி அந்தரங்கப் பணியாளர்களுடன் பெருமாள் தனித்திருப்பது)

ஏகாந்த உருண்டை : பெருமாள் தாம்பூலத்தோடு உபயோகிக்கும் பச்சைக் கற்பூர உருண்டை.

ஏகாந்தக் கட்டி : பெருமாளுக்கு ஜேஷ்டாபிஷேகத்தில் சாற்றின பச்சைக் கற்பூர உள்காப்பு, மறு வருடத்தில் உலர்ந்து கட்டியாயிருப்பது

ஏல்யம் பிடித்தான் : தூபக்கால் எடுத்துக் கொடுக்க அருளப்பாடு

ஏளப்பண்ணுதல் : எழுந்தருளப் பண்ணுதல்

ஒற்றைவெளியாடை : பெருமாளுக்கு வெயில் படாமல் பிடிக்கும் மறைவு.

ஓடாணி : பெருமாளுக்குக் கவசங்களை முன்னும் பின்னுமாகச் சேர்த்து இணைக்கும் ஆணி

ஓரான் வழி : ஒரு தொடராய் வரும் பரமபரை

கணை : குறுக்குத் தடி, குறுக்குக் கழி, சந்நிதியில உள்ளேயும் வெளியிலும் உள்ள குறுக்குத் தடி.

கபாய் : பெருமாளுடைய சட்டை, 'குப்பாயம்' என்பதன் திரிபு

கருவூலம் : தங்கம், வெள்ளி சாமான்கள் வைக்குமிடம், கருவூலகம் கருகூலம் என்றும் சொலவதுண்டு.

கலசப்பானை : அர்க்கியம் சமர்ப்பிக்கும் கிண்டி.

காளாஞ்சி : வழியில் பெருமாளுக்குச் சமர்ப்பிக்கும் அர்க்கிய தீர்த்தத்தை ஏற்றும் சின்னத திருப்படிக்கம், பாத்திரம

கஸ்தூரி திருமண்காப்பு : கஸ்தூரி திலகம்.

காப்பந்தம் : வெண்கலத்தில் செய்த சிறு பந்தம்

காரிசாதம் : காரியம் செய்கிறவர் காரி, அர்ச்சகர் அவருக்கு ஏற்பட்ட சுதந்திரமான பிரசாதம், அவருக்குக் காரியோம் என்று அருளிப்பாடு

குறடு : கட்டையான மேடை (ஆழ்வார் திருநகரி யில் மட்டும் குறடு என்ற சொல்லுடன் வேதிகை என்ற சொல்லும் உண்டு)

கூட்டு வெளியாடை : பெருமாள் மேல் மழை, வெயில், பனி படாமல் மறைக்க கொட்டகை போல விரித்துப் பிடிக்கும் மறைவு.

கைங்கரியபரர் : பணி செய்பவர்

கைங்கர்யம் : பணி

கைத்தல சேவை : இறைத் திருமேனியைக் கைகளில் எடுத்து சேவை சாதிப்பது.

கைலி : திருமஞ்சன காலத்தில் பெருமாளுக்குச் சாற்றும் கட்டான் துணி, சிவப்புக்கட்டான் வேஷ்டி.

கொண்டாட்டம் : புகழப்பாடுதல்

கொண்டைத்தூவடம் : கொண்டைப்பட்டை, கொண்டை மாலை, தலையில் அலங்காரமாகச் சாற்றும் மலர் உருண்டை.

கொத்து : கைங்கர்யம், வேலை

கொத்தொலக்கை : பிரசாத விநியோகத்தில் ஒரு வேலைக்குப் பெயர்

கோயில் மகாஜனம் : பெருமாள் எழுந்தருளும் போது சேவார்த்தி களைப் பட்டையடித்து வழி விலக்குகிறவன்.

சக்ரவாத்தியம் : சில சமயங்களில் வாத்தியம் ஊதும் வகை, தீர்த்தவாரி ஆகி எழுந்தருளுவது தேருக்கும் எழுந்தருளுவது முதலான சில சந்தர்ப்பங் களில்.

சட்டைப் பாளம் : பஞ்சக்கச்சத்துடன் புறப்பாடு, கபாய்ப பாவாடைகளுடன் புறபபாடுதவிர துபபட்டாவையே திருமேனியில இறுக்கிச் சாற்றி அலங்காரம் செய்வது.

சடாரி : இறைவனின் திருவடிநிலைகள பதிக்கப பெற்ற மகுடம், சடகோபனுக்கு ஏறறம வந்தபின் சடாரி சாதிக்கும் பழக்கம் வந்தது.

சலவை : தோய்த்து சுத்தமாயுள்ள வேட்டி

சாத்துப்படி : சந்தனம், திருவாபரணம் சாற்றுவதற்குப் பெயர். வீடுகளில் சாத்துபபடி தாம்பூலம என்றே சொல்லுவது.

சாதரா : ஜரிகை துப்பட்டா

சாது ஸ்ரீ வைஷ்ணவர் : பிரபந்த கோஷ்டி தலைவர், கோஷ்டியில் பாசுரம் தொடங்கும் அதிகாரம் உள்ளவர்.

சாமா நாயிந்தே : சாமான் இதோ வந்து விட்டது

சாளி அலங்காரம் : தீபாவளியன்றும், யுகாதிப் பண்டிகை யன்றும் பெருமாளுக்கு வெள்ளித் தட்டில் பணப்பை வைத்து மேளதாளத்துடன் கொண்டு வருவது சாளிகை - பை

சாற்றுமுறை : ஈற்றுப்பாசுரம் பாடி முடித்தல்

சிவியர் : பல்லக்கு, சிவிகை சுமப்பவா

சிறப்பு : சின்ன மேளம்

சுத்தி : காப்பந்தத்தில் ஊற்றுவதற்காக நெய் வைக்கும் சொம்பு, சித்தையெனபதன திரிபு

சுந்தரபாண்டியம் : அர்க்கிய தீர்த்தம் சேர்க்கும் திருப்படிகத் திற்குத் திருவாராதனத்தில் சொல்லும் பெயர். திருவாராதனத்தில் கண்ணாடி

காட்டுவதற்காக உபயோகிக்கும் வெண் கலத் தட்டுக்கும் பெயர். பாண்டிய மன்னனின் பெயர் சாசுவதமாக விளங்கும்படி பெருமா ளுடைய பாத்திரத்துக்கு ஏற்பட்டது.

சுரசம் : பெருமாளுக்குப் பூசும் குங்குமக் குழம்பு.

சுருட்டி : சுருட்டி வைக்கும் துணிக்கொடி

செல்வர் : சின்னப்பெருமாள். பலி, ஸ்நானம், சயநம் முதலியவற்றுக்காக ஏற்பட்ட மூர்த்திகள். வெள்ளிப் பெருமாள். செல்வரப்பம்: மார்கழித் திருநாளில் அமுது செய்யும் ஒரு விதமான பணியாரம்.

சேமம் : சர்க்கரைப் பொங்கல், சேமம் தளிகை - தை சங்கராந்தியன்று ஏற்பட்ட தளிகை,

சேர்வைக்காரன் : மேளக்காரன்.

சேர்த்திக் கோலம் : இறைவனும் இறைவியும் சேர்ந்து காட்சி தருதல்.

சேனைக்கால் : மங்களார்த்திக்குடம் வைக்கும் பீடத்துக்குப் பெயர்.

சோணாயிரம் கொண்டான்: திருமஞ்சனக் காலத்தில் உபயோகிக்கும் சஹஸ்ரதாரை (சல்லடை)த் தட்டு.

டவர் : வாகனத்தில் பெருமாளுக்குச் சாற்றும் பாவாடை. டவர்ப்பூ அந்தப் பாவாடையில் பின்புறமாக சாத்தியிருக்கும் புஷ்பசரம்.

தட்டி : விளக்குத் தட்டு, மங்களாரத்திக்காக திரி ஏற்றி வரும் தட்டு

தருவடி சாதம் : நைவேத்தியத்தில் ஒரு பாகத்துக்குப் பெயர்.

தண்டனிடல் : கீழே விழுந்து நெடுஞ்சாண்கிடையாக வணங்குதல்

தலைக்கட்டுதல் : நிறைவு செய்தல், முடித்தல்.

தழையிடுவார்/ன் : பெருமாளுக்கு அருகில் பிடிக்கும் பெரிய தீவட்டி, தாஸநம்பி 'தாஸநம்பி' என்று சாத்தாதவர்களுக்குப் பெயர் அவர்கள் பிடிக்க வேண்டிய பந்தம், தாஸநம்பி பந்தம்.

திருக்கரகக் கையேல் : திருமஞ்சனத்தில் எடுத்துக்கொள்ளக் வேண்டிய கிண்டிக்கு அருளப்பாடு

திருச்சி : பெருமாள் உபயநாச்சியார் மூவரும் எழுந்தருளும் பெரிய சேடயம். 'திருச்சிவிகை' என்பதன் திரிபு.

திருச்சின்னம் . ஊதும் வாத்தியம், இரண்டாக வைத்து ஊதுவது.

திருச்சுற்று : பிரகாரம், திருச்சுற்றுக்காரன்-பிரகாரத்தை சுத்தம் செய்கிறவன்.

திருப்படிகம் : காளாஞ்சி, சுந்தரபாண்டியன்

திருப்பள்ளியோடம் . தெப்பம்.

திருமணித்தாவட்டம் : துளசிமணி, தாம்பிர மணி கோதத மாலை யைத் தொப்புள் வரை தாழ்ந்த வடமாகத் தரிப்பது.

திருமுகப் பட்டயம் : இறைவனின் செய்திகளை எழுதும் மூலை

திருமுடிச்சேவை : நம்மாழ்வாரின் திருமுடி மீது பெருமாளின் திருவடிபடுமாறு செய்தல் (பட்டாச்சாரியார் பெருமாளைத் தம் கைத்தலத்தில் எடுத்து வந்து ஆழ்வார் திருமுடி மீது சேர்த்து வைப்பார்.)

திருமுத்துக்குடை : பெருமாளுடைய திருமுகத்திற்கு அழகாகப் பிடிக்கும் குடை.

திருவலகநாயகம் : ஸ்தாநீகம், திருவோலக்க நாயகம் என்பதன் திரிபு.

| | |
|---|---|
| திருவூறல் திருநாள் | : ஊற்றுப் பறித்து அதில் முதலையாக ஒரு கட்டையைப் போட்டு அருகில் யானையை நிறுத்தி நடக்கும் கஜேந்திர மோட்ச உத்சவம். |
| தீவட்டி சலாம் | : பெரிய பந்தம் பிடித்துச் சாயங்காலம் சீரான்ன நைவேத்திய காலத்தில் உபசரிப்பது. |
| தோளுக்கினியான் | : நான்கு மூலைகளுடன் கூடிய சிறு சப்பரம். |
| நம்பாடுவான் | : நமக்குப் பாடுகிறவன்; அரையருக்கும், கைசிகபுராண கதாநாயகனுக்கும் பெயர். |
| நாயிந்தே | : அருளப்பாட்டின் பேரில் பெருமாளுக்கு சாமான் எடுத்துக் கொடுக்கிறவன். நான் இதோ என்று சொல்லுவதன் திரிபு. வியாக்கியானம் முதலியவை விண்ணப் பிக்கையிலும் இச்சொல் வரும். அருளப் பாடு சொல்லியதும் அழைக்கப்பட்டவர் நாயேன் இந்தோ என்று பதில் கூறுவது. |
| நாழி(கை)கேட்டான் வாசல் | : துவஜ ஸ்தம்பத்திற்கு அப்பால் வடக்கி லுள்ள வாசல், இங்கிருந்து பெருமாளுடைய சமயம் கேட்பது. |
| நிசான் | : துணியில் தைத்த கொடி, நேரிசம், வாகனத் தில் வைத்தல் - வைத்துக் கட்டுதல். |
| பச்சடியறை | : பெருமாள் அமுது செய்யும் ஊறுகாய் வைக்குமிடம். |
| பட்டான் | : திருமஞ்சன காலத்தில் வியாச பராசர பட்டர்களுக்கு அருளப்பாடு, 'பட்டான் அருளப்பாடு சேவி' என்று கூறுவது சந்தனம்; சாத்துப்படி என்று சந்தனத்துக் குள்ள பெயரில் குறைவு. |
| பணிப்போர் | : செய்த சாமானில் வேலைக்குக் கூலியாக ஒரு பாகம். பணியாரம் பண்ணினால் |

